# இந்தியப்

# பொருளாதார நூல்

கோவை

ஸ்ரீ டி. எஸ். அவிநாசிலிங்கம் பி. ஏ., பி. எல்.,

அவர்கள் எழுதியது.

"காந்தி ஆபீஸ்"

சென்னை.

காபி ரைட்] 1933 [விலை ரூ. இரண்டு.

# முன்னுரை

கடலூர் சிறையில் ஒரு நாள் தமிழ்ப் பாஷையின் தற்கால நிலைமையைப் பற்றிப் பேசிக் கொண்டிருந்தோம். வங்காளம், மாரட்டி, ஹிந்தி முதலிய பாஷைகள் விரைவில் முன்னேறி வந்து கொண்டிருக்க நம் பாஷை மட்டும் விருத்தியின்றி இருப்பது வருந்தத் தக்கதென்றும், நம் பாஷையில் எல்லா விதமான நூல்களும் இயற்றப்பட வேண்டுமென்றும், முக்கியமாய் பொருளாதார சாஸ்திரம், இராஜீய சாஸ்திரம், பௌதிக சாஸ்திரம் முதலிய துறைகளில் தமிழில் புத்தகங்கள் எழுதுவதற்கு முயற்சி செய்யப்பட வேண்டுமென்றும் பேசிக் கொண்டிருந்தோம். இதற்காக ஒரு சங்கம் ஏற்படுத்த வேண்டுமென்றும், ஒவ்வொரு தமிழ் மகனும் தன்னாலியன்ற உதவியைச் செய்ய முன் வர வேண்டுமென்றும் நினைத்தோம்.

தமிழ்ப் பாஷைக்கு என்னாலியன்ற சேவையை நான் செய்ய வேண்டுமென எனக்குத் தோன்றிற்று. எவ்விதத்தில் இச் சேவையைச் செய்யலாமென யோசித்தேன். தமிழில் பொருளாதாரத்தைப்பற்றி ஒரு நூலும் தற்காலத்தில் இல்லாததால், அதைப்பற்றி எழுதலாமெனத் தோன்றிற்று. உடனே எழுதத் தொடங்கினேன். இப் புத்தகம் பெரும்பாலும் கடலூர் சிறையிலும், மதுரை சிறையிலும் எழுதப்பட்டது.

இம்மாதிரி புத்தகம் ஒன்று எழுதுவதற்கு நான் பல விதங்களிலும் அருகனல்லன். இப் பொருளாதார சாஸ்திரத்தில் நான் வல்லவன் எனச் சொல்ல முடியாது; தமிழிலும் நான் வல்லவனல்லன். எனினும் தாய்ப் பாஷைக்கு என்னாலியன்ற சேவையைச் செய்ய வேண்டுமென்ற எண்ணமே இக்கடின வேலையை என்னை மேற்கொள்ளும்

படிச் செய்தது. இதில் பல குறைகள் இருக்கின்றன. எனினும், தமிழ்த் தாய்க்குச் செய்த திருப்பணி யென இதை யேற்றுக்கொள்ளுமாறு நேயர்களை வேண்டுகிறேன்.

பொருளாதாரத்தைப் பற்றிய புத்தகம் புதிதாகத் தமிழில் எழுதவேண்டி யிருப்பதால் பல பதங்களுக்குச் சரியான தமிழ் வார்த்தைகள் கிடைப்பது கடினமாயிருந்தது. தவிர நான் தமிழில் நன்றாகக் கற்றறிந்தவன் அல்லவாதலால், எனக்கு மிகக் கடினமா யிருந்தது. என்னாலியன்றவரை பொருத்தமான தமிழ்ப் பதங்களை உபயோகப்படுத்தி யிருக்கிறேன். ஆங்கிலம் தெரிந்தவர்களுக்கு விளங்கும் பொருட்டு ஆங்கிலப் பதங்களும் பக்கத்தில் கொடுக்கப்பட்டிருக்கின்றன. ஆங்கிலப் பதங்களே பழக்கத்தில் அதிகமா யிருக்கின்றதாகத் தோன்றிய இடங்களில், அவைகளையே தமிழில் உபயோகித்திருக்கிறேன்.

எனது நண்பர்கள் உயர்திருவாளர் அ. வேதரத்தினம் பிள்ளையவர்கள், எஸ். தாணு அய்யர் பி. இ. அவர்கள், நா. ம. ரா. சுப்பராமன் அவர்கள், சுப்பிரமணிய நாடார் அவர்கள்—இந்நால்வரும் இப்புத்தகம் எழுதுவதில் எனக்கு மிகுந்த உதவி செய்திருக்கிறார்கள். திரு. வேதரத்தினம் பிள்ளையவர்கள் முதலில் மதுரை சிறையிலும், பின் கடலூர் சிறையிலும், தன் சிரமத்தைப் பாராது எனக்கு அவசியமான சமயங்களில் உதவிசெய்து, உற்சாகமும் அளித்திருக்கிறார். திரு. தெ. ச. சொக்கலிங்கம் பிள்ளை அவர்கள் தன் சிரமம் பாராது இதைப் பதிப்பிப்பதற்கு வேண்டிய அனைத்தையும் செய்தார். இவர்களுக்கு என் மனமார்ந்த நன்றியைச் செலுத்தக் கடமைப்பட்டிருக்கிறேன்.

தி. சு. அவினாசிலிங்கம்.

# விஷய அட்டவணை

# தென்னாப்பிரிக்கா

# சத்தியாக்கிரகம்

## (முதல் பாகம்)

பல படங்கள் அடங்கியது

தென்னாப்பிரிக்காவில் மகாத்மா நடத்திய சத்தியாக்கிரகப் போரைப்பற்றி அவரே எழுதியது. இதுவரை தமிழில் மொழி பெயர்க்கப் படாத அரியநூல். கோவை ஸ்ரீ டி. எஸ். அவிநாசிலிங்கம், பி. ஏ., பி. எல்., மதுரை ஸ்ரீ. என். எம். ஆர். சுப்பராமன் மொழி பெயர்த்தது. உயர்ந்த சுதேசி கிளேஸ் காகிதத்தில் அச்சிடப்பட்டது.

**260 பக்கங்கள், விலை ரூபா ஒன்று.**

(தபால் செலவு வேறு)

**இலங்கை, மலாய் ஆர்டர்களுக்கு முன் பணம் வேண்டும்.**

**"காந்தி" ஆபீஸ், சென்னை.**

# விஷய சூசிகை

அ



ஆ



இ

த



ந



ப

# பொருளாதார நூல்

## முதல் அதிகாரம்

### முன்னுரை

பொருளாதார நூல் என்பது எல்லாவற்றிற்கும் ஆதாரமாயிருக்கும் பொருளைப்பற்றிச் சொல்லும் நூல். இவ்வுலகில் எல்லாப் பொருட்களுக்கும் ஆதாரமாயிருப்பது செல்வம். எனவே பொருளாதார நூல் என்பது செல்வத்தைப்பற்றிய நூல். செல்வத்தை எப்படிப் பெறுவது, செல்வத்தை யுண்டாக்குவதற்கு வேண்டியவை யாவை, எப்படிக் கூடியவரையில் அதிக செல்வத்தை கூடியவரையில் குறைந்த உழைப்பில் சம்பாதிக்கலாம், அப்படிச் சேகரித்த செல்வம் எப்படி ஒருவருக்கொருவரால் தங்கள் தங்கள் சௌகரியத்திற்குத் தகுந்தபடி மாற்றிக்கொள்ளப்படுகிறது, நம்மால் சேகரிக்கப்படும் செல்வம் எப்படி நமக்குள் பங்கிட்டுக் கொள்ளப்படுகிறது, என்ற விஷயங்களைப்பற்றியும், இந்த ஆக்குதல் (Production) மாற்றுதல் (Exchange) பிரித்தல் (Distribution) ஆகிய இவைகள் சம்பந்தப்பட்ட பல்வேறு விஷயங்களையும் இப்பொருளாதார நூல் நமக்கெடுத்துச் சொல்லுகிறது. இந்நூல் தனி மனிதர்களின் செய்கைகளைப்பற்றிச் சொல்லாமல், ஒரு தேசம் முழுமையும், அதாவது நம் இந்தியாதேசம் செல்வ சம்பந்தமாய்ச் செய்யும்

காரியங்களை விவரிக்கின்றமையால், இது இந்தியப் பொருளாதார நூல் என்று சொல்லப்படும்.

செல்வத்தை யுண்டாக்குவதற்கு என்னென்ன கருவிகள் வேண்டுமென யோசித்துப்பார்ப்போம். ஒரு மனிதன் செல்வம் தேட நினைத்தால் என்ன செய்கிறான்? அவன் உழவுத்தொழில் செய்யவிரும்பினால், முதலில் அவனுக்குக் கொஞ்சம் பூமி வேண்டும். அதாவது இயற்கை வளங் கொண்ட பூமி அவனுக்குக் கிடைத்தாலொழிய அவன் உழவுத்தொழிலை ஆரம்பிக்கமுடியாது. இரண்டாவதாக, அவன் அந்நிலத்திலிருந்து சம்பாதிப்பதற்குமுன், விதைப்பதற்கு விதைகளும், உழுவதற்கு ஏரும் மாடுகளும், பூமிக்கு உரம் போடுவதற்கு எருவும் வேண்டும். இவைகள் வாங்குவதற்கும், களை பிடுங்கும் காலங்களிலும் அறுவடை காலங்களிலும் பிறர் உதவி வேண்டியிருந்தால் அவர்களுக்குக் கூலியாகக் கொடுப்பதற்கும் கொஞ்சம் முதல் அல்லது ரொக்கம் அவன் கையிலிருக்கவேண்டும். மூன்றாவதாக அவன் நன்றாக உழைக்கவேண்டும். எனவே செல்வம் ஈட்டுவதற்கு இயற்கைவளம் (Natural Resources) முதல் அல்லது ரொக்கம் (Capital) உழைப்பு (Labour) இவை மூன்றும் அத்தியாவசியமாய் இருக்கின்றன.

ஒரு தேசம் செல்வம் சேகரிப்பதற்கும் இம்மூன்று கருவிகளும் வேண்டியிருக்கின்றன. இயற்கை வளங்களும், முதலும் உழைப்பும் இன்றி எந்த நாடும் செல்வம் உண்டாக்க முடியாது. ஒரு தேசத்தின் சம்பாத்தியத்திற்கும் தனி மனிதர்களின் சம்பாத்தியத்திற்கும் ஒரு பெரிய வித்தியாசம் உண்டு. எத்தனையோ லக்ஷம் பேர்கள் சேர்ந்த ஒரு சமூகம் ஒரு தேசத்தில் இருக்கிறது. அத்தனை பேர்களுக்கு வேண்டிய பொருளும் செல்வமும் அதிகமாயிரு

கும். அத்தனை பொருளைச் சம்பாதிப்பதற்கு அவசியமான இயற்கை வசதிகளும், முதலும், உழைப்பும் அதிகமாய் இருக்கவேண்டும். செல்வம் சம்பாதிக்கும் துறைகளும் பல்லாயிரக்கணக்காக யிருக்கும். ஆகையால் ஒரு தேசத்தினுடைய பொருளாதார நிலைமையைப்பற்றி அறிவது, ஒரு தனி மனிதனைப்பற்றி யறிவதுபோல் அவ்வளவு சுலபமான காரியமல்ல.

ஒரு தேசத்தின் செல்வ நிலையைப்பற்றித் தெரிந்து கொள்வதற்கு முன், அத்தேசத்தின் மேல் கூறிய மூன்றினுடைய நிலைமையைப்பற்றியும் நன்றாய்த் தெரிந்துகொள்ள வேண்டும். ஏனெனில் நாம் செல்வத்தை எவ்வாறு உண்டாக்கலாம் என்பது இவைகளிலிருந்து தான் நிர்ணயிக்கப் படவேண்டும். உதாரணமாக இங்கிலாந்து தேசத்தை எடுத்துக்கொள்வோம். அத்தேசத்தில் நிலக்கரிச் சுரங்கங் களும் இரும்புச் சுரங்கங்களும் ஏராளமாய் இருக்கின்றன. கைத்தொழில்களுக்கு வேண்டிய முக்கிய சாதனங்களாகிய இவ்விரண்டும் இருப்பதால் அது ஒரு பெரிய கைத்தொழில் அபிவிருத்தியடைந்த நாடாக விளங்குகின்றது. ஆனால் அந்நாடு நம் நாடுபோல் விவசாய நாடாக இருந்திருந்தால் அது இப்போது அடைத்திருக்கும் உன்னத நிலையை அடைந்திருக்காது. ஆங்கிலேயர் தங்கள் இயற்கை வசதிகளை மிகவும் சாமர்த்தியமாய் உபயோகித்தபடியால் அவர்கள் செல்வமுடையவர்களாயிருக்கின்றனர். நாமும் நம் இயற்கை வளங்களை நன்றாக உபயோகிக்க விரும்பினால், முதலில் நம்நாட்டின் இயற்கை வளங்களைத் தெரிந்து கொள்ளவேண்டும்.

நம் தேசத்தில் செல்வம் ஈட்டும் துறைகளில் முதல் துறை விவசாயமே. ஏனெனில் நம் மக்களில் 100-க்கு

72 பேர்கள் விவசாயத்தால் ஜீவனம் செய்கிறார்கள். ஆகையால் விவசாயத்தைப்பற்றிக் குறிப்பாய்த் தெரியவேண்டியிருக்கிறது. அதை விருத்தி செய்யவேண்டிய விதங்களையும் கவனிக்கவேண்டும். நம்தேசத்தில் விவசாயத்தால் வரும் பலனையும், அமெரிக்கா, எகிப்து, ஜாவா முதலிய நாடுகளில் விவசாயத்தால் வரும் பயனையும் ஒப்பிட்டுப் பார்க்குங்கால், ஒரே விஸ்தீரணமுள்ள பூமியிலிருந்து நாம் அடையும் பயனைவிட, அந்நாடுகளில் மிக அதிகப்பயனை அடைகிறார்கள் என்று தெரியவருகிறது. அது அங்ஙனமாயின் நம் விவசாய முறையில் பல குறைகள் இருக்கவேண்டும். அக்குறைகள் என்ன ? அக்குறைகளை எப்படி நிவர்த்திப்பது ? என்பதைப்பற்றியும் ஆராயவேண்டும். நம் குடியானவர்களுக்கு இருக்கும் குறைகளுள், உடனே கவனிக்க வேண்டிய குறை யொன்றுண்டு.; அதாவது அவர்களில் பெரும்பான்மையோர் அளவுக்கு அதிகமான கடனில் மூழ்கியிருப்பதுதான். அவர்களால் தாங்கமுடியாத இச்சுமையைப் போக்குவதற்கு உபாயங்களை ஆராய வேண்டும்.

விவசாயத்தைத் தவிர மற்றக் கைத்தொழில்கள் பல நம் தேசத்தில் கையாளப்பட்டு வருகின்றன. நெய்தல் தொழிலில் தொன்றுதொட்டு நம் தேசம் பெயர்பெற்றது. ஆனால் தற்காலத்தில் நம் உபயோகத்துக்குக்கூட துணிகள் வெளி நாடுகளிலிருந்து வந்துகொண்டிருக்கின்றன. 18-ம் நூற்றாண்டின் ஆரம்பத்திலும்கூட நம் பருத்தியால் நம் இராட்டினங்களில் நூற்று, நம் தறிகளில் நெய்து, பல அழகான தினுசுத் துணிகளை நாம் அன்னியநாடுகளுக்கு அனுப்பிவந்தோம். ஆனால் தற்காலத்தில் இத்தொழில் இவ்வளவு க்ஷீண நிலையை அடைவதற்குக் காரணம் என்ன ?

மறுபடியும் இத்தொழிலையும், இன்னும் மற்ற கைத்தொழில்களையும் விருத்திசெய்வதற்கு நாம் எம்முறைகளைக் கைக்கொள்ளவேண்டும், என்ற விஷயங்களையும் ஆராயவேண்டும். இக் கைத்தொழில்களில் வேலை செய்யும் தொழிலாளர்களின் நிலைமையையும், அவர்கள் முன்னேற்றத்தின் முக்கியத்தையும் நாம் உணரவேண்டும்.

நாம் உண்டாக்கும் பொருள்களை ஒருவருக்கொருவர் மாற்றிக்கொள்ள வேண்டியிருக்கிறது. பம்பாயில் உண்டாகும் துணி தென் இந்தியாவிலிருக்கும் நமக்கு வேண்டியிருக்கிறது. நாம் உற்பத்திசெய்யும் பருத்தியும் நெல்லும் அவர்களுக்கு வேண்டியிருக்கிறது. இப்படி நாம் தேசத்திற்குள்ளேயே ஒருவருக்கொருவர் சாக்குகளை மாற்றிக்கொள்வது உள்நாட்டு வியாபாரம் (internal trade) எனப்படும். இந்த வியாபாரத்துக்குச் சௌகரியமாய் இருக்கும் பொருட்டும், சாமான்கள் வாங்கவும் விற்கவும் உதவுவதற்கும், சாமான்களின் மதிப்பை அளப்பதற்கும் ஒரு அளவை அல்லது அளவு கருவி (Standard of measurement of value) யாய் இருக்கும் பொருட்டும் நாணயங்கள் (Currency) ரூபாய், பவுன் முதலியன ஏற்படுத்தப்பட்டிருக்கின்றன.

நம்தேசத்துச்சாமான்களை வெளிநாடுகளுக்கு அனுப்பி விற்பதும், வெளி நாட்டுச் சாமான்களை நம் நாட்டுக்கு வருவித்து வாங்குவதும் அன்னியநாட்டு வியாபாரம் (Foreign trade) எனப்படும். தேசங்கள் தோறும் நாணயங்கள் வேறாக யிருப்பதால், தேசங்களுக்குள் நடக்கவேண்டிய வியாபாரத்தைக்கருதி இந்த நாணயங்களை மாற்றுவதற்கும் ஏற்பாடுகள் (Exchange) செய்யப்பட்டிருக்கின்றன.

செல்வம் சம்பாதிப்பதற்கு அவசியமான மூன்று

பொருட்களில் முதல் ஒன்று எனக்கண்டோம். முதலை ரொக்கம் என்றும் சொல்வதுண்டு. கைத்தொழில்களின் அபிவிருத்திக்கும், வியாபார வளர்ச்சிக்கும் ரொக்க வசதிகள் எவ்வளவு முக்கியமானவை என்பது சொல்லாமலே விளங்கும். நம் தேசத்தில், நம் வியாபாரத்திற்கும் கைத்தொழில்களுக்கும் போதுமான ரொக்க வசதிகள் இருக்கின்றனவா எனத் தெரிந்து கொள்ளவேண்டும். ரொக்க வசதிகள் கொடுப்பதற்காக செய்யப்பட்ட ஏற்பாடுகளுக்கு பாங்கிங் (Banking) என்று பெயர். நம் நாட்டின் தற்கால பாங்கிங் முறையையும், நம் கைத்தொழில் வியாபார அபிவிருத்திக் கேற்றபடி அதை எப்படிச் சீர்திருத்தி அமைக்கவேண்டுமென்பதையும் ஆராயவேண்டும்.

இந்திய மக்களால் சம்பாதிக்கப்படும் மொத்த செல்வம் எத்தனை யென்றும், நம்முடைய சராசரி வரும்படி எத்தனை யென்றும், பிறதேசத்து மக்களைவிட நம் வரும்படி மிகக் குறைவாய் இருப்பதையும் நாம் உணரவேண்டும். தவிர கவர்ன்மெண்டார் நம்மிடத்திலிருந்து எப்படி வரிகள் வசூல் செய்கிறார்கள், வசூலித்தபணத்தை எவ்விதங்களில் செலவு செய்கிறார்கள், எவ்விதம் செலவு செய்வது நமக்கு அதிக பயனைத்தரும், இந்தியமக்களின்பேரில் தற்காலத்தில் எவ்வளவு கடன்சுமை சுமத்தப்பட்டிருக்கிறது என்ற பல விஷயங்களைப்பற்றியும் இப் புத்தகத்தில் ஆராய்வோம்.

இயற்கை வளம், விவசாயம் முதலிய கைத்தொழில்கள் உழைப்பு, வியாபாரம், நாணயம், நாணயமாற்று, நம் நாட்டு பாங்கிங் முறை, இந்திய மக்களின் வரும்படி, கவர்ன்மெண்டார் வரவு செலவுகள் என்ற தலைப்புகளின் கீழ், பின் வரும் அத்தியாயங்களில் நம் நாட்டின் பொருளாதாரத்தைப் பற்றி விவரித்துக் கூறப்பட்டிருக்கிறது.

# இரண்டாம் அதிகாரம்



## இயற்கை வளங்கள்

இந்தியா தெற்கு வடக்காக சுமார் 2000 மைல்களும் கிழக்கு மேற்காக சுமார் 2500 மைல்களும் இருக்கின்றது. இந்தியாவின் மொத்த விஸ்தீரணம் 1,805,332 சதுர மைல்கள். இந்தியாவின் மொத்த ஜனத்தொகை 1931-ம் வருஷத்திய ஜனசங்கைக் கணக்குப்படி (Census) 351,450,689. இதில் 1,094,300 சதுர மைல் விஸ்தீரணம், 270,612,162 பேர்கள் கொண்ட ஜனத்தொகையுடன் நேர் பிரிட்டிஷ் ராஜாங்கத்தின்கீழ் இருக்கிறது; 711,032 சதுரமைல் விஸ்தீரணமுள்ள நாடுகள் 80,838,527 பேர்கள் கொண்ட ஜனத்தொகையுடன் சுதேச மன்னர்களின் ஆளுகைக்கு உட்பட்டு இருக்கிறது. இந்தியாவின் , கடற்கரை நீளம் சுமார் 5000 மைல்கள் கொண்டது. இந்தியா உலகின் கீழ்பாகத்தில் ஏகதேசம் மத்தியில்இருக்கிறது. வடக்கே திபத் (Tibet) சீனுதேசமும், வடகிழக்கே ஜப்பானும், தெற்கே ஆஸ்ட்ரேலியா முதலிய தேசங்களும், மேற்கே ஆப்ரிக்கா, அராபியா, ஆப்கானிஸ்தான் பாரசீகம் முதலிய தேசங்களும் இருக்கின்றன. ஆகையால் வியாபாரத்துக்குச் சௌகரியமான ஒரு மத்திய நிலைமையைத்தான் பெற்றிருக்கிறது.

இந்தியாவில் இயற்கை வளங்கள் நிறைந்திருக்கின்றன. இயற்கை வளங்களில் பலவகைகள் உண்டு.

1. தானியங்கள் 2. உலோகங்கள் (Mineral resources) 3. காடுகள் (Forest resources) 4. சக்திக் களஞ்சியங்கள் (Power resources.)

தானியங்கள் :—இந்தியா பெரிய நாடாய் இருக்கிறபடி

யாலும், இந்தியாவில் பலவிதமான நிலவளங்களும் நீர்வளங்களும் நிறைந்திருக்கிறபடியாலும், சீதோஷ்ண ஸ்திதியும் பலவாறாக இருக்கிறபடியாலும், அநேகவிதமான தானியங்கள் இந்தியாவில் விளைவிக்கப்படுகின்றன. சாப்பாட்டுக்கு உபயோகப்படும் தானியங்களில் நெல் வங்காளத்திலும், பீகார் ஒரிஸா மாகாணங்களிலும், சென்னை மாகாணத்திலும் நீர்வளம் பொருந்திய பல இடங்களிலும் விளைவிக்கப்படுகின்றது; கோதுமை பஞ்சாப் முதலிய வடமேற்குப் பிரதேசங்களிலும், தினை, சாமை, சோளம், கம்பு வகையாா பம்பாய் சென்னை மாகாணங்களிலும், ராகி வகையறாத் தானியங்கள் சென்னை, ஐக்கிய மாகாணங்கள், பம்பாயிலும், கடலை பஞ்சாப் முதலிய மாகாணங்களிலும் விளைகின்றன. வாசனைத்திரவியங்கள் சென்னை, வங்காளம் பம்பாய் மாகாணங்களிலும், கரும்பு எல்லா மாகாணங்களிலும் குறிப்பாய் ஐக்கிய மாகாணங்களிலும் விளைகின்றன. எண்ணெய் தரக்கூடிய வஸ்துக்களில் ஆளிவிரை (linseed) எள், கடுகு, நிலக்கடலை, ஆமணக்கு முதலிய விதைகள் சென்னை, ஐக்கிய மாகாணங்கள், மத்திய மாகாணங்கள் பம்பாய், பர்மா முதலிய மாகாணங்களிலும் விளைகின்றன. பருத்தி சென்னை, பம்பாய், பீரார், பஞ்சாப் மாகாணங்களிலும், சணல் வங்காளத்திலும், அபினி ஐக்கிய மாகாணங்களிலும், புகையிலை வங்காளம், பீகார், ஐக்கிய மாகாணங்கள், சென்னை முதலிய மாகாணங்களிலும், ரப்பர் (India rubber) அஸ்ஸாம், காசிய மலைச்சாரல்கள், பர்மா முதலிய இடங்களிலும் உண்டாகின்றன.

உலோகங்கள் :—இந்தியாவின் கைத்தொழில் விருத்திக்கேற்ற விஷயங்களை ஆராய்ந்து, சிபார்சுகள் செய்வதற்காக ஏற்படுத்தப்பட்டிருந்த இந்தியக் கைத்தொழில் கமிஷ

னர்கள் (The Indian Industrial Commission of 1918) இந்தியாவின் முக்கியமான கைத்தொழில்கள் யாவைக்கும் இந்தியாவில் அகப்படும் உலோகங்களே போதுமானவையாக இருக்கின்றன என்று சொல்லியிருக்கின்றனர். 1927-ம் வருஷத்தில் இந்தியாவில் எடுக்கப்பட்ட உலோகங்களும், அவைகள் அளவும், மதிப்பும் கீழே காண்பிக்கப்பட்டிருக்கிறது.

| †உலோகங்களின் பெயர் | | அளவு | மதிப்பு ரூபாயில் |
|---|---|---|---|
| நிலக்கரி | டன்கள் | 22,082,336 | 9,48,70,013 |
| உப்பு | ,, | 1,611,945 | 1,13,80,155 |
| தங்கம் | அவுன்சுகள் | 384,273 | 2,18,00,629 |
| பெட்ரோல் (in gallons) | காலன்கள் | 281,113,909 | 5,92,47,675 |
| வெடியுப்பு (cwts) | அந்தர்கள் | 123,018 | 15,22,666 |
| குரோமைட் (chromite) | டன்கள் | 57,207 | 8,80,957 |
| செம்பு (copper) | ,, | 16,882 | 46,13,605 |
| வைரம் | காரட்கள் | 113 | 45,943 |
| இரும்பு | டன்கள் | 1,846,735 | 51,01,861 |
| ஜேட்கல் (Jade stone) | அந்தர்கள் | 2,028 | 3,02,440 |
| ஈயம் | டன்கள் | 65,967 | 2,20,27,742 |
| மேக்னிசைட் (magnesite) | டன்கள் | 19,638 | 2,29,338 |
| மாங்கனீஸ் (manganse-seed) | டன்கள் | 1,129,353 | 3,81,12,776 |
| காக்காப்பொன் | அந்தர்கள் | 42,614 | 24,52,055 |
| மாஞேசைட் (monosite) | டன்கள் | 280 | 51,054 |

| உலோகங்களின் பெயர் | | அளவு | மதிப்பு ரூபாயில் |
|---|---|---|---|
| வெள்ளி | அவுன்சுகள் | 6,024,806 | 94,98,541 |
| சிகப்பு (Rubies) | காரட்கள் | | 2,79,834 |
| டின் | டன்கள் | 69,900 | 66,17,773 |
| உல்ப்ரம் (wolfram) | ,, | 1,160 | 5,70,003 |
| துத்துநாகம் (zinc) | ,, | 67,135 | 70,06,018 |

† Page 24 of Jathar Beri Indian Economics.

காடுகள் :—காடுகளும் வனங்களும் ஒரு தேசத்தின் சம்பத்துகளில் ஒன்று. அடர்த்தியாக மரங்கள் வளரப் பெற்ற காடுகளால் நாட்டுக்குப் பல பிரயோஜனங்கள் உண்டு.

1. காடுகளிலிருந்து வரும் பெரிய மரங்கள், உத்தரங்கள், பீம்சுகள் முதலியன வீடுகள் கட்டுவதற்கும், படகுகள் ஓடங்கள் கப்பல்கள் கட்டுவதற்கும், ரயில் பாதைகள் போடுவதற்கும், இன்னும் பல தொழில்களுக்கும் உபயோகப்படுகின்றன. 2. காடுகளிலிருந்து வரும் மரங்களும் மற்றவையும் விறகாக உபயோகப்படுகின்றன. 3. அரக்கு, தோல் சுத்தம் பண்ணுவதற்கு உபயோகப்படும் சில வஸ்துக்கள், கற்பூரத்தைலம் (turpentine) போன்ற பல வகை எண்ணெய்கள் கிடைக்கின்றன. 4. காடுகளில் கிடைக்கும் சிலவகைப் புல்களும், மூங்கில்களும், காகிதம் உண்டாக்குவதற்கு உபயோகப்படுகின்றன. நம்நாட்டுக்கு வேண்டிய அவ்வளவு காகிதம் செய்துகொள்வதற்கும், அவசியமான சாமான்களை நம் காடுகள் அளிக்கின்றன. 5. கடைசியாக குடியானவர்களுடைய கால்நடைகளை மேய்ப்பதற்கும், அவை உதவுகின்றன.

மேற்சொன்னவைகளைத் தவிர இன்னும் அதிக முக்கிய

மான பயன்களும் காடுகளால் நாட்டுக்கு உண்டு. காடுகள் மழை பெய்வதற்கு உதவியாயிருக்கின்றன. மரங்கள் அடர்த்தியாய் இருப்பதால் உஷ்ண காலங்களில் உஷ்ணத்தைக் குறைப்பதற்கு ஏதுவாயிருக்கின்றன. ஊற்றுக்களிலிருந்து வரும் ஜலம் பூராவும் ஒரே சமயத்தில் வடியாமல் காப்பாற்றி, வருஷ முழுவதும் பாயும்படி செய்கின்றன. நிலத்தில் உரம் சேர்த்துப் பூமியை அதிக வளமாக்குகின்றன. புயல்காற்றுகளின் வேகத்தைக் குறைத்து, அக்கம் பக்கங்களில் உள்ள பூமிகளில் இப்புயற்காற்றுகள் சேதம் செய்யாமல் காப்பாற்றுகின்றன. தேசத்தின் சுகாதாரத்தையும் அழகையும் அதிகப்படுத்துகின்றன. ஆகையால் வனங்களை அழிக்காமல் அவைகளைக் காப்பாற்றவேண்டியது மிகவும் அவசியம்.

பிரிட்டிஷ் இந்தியாவில் ஏகதேசம் 100-க்கு 22·6 விஸ்தீரணம் காடுகளாய் இருக்கின்றது. ஒவ்வொரு மாகாணத்தில் எவ்வளவு பாகம் காடுகள் என்று கீழே கணக்குப் போடப்பட்டிருக்கிறது.

| † மாகாணத்தின் பெயர் | 100-க்கு எவ்வளவு பங்கு விஸ்தீரணம் காடுகள் |
|---|---|
| சென்னை | 13·4 |
| பம்பாய் | 12·1 |
| வங்காளம் | 13·7 |
| ஐக்கிய மாகாணங்கள் | 4·8 |
| பஞ்சாப் | 5·6 |
| பர்மா | 60·0 |
| பீகார் ஒரிஸ்ஸா | 3·6 |

| மாகாணத்தின் பெயர் | 100-க்கு எவ்வளவு பங்கு விஸ்தீரணம் காடுகள் |
|---|---|
| மத்திய மகாணங்கள் | 19·6 |
| அஸ்ஸாம் | 37·3 |
| வடமேற்கு மாகாணம் | 1·8 |
| பிரிட்டிஷ் பெலுஜிஸ்தானம் | 1.4 |
| ஆஜ்மீர் | 5·09 |
| குடகு | 32·8 |

† Page 20 Jathar Beri Indian Economics vol I.

சக்திக் களஞ்சியங்கள் :—(Power Resources) சக்திக்கு ஆங்கிலத்தில் பவர் என்று பெயர். சக்தி அல்லது பவர், இயந்திரங்களைச் சுழற்றவும், அதன்மூலம் பல கைத்தொழில்களை நடத்தவும் பிரயோஜனப்படுகிறது. சாதாரணமாக விறகு, நிலக்கரி, பெட்ரோல் முதலியவைகளைக்கொண்டு நீரைக் காய்ச்சி நிராவியாக்கி பவர் உண்டாக்குவது வழக்கம். ஆனால் இயற்கையும் நமக்கு இந்தவிதமான சக்திகளையுண்டாக்கி உதவுகிறது. அதாவது நீர்வீழ்ச்சி முதலிய இடங்களில் டர்பைன்கள் (turbines) முதலிய யந்திரங்கள் வைத்து அவைகளினால் மின்சார சக்தி யுண்டாக்கலாம். இந்த மின்சார சக்தி பல கைத்தொழில்களை நடத்தவும், பல நகரங்களுக்கு விளக்குப்போடவும், டிராம் (Tramcars) வண்டிகளையும் ரயில் வண்டிகளையும் ஓட்டவும் இன்னும் பலவேறு விதங்களிலும் பிரயோஜனப்படுகிறது. கைத்தொழில்களை விருத்திசெய்வதற்கு இவ்விதமான இயற்கைச் சக்தி அல்லது பவர் நிலயங்களை விருத்திசெய்வது, மிகவும் அனுகூலமாயிருக்கும்.

மைசூர் சமஸ்தானத்தில் சிவசமுத்திரத்தில் காவேரித் தண்ணீரைக்கொண்டு அதிகமான மின்சார சக்தியை யுண்டு பண்ணி, கோலார் தங்கச் சுரங்க வேலைகளுக்கு வேண்டிய அளவு பவர் அளிப்பதுடன், பெங்களூர் முதலிய இடங்களுக்கு விளக்குப்போடப்பட்டு, இன்னும் மற்ற பயன்களையும் அடைந்திருக்கிறார்கள். காஷ்மீர் சமஸ்தானத்தில் ஜீலம் நதியின்ஜலத்தைக்கொண்டு இவ்வாறு சக்தியுண்டுபண்ணி யிருக்கிறார்கள். சென்னையில் நீலகிரி மலையில் பைகாராத்திட்டம் (Pykara Scheme) என்று ஒரு திட்டம்போட்டு, பைகாரா நீர்வீழ்ச்சியிலிருந்து மின்சார சக்தி யுண்டுபண்ணி, கோயமுத்தூர் முதலிய ஜில்லாக்களிலுள்ள நூல் நூற்கும் நெய்யும் மில்களுக்கும், பருத்தியை பஞ்சாக்கும் ஜின்னிங் பாக்டரிகளுக்கும் பவர் கொடுக்கவும், பல ஊர்களுக்கு வெளிச்சம் கொடுக்கவும், இன்னும் பல நகரங்களிலுள்ள கைத்தொழில்களுக்கும் பவர் கொடுக்கவும் முயற்சிசெய்து வருகிறார்கள். இன்னும் பவர் உண்டாக்கக்கூடிய நீர் வீழ்ச்சிகள் இந்தியாவில் பல இருக்கின்றன. ஆந்திர பள்ளத்தாக்கு பவர்த்திட்டம் (The Andhra Valley power Scheme) நீல மூலா பவர்த்திட்டம் (The Nela mula Power Scheme) என்பன அவற்றில் சிலவாம். மேலும் ஹிமாலய மலையிலிருக்கும் நீர் வீழ்ச்சிகளைக்கொண்டு லக்ஷக்கணக்கான ஹார்ஸ் பவர்கள் கொண்ட சக்தி உண்டாக்கச் சௌகரியங்கள் இருக்கின்றன.

### இயற்கை வளமிருந்தும் ஏன் தரித்திரத்தில் மூழ்கியிருக்கிறோம்?

முந்திய பக்கங்களிலிருந்து இந்தியா இயற்கை வளங்களில் நிறைந்திருக்கிறதென அறியலாம். இந்தியாவில் உண்

டாரும் தானிய வகைகள் எக்காலத்திலும் இந்தியமக்கள் அனைவரும் உண்டு, பிறருக்கும் கொடுக்கக்கூடியனவாய் இருக்கின்றன. பலவிதமான கைத்தொழில்களையும் செய்யக்கூடிய சௌகரியங்களும் நம் நாட்டில் நிறைந்திருக்கின்றன. கைத்தொழில்களுக்கு வேண்டிய பொருள்கள் யாவும் நம் நாட்டில் இருக்கின்றன. எனினும் பாரதமக்கள் தரித்திரத்தில் மூழ்கியிருக்கின்றனர். நம் வரும்படி மற்ற நாட்டாரின் வரும்படியைவிட மிகக் குறைந்திருக்கிறது. நம் சகோதரர்களில் லக்ஷக்கணக்கான மக்கள் உண்ண உணவின்றி, உடுக்க உடையின்றி, இருக்க நிழலின்றி இருக்கின்றனர். இதற்குக் காரணம் என்ன?

நம்முடைய பொருளாதார நிலையும் நம்முடைய இராஜீய நிலையை ஒத்திருக்கிறது. நாம் 35 கோடி மக்கள் சேர்ந்த ஒரு சமூகம். நம் தேசம் எல்லா வீரர்களையும் பெற்றுள்ளது. சீக்கர்கள் போன்ற காலாட் படைகளும், கூர்க்கர்கள் போல் பேயனட் சண்டையில் பெயர் பெற்றவர்களும், இராஜ புத்திரர்களைப்போல் அஞ்சா ஆண்மையுள்ளவர்களும், இன்னும் எல்லாவிதமான யுத்தப் பயிற்சிகளில் பெயர்பெற்றவர்களும் நம்நாடுபோல் உலகில் வேறு எங்கும் காண்பதரிது. எனினும் நம் நாடுபோல் அடிமையாய்க்கிடக்கின்ற நாடு உலகில் இல்லை. யுத்தத்துக்கும் வெற்றிக்கும் வேண்டிய சாதனங்கள் யாவும் நம்நாட்டில் இருந்தும் நாம் ஏன் அடிமையாக இருக்கிறோம்? இச் சாதனங்களை உபயோகப்படுத்தக்கூடிய ஞானம் நமக்கு இல்லை. ஆங்கிலேயர் ஒரு சிறிய ஜனத்தொகையாய் இருந்தபோதிலும், இந்த ஞானத்தை அடைந்ததன் பயனாக நம்மைக்கொண்டே நம்மை ஜெயித்து, நம்மைக்கொண்டே நம்மை யடக்கி, நம்மைக்கொண்டே நம்மை ஆளுகின்றனர்

இவ்வண்ணமே நம் பொருளாதார வாழ்க்கையிலும், நம் சாதனங்களை உபயோகப்படுத்திச் செல்வத்தையும் சுகத்தையும் அடையக்கூடிய ஞானம் நமக்கில்லை. அன்னியன் நம் பொருளைக்கொண்டே நம்மிடத்திலிருந்து லாபம் சம்பாதித்து, நம்மை ஏழையாக்குகிறான். எப்படி இராஜீய ஞானம் வந்தால் நம்மில் ஒற்றுமை ஏற்பட்டு, சுதந்தரம் அடைய முடியுமோ, அப்படியே பொருளாதார ஞானம் வந்தால், நாம் தனவந்தர்களாக முடியும்.



## மூன்றாம் அதிகாரம்



### விவசாயம்

விவசாயமும் பஞ்சங்களும்:—விவசாயமே இந்தியாவில் மிக முக்கியமான தொழிலாய் இருக்கிறது. இப்பொழுது விவசாயம் நம் மக்களில் 100-க்கு சுமார் 72 பேர்களுக்கு வேலை கொடுத்துக்கொண்டு வருகிறது. மற்றத் தேசங்கள் எவற்றிலும் இவ்வளவு பெரும் பகுதியான ஜனத்தொகை விவசாயத்தையே நம்பி யிருப்பதில்லை. விவசாயத்தையே நம்பியிருப்பதில் பலகெடுதல்கள் உண்டாகின்றன. முக்கியமாய் பஞ்சங்கள் நமது நாட்டில் தோன்றிய காலங்களில், நாம் நம்மைக் காப்பாற்றிக்கொள்ளச் சக்தியற்றவர்களாய் இருக்கிறோம். நமது விவசாயத்தில் 100-க்கு 18 பங்குகள்தான் வாய்க்கால், குளம், கிணறு முதலியவைகளிடமிருந்து நீர்ப்பாய்ச்சல் பெறுகிறது. மற்ற 82 பங்குகள் இவ்வித நீர் வசதிகள் இல்லாமல் மழையையே நம்பிச் சாகுபடி செய்யவேண்டியனவாய் இருக்

கின்றன. மழை எப்பொழுது சரியாய்ப் பெய்கிற தில்லையோ அல்லது பருவம் தப்பிப் பெய்கின்றதோ, அப் பொழுதெல்லாம், நீர்ப்பாய்ச்சல் வசதியில்லாமல் இருக்கிற நம் பெரும்பான்மையான பூமிகளில் ஒன்றும் விளைவதில்லை. அப்படி விளையாத பக்ஷத்தில் பஞ்சம் உண்டாகின்றது. நம் ஜனத்தொகையில் முக்கால் பங்குக்கு இந்த வருவாயையே எதிர்பார்த்திருப்பதாலும், பஞ்சகாலத்தில் திடீரென்று வேறு தொழில்களைக் கைக்கொண்டு பொருள் சம்பாதிப்பது அசாத்தியமானதாலும், பஞ்சகாலங்களில் நம் மக்கள் அதிக மாக கஷ்டப்படுகின்றனர். இவர்கள் விவசாயத்துடன் வேறு தொழில்களையும் செய்து வந்தாலும், நம் ஜனத் தொகையில் அதிகமான பங்கு மற்ற தொழில்களில் ஈடுபட் டிருந்தாலும், பஞ்சம் இவ்வளவு அதிகமாக வருத்தாது.

விவசாயத்தில் அதிக ஜனத்தொகை :—மேலும் தற் சமயம் மிகுதியான ஜனத்தொகை விவசாயத்தில் ஈடுபட் டிருக்கிறது. இதற்குக் காரணங்கள் பலவுள. ஜனத்தொகை அதிகமாகிக்கொண்டிருப்பதால், விவசாயத்திலும் மக்கள் அதிகம் ஏற்பட்டிருக்கின்றனர். ஆனால் ஜனத்தொகை விருத்திக்குத்தகுந்தபடி நம் கைத்தொழில்களும் அபி விருத்தி யடைந்திருந்தால், இந்த அதிகமான ஜனத்தொகை கைத்தொழில்களில் ஈடுபடச் சௌகரியமா யிருக்கும். ஆனால் அதற்கு மாறாக நம் கைத்தொழில்கள் குன்றின. முக லாய அரசர்கள் இருக்கும்போது, அவர்களுக்கு வேண்டிய போகப் பொருள்களை யுண்டாக்கிக்கொண்டிருந்த தேர்ச்சி பெற்ற தொழிலாளர்களும், அவ்வரச வம்சங்கள் அழிக்கப் பட்டபின், தங்கள் தொழிலும் அழிக்கப்பட்டு, விவசாயத் தில் ஈடுபடவேண்டியதாயிற்று. தவிர நம் நூற்கும் தொழி லும், நெய்தல் தொழிலும், ஆங்கிலேயர் லாபத்தைக்கருதி

அழிக்கப்பட்டன என்னும் விபரத்தை பின்பக்கங்களில் அறிவோம். இக்கைத்தொழில்கள் குன்றவே, இதில் ஈடு பட்டவர்களும் விவசாயத்துக்குப் பாரமாகப் போகவேண்டி யிருந்தது. எனவே விவசாயத்தில் ஈடுபட்டவர்களின் தொகை அதிகமாயிற்று.

அதன் கேடுதல்கள் :—இவ்விதம் அதிகமான ஜனங் கள் விவசாயத்தில் ஈடுபடுவதில் பல கெடுதல்கள் உண்டா கின்றன. அமெரிக்கா, ஆஸ்ட்ரேலியா முதலிய தேசங் களைப்போல் காலி நிலம் அதிகமாயிருக்கும் தேசங்களில் விவசாயத்தில் ஜனங்கள் அதிகமாக ஈடுபட ஈடுபட அதிக செல்வம் ஈட்டுவதற்கு ஏதுவாயிருக்கும். ஆனல் நம் தேசத் தில் புதிதாகப் பயிர் செய்யக்கூடிய நிலம் மிகவும் கொஞ்சம். நம் ஜனத்தொகை விருத்தி விவசாயத்தின் விருத்தியைவிட அதிகமாயிருக்கிறது. ஜனத்தொகை அபிவிருத்திக்குத் தகுந்தபடி விவசாயத்தை விருத்தி செய்வதற்குப் போது மான காலிநிலம் நம் நாட்டில் இல்லே. அதன் காரணமாக முன் ஒரு நிலத்தில் எத்தனே பேர்கள் சாகுபடி செய்து கொண்டிருந்தார்களோ அதைவிட அதிகமான பேர்கள் இப்பொழுது அந்த நிலத்தை நோக்கி ஜீவனம் செய்துவரு கிறார்கள். அதாவது மொத்தஞ் சாகுபடியான நிலத்தை மொத்த சாகுபடி செய்பவர்களின் எண்ணால் வகுத்துப் பார்த்தால், சராசரி முன் ஒருவனுக்கு பூமியிருந்ததைவிட, இப்பொழுது குறைந்திருப்பதைக் காணலாம். 1901 - 2-ம் வருஷத்தில் ஒவ்வொரு விவசாயியிடத்திலும் சராசரி 1·28 ஏக்ராயிருந்தது. 1911 - 12 வருஷத்தில் 1·24 ஏக்ராத் தான் இருந்தது. சென்ற இருபது வருஷங்களில், ஜனத் தொகை ஏற ஏற, விவசாயத்தில் ஈடுபடும் மக்கள் அதிக மாக, விவசாயிகளின் சராசரி பூமியும் குறைந்து வந்திருக்கும்.

இதன் பயன்கள் இரண்டு. முதலாவது, இருவர் சரியாகச் சாகுபடி செய்யக்கூடிய நிலத்தில் மூன்றாவது மனிதனும் சேர்ந்து உழைத்தால், அம்மூன்றாவது மனிதனுடைய உழைப்புக்காக அதிக விளைவு உண்டாவதில்லை. ஆகையால் அவன் உழைப்பு வீணாகின்றது. இரண்டாவதாக, முன் இருவர் பங்கு போட்டுக்கொண்ட விளைவையே இப்பொழுது மூன்று பேர்கள் பங்கு போட்டுக்கொள்ள வேண்டியிருக்கிறது. இதனால் அவர்கள் வரும்படி குறைகிறது. வரும்படி குறைவதால் அவர்கள் ஆகாரம் குறைகிறது. அதனால் அவர்கள் பலஹீனர்களாகிறார்கள். ஆகையால் இங்ஙனம் வீணாகும் உழைப்பை மற்ற கைத்தொழில்களில் அவர்கள் உபயோகப்படுத்தினால், அவர்களுக்கு நல்ல வரும்படி வருவதுடன், விவசாயத்தில் இருப்பவர்கள் வரும்படியும் அதிகமாகும்.

நம் நாட்டில் கைத்தொழில்களின் அபிவிருத்திக்கு வேண்டிய வசதிகள் யாவும் இருக்கின்றன. நம் கைத்தொழில் சாமான்களை பிறதேசங்களிலிருந்து வருவித்து, கைத்தொழில் லாபங்களை அன்னிய நாட்டாருக்குக் கொடுத்து வருகிறோம். கைத்தொழில்களை விருத்திசெய்வதால், அந்த லாபத்தை நாமே பெற்று, லக்ஷக்கணக்கான மக்களுக்கு தொழிலும், உணவும் கொடுப்பதுடன் விவசாயத்தில் இருப்பவர்களுடைய நிலைமையை உயர்த்தியவர்களாவோம்.

நம் நாட்டு விளை பொருள்கள் :—கீழ்வரும் ஜாபிதாவிலிருந்து நம் நாட்டின் முக்கியமான விளைவு பொருள்களையும், அவை 1928 - 29-ம் வருஷத்தில் எவ்வளவு ஏக்ராவில் சாகுபடி செய்யப்பட்டனவென்றும், ஒவ்வொரு தானி

யச் சாகுபடியும் மொத்த சாகுபடியில் எவ்வளவு பங்கு ஆகிறதென்றும் தெரியவரும். *

| தானியங்களின் பெயர் | மொத்த ஏக்ரா 10 லக்ஷங் களில் | மொத்த சாகுபடியில் 100-க்கு பங்கு |
|---|---|---|
| நெல் | 81·13 | 30·9 |
| கோதுமை | 24 93 | 9·5 |
| பார்லி, சோளம், ராகி, கம்பு முதலிய தானியங்கள் ... | 50 93 | 19·4 |
| கடலை ... | 13·63 | 5·2 |
| மற்ற பருப்புகள் ... | 29·65 | 11·3 |
| மொத்த தானியப் பொருள்கள்... | 200·27 | 76·3 |
| பழங்கள் காய்கறி வகையறு ... | 7·85 | 3·0 |
| கரும்பு வகையறு ... | 2·67 | 1·1 |
| மொத்த உணவுப் பொருள்கள்... | 210·79 | 80·4 |
| எள், கடுகு, தேங்காய், ஆமணக்கு முதலிய எண்ணெய் வகைகள் ... | 17 89 | 6·8 |
| நெய்யக்கூடியவை— பருத்தி ... | 16·51 | 6·3 |
| சணல் .... | 3·06 | 1·2 |
| மற்றவை ... | ·66 | 0·2 |
| நீலம், அபின், காப்பி, டீ வகையறு... | 13·07 | 6·0 |
| மொத்த உணவில்லாத வகைகள்... | 51·19 | 19·5 |
| மொத்த சாகுபடி | 262·32 | |

* Page 160 Jathar & Beris' Indian Economics Vol, I.

மேல்கண்ட கணக்கிலிருந்து, நம் தேசத்தில் அதிகமாக தானியங்களே விளைவிக்கப்படுகின்றன வென்றும், முக்கியமாய் நெல்லும், கோதுமையும் பயிர் செய்யப்படுகின்றன வென்றும் தெரியும்.

விவசாயத்தில் குறைந்த விளைவு:—விவசாயத்தினால் நாம் சரியான பயனை அடைகின்றோமா என்பதைப்பற்றி இப்பொழுது ஆராய்வோம். நமக்கு இத்துறையில் கிடைக்கும் லாபத்தையும், பிறதேசத்தார்களுக்கு விவசாயத்தால் கிடைக்கும் ஊதியத்தையும் ஒப்பிட்டுப் பார்த்தால், நம் தேசத்தில் சரியான விளைவு கிடைப்பதில்லை எனத் தெரிய வரும். சர். ம. விசுவேசுவரய்யா அவர்கள் கீழ்க்கண்டபடி எழுதுகிறார்கள் "நீர்ப்பாய்ச்சல் உடைய நிலங்களையும் சேர்த்துச் சராசரி கணக்குப் போட்டுப் பார்த்ததில், ஒரு ஏக்கராவில் இந்தியாவில் ரூ. 25 தான் கிடைக்கின்றது. ஆனால் ஜப்பானில் ரூ. 150 கிடைக்கின்றது. அதாவது ஜப்பான் தேசத்தில் நம் தேசத்தில் கிடைப்பதைப்போல் ஆறு பங்கு பலன் ஒவ்வொரு ஏக்கரா பூமியிலிருந்தும் அடைகிறார்கள்." சர்க்கரைக் கைத்தொழிலைப்பற்றி பரீக்ஷை செய்யும்படி ஏற்படுத்தப்பட்ட இந்திய சர்க்கரை கமிட்டியார் (The Indian Sugar Committee) இந்தியாவில் ஒரு ஏக்கரில் உண்டாகும் சர்க்கரை கியூபா (cuba) வில் உண்டாவதில் மூன்றில் ஒரு பங்கும், ஜாவா (Java) வில் உண்டாவதில் ஆறில் ஒரு பங்கும் ஹாவா (Hawa) வில் உண்டாவதில் ஏழில் ஒரு பங்கும் என்று சொல்லி யிருக்கிறார்கள். இந்தியாவில் ஒரு ஏக்கரில் சுமார் 75 ராத்தல் பஞ்சும், அமெரிக்காவில் 180 ராத்தல் பஞ்சும், எகிப்தில் 300 முதல் 400 ராத்தல்கள் வரையும் விளைகின்றன வென்றால், இந்தியாவின் விளைவு குறைவு என்று தெளிவாய் விளங்கும். இவ்வளவு குறை

வாக விளைவதின் காரணத்தை யறிந்து நம் தேசத்திலும் அதிகமாக விளைவிப்பதற்கு ஏற்பாடுகள் செய்யவேண்டும்.

குறைந்த விளைவுக்குக் காரணங்கள்:—இக் குறைந்த விளைவுக்குக் காரணங்கள் பின்வருமாறு.

1. ஜப்பான் முதலிய புதிய நாகரிகத்தில் ஈடுபட்ட தேசங்கள் புதிதாகக் கண்டுபிடிக்கப்பட்ட முறைகளில் உரம் போடுதல், நல்ல விதைகளைத் தேர்ந்தெடுத்தல், புதியவித மான எருக்களைப் போடுதல், ஆழமாக உழுதல் முதலிய முறைகளைக் கைக்கொண்டு அதிகமான லாபத்தை யடைகிறார்கள். ஜப்பானில் 170 லக்ஷம் ஏக்ராவைக் கொண்டு 560 லக்ஷம் ஜனங்களுக்கு வேண்டிய பொருள்களை விளைவிக்கின்றார்கள். அதாவது ஒரு மனிதனுக்கு வேண்டிய உணவு 1/3 ஏக்ராவிலிருந்து கிடைக்கிறது. ஆனால் இந்தியாவில் ஒருவனுக்கு வேண்டிய உணவு 5/6 ஏக்ராவிலிருந்து கிடைக்கிறது. நம் தேசத்திலும் மற்ற தேசங்களைப்போல் நவீன சாஸ்திர முறைகளை அனுஷ்டித்தால் நாமும் அதிகப் பயனை அடையலாம்.

2. விவசாயத்தில் அதிக ஜனத்தொகை ஈடுபடுவதால், விவசாயத்தின் வரும்படி குறைகின்றது; இது முன் பக்கங்களில் விவரித்துச் சொல்லப்பட்டிருக்கிறது.

3. துண்டு நிலச் சாகுபடி (Fragmentation and subdivision of land)—நிலங்கள் மிகச் சிறிய சிறிய பாகங்களாகப் பிரிக்கப்பட்டு தனித்தனியாக உழப்பட்டு வருகின்றன. இதுவே நமது விவசாயத்தில் லாபமின்மைக்கு ஒரு முக்கிய காரணம் எனச் சொல்லப்படுகிறது. மேல்நாடுகளில் பண்ணைகள் பெரியனவாக யிருப்பதால், நவீன முறைகளைக் கைக்கொள்வதனாலும், பெரிய பண்ணைகளால் வரக்கூடிய பல சௌகரியங்களிலும், அதிகம் விளை

விப்பதற்கு ஏதுவாக யிருக்கிறது. மிகப் பெரிய பண்ணைகள் சாத்தியமில்லா விடங்களிலும், பண்ணைகள் ஒரு அளவுக்குக் குறைவாக யிருக்கலாகாது. ஏனெனில் அது ஒரு அளவுக்குக் குறுகினால், அப்பண்ணையினின்றும் சாதாரண லாபம்கூட அடையமுடியாது. சாதாரணமாக நல்ல லாபம் கிடைக்கக்கூடிய பண்ணைகள் என்பது (Economic holdings) நிலத்தையும் ஜல சௌகரியத்தையும் பொருத்தது.

உதாரணமாக, கோயமுத்தூர் ஜில்லாவில் கிணற்றுப் பாய்ச்சல் உள்ள புஞ்சை பூமி நான்கு ஏக்ரா ஒரு குடும்பத்துக்கு லாபத்தைத் தரக்கூடிய ஒரு பண்ணை (Economic holding) எனச் சொல்லலாம். நான்கு ஏக்ராக்களுக்கு பதிலாக இரண்டு ஏக்ராக்கள் ஒருவனிடத்தில் இருந்தால் அவனுக்கு அது அவ்வளவு லாபகரமாக யிருக்காது. ஏனெனில், முதலாவதாக அந்த இரண்டு ஏக்ராவில் அவனுக்குப் போதுமான வேலையில்லை. ஆகையால் அவனுடைய பாதி சக்தியும் காலமும் வீணாகின்றன. இரண்டாவதாக நான்கு ஏக்ராவை உழவும், தண்ணீர் பாய்ச்சவும் ஒருஜோடி மாடுகள் தேவை. அவனுடைய பூமி இரண்டு ஏகராவானாலும் மாடுகள் ஒரு ஜோடி யில்லாமல் முடியாது. அந்த இரண்டு ஏக்ராவில் மாடுகளுக்குப் போதுமான வேலைக்யின்றி, பாதிகாலம் சும்மாயிருக்க நேரிடும். மாட்டின் உணவும் சக்தியும் வீணாகின்றன. இரண்டு ஏக்ரா இருப்பவன் மாடு வாங்காமல் விவசாயம் செய்ய நினைத்தால், விளைவு குறைந்து போய்விடும். ஆகையால் அங்கு மக்களுடைய உழைப்பை வீணாக்காமல், பூமியிலிருந்து முழுப் பயனை யடைய விரும்பினால், பண்ணை ஒவ்வொன்றும் நான்கு ஏக்ரா விஸ்தீரண முள்ளதாய் இருக்க வேண்டுமெனச் சொல்லலாம். அதற்குக் குறைந்தால் அந்த விவசாயி

னுடைய காலமும் உழைப்பும் பணமும் வீணுவதுடன், அதற்குத் தகுந்த பயனையும் விளைவிக்காது.

நமது தேசத்திலிருக்கும் நிலையைக் கவனித்துப் பார்ப்போம். பீகார் ஒரிஸ்ஸா மாகாணங்களில் 1/2 ஏக்ரா பூமிகள் மிக அதிகமாக யிருக்கின்றன. பஞ்சாப் மாகாணத்தில் சுமார் 2400 கிராமங்களைப் பரிசைஷ செய்து பார்த்ததில் 100-க்கு 17·9 பங்கு பூமிகள் ஒரு ஏக்ராவாகவும், 25·5 பங்கு பூமிகள் 1 முதல் 3 ஏக்ராவாகவும் 14·9 பங்கு பூமிகள் 4 அல்லது 5 ஏக்ராக் கொண்டதாகவும் இருப்பதாய்த் தெரிய வருகிறது. பம்பாய் சென்னை மாகாணங்களிலும் ஒரு ஏக்கருக்குக் குறைந்த பண்ணைகள் ஏராளமா யிருக்கின்றன. பம்பாய் மாகாணத்தில் ஒரு கிராமத்தில் (Pimpla goudagar) கணக்கெடுத்ததில் அதில் 729 பண்ணைகள் இருந்தன. அவைகளில் 463 ஒரு ஏக்கருக்குக் குறைந்திருந்தன. 211 பண்ணைகள் 1/4 ஏகருக்கும் குறைந்திருந்தன. ரத்னகிரி ஜில்லாவில் சில பண்ணைகள் ·00625 ஏக்கர் அதாவது 30 1/2 சதுர கெஜம் இருந்தன. பண்ணைகள் இவ்வளவு சிறியனவாக இருப்பதால் எவ்வளவு உழைப்பும், காலமும் இதனுல் வீணுகின்ற தென்பதை வாசகர்களே யோசித்துத் தெரிந்துகொள்ளலாம்.

பண்ணைகள் இவ்வளவு சிறியனவாகவும் பின்னம் பின்னமாவும் பிரிக்கப்படுவதற்கு, இந்து முகம்மதிய சட்டமே முக்கிய காரணமாகும். ஒருவன் இறந்ததும் அவனுடைய பூமிகள் யாவும் அவன் மக்களுக்குள் பிரித்துக் கொள்ளப்படுகின்றன. ஆரம்பத்தில் பூமி எவ்வளவு பெரியதாயிருந்தாலும், இரண்டு மூன்று தலைமுறைகளில், அது பல தடவைகளில் பங்கு போடப்பட்டு, சிறிய பண்ணைகளாகப் பிரிக்கப்படுகிறது.

4. இந்திய குடியானவர்கள் மிகவும் ஏழ்மையான ஸ்திதியில் இருக்கின்றனர். பூமிகளுக்கு சரியானபடி உரம் போடவும், மாடுகள் முதலியன வாங்குவதற்கும் மற்ற பண்ணைச் செலவுகளுக்கும் அவர்களிடத்திலும் பணமும் இருப்பதில்லை; குறைந்த வட்டிக்குக் கடனும் கிடைப்பதில்லை. போதுமான பணம் இல்லாததால் அவர்கள் விவசாயம் சரியாகச் செய்ய முடிவதில்லை.

5. குடியானவர்களில் பெரும் பகுதியோர் பெருவாரியான கடனில் மூழ்கி யிருக்கின்றனர். அவர்களுக்கு இக் கடன் சுமை யிருக்கும் வரையில், விவசாயம் விருத்தி யடைவது அசாத்தியம்.

விவசாயத்தை விருத்திசெய்யும் முறைகள்:—இங்ஙனம் தாழ்ந்த நிலைமையை அடைந்திருக்கும் விவசாயத்தை விருத்திசெய்ய வேண்டியது மிக அவசியம். நம் மக்களில் பெரும்பான்மையோர் ஈடுபட்டு, ஜீவனம் செய்யும் இத் துறையை விருத்தி செய்தாலொழிய நம் நாடும் மக்களும் முன்னேறுவது அசாத்தியம். விவசாயத்தை விருத்தி செய்வதற்குக் கீழ்க்கண்ட முறைகளை அனுஷ்டிக்கவேண்டும்.

1. நீர்ப்பாய்ச்சல் பூமிகளை அதிகப்படுத்த வேண்டும். எத்தனையோ நதிகளும் ஓடைகளும், அவைகள் தண்ணீர் உபயோகப்படுத்தப் படாமல் மற்ற ஆறுகளிலும் கடலிலும் விழுந்து வீணுகின்றன. அவைகளைத் தடுத்து அவைகளைக் கொண்டு பல லக்ஷக்கணக்கான ஏக்ரா பூமிகளுக்கு நீர்ப் பாய்ச்சல் பூமிகளை அதிகப்படுத்தினுல், பஞ்சங்களின் பயம் ஒழியும்.

2. எருக்கள், விவசாயத்துக்கு வேண்டிய யந்திரங்கள் அன்னிய நாடுகளிலிருந்து வரவேண்டி யிருந்தால், அவைகளின் பேரில் போடப்பட்டிருக்கும் வரியைக் குறைத்து,

அவைகள் குறைந்த விலைக்கு குடியானவர்களுக்குக் கிடைக்கும்படி செய்யவேண்டும்.

3. நில வரியைக் குறைக்கவேண்டும். தற்காலத்தில் பூமிகளின்பேரில் போடப்பட்டிருக்கிற வரி மிக அதிகம். அதைக் குறைப்பதால் குடியானவர்களின் பொருளாதார நிலைமை உயர்த்தப்படலாம். தவிர வரிகள் குடியானவர்கள் கையில் பணம் இருக்கக்கூடிய காலங்களில் வசூல் செய்யப்படவேண்டும். தற்சமயம் பயிர் பூமியிலிருக்கும் காலத்திலேயே நிலவரி வசூல் செய்யப்படுகிறது. ஆனால் பயிர் அறுவடையாகி, விற்பனையான பிறகே வசூல் செய்வது குடியானவர்களுடைய சௌகரியத்தை அனுசரித்ததாகும். அறுவடைக்குப்பின் வசூல் செய்தால், குடியானவர்கள் தங்கள் பயிரை நல்ல விலைக்கு விற்கக்கூடிய லாபத்தை அடைவதுடன், வரியைக் கட்டுவதற்காக கடன் வாங்கவேண்டிய அவசியமும் இராது.

4. விதைப்புக்கு வேண்டிய விதைகள் உயர்ந்தனவாகக் கிடைப்பதற்கும், பயிர்களுக்கு வரும் கேடுகளைத் தடுப்பதற்கும், கால்நடைகளை விருத்தி செய்வதற்கும் ஏற்பாடுகள் செய்யவேண்டும்.

5. விவசாயத்துக்கு வேண்டிய எருக்கள் முதலியவைகள் ஒரு இடத்திலிருந்து மற்றொரு இடத்துக்குக் கொண்டு போவதற்கும், விவசாய விளைவுகளை ஒரு இடத்திலிருந்து விற்பனைக்காக மற்றொரு இடத்திற்குக் கொண்டுபோவதற்கும் ரயில் சத்தத்தை சாசமாக்கவேண்டும். நம் நாட்டிலிருக்கும் ரயில் பாதைகள் நம்முடைய நன்மையை உத்தேசித்து நடத்தப்படுவதில்லை யென்றும் பல சமயங்களில் ஆங்கிலேயர் லாபத்தையே கருதி நடத்தப் படுகிறதென்றும் பலரால் ஆதாரங்களுடன் சொல்லப்படுகிறது. உதாரணமாக

ஆஸ்ட்ரேலியாவி லிருந்து கல்கத்தாவுக்கு ஒரு மணங்கு கோதுமை வருவதற்கு சத்தம் 0-6-0 ஆகிறது. ஆனால் அதே ஒரு மணு கோதுமை லயல்பூரிலிருந்து கல்கத்தா வருவதற்கு ரூ. 1-3-3 ஆகிறது. இந்தக் காரணத்தால் கல்கத்தா வியாபாரிகள் ஆஸ்ட்ரேலிய கோதுமையைத்தான் வாங்குவார்கள். இதன்மூலம் நம் நாட்டுக் கோதுமைக்கு சரியான விலையகப்படாமல் கோதுமை விவசாயம் கஷ்டப்படநேரிடும். இப்படிப்பட்ட உதாரணங்களைப் பெருக்குவது எளிது. இவைகளினின்று தெரிவது யாதெனில், ரயில் சத்தங்கள் விவசாயத்தின் முன்னேற்றத்திற்கு ஏற்றவாறு அமைக்கப்படவேண்டும் என்பதே.

6. விவசாயத்தில் புதிய முறைகளை அனுஷ்டிப்பதற்குத் தக்கபடி குடியானவர்களுக்கு போதுமான கல்வி கற்றுக் கொடுக்கப்பட வேண்டும்.

.7 சிறு துண்டு நிலங்களை தனிப்பண்ணைகளாகச் சாகுபடி செய்வதால் வரும் நஷ்டத்தை முன் பக்கங்களில் கண்டோம். பூமிகள் சிறிய துண்டுகளாய்ப் பிரிக்கப்படாமலிருக்கவும், பிரிக்கப்பட்ட துண்டு நிலங்கள் சேர்க்கப்பட்டு பெரிய பண்ணைகளாகச் செய்யப் படுவதற்கும் முயற்சிகள் செய்யப்படவேண்டும். இத்துறையில் பஞ்சாப் மாகாணத்தில் கோ ஆபரேடிவ் இலாகாவால் முயற்சிகள் செய்யப்பட்டு அவை நல்லபயனைத் தந்திருக்கின்றன. 3187 கிராமங்களில், 133000 துண்டு நிலங்கள் சேர்க்கப்பட்டு 25300, லாபம் தரக்கூடிய பண்ணைகளாகப் பிரிக்கப்பட்டன. இதனால் பண்ணைகளின் விஸ்தீரணம் சராசரியாக 0·7 ஏக்கரிலிருந்து 3·8 ஏக்கராக உயர்ந்தது. இம்மாதிரியே மத்திய மாகாணத்தில் சாடீஸ்கார் ஜில்லா (Chatisgarh) வில் 156,500 துண்டு நிலங்கள் சேர்க்கப்பட்டு, லாபம் தரக்கூடிய பண்ணை

களாகப் பிரிக்கப் பட்டன. இது சம்பந்தமாக கூடிய இடங்களில் சட்டங்கள் செய்தும், பஞ்சாயத்துகள் மூலமாகவும் கோ ஆபரேடிவ் இலாகாக்கள் மூலமாகவும் முயற்சி செய்யப்படவும் வேண்டும்.

8. குடியானவர்களுக்குப் போதுமான பண உதவி செய்யப்பட வேண்டும்.

9. குடியானவர்களுக்குத் தாங்கமுடியாத சுமையாக இருந்து வரும் கடனைத்தீர்க்க வழிதேடவேண்டும்.



## நான்காவது அதிகாரம்



### குடியானவர்கள் கடன் :—(Rural indebtedness)

குடியானவர்கள் கடன் என்ற விஷயம் மிகவும் முக்கியமான விஷயம். தேசத்தின் முன்னேற்றமும், நம்நாட்டுக் கைத்தொழிலும் வியாபாரமும், இவைகளின் பெருக்கமும், குடியானவர்களுடைய பொருளாதார சக்தியையும், விவசாயத்தையும் பொருத்திருக்கிறது. இவ்விஷயம் மற்றதேசங்களைவிட நம் தேசத்தில் மிகவும் முக்கியமானது. ஏனெனில் நம் நாட்டில் பெரும்பான்மையோர் குடித்தனத்தையும் விவசாயத்தையும் ஒட்டியே ஜீவனம் செய்வதுடன், விவசாயமே நம் செல்வம் ஈட்டும் துறைகள் யாவற்றுள்ளும் முக்கியமானதாக யிருந்து வருகிறது.

கடனின் அளவும் வளர்ச்சியும் :—குடியானவர்களின் கடனை திட்டமாய்க் கணக்கெடுப்பது பல காரணங்களினாலும் அசாத்தியமா யிருக்கிறது. லேவாதேவி அல்லது

பாங்கிங் விஷயங்களைப்பற்றி விசாரணை செய்ய ஏற்படுத்தப் பட்டிருந்த கமிட்டியார், இவ்விஷயங்களை ஆராய்ச்சி செய்து அடைந்திருக்கும் முடிவுகள் கீழே குறிப்பிடப்பட் டிருக் கின்றன.

குடியானவர்களின் மொத்தக்கடன் சுமார் 900 கோடி ரூபாய் எனக் கணக்கிடப்பட் டிருக்கிறது. மாகாண வாரி யாகக் கணக்குக் கீழே கொடுக்கப்பட்டிருக்கிறது. *

| | | | |
|---|---|---|---|
| அஸ்ஸாம் | 22 | கோடி | ரூபாய்கள் |
| வங்காளம் | 100 | ,, | ,, |
| பீகார் ஒரிஸ்ஸா | 155 | ,, | ,, |
| பம்பாய் | 81 | ,, | ,, |
| பர்மா | 50 முதல் 60 வரை | | ,, |
| மத்தியப்பிரதேசங்கள் (Central areas) | 18 | ,, | ,, |
| மத்திய மாகாணங்கள் | 36 | ,, | ,, |
| குடகு | 35 முதல் 55 லக்ஷ | | ரூபாய்கள் |
| சென்னை | 150 | கோடி | |
| பஞ்சாப் | 135 | ,, | ,, |
| ஐக்கிய மாகாணங்கள் | 124 | ,, | ,, |

குடியானவர்களின் கடன் நெடுநாட்களாக வளர்ந்து கொண்டே வருகிறது. உதாரணமாக 1921-ம் வருஷத்தில் பஞ்சாப் மாகாணத்தில் குடியானவர்களின் கடன் 90 கோடி யெனக் கணக்கிடப் பட்டது. 1929ம் வருஷத்தில் 135 கோடியெனச் சொல்லப்படுகிறது. இங்ஙனம் கடன் அதி விரைவாக வளர்ந்துகொண்டு வருவதால், அதன் பரிகாரத் தையும் உடனே கையாள வேண்டியது அவசியம்.

*Page 55 The Indian Central Banking Enquiry Committee Report 1931.

கடனுக்குக் காரணங்கள்:—குடியானவர்களின் கடன் இவ்வளவு அதிகமாவதற்குக் காரணங்கள் பல வுள. அவைகளில் முக்கியமானவைகள் சில கீழே சொல்லப்படுகின்றன.

1. குடியானவர்களின் ஏழ்மை நிலையே இதற்கு முக்கியமான காரணமாகும். பூமியில் விளைவு சரியில்லாத காலங்களிலும், மழை இல்லாமல் போன சமயங்களிலும் அல்லது பருவம் தப்பிப் பெய்த காலங்களிலும், குடியானவர்களுக்கு வேறு ஒரு வரும்படியும் இல்லை. நல்ல விளைவிருக்கும் காலங்களில்கூட, அவர்கள் செலவு போக அவர்கள் கையில் மீதமாவது கடினம். ஆகையால் அவர்களால் கஷ்டகாலத்துக்கெனப் பொருள் சேமித்து வைக்க இயலுவதில்லை. ஒரு தரம் கடன் வாங்கினால் அதை மறுபடி கட்டுவதற்கும் முடிவதில்லை.

2. தவிர அவர்களுக்குப் போதுமான படிப்பின்மையால், கணக்கு வைக்கும் பழக்கமும், பிற்காலத்துக் கெனச் சேமித்து வைக்கும் வழக்கமும் இல்லை. நம் தேசத்தில் 100-க்கு 9 பேர்கள்தான் எழுதப்படிக்கக் கற்றவர்கள். அவர்களில் பெரும்பான்மையோர் பட்டணங்களில் வசிப்பதால், கிராமங்களில் கற்றவர்கள் மிகச் சிறிய தொகையினர். எண்ணும் எழுத்தும் தெரியாததால் அவர்கள் எப்பொழுதும் கணக்கு வைப்பதில்லை. எண்ணும் எழுத்தும் தெரிந்தவர்களும்கூட கணக்கு வைப்பதின் முக்கியத்தையும் பிரயோஜனத்தையும் அறியவில்லை. கணக்கு வைக்காததால், தங்களுக்கு வருஷத்துக்கு எத்தனை ரூபாய் வருமானம் உண்டு, அதில் எத்தனை ரூபாய் எரு, கூலி, கால் நடை முதலிய செலவுகளுக்காகக் கழிக்கப்பட வேண்டும். இச் செலவு போக நிகரலாபம் எத்தனை என்று கணக்கு எடுக்க முடியாதவர்களாய் இருக்கின்றனர். இம்மாதிரியே அவர்கள்

வாங்கிய கடன்களுக்கும் கணக்கு வைக்காமலிருந்து, பின் அதிக வட்டியும், கோர்ட்டுச் செலவும் சேர்த்துக் கொடுக்க வேண்டியவர்க ளாகின்றனர்.

3. குடியானவர்கள் அவர்கள் வருவாய்க்குத் தகுந்த படி செலவு செய்வதில்லை. சாதாரண காலங்களில் எளிய வாழ்வையே கைப்பற்றி வந்தபோதிலும் விசேடங்களில் மட்டுக்கு மீறிச் செலவு செய்கின்றனர். இருப்பதைக் கொண்டுதான் விசேஷங்களையும் நடத்தவேண்டும் என்ற நினைவின்றி, தங்கள் வீடுகளில் கல்யாணம் முதலியவை ஏற்பட்ட சமயங்களில் கணக்கின்றிக் கடன் வாங்கியும் அதிகம் செலவு செய்கின்றனர். இங்ஙனம் ஒருதடவை செய்தால், பின்னர் எந்த நாளும் அவர்கள் கடனிலிருந்து மீள முடிவதில்லை; ஏனெனில் கடனைத் தீர்க்கிற அளவு ஒரு வருஷமும் அவர்களுக்கு பணம் மீதமாவதில்லை.

4. குடியானவர்களின் கடன் பல தலைமுறைகளாக இருந்து வருகிறது. இப்பொழுது அவர்களுக்கு இருக்கும் கடன்களில் பெரும் பகுதி அவர்கள் பெற்றோரும், முந்தையரும் விட்டுச் சென்றவைகளே. ஒரு தரம் கடன் வாங்கினால், அதைக் கட்ட இயலுவதில்லை. கடனுக்காக பணம் கொடுக்கப்பட்டாலும், அது வட்டிக்குக்கூடப் போதுமானதாக இருப்பதில்லை. இங்ஙனம் கட்டமுடியாத நிலையில் கடன் வாங்கியவன் அதைத் தன் பிள்ளைக்கு விட்டுச் செல்கிறான். பிள்ளையும் கட்டமுடியாமல் அவன் தன் பின்னோர்க்கு விட்டுச் செல்கிறான். கடனும் தலைமுறைக்குத் தலைமுறை அதிகரித்துக்கொண்டே வந்து, கடைசியில் தாங்க முடியாத பாரமாய் முடிகிறது.

5. நம் சட்ட முறையும் இக்கடனை அதிகம் செய்வதில் உதவி செய்கிறது. மூன்று வருஷத்தில் ஒரு பிராமிசரி

நோட்டு லிமிடேஷன் ஆகிவிடும். லிமிடேஷனைய் விட்டால் அதன்பேரில் தாவாச்செய்து பணம் வசூல் செய்ய முடியாது. ஆகையால் மூன்று வருஷத்திற்குள் பிராமிசரித் தொகை செல்லாகாவிட்டால், அதன்மேல் தாவாச் செய்யாம லிருக்கும் பொருட்டு, அதை மறுபடியும் புது நோட்டாக எழுதவேண்டிய அவசியம் ஏற்படுகிறது. சாதாரணமாக அசலும் முழு வட்டியும் சேர்த்துத்தான் புதுப் பிராமிசரி நோட்டு எழுதி வாங்கப்படுகிறது. இக்காரணத்தால் அசலுக்குமட்டு மில்லாமல் வட்டிக்கும் சேர்த்து வட்டி கொடுக்கவேண்டி யிருக்கிறது.

6. தற்காலத்தில் சுலபமாகக் கடன் கிடைப்பதே கடன்கள் அதிகமாவதற்கு ஒரு முக்கிய காரணமாக இருக்கிறது. சுமார் இருபது வருஷங்களுக்குமுன் கடன் கிடைப்பது அரிதா யிருந்தது. ஆகையால் குடியானவர்களுக்குக் கடன் கிடைக்காத காரணத்தால், அவர்கள் கடனும் அதிகமாகாமல் இருந்தது. ஆனால் தற்காலத்தில் எல்லா ஊர்களிலும் வட்டிக் கடைகள் ஏற்பட்டுவிட்டன. தென் இந்தியாவில் செட்டிப் பிள்ளைகளின் கடைகள் இல்லாத ஊர் இல்லையெனவே சொல்லலாம். லேவாதேவி செய்யும் நிதிகளும் அதிகமா யிருக்கின்றன. பெரிய ஊர்களில் மூல்தானிகளும் வந்து ரொக்க வியாபாரம் செய்து வருகின்றனர். இங்ஙனம் சுலபமாகப் பணம் கிடைப்பதால், குடியானவர்களும் ஏராளமாகக் கடன் வாங்கத் தலைப்பட்டு, அவர்கள் கடன் மிகவும் அதிகமாகிவிட்டது.

7. நிலவரி வசூல் செய்யும் முறையும் குடியானவர்களுடைய கடனுக்கு ஒரு காரணமாக இருக்கிறது. மாசூலில் ஒரு பகுதி வரியாக விதிக்கப்பட் டிருந்தால் குடியானவர்களுக்கு, கஷ்டம் தோன்றியிராது. ஆனால் இப்பொழு

திருக்கும் முறைப்படி நன்ருக விளைந்தாலும், விளையா விட்டாலும் ஒவ்வொரு நிலத்துக்கும் விதிக்கப்பட்ட வரியை கொடுக்கவேண்டி யிருக்கிறது. விளைவு இல்லாத பஞ்ச காலங்களில் வரியை முற்றிலும் தள்ளியோ அல்லது குறைத்தோ வசூல் செய்யவேண்டும் என்று சட்டம் ஒரு பக்கம் இருந்தாலும், அரசாங்கத்தார் அச்சட்டத்தை அனு பவத்தில் சரியாக அனுசரிப்பதில்லை. சென்ற சில வருடங் களாக விலை மிகவும் குறைந்துபோனதில் கோயமுத்தூர் ஜில்லா பொள்ளாச்சி தாலூக்காவில் பல கிராமங்களில் விதைக்கப்பட்டிருந்த நிலக்கடலையைத் தோண்டி எடுக்கும் கூலிகூட அக்கடலையின் விற்பனையால் வாராதென நினைத்து, அந்த நிலத்திலுள்ள கடலையை வேண்டியவர்கள் தோண்டி யெடுத்துக் கொண்டு போகும்படி விட்டுவிட்டனர். ஆனால் அப்பூமிக்காரர்களும் சர்க்காருக்கு எப்பொழுதும் போல் வரி கொடுக்கத்தான் வேண்டியிருந்தது. இப்படிப்பட்ட காலங்களில் கடன் வாங்கித்தான் குடியானவர்கள் வரி செலுத்த வேண்டியிருக்கிறது.

8. கடன்களுக்காக அவர்கள் கொடுக்கவேண்டிய அதிக வட்டியே கடன்களின் தொகையை அதிகப்படுத்து கிறது. வங்காளத்தில் வட்டி 100-க்கு 10 முதல் $37\frac{1}{2}$ வரை குடியானவர்கள் கொடுத்து வருகிறார்கள். பம்பாய் மாகா ணத்தில் 100-க்கு 12 முதல் 25 வரையும், பீகார் ஒரிஸ்ஸா மாகாணத்தில் $37\frac{1}{2}$ வரையும், மத்திய மாகாணத்தில் 12 முதல் 24 வரையும்—இம்மாதிரி பலவாருக அதிக வட் டிக்கே குடியானவர்கள் கடன் வாங்குகிறார்கள். சென்னை மாகாணத்தில் சாதாரணமாக 100-க்கு 12 முதல் 24 வரை வட்டிக்கு குடியானவர்களுக்குப் பணம் கிடைக்கிறது. சிற்சில சமயங்களில் வட்டி 36 அல்லது 48வரையும் உயருவ

துண்டு. அடமானங்களின் பேரில் குறைந்த வட்டிக்குப் பணம் கிடைக்கும். முதல்தரமான சொத்துக்களை அடமானம் வைத்தால், சாதாரணமாக 100க்கு 12 வட்டிக்கும் பணம் கிடைக்கும். ஆனால் வேறும் பிராமிசரி நோட்டிகளின் பேரிலுள்ள கடன்களுக்கு வட்டி அதிகம்.

இவ்வட்டிகள் மிக உயர்ந்தவை யென்று எடுத்துக் காட்டவேண்டிய அவசியமில்லை. வட்டிகளில் குறைந்த வட்டியாகிய 100-க்கு வருஷத்துக்கு 12 ரூ வீதம் வாங்கினாலும்கூட குடியானவனுக்கும் விவசாயத்துக்கும் மிக அதிக வட்டியே என்பது கீழ்க்கண்ட உதாரணத்தினால் விளங்கும்.

கோயமுத்தூர் ஜில்லாவில் கோபிசெட்டிபாளயத்து நஞ்சைகள் பிரசித்தி பெற்றவை. அவை முதல்தரமான சொத்துக்களாகச் சொல்லப்படும். அந்த நஞ்சைகள் ஏக்கா ஒன்று சாதாரணமாக ரூ. 2500/-விலை பெறத்தக்கது. அந்த பூமியில் ஒரு ஏகரை ஒருவன் அடமானம் வைத்தால் என்னவாகிறதெனப் பார்ப்போம். அது ரூ. 2500/-பெறுமாதலால் அதன்பேரில் அடமானமாக ரூ. 1500/-சாதாரணமாகக் கிடைக்கும். நம் மாகாணத்தில் குறைந்த வட்டியான 100-க்கு வருஷத்துக்கு 12 ரூ. வட்டிக்கே கடன் கிடைக்கிறதென வைத்துக்கொள்வோம். இந்த வட்டியின்பேரில் கடன் தொகை ரூ. 1500/-க்கு ஒருவருஷத்துக்கு வட்டி ரூ. 180/-ஆகிறது. ஆனால் பூமியிலிருந்து வரும் வருமானத்தைக்கணக்குப் போட்டுப் பார்ப்போம். விளைவு நன்றாகயிருக்கும் காலத்தில் மேல்கண்ட பூமியில் 15 சலகை நெல்குத்தகையாக வரும். சலகை யொன்று நல்ல விலையுள்ள காலத்தில் ரூ. 10-8-0 பெறும். அதாவது 15 சலகைகளுக்கு ரூ.157-8-0 கிடைக்கும். ஆனால் இதிலிருந்து நிலவரியும் இன்னும் மற்ற

சிறியவரிகளும் (Cesses) கழிக்கப்பட வேண்டும். நிலவரி வகையாரா சுமார் ரூ. 13-0-0 ஆகும். இதைக் கழித்தால் அப் பூமியின் வரும்படி ரூ. 144-8-0 ஆகிறது. விலை உயர்ந் திருக்கும் காலத்தில் இவ்வரும்படி கிடைக்கும். தற்காலத்தில் எல்லாப் பொருட்களுக்கும் விலை குறைத்திருப்பது யாவரும் அறிந்த விஷயம். இப்பொழுது நெல் சலகை ஒன்றுக்கு ரூ. 7/–தான் கிடைக்கும். ஆகையால் இப்போதய நிலவரப் படி 15 சலகை நெல்லுக்கு ரூ. 105/-கிடைக்கும். ஆனால் நிலவரி குறைக்கப்படவில்லை. முன்போலவே வரி ரூ. 13-0-0 கழிக்கப்பட்டால் பூமியின் நிகர வரும்படி ரூ. 92/–தான் ஆகிறது. இந்த வரும்படியைக் கொண்டு கடனின்பேரில் ஏற்படும் வட்டி ரூ. 180/ எப்படி அவன் கொடுக்க முடியும். நல்ல விளைவான காலங்களில்கூட அவனுக்கு ரூ. 105/–தான் பூமியிலிருந்து கிடைக்கிறது. வட்டியே கட்டுவது அவனுக்கு அசாத்தியமா யிருக்கும்போது அவன் அசலை எப்படிக் கட்டமுடியும். ஆகையால் வட்டியும் கட்ட முடியாமல் அசலும் கட்ட முடியாமல் சில வருஷங்களில் அவன் பூமியை இழக்க வேண்டியதைத் தவிர வேறு வழியில்லை. ஆகையால் விவசாயத்துக்காக கடன் வாங்குபவர்களுக்கு 100-க்கு 12 வட்டியே மிக அதிக வட்டி. இதுதான் நம் நாட்டில் குறைந்த வட்டி எனச் சொல்லப்படுகிறது. இன்னும் அதிக வட்டிக்குக் கடன் வாங்குபவர்களுடைய கதியைப்பற்றிச் சொல்லவேண்டிய தில்லை.

கடனால் உண்டாகும் தீமை:—குடியானவர்களுடைய கடன் இவ்வளவு அதிகமானதற்குக் காரணங்கள் இதுவரை சொன்னோம். எக்காரணத்தால் ஏற்பட்டதா யிருந்தாலும் இதை யொழிப்பதற்கு உடனே உபாயங்கள் தேடவேண்

டும் என்பதில் யாதொரு சந்தேகமும் இல்லை. கடன் அதிகமாவதால் விவசாயத்துக்கு ஏற்பட்ட தீமைகள் அள வற்றவை. இதனால் கிருஷித் தொழிலுக்குச் சொல்ல வொண்ணு இன்னல்கள் ஏற்பட்டிருக்கின்றன. குடியான வர்களுடைய முயற்சியையும் சிரத்தையையும் குன்றச் செய்கிறது. இதனால் பூமியின் விளைவு குறைகின்றது. எனவே, பொருளீட்டுதல் குறைந்து, வியாபாரமும் குறைந்து, நம் மக்களுக்குக் கிடைக்கும் உணவும் குறைகின்றது. உணவு குறைந்தால் பலமற்றவர்களாவார்கள். ஆகையால் இக்கடன் மனிதன் உடம்புக்குள்ளே நாளுக்கு நாள் பெரிதாகி உடலை அழுகவைக்கும் கட்டியைப் போன்றது. அதைக் கூடிய சீக்கிரத்தில் சிகிச்சை செய்து சௌக்கியப் படுத்தா விட்டால் சமூகத்தின் உடலைத் தின்று நாசமாக்கி விடும்.

இக்கடனைத் தீர்ப்பதற்கு ஐந்து வழிகளுண்டு.

1. பஞ்சாயத்தார் மூலமாகக் கடன்களைப் பைசல் செய்து, அடைப்பதற்கு வேண்டுவன செய்யலாம்.

2. சட்டங்கள் மூலம் கடன் சுமையைக் குறைக்கலாம்.

3. கோஆபரேடிவ் சங்கங்கள் மூலம்.

4. நில அடமான பாங்குகள் மூலம் (Land Mortgage Banks)

5. சர்க்கார் உதவியின் மூலம்.

பஞ்சாயத்தார் மூலம்:—பஞ்சாப் மாகாணத்தில் பல இடங்களிலும் மற்ற சில மாகாணங்களிலும், பஞ்சாயத்தார் மூலம் இக்கடனைத் தீர்க்க ஏற்பாடுகள் செய்யப்பட்டு, நல்ல பயனும் இதனால் கிடைத்திருக்கிறது. இது சம்பந்தமாக பாங்கிங் விசாரணைக் கமிட்டியார் (The Indian

Central Banking Enquiry Committee Report, 1931) கீழ்க்கண்ட அபிப்பிராயங்களைத் தங்கள் ரிபோர்ட்டில் வெளியிட்டிருக்கின்றனர்.

1. குடியானவர்கள் கடன் சம்பந்தமாய் பஞ்சாயத்து செய்வதற்குத் தனி உத்தியோகஸ்தர் ஒருவர் ஒவ்வொரு மாகாணத்திலும் நியமிக்கப்பட வேண்டும். அவருக்கு உதவியாக ஜில்லாக்களில் கமிட்டிகளும் நியமிக்கப்பட வேண்டும். இவர்கள் அதிக வட்டிச் சட்டம் (Usurious Loans Act) முதலிய சட்டங்களை குடியானவர்களுக்கு எடுத்துரைப்பதுடன், கடன்காரர்களையும் கடன் கொடுத்தவர்களையும் கூடியவரையில் சந்தித்து கடன்களைப் பைசல் செய்வதற்குப் பிரயத்தனம் செய்யவேண்டும்.

2. கடன் கொடுத்தவர்கள் தவணைகளில் வாங்கிக் கொள்வதற்குச் சம்மதித்தால், அங்ஙனம் செய்வதற்கு தொகை, தவணை முதலியன பைசல் செய்யவேண்டும்.

3. கடன் கொடுத்தவர்கள் ஒரே சமயத்தில் தொகை வேண்டுமென்றால், கூடுமானவரையில் குறைத்துப் பைசல் செய்து, கடன்காரர்களால் கொடுக்க முடியாத சமயங்களில், சர்க்கார் கோஆபரேடிவ் சங்கங்கள் மூலம் பணஉதவிசெய்து தாங்கள் தவணைகளில் பெற்றுக் கொள்ளவேண்டும்.

4. தவணைத் தொகைகள் ஏற்படுத்துவதில், குடியானவர்களுடைய சாகுபடிச் செலவுகள், அவர்களுடைய குடும்பத்துக்கு அவசியமான செலவுகள் இவைகளைக் கவனித்துக் கணக்குப் போடவேண்டும்.

5. இந்தப் பஞ்சாயத்து ஏற்பாட்டையும் சட்டபூர்வமாகச் செய்து, நியாயமான பஞ்சாயத்துக்களுக்கு ஒப்புக் கொள்ளாத முதலாளிகளையும் ஒப்புக்கொள்ளச் செய்வதற்கு நிபந்தனைகள் செய்யப்படவேண்டும்.

சட்டங்களின் மூலம்:—அதிகமான வட்டிகள் கடன்களுக்காகத் தீர்ப்புச் செய்யக் கூடாது என்பதற்கு இப்பொழுதே அதிக வட்டிச் சட்டம் (Usurious loans Act) முதலியன இருக்கின்றன. ஆனால் இவை அனுஷ்டானத்தில் இல்லை. கோர்ட்டுகளில் சாதாரணமாக 100-க்கு 24 வட்டியும் சில சமயங்களில் 30 வட்டியும்கூட தீர்ப்புச் செய்வதுண்டு. ஆகையால் இப்பொழுது சரியாக அமுலுக்குக் கொண்டு வரப்படாமலிருக்கும் அதிக வட்டிச் சட்டம் முதலிய சட்டங்கள் குடியானவர்களுக்கு அனுகூலமாக அமுலுக்குக் கொண்டுவரப்பட வேண்டும்.

கடன்களில் இரண்டு வகைகள் உண்டு. ஒன்று தீர்க்கக் கூடிய கடன்கள்; அதாவது சொத்தின் மதிப்புக்கு அதிகமாகாமல், ஆகையால் தீர்க்கக்கூடிய நிலையில் இருப்பவை. இவைகள் சம்பந்தமாய்த்தான் பஞ்சாயத்தாலும் இன்னும் மற்ற சாதனங்களாலும் பயன்படும்.

இரண்டாவதுவகைக் கடன்கள் சொத்துக்கு மீறியவை. இவைகளைச் சம்பந்தப்பட்ட மட்டில் பஞ்சாயத்துக்களும், மற்ற உபாயங்களும் யாதொரு உதவியும் செய்ய முடியாது. இக்கடன்களும் ஒழிக்கப்பட வேண்டும். ஏனெனில் இக் கடன் வியாதி விவசாயத்தைப் பாழாக்குகிறது. கடன் இருக்கும்வரை ஒருவனுக்கு முயற்சியும் சிரத்தையும் இருக்காது. ஏனெனில் அவன் எத்தனை உழைத்தாலும், அதனால் வரும் வருமானம் முற்றிலும் கடனுக்கு வட்டி செலுத்துவதிலேயே செலவு செய்யப்படுகிறது; ஆகையால் அவனுடைய உழைப்பின் லாபத்தை அவன் பெற முடியாமலிருப்பதால், அவன் முழு மனதுடன் உழைப்பதில்லை. அவனுக்கு பூமியைச் சுத்தமாக வைத்திருப்பதிலும் சிரத்தையிருப்பதில்லை. ஏனெனில் ஒரு தினம் அது அவன் கடனுக்

காக அவன் கையை விட்டுப் போய்விடும் என்று அவனுக்கு நிச்சயமாய்த் தெரியும். இங்ஙனம் பூமியைச் சரியாய்ப் பாதுகாக்காமலும், சரியானபடி உழைக்காமலும் இருந்தால் விவசாயத்தின் வரும்படி குறைவது ஆச்சரியமோ!

ஆகையால் இந்த சொத்துக்கு மீறின கடன்களைத் தீர்க்கவும் ஓர் வழி தேடவேண்டும். இக்கடன்களுக்காக ஒரு சௌகரியமான இன்சால்வென்ஸி சட்டம் (Agriculturists' Insolvency Act) ஒன்று தயார் செய்ய வேண்டும். இப்பொழுது அமுலில் இருக்கும் இன்சால்வென்சி சட்டம் குடியானவர்களுக்கு ஏற்றதாக இல்லை. இப்புதிய முறை அதிகப் பணச்செலவு இல்லாமலும், சீக்கிரத்தில் விவகாரம் முடிவு பெறக்கூடியதாகவும் இருக்கவேண்டும். மேலும் சிவில் புரோசிஜர் கோடு (civil procedure code) 60-வது பிரிவு பிரகாரம், குடியானவர்களுக்கு இன்றியமையாத பொருட்களைத் தவிர்த்து மற்றவையே கடன்களுக்காக பங்கிட்டுக் கொடுக்கப்பட வேண்டும்.

இப்படி சொத்துக்களைக் கொடுத்தாவது கடனைத் தீர்த்துவிட்டால், புதிதாக அவர்கள் வாழ்க்கையைக் கடன் பாரமின்றி ஆரம்பிப்பதற்கு ஏதுவாயிருக்கும். உழைப்பதற்கும் புதிய உற்சாகமும் சிரத்தையும் ஏற்படும். ஏனெனில் இனிமேல் அவர்கள் உழைப்பின் பலனை அவர்களே பெறுவார்கள்.



# ஐந்தாவது அதிகாரம்

## கிராம ரோக்க வசதிகள்(Rural Finance)

சாதாரணமாக கிராமங்களில் அதாவது குடியானவர்களுக்கு அவசியமான ரொக்கத் தேவையை கீழ்க்கண்டவிதமாகப் பிரிக்கலாம்.

1. குறுகிய காலக் கடன்கள்:—இவை விவசாயச் செலவுகளுக்காகவும், எருக்கள் கால்நடைகள் வாங்குவதற்காகவும், களை முதலிய பிடுங்கி பூமியைச் சுத்தம் செய்வது, இதுபோன்ற விவசாயச் செலவுகளுக்காகவும், உபயோகப்படக்கூடியவை. விவசாயம் முடிந்து பயிர்கள் அறுவடையாகி விற்கப்பட்டதும் திருப்பிக் கொடுக்கப்படக் கூடியவை. ஆகையால் இக்கடன்களுக்கு ஒரு வருஷத் தவணைக்குமேல் அவசியமில்லை.

2. நீண்ட காலக் கடன்கள்:—இவை பழைய கடன்களைக் கட்டுவதற்கும், புதிதாக பூமிகள் விலைக்கு வாங்குவதற்கும், அல்லது புதிதாக பூமியைச் சாகுபடிக்குக் கொண்டு வருவதற்கும் அவசியமானவை. இவைகளுக்கு ஏன் அதிகத் தவணை வேண்டும் என்பதைப்பற்றி பின் விவரித்துக் கூறப்படும்.

3. விளைபொருள்கள் விற்பனைக்கு ரோக்க வசதிகள்:- பயிர்களைக் கிராமங்களிலிருந்து, அவைகள் விற்கக்கூடிய ஊர்களுக்குக் கொண்டுபோவதற்கும், ஒருவிதமான உதவி வேண்டியிருக்கிறது. நிலவரியைக் கொடுக்கவும், அல்லது கடன் உபத்திரவத்தைப் பொறுக்கமுடியாமலும், குடியானவர்கள் அறுவடையானதும் பயிர்களை விற்கிறார்கள். கொஞ்

சம் பொறுத்து விற்ருல், ஏறிய விலைக்கு விற்கலாம். அவசரப் பட்டு விற்பதில், இவ்வேறிய விலையிஞல் வரக்கூடிய லாபத் தை அவர்கள் இழக்கிருர்கள். அவர்கள் அவசரச் செலவு களுக்கு இப்பயிர்களின் பேரில் பணம் கொடுக்கப்பட்டால், பின்னர் அவைகளை நல்ல விலைக்கு விற்று, இந்தப் பணத்தின் பேரில் வட்டியும் கொடுத்து, அவர்களும் ஆதாயம் பெற முடியும். இக்கடன்களும் குறுகிய காலக் கடன்களாய் இருந் தால் போதுமானது.

4. கிராமக் கைத்தொழில்களுக்கு அவசியமான ரோக்க வசதிகள்:—குடியானவர்களுடைய பொருளாதார நிலைமையை உயர்த்துவதற்கு, குடிசைக் கைத்தொழில்கள் பேருதவியாய் இருக்கின்றனவென்பது முன்னமேயே சொல் லப்பட்டது. இக் கைத்தொழில்களை நடத்துவதற்குத் தேவை யான பொருளுதவியும் தரப்படவேண்டும்.

குறுகிய காலக்கடன்கள்:—இந்தியாவின் குடியானவர் களுடைய மொத்தக்கடன் 900 கோடி ரூபாய் என்ருல், அதில் குறுகிய காலக்கடன் சுமார் 300 முதல் 400 கோடி வரை யிருக்கலாம். சென்னை மாகாணத்தில் குடியானவர் களுடைய மொத்தக்கடன் 150 கோடி ரூபாய்களில் குறுகிய காலக்கடன் சுமார் 70 கோடி யிருக்குமெனக் கணக்குப் போடப்பட் டிருக்கிறது.

தற்காலத்தில் இக்கடன்கள் உள்நாட்டு ரொக்க வியா பாரிகளாலும் நகரத்துச் செட்டியார்கள்போல் லேவாதேவி செய்பவர்களாலும்,கோஆபரேடிப் சங்கங்களாலும்,நிதிகளா லும், சிற்சில சமயங்களில் சர்க்காராலும் கொடுக்கப்படுகின் றன. இக்கடன் உதவி போதுமானதாக இல்லாததாகவும், அதிகவட்டி கேட்பனவாகவும் இருக்கிறது. நம் மாகாணத்தி லும் மற்ற மாகாணங்களிலும் குடியானவர்கள் எவ்வளவு

உயர்ந்த வட்டி கொடுக்கிறார்கள் என்பது முன் பக்கங்களில் சொல்லப்பட்டது. இக்கடன்கள் குடியானவர்களுக்கு தகுந்த பயனை அளிக்கக் கூடியனவாய் இருக்க வேண்டுமானால், அவை பின் வருவாறு இருக்கவேண்டுமென பாங்கிங் விசாரணைக் கமிட்டியார் சொல்லி யிருக்கிறார்கள்.

1. பண்ணைச் செலவுகளுக்காகவும், வீட்டுச் செலவுகளுக்காகவும், கொஞ்சம் தொகையாக ஏழு அல்லது எட்டுத் தவணைகளில் வேண்டும்போது கொடுக்கப்பட்டு, விளை பொருள்கள் விற்கப்பட்டபின் வசூல் செய்யப்படவேண்டும்.

2. அவசியங்களுக்கு கேட்கப்பட்டவுடன் கொடுக்கப்படவேண்டும். அப்படிக் கிடைத்தால்தான் மழை முதலியவைகளை உபயோகப்படுத்தவும், பருவங்களில் வேண்டுவன செய்யவும் இயலும்.

3. சாகுபடிக்குப்போதுமான அளவு உதவிசெய்யப்படவேண்டும். கொஞ்சம் பணம் கொடுத்துப் பிறகு கொடுக்கப்படாவிட்டால், பயிர்கள் கெட்டு, முன்னால் கொடுக்கப்பட்ட பணத்தின் பயனும் வீணாகும்.

4. குறைந்த வட்டிக்குப் பணம் கிடைக்கவேண்டும்.

விவசாயத்திற்கு சர்க்கார் செய்யும் உதவி:—இரண்டு சட்டங்கள் மூலம் சர்க்கார் விவசாயத்துக்கும் குடியானவர்களுக்கும் உதவியளித்து வருகின்றனர். அவ்வுதவி தேவைக்கு மிகவும் குறைந்ததாயிருக்கிறது. அச்சட்டங்கள் நிலச் சீர்திருத்த சட்டம் (The Land Improvements Act.) குடியானவர்கள் கடன் சட்டம் (The Agriculturists Loans Act.) என்பன. அவைகளின் கீழ் எவ்வளவு பண உதவி செய்யப்பட்டிருக்கிறதென்பதைக் கீழே காண்க.

| *மாகாணம் | நிலச் சீர்திருத்த சட்டம் 1000 ரூபாய்களில் | குடியானவர் கடன் சட்டம 1000ரூகளில் | குறிப்பு |
|---|---|---|---|
| அஸ்ஸாம் | 7 | 1,50 | 5வருஷத்திய சராசரி |
| வங்காளம் | 93 | 14,44 | 1928-29 ல் |
| பீகார் ஒரிஸ்ஸா | 70 | 8.34 | 5வருஷத்திய சராசரி |
| பம்பாய் | 13, 72 (1926-ல்) | 9,57 (சராசரி) | |
| பர்மா | 20 | 1,90 | 10வருஷத்தியசராசரி |
| மத்தியப் பிரதேசங்கள் | 1, 70 | 1,58 | 3வருஷத்திய சராசரி |
| சென்னை | 12, 70 | 11,54 | 1927-28 |
| பஞ்சாப் | 5, 00 | 11,00 | 5வருஷத்திய சராசரி |

*Page 180 The Indian Central Banking Enquiry Committee Report—1931.

இந்தச் சட்டங்களை நடத்துவதிலும் எத்தனையோ குறைகள் இருக்கின்றன. பண உதவிக்காகச் சர்க்காருக்கு விண்ணப்பம் போட்டால், விண்ணப்பத்தின் முடிவு தெரிவதற்கு அதிக காலதாமதம் ஆகும். விண்ணப்பத்தின்படி பண உதவி கிடைக்க வேண்டுமென்றால், அதற்காக பல உத்தியோகஸ்தர்களுக்கு, லஞ்சம் கொடுக்க வேண்டியிருக்கிறது. அப்படிப் பணம் கிடைத்தாலும் அது பல தடவைகளில் தேவைக்குப்போதுமான அளவு இருக்காது. கடன் வாங்கினபிறகு சர்க்காரும் இதர கடன் கொடுப்பவர்களைப் போல் காருண்யமின்றி, வெள்ளாமை கெட்டுப்போன காலங்களில்கூட வசூல் செய்கின்றனர். இரண்டு மூன்று பேர்கள் சேர்ந்து கடன் வாங்கியிருந்தால், எவன் பணத்தை விட்டு, எவனிடத்தில் சுலபமாக வசூல் செய்ய முடியுமோ அவனிடத்தில் வசூல் செய்கிறார்கள். ஆனால் அவர்கள் இப்படிச்

செய்யாமல், முதலில் பணத்தை உபயோகப் படுத்தினவ னிடத்தில் கூடுமானதை வசூல் செய்து, மீதமிருக்கும் தொகைக்குத்தான் ஜாமீன் காரரிடத்தில் வசூல் செய்ய வேண்டும். கடன்கள் தக்க காலத்தில் கிடைத்தால்தான் அதனுடைய முழுப்பயனையும் பெறமுடியும் என்பதை ஞாப கத்தில் வைத்துக்கொண்டு, சர்க்கார் அவ்வப்போது விவ சகாயத்துக்கு உதவி செய்ய முன்வர வேண்டும்.

அன்னிய நாடுகளில் விவசாயத்துக்கு உதவி :— நம் தேசம் முக்கியமாய் விவசாய தேசமா யிருந்தபோதிலும், விவசாயத்துக்கு சர்க்காரால் சரியான உதவி யளிக்கப்படுகிற தில்லை. அன்னிய நாடுகளில் விவசாயத்துக்கு அளிக்கப் படும் உதவியும், இந்தியாவில் விவசாயத்துக்கு அளிக்கப் படும் உதவியும் கீழே காண்பிக்கப் பட்டிருக்கிறது. †

| தேசத்தின் பெயர் | ஒவ்வொரு 1000 பேர்களுக்கும் ரூபாய் | ஒவ்வொரு 1000 ஏகருக்கும் |
|---|---|---|
| யுனைடெட் ஸ்டேட்ஸ் ஆப் அமெரிக்கா (1919–20) | 1,020 | 210 |
| இங்கிலாந்து (1921) | 960 | 1,380 |
| ஜர்மனி (1910) | 945 | 705 |
| இடாலி (1925–26) | 255 | 184 |
| பிரிட்டிஷ் இந்தியா (1924-25) | 34 | 30 |

† Page 41 The Indian Central Banking enquiry Committee Report—1931

இந்தியாவில் விவசாயமே பிரதான தொழிலாயும், ஜனத்தொகையின் பெரும்பான்மையோருக்கு உணவும் தொழிலும் கொடுக்கக் கூடியதாயு மிருப்பதால், விவசாயத்

தின் முக்கியத்தையும், அதன் அபிவிருத்தியின் முக்கியத்தையும் இங்கு எடுத்துச் சொல்லவேண்டிய அவசியமில்லை. இன்னும் நம் கவர்ன்மெண்டாரால்தான் விவசாயத்துக்கு மிகக் குறைந்த உதவியளிக்கப்படுகிறது என்பது வருந்தத்தக்கது.

நில அடமான பாங்குகள் (Land Mortgage Banks):—நீண்ட காலக்கடன்கள், பழைய கடன்களைக் கட்டுவதற்காகவும் புதிதாக பூமிகளைச் சீர்திருத்துவதற்காகவும் குடியானவர்களுக்கு அவசியம் எனக் கண்டோம். சாதாரண பாங்குகளும், இதர ரொக்க வியாபாரிகளும், அவ்வளவு காலத்துக்குத் தங்கள் பணத்தைக் கொடுத்துவைக்க இஷ்டப் படுவதில்லை. ஆகையால் இம்மாதிரி நீண்டகாலக் கடன்கள் கொடுப்பதற்காகவே நில அடமான பாங்குகள் உண்டாக்கப்பட்டன.

மூன்று வகைகள்:—நில அடமான பாங்குகளில் மூன்று வகைகள் உண்டு. முதலாவது கோ ஆபரேடிவ் (ஐக்கிய) தத்துவங்களின்பேரில் உண்டாக்கப்பட்டவை. இவை கடன் வேண்டியவர்கள் சேர்ந்து, உண்டாக்கின சங்கங்கள். ஆதலால் இவை வட்டி அதிகம் வாங்கி அதனுல் லாபம் சம்பாதிக்க வேண்டும் என்ற கருத்தையுடையன வல்ல. கூடிய அளவு வட்டியைக் குறைக்கப் பிரயத்தனம் செய்வார்கள். ஒவ்வொரு அங்கத்தினரும் பிரவேசக் கட்டணமாகவும், மற்ற செலவுகளுக்காகவும் ஒரு தொகை கொடுக்கிறுர். இந்த பாங்குகள் டிபென்சர்கள் (debentures அதாவது அடமானப் பத்திரங்கள் போன்ற கடன் சீட்டுகள்) வெளியிட்டுப் பணம் சேகரிக்கிறுர்கள். இந்தக் கடன் சீட்டுகள் அல்லது டிபென்சர்கள் பணம் போட்டு வைப்பதற்கு மிகவும் பத்திரமானதும் முதல்தரமான சொத்

துக்களாகவும் கருதப்படுகின்றன. ஜர்மனியிலுள்ள நில அடமான பாங்குகளும் (Prussian Land Mortgage Mutual Credit Associations) அமெரிக்காவிலுள்ள பாங்கும் (The Federal Farz Loan Bank of the United States of America) இம்மாதிரி பாங்குகளாகும்.

இரண்டாவதாக சாதாரண வியாபார முறையை அனுசரித்து, லாபம் சம்பாதிப்பதற்காகவும், ஐரோப்பாக் கண்டத்தில் பல பாகங்களிலும் இம்மாதிரி பாங்குகள் ஏற்படுத்தப் பட்டிருக்கின்றன. இவை லாபத்தைக் கருதி ஏற்படுத்தப் பட்டன வானதால், இவைகளினால் ஜனங்களுக்குக் கஷ்டம் உண்டாகாமல் அந்தந்த கவர்ன்மெண்டுகள் பார்த்துக்கொள்கின்றன. பிரான்சு தேசத்து பாங்கும் (Credit Foncier de France) எகிப்து நாட்டு பாங்கும் (The Agricultural Bank of Egypt) இதற்கு உதாரணமாகச் சொல்லலாம். மூன்றுவது வகை நில அடமான பாங்குகளும் உண்டு. இவை கடன் வாங்குபவர்களாலும் மற்றவர்களாலும் சேர்ந்து உண்டாக்கப்பட்டவை. வரையறுக்கப்பட்ட பொறுப்பு (Unitec Liability) என்ற தத்துவத்தை கைக்கொண்டவை; எனினும் ஒரு பங்குக்காரனுக்கு எத்தனை பங்குகள் இருந்தாலும் ஒரு வோட்தான் உண்டு. இம்மாதிரி பாங்கு ஹங்கோரியா தேசத்தில் இருக்கிறது (The Hungarian Land Mortgage Institute).

நம் தேசத்து நில அடமான பாங்குகள்:—நம் தேசத்தில் ஏற்படுத்தப்பட்டு வரும் நில அடமான பாங்குகள் அதிகமாக கோஆபரேடிவ் அல்லது ஐக்கிய தத்துவங்களையே கைக்கொண்டு வருகின்றன. அவை பெரும்பாலும் கடன் வேண்டியவர்கள் சேர்ந்து உண்டாக்கின சங்கங்கள். ஒரு

வனுக்கு எத்தனை பங்குகள் இருந்தபோதிலும், ஒரு வோட் தானுண்டு. அதாவது ஒவ்வொரு அங்கத்தினருக்கும் ஒரு வோட் உண்டு. பங்குக் காரர்களுக்கு குறைந்த வட்டிதான் பிரித்துக் கொடுக்கப்படும். ஆனல் இவைகளில் அங்கத்தினர்களின் பொறுப்பு வரை யறுக்கப்பட் டிருக்கிறது.

1926 ம் வருஷத்தில் கூடின கோ ஆபரேடிவ் ரிஜிஸ்ட்ரார்கள் கூட்டத்தில், குடியானவர்களுடைய பூமிகளையும் வீடுகளையும் கடனிலிருந்து மீட்பதற்கும், பூமிகளைச் சீர்திருத்தம் செய்வதற்கும்,பழைய கடன்களைத்தீர்ப்பதற்கு அல்லது புதிதாக பூமிகள் வாங்க உதவுதற்கும், ஐக்கிய தத்துவங்களின்பேரில் நிலஅடமான பாங்குகள் ஏற்படுத்தப்படவேண்டுமெனத் தீர்மானம் செய்யப்பட்டது. மறுபடியும் 1928 ம் வருஷத்தில் கூடின ரிஜிஸ்ட்ரார்கள் கூட்டத்தில்,நிலஅடமான பாங்குகள் ஏற்படுத்துவதில் கவர்ன்மெண்டார் உதவி செய்ய வேண்டும் என்றும் அவ்வுதவி, கீழ்க்கண்ட விதங்களில் செய்யப்பட வேண்டுமென்றும் தீர்மானம் செய்தார்கள்.

1. நில அடமான பாங்குகள் வெளியிடும் டிபென்சர்களை அதாவது கடன் சீட்டுகளை வாங்கியும், அவைகளுக்கு வேண்டிய பண உதவியைக் கடனுகக் கொடுத்தும் உதவி செய்யவேண்டும்.

2. நில அடமான பாங்குகள் வெளியிடும் கடன்சீட்டுகளின் வட்டியை உத்தரவாதம் செய்வதின் மூலம், உதவி செய்யவேண்டும்.

3. ஷை கடன் சீட்டுகள்,கவர்ன்மெண்டாரால் உத்தரவாதம் செய்யப்பட்டிருப்பதால், இந்தியன் டிரஸ்டு ஆக்டில் (Indian Trust Act of 1882) கண்ட, பணம் போடுவதற்குப் பத்திரமான சொத்துக்களில் ஒன்றுகச் சேர்த்துக் கொள்ளப் படலாம்.

மேற் சொன்ன, 2, 3 உதவியால் இப் பாங்குகள் வெளியிடும் கடன் சீட்டுகளை பொது ஜனங்கள் அதிகமாக ஆதரிப்பார்கள் என்ற நோக்கத்துடன் அவை சிபார்சு செய்யப்பட்டன.

சென்னைமாகாண நிலஅடமான பாங்குகள்:—சென்னை மாகாணத்தில் 1927 ம் வருஷத்தில் நில அடமான பாங்குகள், வரையறுக்கப்பட்ட பொறுப்பின் பேரில் (Limited Liability basis) ஆரம்பிக்கப்பட்டன. கடன் கேட்கும் நபர்களையும், அடமானமாக ஒப்புக்கொள்ளப்படும் நிலங்களையும் நன்ருக நேரில் தெரிந்து கடன்கொடுப்பதற்கு செளகரியமாயிருக்க வேண்டுமென்ற அபிப்பிராயத்தின்பேரில், அவை குறுகிய விஸ்தீரணத்துக்குள் உள்ள பூமிகளின்பேரில்தான் கடன் கொடுப்பதெனத் தீர்மானம் செய்யப்பட்டது. ஒரு அங்கத்தினருக்கு அவர் போட்டிருக்கிற பங்கைவிட 8 அல்லது 10 பங்குத் தொகைக்கு அதிகமாய் கடன் கொடுக்கப்படமாட்டாது.

பாங்குகள், தாங்கள் கடன்கொடுக்கும் அடமானங்களின் ஆதாவின்பேரில் கடன் சீட்டுகள் (டிபென்சர்கள்) வெளியிட்டு பணம் சேர்க்க, எதிர்பார்த்தார்கள். இந்த கடன் சீட்டுகள் அல்லது டிபென்சர்களை வாங்குபவர்களுக்கு, பாங்குகளின் அடமானச் சொத்துக்களின்பேரில் அடமான பாத்தியம் உண்டு. இக்கடன் சீட்டுகள் பொது ஜனங்களுக்கு 100-க்கு 7 ரூபாய் வட்டி வீதம் வெளியிடப்பட்டன. கவர்ன்மெண்டார், ஒரு பாங்குக்கு ரூ. 50,000க்கு அதிகப்படாமலும், மாகாண முழுவதுக்கும் $2\frac{1}{2}$ லக்ஷத்துக்கு அதிகப்படாமலும் பொதுஜனங்களுக்கு இக்கடன் சீட்டுகளை விற்று எத்தனை பணம் சேகரிக்கிருர்களோ, அத்தனை ரூபாய்க்கு தாங்களும் இப்பாங்குகள் வெளியிடும் கடன்

சீட்டுகளை 100-க்கு $6\frac{1}{2}$ வட்டிக்கு வாங்கி உதவுவதாக ஒப்புக்கொண்டார்கள். 100-க்கு 9 வட்டி வீதம் ஒரு கடன் ரூ. 2000-க்கு அதிகப்படாமல், பாங்குகள் கடன் கொடுத்து வந்தன. இக்கடன்களின் பேரில் 100-க்கு 12 விகிதத்தில் என்னவட்டியாகிறதோ, அந்த தொகை மாத்திரம் $16\frac{1}{4}$ வருஷங்களுக்குக் கொடுத்துவந்தால், கடன் தீர்ந்துவிடும். கொஞ்சகாலத்தில் கடன்கள் ரூபாய் 2000-க்கு பதிலாக ரூபாய் 5000-வரை கொடுக்கலாம் என்று மாற்றப்பட்டது.

தலைமை நில அடமான பாங்கு (Central Land Mortgage Bank):— நல்ல நிர்வாக உத்தியோகஸ்தர்களைப் பெற்றிருந்த பாங்குகள் தாங்கள் வெளியிட்ட கடன் சீட்டுகளை விற்க இயன்றது. ஆனால் பல பாங்குகள் தங்கள் கடன் சீட்டுகளை விற்க முடியவில்லை. ஆகையால் இக்கடன் சீட்டுகள் அல்லது டிபென்சர்களை விற்றுப் பணம் சேகரிப்பதற்கு ஒரு தலைமை நில அடமான பாங்கு ஏற்படுத்தவேண்டியதாயிற்று. அதற்கு சென்ட்ரல் லாண்டுமார்ட்கேஜ் பாங்கு (Central Land Mortgage Bank) அதாவது தலைமை நில அடமான பாங்கு என்று பெயர். எல்லா நில அடமான பாங்குகளுக்கு வேண்டிய பணத்தை இவர்கள் அடமானங்களைத் தாங்கள் பெற்றுக்கொண்டு, தலைமை நில அடமான பாங்கு கொடுக்கிறது. இதற்காகவேண்டிய தொகைகளை டிபென்சர்கள் மூலம் சேர்க்கின்றது. இது கொஞ்சகாலத்துக்குமுன்தான் ஏற்படுத்தப்பட்டாலும் 1930-ம் வருஷம் ஜூன்மாதத்துக்குள் பங்குகளாக ரூபாய் 70400-ம், டிபென்சர்கள் மூலம் ரூபா 46,000 சேர்க்கப்பட்டிருக்கிறது. மாகாண கோஆபரேடிவ் பாங்கும் ஒரு லக்ஷ ரூபாய்க்கு இந்த டிபென்சர்களை வாங்கியிருக்கிறார்கள். கவர்ன்மெண்டாரும் இத்தலைமை நில அடமான பாங்கின் ஆரம்பச்

செலவுகளுக்காக ரூபாய் 15000-க்கு வட்டியில்லாமல் கடன் கொடுத்திருக்கிறார்கள். இப் பாங்கால் வெளியிடப்படும் 50-லக்ஷம் ரூபாய்களுக்கு உட்பட்ட டிபென்சர்களுக்கு, கவர்ன்மெண்டார் 100-க்கு 6-வட்டி உத்தரவாதம் செய்திருக்கின்றனர்.

தற்சமயம் சென்னை மாகாணத்தில் 42 நில அடமான பாங்குகள் இருக்கின்றன.

கடனின் தவணையை அதிகப்படுத்த வேண்டும்:—நில அடமான பாங்குகளால் கடன் கொடுக்கப்பட்ட தொகைகளை 100-க்கு 12 விகிதம் 16¼ வருஷம் கொடுப்பதில் கடன் தீர்த்துவிடுவதால், அது மிகவும் சௌகரியமான ஏற்பாடு என்ற அபிப்பிராயத்தின் பேரில், இம்முறை கையாளப்பட்டு வருகிறது. மற்றவர்களிடத்தில் கடன் வாங்குவதைவிட இது மிகவும் சௌகரியமான ஏற்பாடு என்பதில் யாதொரு ஐயமும் இல்லை. எனினும் குடியானவர்களுடைய நிலைமையைக் கவனித்தால், இம்முறை அவர்களுக்கு பூர்ண சௌகரியத்தை யளிப்பதாகச் சொல்ல முடியாது. பூமியிலிருந்து வரும் வருமானம், அது முதல்தரமானதா யிருந்தாலும், 100-க்கு 12 வருவதில்லை. ஆகையால் அவர்களுக்கு வேறு விதத்தில் பணம் கிடைத்தாலொழிய, பூமியின் வரும்படியிலிருந்து மாத்திரம், அவர்கள் இந்த 100-க்கு 12 விகிதத்தைக் கட்டமுடியாது. ஆகையால் 16¼ என்பதை 32 வருஷமாக மாற்றி, 32 தவணைகளில் இன்னும் குறைந்த விகிதத்துக்கு அவர்கள் கடனை கட்டவேண்டும் என்ற ஏற்பாடு செய்தால், அதிக சௌகரியமாயிருக்கும். பல அன்னிய நாடுகளில் இவ்வாறு செய்யப்படுகிறது. உதாரணமாக இங்கிலாந்தில் 50-வருஷங்கள் வரையும், நியூசிலாண்டில் 36½-வருஷம் வரையிலும் தவணை கொடுக்கப்படுகிறது.

பயிர்கள் விற்பனையில், உதவியின் அவசியம் :— குடியானவர்கள் தங்கள் விளை பொருட்களை லாபகரமாக விற்கவும் அவர்களுக்கு ஒருவிதமான உதவிவேண்டும் என முன் சொல்லப்பட்டது.

தங்கள் சாக்குகளை விற்பதில் குடியானவர்கள் பலவித இடைஞ்சல்களுக்கும் வஞ்சனைகளுக்கும் ஆளாகிறார்கள். சரியான தராசு, இடை, நிறை, அளவுகள் உபயோகப்படுத்தப் படாமல் அவர்கள் மோசம் செய்யப் படுகிறார்கள். அவர்களுக்குக் கொடுக்கப்படவேண்டிய தொகையிலிருந்து மகிமை, தரும் என்பவைகளின் பேரில், கொஞ்சம்பணம் எடுத்துக் கொள்ளப்படுகிறது. மாதிரிக்காகவெனச் சொல்லப்பட்டு அதிகமாக சரக்கு எடுத்துக்கொள்ளப்படுகிறது. அவைகளுக்கு யாதொரு விலையும் கொடுக்கப்படுவதில்லை. அவர்களுடைய சாக்குகளை விற்றுக்கொடுப்பதற்காக ஏற்படும் தரகர்களும், அவர்களுடைய நன்மையைக் கருதாமல், வியாபாரிகளின் நன்மையைத்தான் கருதுகின்றனர். சில சமயங்களில் விலை நிச்சயம் செய்யப்பட்ட பின்புகூட, இடைபோடும் சமயத்தில் சாக்கு தாழ்ந்த தரத்தது என்று சொல்லி, விலையைக் குறைக்க யத்தனம் செய்யப்படுகிறது. இக் கஷ்டங்களைத் தவிர, அவர்கள் தங்கள் சாக்குகளை விற்பதற்காக வெளியூர்களில் பல நாட்கள் காத்துக்கொண்டிருக்க வேண்டியிருக்கிறது.

விளைபொருட்களை விற்பதற்கு குடியானவர்களுக்கு வேண்டிய நாணய வசதிகளை ஆராய்வதற்குமுன், அவர்கள் பொருட்களுக்கு நல்ல விலை கிடைப்பதற்கு உதவுகிற மற்ற முறைகளையும் தெரிந்துகொள்ளவேண்டும். சாக்குகளை கிராமங்களிலிருந்து, அவைகள் விற்கப்படும் இடங்களுக்கு அனுப்புவதற்கு சரியான போக்குவரத்து சௌகரியங்கள்

செய்யப்படவேண்டும். விவசாயப் பொருட்கள் அனுப்பு வதற்கு குறைந்த சத்தம் போடப்படுவதுடன், அவைகள் துரிதமாக ஓரிடத்திலிருந்து மற்றோரிடத்துக்கு தேவைக் குத் தகுந்தபடி கொண்டுபோகப் படவேண்டும். சாக்குகளை விற்பதற்குச் சரியான மார்க்கட்டுகள் (Markets) ஏற் படுத்தப்பட வேண்டும். இடைகளும் அளவுகளும் ஒரே மாதிரி செய்யப்பட வேண்டும். விற்பவர்களுக்குள்ளும் வாங்குபவர்களுக்குள்ளும் சங்கங்கள் உண்டாக்கப்பட்டு நல்ல கலப்பில்லாச் சாக்குகள்தான் விற்பனைக்காக மார்க் கெட்டுக்கு வரும்படி செய்யவேண்டும். பொருள்கள் தாரதரமாக வகுக்கப்படவேண்டும். குடியானவர்களுக்கு நல்ல விலை கிடைக்கக்கூடிய முறைகள் கையாளப்படவேண் டும். இங்ஙனம் செய்தால் குடியானவர்களுடைய விளை பொருட்களுக்கு நல்ல விலை கிடைப்பதற்கு அனுகூலமா யிருக்கும்.

விளைபொருள் விற்பனையில் செய்யத்தக்க உதவி :— விளைபொருட்களின் விற்பனையென்பது ஒரு தனிச்செய்கை யல்ல. முதலில் அவர்கள் விளைபொருட்கள் ஒன்றாகச் சேர்க்கப்பட்டு, தரம் தரமாகப் பிரிக்கப்படவேண்டும். ஒன் றாகச் சேர்க்கப்பட்டவுடன் கிராமங்களிலிருந்து ரயில் பாதை இருக்குமிடங்களுக்கும், அங்கிருந்து சாக்குகள் விற்கு மிடத்துக்கும் கொண்டுபோகப் படவேண்டும். அங்கே சாக்குகள் விற்கப்படவேண்டும். விற்கப்படுவதற்குமுன் நல்ல விலைக்கு காத்திருக்கவேண்டியது அவசியம். சில சம யங்களில் விலை ஏறலாம் அல்லது இறங்கலாம். சில சமயங் களில் மார்கெட்டின் தேவைக்குமேல் சாக்குகள் கையிலி ருக்கலாம். அச்சமயங்களில் தேவைக் கதிகமான சாக்குகளை இருப்புவைத்துத் தேவை தோன்றிய சமயத்தில் விற்கப்பட

வேண்டும். இக் காரியங்களுக்கெல்லாம் ஏற்பாடு செய்வதே, குடியானவர்களுக்கு அவர்கள் சாக்குகள் விற்பனையில் உதவி செய்ததாகச் சொல்லப்படும்.

தற்காலத்தில் தரகு வியாபாரிகள் குடியானவர்களுடைய சாக்குகளை விற்பதில் உதவி செய்கிறார்கள். இதனால் குடியானவர்களுக்கு இரண்டு பிரதிகூலங்கள் உண்டு. ஆனால் இதைத்தவிர அவர்களுக்கு வேறு உதவியில்லாததால், அவர்கள் இவ் வுதவியைத்தான் நாடவேண்டியிருக்கிறது. வியாபாரிகள் கொடுக்கும் தொகைகளின் பேரில் அதிகமான வட்டி கொடுக்க வேண்டியிருப்பதுடன், சாக்குகளையும் குறைந்த விலைக்கு விற்க நேரிடுகிறது.

கோஆபரேடிவ் விற்பனைச் சங்கங்கள்:—இக்குறைகளை நீக்குவதற்காகவும், குடியானவர்களுக்கு அவசியமான பொருளுதவி கொடுப்பதற்காவும், அவர்கள் விளைபொருட்களுக்கு நல்ல விலை கிடைப்பதற்கும் கோ ஆபரேடிவ், விற்பனைச் சங்கங்கள் (Co-operative Sales Societies) ஏற்படுத்துவதே நல்ல முறை எனச் சொல்லப்படுகிறது. இவை குடியானவர்களின் அவசாங்களுக்கு குறைந்த வட்டிக்கு கடன், சாக்குகளின் பேரில் கொடுக்கவேண்டும். தங்கள் அங்கத்தினர்கள் விளைபொருட்களைத் திரட்டி அவைகள் தேவையாய் இருக்கக்கூடிய மார்க்கெட்டுகளை அறிந்து அனுப்ப வேண்டும். சாமான்களைச் சேர்த்து அனுப்புவதால், செலவும் குறைவாக ஆகும். வியாபார உளவு தெரிந்தவர்கள் மேற்படி விற்பனைச் சங்கங்களை நடத்துவார்களானால், மார்க்கெட்டின் நிலவாத்தை அனுசரித்து சாக்குகள் நல்ல விலைக்கு விற்கப்படும். இச்சங்கங்கள் ஏற்படுத்தப்படுவதால், குடியானவர்கள் மோசம் செய்யப்படாமல் இருப்பதுடன் பல தொல்லைகளினின்றும்

விடுபட்டவர்களாய், தங்களுக்குரிய லாபத்தையும் பெறுவார்கள்.

கோ ஆபரேடிவ் விற்பனைச் சங்கங்களில் கணக்கு மாகாண வாரியாக, அவைகளின் அங்கத்தினர், மூலதிரவியம் முதலிய விவரங்களுடன் கீழே கொடுக்கப்பட் டிருக்கிறது.

| மாகாணம் | சங்கங்கள் | மொத்த அங்கத்தினர் | ஆயிரம் ரூபாய்களில் | | | |
|---|---|---|---|---|---|---|
| | | | பங்குத் தொகையும் காப்பு திரவியமும் | டிபாஸிட்டுகள் | கடன்கள் | பழக்கத்திலிருக்கும் மொத்த தொகை |
| ஆஜ்மீர்&மீர்வார் | 2 | 140 | 10 | 1 | 27 | 38 |
| அஸ்ஸாம் | 2 | 131 | 2 | | 8 | 10 |
| வங்காளம் | 108 | 31,606 | 8,18 | 68 | 39,40 | 48,26 |
| பீகார் ஒரிஸ்ஸா | 2 | 50 | 3 | | 3 | 6 |
| பம்பாய் | 81 | 15,142 | 6,14 | 2,91 | 60,3 | 15,08 |
| பர்மா | 31 | 2,141 | 2,51 | 30 | 1,20 | 4,01 |
| மத்திய மாகாணங்கள் | 7 | 775 | 19 | 52 | 12 | 83 |
| சென்னை | 73 | 5,261 | 120 | 9 | 3,61 | 4,90 |
| பஞ்சாப் | 26 | 4,765 | 401 | 1,39 | 1,84 | 7,24 |
| ஐக்கிய மாகாணங்கள் | 42 | 2,436 | 20 | 10 | 24 | 54 |

† Page 228. The Indian Central Banking Enquiry Committee Report 1931.

கிராமக் கைத்தொழிலுக்கு வேண்டிய ரொக்க வசதிகள்:—நம் நாட்டில் குடியானவர்களுக்கு வருட முழுதும் வேலையில்லை யென்பதும், சில மாதங்களில் அவர்களுக்கு யாதொரு வேலையும் இல்லையென்பதும் சில மாதங்களில்

அவர்களுக்குப் போதுமான வேலை கிடைப்பதில்லை யென்பதும் யாவரும் தெரிந்த விஷயம். தவிர குடியானவர்களுடைய பொருளாதார நிலைமையை உயர்த்துவதற்காகவும், மழை பெய்யத் தவறிய காலங்களில் அவர்களுக்கு தொழில் கொடுப்பதற்காகவும், குடிசைக் கைத்தொழில்களை விருத்தி செய்யவேண்டும்.

இந்தியாவின் குடிசைக் கைத்தொழில்களின் விருத்தாந்தம் பின்வரும் அதிகாரங்களில் சொல்லப்படும். ஆனால் இங்கு இக் கைத்தொழிலாளர்களின் பொருளாதார நிலைமையை, அவர்கள் தொழிலைச் செவ்வனே நடத்துவதற்கு அவர்களுக்கு அவசியமான உதவியை மட்டும் இங்கு கவனிப்போம். அவர்கள் மிகவும் ஏழ்மையான நிலையிலும் கடனில் மூழ்கியும் இருக்கின்றனர். அவர்களிடத்தில் முதல் அல்லது ரொக்கம் கிடையாது. ஆகையால் கைத்தொழிலுக்கு வேண்டிய சாமான்களை வாங்குவதற்கும், தொழிலில் ஈடுபட் டிருக்கும்போதும், கைத்தொழில் சாமான்கள் விற்பனையாகும் வரையும் அவர்களுக்கு பண உதவி அவசியம்.

கோ ஆபரேடிவ் சங்கங்கள் மூலமாகவே இக்கைத் தொழில்களுக்கு உதவி செய்யப்பட வேண்டுமென்றும், கவர்ன்மெண்டாரும் இக்கைத் தொழில்களுக்குப் போதுமான உதவியளிக்க வேண்டுமென்றும் பாங்கிங் விசாரணைக் கமிட்டியார் சிபார்சு செய்திருக்கிறார்கள்.

கோ ஆபரேடிவ் இயக்கத்தைப்பற்றி பாங்கிங் என்ற அதிகாரத்தில் விபரமாகச் சொல்லப்பட்டிருக்கிறது.



# ஆருவது அதிகாரம்

## கைத்தொழிற் சரித்திரம் †

இந்தியாவின் கைத்தொழில்களின் தற்கால நிலைமையைப்பற்றிச் சொல்லுவதற்குமுன், நம் கைத்தொழில்களின் சரித்திரத்தை யறிய வேண்டியது அவசியம். நமது நாடு தொன்றுதொட்டு கைத்தொழில்களில் சிறந்த நாடெனவும், செல்வம் நிறைந்த நாடெனவும் பெயர்பெற்று வந்திருக்கின்றது. ரோம் (Rome) ஐரோப்பாவை ஆண்ட காலத்திலும், நூதனமானதும் நுட்பமானதுமான கைத்தொழில் சாமான்கள், இந்தியாவிலிருந்து ரோம் முதலிய நாடுகளுக்கு வியாபாரிகள் வாங்கிச் சென்றனர் என்று சரித்திர ஆசிரியர்கள் சொல்லுகிருர்கள். மெகஸ்தனீஸ், மார்கோ போலோ, ஹுயூன் ட்காங், பாஹின் முதலியோரும் இந்தியாவின் கைத்தொழில்களைப் பற்றியும் செல்வத்தைப் பற்றியும் வெகு பெருமையாய்ச் சொல்லி யிருக்கின்றனர்.

நம் நாடு நூற்பதிலும் நெய்தலிலும் பெயர்பெற்றது :—நமது கைத்தொழில்களில் மிகவும் பிரசித்து பெற்றது நூல் நூற்பதும், நெய்தலுமே. பருத்திநூல் வஸ்திரங்களுக்கும், பட்டு வஸ்திரங்களுக்கும், அழகான கம்பளிப் போர்வைகளுக்கும் நம் நாடு பெயர் பெற்றிருந்தது. இத்தொழில்களால் லக்ஷக்கணக்கான மக்கள் ஜீவனம் செய்து வந்தார்கள். குடியானவர்களும் தங்களுக்கு விவசாய வேலையில்லாத காலங்களில் நூல்நூற்றும், இன்னும் மற்ற கைத்தொழில்களைக் கைக்கொண்டும் பொருள் பெற்று வந்தனர். சென்ற

---

† இவ் வதிகாரத்திலிருக்கும் குறிப்புகள் யாவும் Dutt's Economic History of India விலிருந்து சேகரிக்கப்பட்டவை.

நூற்றுண்டின் ஆரம்பத்தில், அதாவது இந்தியாவின் கைத்தொழில்கள் க்ஷீணிக்க ஆரம்பித்தபிறகு, 1807-ம் வருஷத்தில் ஒரு ஆங்கிலேயர் டாக்டர் பிரான்சிஸ் புகானன் (Dr. Francis Buchanan) நம் தேசத்தை நேரில் பார்த்து என்ன எழுதி யிருக்கிருர் என்பதைக் கவனிப்போம்.

19-ம் நூற்றுண்டின் ஆரம்பத்தில் :— அக்காலத்தில் பீகார் ஜில்லாவில் விவசாயத்துக்கு அடுத்தபடியில் நூல் நூற்பதும் நெய்வதுமே பெரிய கைத்தொழில்களாக இருந்தன. பெண்கள் எல்லாம் அநேகமாய் நூற்றனர் அவர்கள் தொகை சுமார் 330,426 பேர்கள் இருக்கும். அவர்கள் நூற்றநூல் ரூ. 2,367,277/-பெறுமானது. பஞ்சின் விலையைக் கழித்தால் அவர்களுடைய மொத்த வருமானம் ரூ. 1,081,005/-ஆகும். நெய்பவர்களும் அதிகமாயிருந்தனர். மெல்லிய வஸ்திரங்கள் ரூ. 540,000/-பெறத்தக்கது நெய்து, அவைகளால் ரூ. 81,400/-லாபம் பெற்றனர். கனமானதுணிகளும் ரூ. 2,438,621/-பெறத்தக்கது நெய்து ரூ. 667,242/-லாபம் பெற்றனர். காகிதம் செய்தல், தோல் வேலை, வாசனை வஸ்துக்கள் செய்தல், இரும்புவேலை, தங்கம் வெள்ளி வேலை, சாயம் போடுதல், தங்கம் வெள்ளி ஜரிகைகள் செய்தல் முதலிய கைத்தொழில்களும் செய்யப்பட்டு வந்தன.

ஷாகாபாத் ஜில்லாவில் 159,900 பெண்கள் ரூ.1,250,000/-பெறத்தக்க நூல் நூற்றுர்கள். அந்த ஜில்லாவில் 7025 குடும்பங்கள் 7950 தறிகளில் வேலைசெய்து ஜீவனம் செய்து வந்தார்கள். பகல்பூர் ஜில்லாவில் 160,000 பெண்கள் நூற்றனர்; 3275 தறிகளில் பட்டும் பருத்திநூலும் கலந்து டசூர் துணிகள் நெய்யப்பட்டன. கோரக்பூர் ஜில்லாவில்

175000 பெண்கள் நூல்நூற்று ஜீவனம் செய்து வந்தார்கள்; 5434 குடும்பங்கள் 6114 தறிகளில் நெய்து வயிறு வளர்த்து வந்தனர். இந்த ஜில்லாவில் வருஷத்துக்கு 200 முதல் 400 வரை படகுகளும், பித்தளை சாமான்களும் இரும்புச் சாமான்களும் செய்யப்பட்டன.

டிஞ்ஜூர் ஜில்லாவில் எல்லா வகுப்புப் பெண்களும் நூல் நூற்றுக்கொண்டிருந்தார்கள். அவர்கள் ரூ. 1,165,000/-பெறத்தக்க நூல் நூற்று ரூ. 9,15,000/- லாபம் பெற்றார்கள். பட்டும் பருத்தி நூலும் கலந்து நெய்யப்பட்ட துணிகள் 4000 தறிகளுக்கு வேலை கொடுத்தன. 500 தறிகள் பூராவும் பட்டுத்துணிகள் ரூ. 120,000/-பெறத்தக்கது நெய்தன. பருத்தி நூல் துணிகள் ரூ. 1,674,000/ பெறத்தக்கவை அந்த ஜில்லாவில் நெய்யப்பட்டன. துணிகளில் கைவேலையால் புஷ்பங்கள் போடுவது பல மகம்மதியப் பெண்களுக்குத் தொழில் கொடுத்தது.

மைசூர்:—வளரு (Waluru) என்னும் பட்டணத்தில் வாரம் ஒருமுறை பெரிய சந்தை ஒன்று நடந்துவந்தது. அங்கு பருத்தியால் கெட்டியான ரட்டுத் துணிகளும் முரட்டுக் கம்பிளிகளும் அதிகமாக செய்யப்பட்டன. மேற்படி பருத்தி துணிகள் அங்கிருந்து வெளியூர்களுக்கு அனுப்பப்பட்டன. சின்னபட்டணத்தில் (Chinnepattam) கண்ணாடிகளும், பலவிதமான மோதிரங்களும், சங்கீதக் கருவிகளுக்கு வேண்டிய எஃகுக் கம்பிகளும், சுத்தமான வெள்ளைச் சர்க்கரையும் செய்யப்பட்டன. சாவன துர்கா (Savana Durga)வுக்குப் பக்கத்திலுள்ள மலைகளிலிருந்து இரும்பு உருக்கி எடுக்கப்பட்டது. அதை எஃகாக் கிருஷிகத்துக்கு வேண்டிய சாமான்களும், ஆயுதங்களும் செய்யப்பட்டன.

பெங்களூர் அக்காலத்திலேயே பெரிய வியாபார ஸ்தலமாக விளங்கிற்று. பூனாவிலிருந்து காஷ்மீர் துப்பட்டாக்களும், புனுகும் வந்தன. சூரத்திலிருந்து முத்து வந்தது. ஜரிகைகளும் மற்ற சித்திர வேலை செய்த துணிகளும் அங்கு வந்தன. பருத்தி நூலால் துணிகள் நெய்யப்பட்டன. பட்டு நூலால் மிகவும் நேர்த்தியானதும் கெட்டியானதுமான ஆடைகள் நெய்யப்பட்டன. அவ்வாடைகளுக்கு ஆரஞ்சு, மஞ்சள் சாயம் போடப்பட்டது. பிராமணரைத் தவிர மற்ற எல்லா ஜாதிப்பெண்களும் சந்தையில் பருத்தி வாங்கி, வீட்டில் அவைகளை நூலாக நூற்று, அந்நூலை வியாபாரிகளுக்கு விற்றுவந்தனர். சாயம் போடுவதற்கு நீலம் அதிகமாக உபயோகப் படுத்தப்பட்டு வந்தது. தோலைப் பதனிடுதலும் லாபகாமான கைத்தொழில்களில் ஒன்றாய் இருந்தது.

கோயமுத்தூர்:—இதற்கு ஐந்துமைல் தூரத்திலுள்ள டோபன்பேடா (Tofunbeta) என்னுமிடத்தில் இரும்பு காய்ச்சி எடுக்கப்பட்டது. கோயமுத்தூர் அக்காலத்திலும் ஒரு முக்கிய பட்டணமாயிருந்தது. அவ்வூரில் நானூற்றி ஐம்பத்தொன்பது தறிகள் இருந்தன. தாழ்ந்த ஜாதிப் பெண்கள்கூட நூல் நூற்றுக்கொண் டிருந்தனர். திருப்பூர் சுமார் முன்னூறு வீடுகளுடையதா யிருந்தது. சென்னி மலையில் இரும்பு காய்ச்சி எடுக்கப்பட்டது. பெருந்துறையிலும், அதற்குப் பக்கத்திலுள்ள கிராமங்களிலும் சுமார் எண்ணூறு தறிகள் இருந்தன.

மலையாளத்திலும், கன்னட தேசத்திலும் பல விடங்களில் துணிகள் நெய்யப்பட்டன. அவர்களுக்குப் பருத்தி கோயமுத்தூரிலிருந்து வந்தது. கொல்லங்கோடு, பாலக்காடு, கள்ளிக்கோட்டை முதலிய யிடங்களில் நெசவுகாரர்கள்

அதிகமாக யிருந்தனர். கள்ளிக்கோட்டையிலும், பாலக் காட்டிலும் ஈஸ்ட் இந்தியக் கம்பெனியார் நெசவுத் தொழிற்சாலைகள் ஏற்படுத்தி துணி நெய்யப்பெற்றூர்கள். இவ்விரண்டு ஜில்லாக்களிலும் உப்பு செய்யப்பட்டது. கள்ளிக்கோட்டையிலுள்ள மாப்பிள்ளைகள் கப்பல் வைத்து வியாபாரம் செய்துவந்தார்கள்.

இன்னும், புகானன் சென்ற மற்ற ஜில்லாக்களின் கணக்கைக் கொடுத்தால், பெருகும். இவைகளிலிருந்து நாம் தெரிந்து கொள்ள வேண்டியது ஒரு விஷயமே. அதாவது நம் தேசத்தில் நூற்கும் தொழிலும் நெய்தல் தொழிலும் மிகுதியாகப் பரவியிருந்தது. அத் தொழில்களால் லக்ஷக் கணக்கான பெண்களும் ஆண்களும் ஜீவனம் செய்து வந்தனர். நம் நாட்டிலிருந்து கைத்தொழில சாமான்கள், முக்கியமாய் பருத்தி நூல் துணிகளும், பட்டு வஸ்திரங்களும், அன்னிய நாடுகளுக்கு அனுப்பப்பட்டு, இக் கைத்தொழில் லாபங்களை நம் மக்கள் அடைந்துகொண்டிருந்தனர். 1811, 1812, 1813-ம் வருஷங்களில் கூட இந்தியாவிலிருந்து இங்கிலாந்துக்கு மாத்திரம் முறையே 114, 640/-பவுன்கள் 107306/- பவுன்கள் 108,824/-பவுன்கள் பெறுமானமுள்ள பருத்திநூல் துணிகள் மட்டும் அனுப்பப்பட்டன.

கைத்தொழில்கள் க்ஷீணித்ததற்குக் காரணம்:—ஆனல் தற்காலத்தில் இதையாவும் மாறிவிட்டன. நாம் வெளிநாடுகளுக்கு கைத்தொழில் சாமான்கள் அனுப்புவது போய், நம் தேசத்திற்குள் அன்னிய நாட்டிலிருந்து கைத்தொழில் சாமான்கள் இறக்குமதி செய்யப்படுகின்றன. இங்ஙனம் நம் நூற்கும் தொழிலும் நெசவுத் தொழிலும் அழிந்து பட்டதற்குக் காரணம் என்ன? இக் கைத்தொழிலின் சரித்திரம் இரத்தத்தால் எழுதப்பட் டிருக்கிறது.

**ஆங்கிலேய வியாபாரிகளின் கோடுமை:—**ஆங்கிலேயர் முதலில் இந்தியாவுக்கு வந்த சமயத்திலும் அவர்கள் இராஜ்ஜியம் பெற்ற ஆரம்பகாலத்திலும், நம் தறிகாரர்களால் நெய்யப்பட்ட துணிகளை வாங்கி, மேல்நாடுகளுக்குக் கொண்டுபோய் விற்பதே லாபகரமா யிருந்தது. ஆகையால் நம் நெசவுச் சரக்குகளைப் பெருவதற்கு இச்சைப்பட்டனர். வங்காளம் முதலிய மாகாணங்கள் அவர்கள் ஆளுகைக்கு வந்தபிற்பாடு, தங்கள் இராஜ்ய செல்வாக்கைக் கொண்டு, இந்திய வர்த்தகர்களையும் தொழிலாளர்களையும் மிகக்குறைந்த விலைக்குத் தங்களுக்கே விற்கும்படி பலாத்காரம் செய்து வந்தனர். பணப்பேய் பிடித்த ஆங்கிலேயே வர்த்தகர்கள் உதவியற்ற அத் தொழிலாளர்களையும் வியாபாரிகளையும் என்னென்ன துன்பங்களுக்கு ஆளாக்கினுர்கள் என்பது சொல்லத்தரமன்று. இத்துன்பங்களைச் சகிக்கமாட்டாமல், எப்படியாவது இந்த அல்லல்களினின்றும் விடுபட்டால் போதுமென்று, நாகோடகர்கள் (Nagoads) என்ற பட்டு நூல் சுற்றும் ஜாதியார் தாங்களே தங்கள் பெருவிரல்களை வெட்டிக்கொண்டார்கள் என்றால், அவர்கள் எத்தகைய கஷ்டங்களுக்கு கட்டுபடுத்தப்பட் டிருக்க வேண்டுமென்பதை யூகித்து அறிந்து கொள்ளலாம்.

**இங்கிலாந்துக் கைத்தொழில் விருத்திக்காக நம் கைத்தொழில்கள் அழிக்கப்பட்டன : —** 18-ம் நூற்றுண்டின் ஆரம்பத்தில் இங்கிலாந்தில் கைத்தொழில் அபிவிருத்திக்கு வேண்டிய சௌகரியங்கள் ஏற்பட்டன. நீராவி யந்திரத்தின் உதவியைக்கொண்டு, பெரிய ஆலைகள் கட்டுவித்து, ஆங்கிலேயர் தங்கள் நாட்டை கைத்தொழில்களில் சிறந்த தேசமாகச் செய்ய முயற்சித்தார்கள். அவர்கள் கைத்தொழில்களை விருத்தி செய்வதில் நம் நாட்டுக் கைத்தொழில்கள்

அவர்களுக்கு இடையூறுகளாகத் தோன்றின. நம் நாட்டுத் தொழிலாளர்களுடன் அவர்கள் இயந்திரத்தின் உதவியைக் கொண்டும் போட்டி போடுவது அசாத்தியமாகத் தோன்றிற்று. தவிர நம் நாட்டுச் சாக்குகள் மிகவும் உயர்ந்த மாதிரியாகவும் இருந்தன. ஆகையால் போட்டியில் நம்மை வெல்வது கடினம் எனத் தோன்றவே, நம் கைத்தொழில்களை அழிப்பதே அவர்களுக்கு ஏற்ற முறையெனக் கருதி, அங்ஙனம் செய்யத் தலைப்பட்டனர்.

நம் சரக்குகளின் இறக்குமதியின்மேல் இங்கிலாந்தில் வரிகள்:—ஆங்கிலச் சரக்குகள் நம் நாட்டிற்குள் 100-க்கு $2\frac{1}{2}$ வரி கொடுத்துக்கொண்டு வரப்பட்டன. ஆனால் நம் நாட்டுச் சரக்குகளில் பல அவர்கள் நாட்டுக்கு இறக்குமதிசெய்யக் கூடாதென சட்டம் செய்யப்பட்டது. சில சாமான்களின் பேரில் 100-க்கு 400 வரையும் வரிகள் போடப்பட்டன. இவ்வரிகள் மூலம் அச்சாமான்களின் விலையை உயர்த்தி, அவைகள் விற்கமுடியாமல் செய்தனர். இந்த அநியாயத்தை நிவர்த்தி செய்வதற்கு, பல இந்திய வியாபாரிகள் பல தடவைகளில் ஆங்கிலப் பார்லிமெண்டுக்கு மனுக்கொடுத்த போதிலும் அவை கவனிக்கப்படவில்லை.

வரிகள் போடப்பட்ட சாமான்களும், வரியின் விகிதங்களும் கீழே காண்பிக்கப்பட்டிருக்கின்றன. †

---

† Page 294. Dutt's Economic History of India, Early British Rule.

| சாமான்களின் பெயர் | 1812 ல் | 1814 ல் | 1832 ல் |
|---|---|---|---|
| | சாமான்களின் விலையில் 100-க்கு எத்தனை பங்குகள் | | |
| பிரம்புச் சாமான்கள் (ornamental cane work) | 71 | 50 | 30 |
| மஸ்லின்கள் | $27\frac{1}{3}$ | $37\frac{1}{2}$ | 10 |
| காலிகோகள் (calicoes பருத்தி நூல் துணிகள்) | $71\frac{2}{3}$ | $67\frac{1}{2}$ | 10 |
| மற்ற பருத்திநூல் துணிகள் | $27\frac{1}{3}$ | 50 | 20 |
| கம்பளிப் போர்வைகள் | 71 | $67\frac{1}{2}$ | 30 |
| பாய்கள் | $68\frac{1}{2}$ | 50 | 20 |
| பட்டு ஒவ்வொரு ராத்தலுக்கும் 2ப. 13ஷி. 3பெ. | 4ஷி. | 4 ஷி | 1 பெ. |
| | இறக்குமதி செய்யக் கூடாது | இறக்குமதி செய்யக் கூடாது | விலையின் பேரில் |
| பட்டுத் துணிகள் | | | 100க்கு 20 |
| டவீடா (Taffeta) பட்டு | ,, | ,, | 30 |
| இதர பட்டுத் துணிகள் | ,, | ,, | 20 |
| சர்க்கரை ஒரு அந்தருக்கு (அந்தர் ஒன்று 1 பவுன் விலையுள்ளது) | 1ப. 13ஷி. | 3ப. 3ஷி. | 1ப. 12ஷி. |

இங்ஙனம் பல கொடுமைகள் செய்தும் அதிக வரிகள் போட்டும் இந்தியாவின் கைத்தொழில்கள் நசுக்கப்பட்டன. இங்கிலாந்தின் கைத்தொழில் சாமான்களுக்கு அவசியமான பருத்தி பட்டு முதலிய சாமான்களை உண்டாக்கும் நாடாக நம் நாட்டைச் செய்ய அவர்கள் முயற்சி செய்து வந்தனர். பின்னர் இந்தியாவில் மறுபடியும் நெசவு ஆலைகள் ஸ்தாபிக்கப்பட்ட சமயத்திலும், ஆங்கிலேய வர்த்தகர்களின் லாபத்தைக் கருதி, இந்திய ஆலைகளில் உண்டாகும் துணிகள் பேரிலும் வரி போடப்பட்டது. தற்காலத்தில் இந்தியாவில் நெசவுத் தொழில்கள் இப்பொழுது இருக்கும் நிலைமையை அடைந்திருப்பது, கவர்ன்மெண்டின் உதவியால் அல்ல. சுதேசியமே அவைகளை வளர்த்த தாய்.

# ஏழாவது அதிகாரம்.

## தற்கால கைத்தொழில்கள்.

தற்காலத்தில் இந்தியாவில் ஸ்தாபிக்கப் பட்டிருக்கும் பெரிய கைத்தொழிற் சாலைகளின் 1927-ம் வருஷத்திய கணக்கு கீழே காண்க.

| விபரங்கள். | எண். | எத்தனை தொழிலாளர்கள் வேலை செய்கின்றனர். |
|---|---|---|
| 1. நூற்கும் நெய்யும் தொழிற்சாலைகள்: | | |
| பஞ்சு நூற்கும் நெய்யும் தொழிற் சாலைகள் ... | 323 | 386,198 |
| சணல் ,, ,, ... | 91 | 334,336 |
| பட்டு ,, ,, ... | 14 | 2,266 |
| கம்பளி ,, ,, ... | 14 | 8,155 |
| 2. இன்ஜினியரிங் தொழிற் சாலைகள் கப்பல்களை செப்பனிடும் தொழிற் சாலைகள் (Back yards) ... | 11 | 7,296 |
| எலக்ட்ரிகல் இன்ஜினியரிங் ... | 39 | 5,786 |
| சாதாரண ,, ... | 253 | 45,156 |
| ரயில் பாதை தொழிற் சாலைகள் ... | 130 | 153,294 |
| கப்பல் கட்டும் தொழிற் சாலைகள் ... | 19 | 24,275 |
| 3. உலோக சம்பந்தமான தொழிற் சாலைகள் வார்ப்புத் தொழிற் சாலைகள் (Foundries) ... | 44 | 2,424 |
| இரும்பு எஃகு தொழிற் சாலைகள் ... | 6 | 39,052 |
| பெட்ரோல் சுத்தம் செய்யும் தொழிற் சாலைகள் ... | 11 | 12,837 |

Page 40 Jathar and Berie's Indian Economics Vol II.

| விவரங்கள் | எண் | எத்தனை தொழிலாளர்கள் வேலை செய்கின்றனர் |
|---|---|---|
| உணவு புகையிலை தொழிற்சாலைகள்: | | |
| மாவு அறைக்கும் மில்கள் | 79 | 6,028 |
| அரிசி மில்கள் | 1,180 | 69,025 |
| சர்க்கரைசெய்யும் தொழிற்சாலைகள் | 44 | 14,487 |
| தேயிலைத் தொழிற்சாலைகள் | 826 | 62,775 |
| புகையிலைத் தொழிற்சாலைகள் | 13 | 7,494 |
| இரசாயன, சாயம், தொழிற்சாலைகள் | | |
| சாயம் போடும் தொழிற்சாலைகள் | 34 | 6,158 |
| இரசாயன ,, | 14 | 2,960 |
| தீப்பெட்டி ,, | 43 | 15,893 |
| எண்ணெய் மில்கள் | 230 | 13,983 |
| காகிதம் அச்சு முதலிய தொழிற் சாலைகள்:— | | |
| காகிதம் செய்யும் மில்கள் | 7 | 5,061 |
| அச்சாபீசுகள் | 318 | 38,342 |
| பேப்பர்கள் செய்யும் யந்திரம் | 1 | 515 |
| ஓடுகள் செய்யும் தொழிற்சாலைகள் | 111 | 13,130 |
| மரம் அறுக்கும் தொழிற்சாலைகள் | 202 | 19,039 |
| தோல் பதம் செய்யும் ,, | 25 | 3,463 |
| தோல், செருப்பு, பூட்சுகள் ,, | 11 | 2,663 |
| பருத்தியை பஞ்சாக அரைக்கும் பேக்டரிகளும், பஞ்சை பேல்களாகக் கட்டும் பிரன்களும் | 2536 | 183,381 |
| சணல் பேல்களாக கட்டும் பிரன்கள் | 120 | 35,463 |
| மற்ற தொழிற் சாலைகள் | 127 | 41,959 |
| ஆக மொத்தம் | 7,704 | 1,680,702 |

ஐரோப்பிய யுத்தத்திற்கு பிறகு நமது கைத்தொழில்கள் நன்ருக வளர்ந்து வருகின்றன. யுத்த காலத்தில் நமக்கு அன்னிய நாட்டு சாமான்கள் கிடைக்காமையாலும் யுத்தத்துக்கு வேண்டிய பலவகை சாமான்களும் இந்தியாவில் செய்யவேண்டி யிருந்தபடியாலும், இந்தியக் கைத்தொழில்கள் விருத்தியடைந்தன. யுத்தத்துக்குப் பிறகும் கைத்தொழில்கள் வளர்ந்து கொண்டு வருகின்றன. 1914-1915-ம் வருஷத்தில் கைத்தொழில்களில் எவ்வளவு கம்பெனிகள், எவ்வளவு மூலதனத்துடன் ஈடுபட்டிருந்தன, 1927-1928-ல் இவைகள் எவ்வளவு வளர்ந்திருக்கின்றன என்பதை கீழே காண்க.

| கம்பெனிகளின் விவரங்கள். | 1914-1915 | | 1927-1928 | |
|---|---|---|---|---|
| | எண் | ஆலைகளின் மூலதனம் லக்ஷ ரூபாய்களில் | எண் | ஆலைகளின் மூலதனம் லக்ஷ ரூபாய்களில் |
| பாங்குகள் ... | 436 | 780 | 1,190 | 2,019 |
| இன்சூரன்ஸ் கம்பெனிகள் ... | 182 | 50 | 76 | 218 |
| கப்பல் ,, ... | 24 | 128 | 26 | 246 |
| ரயில்பாதை, மின்சாரவண்டி (Tram Car) ... | 44 | 830 | 43 | 1,493 |
| போக்கு வரத்து சாதன கம்பெனிகள். | | | 145 | 299 |
| கைத் தொழிற்சாலைகள் ... | 754 | 1,132 | 2,072 | 8,824 |
| தேயிலைக் கம்பெனிகள் வகையரா. | 237 | 472 | 532 | 1,230 |
| நிலக்கரிச் சுரங்கங்கள் ,, ... | 140 | 609 | 220 | 1,075 |

| கம்பெனிகளின் விவரங்கள். | 1914-1915 எண் | 1914-1915 ஆலைகளின் மூலதனம் லக்ஷ ரூபாய்களில் | 1927-1928 எண் | 1927-1928 ஆலைகளின் மூலதனம் லக்ஷ ரூபாய்களில் |
|---|---|---|---|---|
| தங்கச் சுரங்கங்கள் ,, ... | 8 | 33 | 3 | 7 |
| மற்ற சுரங்கங்கள் ,, ... | 57 | 576 | 98 | 2,853 |
| பஞ்சு மில்கள் ,, ... | 205 | 1,670 | 262 | 3,657 |
| சணல் மில்கள் ,, ... | 34 | 761 | 61 | 1,651 |
| பட்டு, கம்பளி மில்கள் ,, ... | 13 | 122 | 20 | 246 |
| பஞ்சு அரைக்கும், பேல்கட்டும். | | | 105 | 241 |
| சணல் பிரஸ்கள் ,, ... | 139 | 270 | 28 | 170 |
| மாவு மில்கள் ,, ... | 30 | 80 | 23 | 121 |
| தோட்டங்கள், பூமி கட்டடம். | 32 | 217 | 111 | 740 |
| சர்க்கரைக் கம்பெனிகள் ... | 22 | 80 | 34 | 183 |
| மற்ற கம்பெனிகள் ... | 123 | 205 | 339 | 1,388 |
| பிரிட்டிஷ் இந்தியாவின் மொத்தம். | 2,480 | 8,024 | 5,388 | 26,661 |
| சுதேசமன்னர்களின் ராஜ்யங்களில். | 65 | 54 | 415 | 1,002 |
| ஆக மொத்தம் ... | 2,545 | 8,078 | 5,803 | 27,663 |

Page 42 Jathar and Beri's Indian Economics Vol II.

கைத்தொழில்களின் வ்ளர்ச்சி குறிப்பிடத்தக்கதாகவே மேற்கண்ட கணக்குகளிலிருந்து தென்பட்டாலும், நம் நாட்டில் போதுமான அளவு கைத்தொழில்கள் விருத்தி செய்யப்படவில்லை என்பதை நாம் எப்பொழுதும் ஞாபகத்தில் வைத்துக்கொள்ள வேண்டும். கைத்தொழில் நாடுகளாக

விளங்கும் இங்கிலாந்து, ஜர்மனி, அமெரிக்க யுனைடெட் ஸ்டேட்ஸ் முதலிய நாடுகளுடன் ஒப்பிட்டுப் பார்த்தால், நம் கைத்தொழில்கள் இன்னும் குழவிப் பருவத்தில்தான் இருக்கின்றன வெனத் தெளிவாக விளங்கும். நம் நாட்டில் உயர் தரக் கைத்தொழில்கள் பலவும் ஸ்தாபிக்கப்பட வில்லை. கைத்தொழில்களில் ஈடுபட்டிருக்கும் மக்கள் நம் ஜனத்தொகையில் 100-க்கு ஒருவர் வீதம்கூட இல்லை. உலகிலுள்ள மற்ற நாடுகளுடன் சரிசமத்துவமாய் விளங்க வேண்டுமானல், நம் கைத்தொழில்களில் விருத்தி செய்யவேண்டிய குறைகள் பல இருக்கின்றன.

நம் கைத்தொழில்களில் முக்கியமான சிலவற்றைப்பற்றிய விவரங்களை இனி ஆராய்வோம்.

பஞ்சு நூற்கும் நெய்யும் கைத்தொழில்:— இந்தியாவில் நூற்கும் தொழில் மிகவும் பரவியிருந்ததெனக் கண்டோம். ஆனல் அது பெரிய ஆலைகளிலும் மில்களிலும் உண்டாக்கப்பட்ட நூலின் போட்டியால் அழிக்கப்பட்டது. தற்காலத்தில் மகாத்மா காந்தி அடிகளின் முயற்சியால் அது மறுபடியும் தோற்றுவிக்கப்பட்டிருக்கிறது. ஆனல் நெய்யும் தொழில் எப்பொழுதும் பூராவும் அழிக்கப்படவில்லை. அது இன்னும் குடிசைத் தொழில்களில் ஒரு முக்கிய தொழிலாக விளங்கி வருகிறது. குடிசைத் தொழில்களைப்பற்றி எழுதுங்கால், இவைகளைப்பற்றி விவரமாக கவனிப்போம். தற்சமயம் நாம் பேசுவது பெரிய ஆலைகளிலும் மில்களிலும் செய்யப்படும் நூற்றல், நெய்தலைப்பற்றியே.

நூற்பதற்கும், நெய்வதற்கும் மில்கள் அல்லது தொழிற்சாலைகள் முதலில் 1854-ம் வருஷத்தில் பம்பாயில் ஸ்தாபிக்கப்பட்டன. அதற்குப்பின் அவைகள் அதிகமாகிக் கொண்டே வருகின்றன. தற்காலத்தில் இந்தியாவில் 323மில்

கள் இருக்கின்றன. அவை அதிகமாய் பம்பாய், ஆமதாபாத் நகரங்களிலும், நாகப்பூர், ஷோலாபூர், கோயமுத்தூர், மதுரை முதலிய நகரங்களிலும் இருக்கின்றன. அவைகளில் சுமார் நான்கு லக்ஷம் தொழிலாளர்கள் வேலை செய்கிறார்களென்று முன்பக்கங்களில் கொடுக்கப்பட்ட கணக்குகளிலிருந்து தெரியவரும்.

**இதன் வளர்ச்சி** :—1904-05-ம் வருஷம்வரை பம்பாய் மில்களில் உண்டாக்கப்பட்ட நூல் சீன தேசத்துக்கும் அனுப்பப்பட்டு, அங்கு விற்கப்பட்டது. 1890-ம் வருஷம் வரை ஜபப்பான் தேசத்துக்கும் இந்தியாவில் செய்த நூல் அனுப்பப்பட்டது. அரேபியா, சிங்கப்பூர் முதலிய நாடுகளுக்கும் அனுப்பப்பட்டது. ஆனால், 1905-ம் வருஷத்திலிருந்து அன்னிய நாட்டு வியாபாரம் குறைந்தது. 1900-ம் வருஷத்தில் 2440 லக்ஷம் ராத்தல் நூல் இந்தியாவிலிருந்து பிரதேசங்களுக்கு அனுப்பப்பட்டது. ஆனால், 1928-ல் 243 லக்ஷம் ராத்தல் நூல்தான் இந்தியாவிலிருந்து ஏற்றுமதி செய்யப்பட்டது.

பஞ்சு நூற்கும் நெய்யும் மில்களுக்கு ஐரோப்பிய மகா யுத்த காலத்தில் நல்ல லாபம் கிடைத்தது. ஆங்கிலேய மில்கள் யாவும் துணி நெய்வதை விட்டு யுத்தத்துக்கு வேண்டிய சாமான்களைச் செய்ய ஆரம்பித்தன. ஆதலால் வெளி நாடுகளிலிருந்து இந்தியாவில் வழக்கமாய் ஏற்படும் துணி இறக்குமதி குறைந்தது. இதனால் இந்திய மில்களின் உற்பத்திகளுக்குத் தேவை பிறந்தது. இதுவே தருணமென்று இந்திய மில்களும் தங்கள் உற்பத்தியை அதிகம் செய்து கொண்டன. அச்சமயத்தில் அதிக லாபமும் சம்பாதித்தார்கள். 1921 - ம் வருஷம் வரை மில்கள் லாபகரமாகவே வேலை செய்தன.

தற்காலத்திய சோர்வுக்கு (Depression) காரணங்கள்:—அதற்குப் பிறகு அவைகளுடைய லாபம் குறையத் தலைப்பட்டது. இதற்குக் காரணங்கள் பல வுள. உலக வியாபாரத்தைப் பிடித்த வியாபாரச் சோர்வு (World trade depression) இந்தியாவின் வியாபாரத்தையும் பிடித்தது. தவிர ஜப்பான் தேசம் யுத்த சமயத்தில் இக் கைத்தொழிலால் முன்னேற்ற மடைந்து, சீனு தேசத்தில் செய்யப்பட்டு வந்த நம் வியாபாரத்தைக் கைப் பற்றியதுடன் நம் நாட்டுக்குள் நாட்டுச் சாக்குகளுக்குப் போட்டியாக, தனது சாக்குகளை அனுப்ப ஆரம்பித்தது. தவிர, 1926-ம் வருஷத்தில் ரூபாயின் நாணய மாற்று விகிதம் 16 பென்சிலிருந்து 18 பென்சாக உயர்த்தப்பட்டது. இதன் விவரங்களை பின் அத்தியாயங்களில் நாணய மாற்றைப்பற்றிப் பேசும்போது அறிவோம். இங்ஙனம் நாணய மாற்று விகிதத்தை உயர்த்தியதால் அன்னிய நாட்டுத் துணிகளுக்கு 100-க்கு 12½ வீதம் நம் நாட்டுச் சாக்குகளுக்கு விரோதமாய் உதவி செய்ததாக ஏற்பட்டது என்பது மட்டும் இங்கு குறிப்பிடத் தக்கது.

கைத்தொழில் நிர்வாக முறையிலும் சில குறைகள் இருந்தன. இந்த மில்களின் நிர்வாக சபைகளில் அதாவது டைரக்டர் போர்டுகளில் இக்கைத் தொழிலில் நன்ருகப் பயிற்சிபெற்றவர்கள் இல்லாமையால், சில சமயங்களில் தப்பான முறைகளில் அதிகப்பணம் செலவு செய்யப்பட்டது. மிஷின்கள் சரியாக உபயோகப்படுவதில்லை. தேய்மானமான பாகங்கள் சமயத்தில் புதுப்பிக்கப் படுவதில்லை. மனிதன் உழைப்பை மீதமாக்கும் முறைகள் கையாளப் படுவதில்லை. பஞ்சு, நிலக்கரி முதலிய சாமான்கள் சிக்கனமாய்ச் செலவு செய்யப்படுவதில்லை. மார்க்கெட்டில் தேவை

யில்லாத சமயங்களில், மில்களில் உற்பத்தி குறைக்கப்பட வேண்டும். அவைகளை விற்பதற்கு ஏற்ற மார்க்கெட்டுகள் கண்டுபிடிக்கப்படவேண்டும். விற்பதற்கு வேண்டிய முறையும், அதற்கு வேண்டிய ரொக்க வசதிகளும் சீர்திருத்தி அமைக்கப்பட வேண்டும்.

நெய்தல் தொழில் அபிவிருத்தி விசாரணைக் கமிட்டி (Textile Tariff Board) :—இம் முக்கியமான கைத்தொழில் சீர்கெட்டு வருவதை யுணர்ந்து, கவர்ன்மெண்டார் 1926ல் இவைகளைப் பற்றிய விவரங்களை விசாரித்து, அவைகளுடைய முன்னேற்றத்துக்கு ஏற்ற சிபார்சுகளைச் செய்யும்படி டெக்ஸ்டைல் டாரிப் போர்டு (Textile Tariff Board) அதாவது நெய்தல் தொழில் அபிவிருத்தி விசாரணைக் கமிட்டி, என்ற ஒரு கமிட்டி ஏற்படுத்தினார்கள். இக்கமிட்டியார் நன்றாக விசாரணை செய்து, மில் கைத்தொழிலுக்கு நற்பயன் அளிக்கக் கூடிய பலவித முறைகளை எடுத்துக் காட்டினார்கள். அவர்களுக்கு உதவியளிக்கப்பட வேண்டியது அவசியம் என்றும், அவ்வுதவி கீழ்க்கண்ட விதங்களில் கொடுக்கப்பட வேண்டுமென்றும் சிபார்சு செய்தார்கள்.

1. அன்னிய நாட்டுத் துணிகளின்பேரில் முன்னமேயிருந்த 100-க்கு 11 இறக்குமதிவரிமேல் இன்னும் 100க்கு 4 அதிகவரி, மூன்று வருஷங்களுக்குப் போடவேண்டும்.

2. இந்திய மில்களில் உற்பத்தி செய்யப்படும் அதிக கவுண்ட் அதாவது உயர்ந்த நெம்பர் நூல்களுக்கு, சில நிபந்தனைகளுக்கு உட்பட்டு பண உதவி அல்லது பவுண்டி (Bounty) அளிக்கவேண்டும்.

3. மில் மிஷன்கள் முதலிய சாமான்களின்பேரில் போடப்பட்டிருந்த இறக்குமதி வரிகள் எடுக்கப்பட வேண்டும்.

4. பம்பாய் மில்காரர்களின் சங்கத்தாரால் ஏற்படுத்தப்படும் வெளுக்கும் அல்லது சாயம்போடும், அல்லது அச்சுப் போடும் தொழிற்சாலைக்கு கவர்ன்மெண்டார் பண உதவி செய்யவேண்டும்.

5. பஸ்ராவிலும் மொம்பாசாவிலும் இந்திய வியாபாரப் பிரதிநிதிகள் நியமிக்கப்பட்டு, அப் பிரதேசங்களில் இந்திய சாக்குகளுக்கு மார்க்கெட் சௌகரியங்களைக் கண்டு பிடிக்கவேண்டும். இந்திய வியாபாரத்தை அதிகப்படுத்துவதற்காக அன்னிய நாடுகளில், மில்காரர் சங்கத்தாரின் பிரதிநிதிகளை வைத்திருக்க வேண்டிய செலவுகளில் ஒரு பகுதியை கவர்ன்மெண்டார் கொடுத்துதவ வேண்டும்.

நெய்தல் தொழிலுக்குப் பாதுகாப்புகள்:—கவர்ன்மெண்டார் இந்த சிபார்சுகள் அனைத்தையும் அங்கீகரிக்கவில்லை. மில் மிஷின்கள் முதலிய சாமான்களின்பேரில் போடப்பட்டிருந்த இறக்குமதி வரியை எடுத்துவிடுவதாக மட்டும் அபிப்பிராயப்பட்டனர். ஆனால் பம்பாய் முதலிய நகரங்களில் இது சம்பந்தமாக கவர்ன்மெண்டார் வந்த முடிவுகள் சரியல்லவென்று ஆக்ஷேபிக்கப்பட்ட பின்பு, அன்னியநாட்டு நூல்களின்பேரில் ஒரு ராத்தலுக்கு 0-1-6 அணா அல்லது 100-க்கு 5 வரி, எது உயர்ந்ததோ அந்த விகிதம், என வரி போடப்பட்டது. அதாவது ஒரு ராத்தல் ரூ. 1-14-0 விலைக்கு உட்பட்ட அன்னியநாட்டு நூல்களின்பேரில் 0-1-6 விகிதத்திலும், ஒரு பவுன் ரூ. 1-14-0-க்கு அதிகப்பட்ட விலையுடைய நூலின்பேரில் அதன் விலையில் 100-க்கு 5 பங்கும் வரி போடப்பட்டது. இதன் மூலம் உயர்ந்த கவுன்ட் நூல்கள் இந்திய மில்களில் விருத்தியாகும் என எதிர்பார்க்கப்பட்டது.

இந்தப் பாதுகாப்புப் போதாதெனவும், ஜப்பான் தேசத்திலிருந்து இறக்குமதி செய்யப்படும் நூல் துணிகளின் போட்டியால் இந்திய மில்கள் கஷ்டப்படுகின்றனவென்றும் மில்காரர்கள் சங்கத்தார் (Mill Owners' Association) முறையிட்டதன் பேரில், இதைப்பற்றி விசாரணை செய்யும்பொருட்டு திரு. ஜி. எஸ். ஹார்டி (G. S. Hardy) என்பவர் நியமிக்கப்பட்டார். ஹார்டி அவர்களும் தன் ரிபோர்ட்டில், ஜப்பானிய இறக்குமதியால் இந்திய பஞ்சு மில் கைத்தொழில்கள் விருத்தியடைய முடியாமல் இருக்கின்றன என்ற அபிப்பிராயத்தை வெளியிட்டிருந்தார். ஆகையால் அன்னிய நாடுகளிலிருந்து இறக்குமதி செய்யப்படும் எல்லாத் துணிகள் பேரிலும் போடப்பட்டிருந்த 100-க்கு 11 வரி, 100-க்கு 15 ஆக உயர்த்தப்பட்டது மன்னியில், ஜப்பான் தேசத்து இறக்குமதிகள் பேரில், இதைவிட அதிகமாக 100-க்கு 5 வரியும் போடப்பட்டது.

நம் துணி இறக்குமதியின் அளவு:—நம் நாட்டின் மொத்த துணித் தேவையில் எவ்வளவு நம் மில்களால் சப்ளை செய்யப்படுகிறது என்பதையும், எவ்வளவு அன்னிய நாட்டுத் துணிகளாலும், எவ்வளவு பாகம் அன்னியநாட்டு நூலால், ஆனால் நம் தறிகளால் நெய்யப்பட்ட துணிகளால் சப்ளை செய்யப்படுகிற தென்பதையும் அடுத்த பக்கத்தில் காண்க.

| விவரங்கள்† | 1913-14 10 லக்ஷம் கெஜங்களில் | 1927-28 10 லக்ஷம் கெஜங்களில் |
|---|---|---|
| அன்னிய நாட்டுத் துணிகளின் மொத்த இறக்குமதி | 3,197 | 1,937 |
| இவைகளில் மற்றதேசங்களுக்கு ஏற்றுமதி செய்யப்பட்டது | 155 | 33 |
| ஆக நிகர இறக்குமதி | 3,042 | 1,904 |
| இந்திய மில் துணிகள் | 1,164 | 2,356 |
| அன்னியநாட்டு நூல் அல்லது இந்திய நூலிலிருந்து தறிகளில் நெய்யப் பட்ட சரக்குகள் | 1,068 | 1,316 |
| மொத்த இந்தியாவில் நெய்யப் பட்ட துணிகள் | 2,232 | 3,672 |
| இந்தியத்துணிகளில் ஏற்றுமதி செய்யப்பட்டவை | 130 | 168 |
| நிகர சுதேச உற்பத்தி இந்தியாவில் உபயோகப் படுத்தியது | 2,102 | 3,504 |
| நிகர இறக்குமதி | 3,042 | 1,904 |
| இந்தியாவில் செலவு செய்யப்படும் மொத்தத் துணிகள் | 5,144 | 5,408 |

† Page 46 Jathar & Beri's Indian Economics Vol. II

இந்தியாவில் செலவு செய்யப்பட்ட துணிகளில் அன்னியநாட்டுத் துணிகள் 1913-14ல் 100-க்கு 59·1-ம், 1927-28ல் 100-க்கு 35·6-ம் இருந்தது. சென்ற நான்கு வருஷங்களில் அன்னியநாட்டுத் துணிகளின் இறக்குமதிகள் மிக அதிகமாய் குறைந்திருக்கும். சென்ற சில வருடங்களாக நடத்தப்பட்டுவரும் இராஜீயப் போரின் காரணத்தாலும், இந்திய மக்களாலும் காங்கிரஸ் மகாசபையாலும் நடத்தப்பட்டு வரும் அன்னியநாட்டுத் துணி பஹிஷ்கார இயக்கத்தாலும், அன்னிய நாட்டுத்துணி இறக்குமதி

மிகவும் குறைந்திருக்கிறது. 1930-31-ம் வருஷத்தில் இந்தியாவுக்குள் 8900 லக்ஷம் கெஜத் துணிகள்தான் இறக்குமதி செய்யப்பட்டது. அதாவது 1927-28-ம் வருஷத்து இறக்குமதியோடு ஒப்பிட்டுப் பார்த்தால், 1930-31-ல் இறக்குமதி அதில் 100-க்கு 38·4 பாகம்தான் ஆகிறது. அதற்குத் தகுந்தபடி நம் நாட்டு மில் உற்பத்தியும், தறிகளின் உற்பத்தியும் அதிகமாயிருக்கின்றன.

சணல் நெசவுக் கைத்தொழில்:—முதலில் 1855-ம் வருஷத்தில் சணல் நெசவு மில் ஒன்று வங்காளத்தில் ஏற்படுத்தப்பட்டது. இத் தொழிலில் நல்ல லாபம் கிடைக்கவே, அநேகமான மில்கள் ஏற்படுத்தப்பட்டன. இந்தியாவில் சணல் நெசவு மில்கள் ஏற்படுத்தப்பட்ட ஆரம்பத்தில், இங்கிலாந்து, குறிப்பாக டண்டி (Dundee) முதலிய இடங்களில் இக்கைத் தொழிலில் சிறப்பாக விளங்கியிருந்தது. தற்காலத்தில் இந்தியாவில் அநேக மில்கள் ஏற்படுத்தப்பட்டு, அச்சிறப்பைக் குறைத்துவிட்டன. இப்பொழுது 93 சணல் மில்கள் கல்கத்தாவுக்கு அருகாமையில் ஹூக்ளி நதியின் இரு கரைகளிலும் சுமார் அறுபது மைல்களுக்கு ஸ்தாபிக்கப்பட்டு, $3\frac{1}{2}$ லக்ஷம் தொழிலாளர்களுக்கு வேலை கொடுத்து வருகிறது.

உலகத்தில் உற்பத்தி செய்யப்படும் சணலில் பெரும் பகுதி இந்தியாவில், குறிப்பாய் வங்காளத்தில் உண்டாக்கப் படுகிறது. உலக உற்பத்தியில் மூன்றில் இரண்டு பங்குகள் வங்காளத்தில் உண்டாகின்றன. ஐரோப்பிய மகா யுத்தத்துக்குமுன் இவ் வுற்பத்தியில் பாதிக்குமேல் நெய்யப்படாமல் வெறும் சணலாக ஏற்றுமதி செய்யப்பட்டது. ஆனால் தற்காலத்தில் இந்திய உற்பத்தியில் மூன்றில் இரண்டு பங்குகள் இந்திய மில்களில் நெய்யப்பட்டவை. 1883-4-ம் வருஷத்

தில் 1·2 கோடி ரூபாய் பெறுமான சணல் கைத்தொழில் சாமான்கள்தான் ஏற்றுமதி செய்யப்பட்டன. ஆனால் 1928-29-ல் சுமார் 56·90 கோடி பெறுமானவை ஏற்றுமதி செய்யப்பட்டன.

சணல் மில்கள் ஒரு முக்கியமான அம்சத்தில் வருந்தத் தக்கனவாய் இருக்கின்றன. அவையாவும் அன்னியநாட்டாருக்குச் சொந்தமானவை. அவைகளால் வரும் லாபம் யாவும் அன்னியநாட்டு மக்களே அனுபவிக்கின்றனர். பிரதி வருஷமும் இக் கைத் தொழிலால் வரும் பெரும் ஊதியத்தை இந்தியா இழக்கின்றது.

இரும்பு, எஃகுக் கைத் தொழில்:—இது கைத் தொழில்களில் மிகவும் முக்கியமானது ; மற்ற கைத் தொழில்களுக்கு வேண்டிய யந்திரங்கள் முதலிய அவசியங்களைக் கொடுக்கின்ற முறையில் மற்ற கைத் தொழில்களுக்கு அடிப்படையான கைத் தொழிலாய் இருப்பதுடன், கைத் தொழில் விருத்திக்கே சாவியாகவும் கருதப்படும் இதை விருத்தி செய்யாமல் மற்ற கைத் தொழில்களை விருத்தி செய்வது அசாத்தியம். தவிர யுத்த காலங்களிலும் இதுவே முக்கியமான கைத் தொழிலாக விளங்குகின்றது. எனவே இதைக் கூடிய சீக்கிரத்தில் விருத்தி செய்யவேண்டியது அவசியம்.

இத் தொழில் முதலில் தென் ஆற்காடு ஜில்லாவிலும் இன்னும் மற்ற இடங்களிலும் ஆரம்பிக்கப்பட்ட போதிலும், இம் முயற்சிகள் வீணாயின. பின் வங்காளத்தில் ஆரம்பிக்கப்பட்டு, இந்த நூற்றாண்டின் ஆரம்பத்தில் சுமார் 35000 - டன் சரக்குகள் உற்பத்தி செய்யப் பட்டன. 1907-ம் வருஷத்தில் உயர் திருவாளர் ஜெ. என். டாடா (J. N. Tata) அவர்கள் கம்பெனி ஆரம்பிக்கப்பட்டதி

லிருந்துதான் இக் கைத்தொழில் உயிர் பெற்றது. யுத்த காலத்தில் மெசபொடாமியா, பாலஸ்தீனம், கிழக்கு ஆப்பிரிக்கா முதலிய யுத்த களங்களுக்கு வேண்டிய ரயில் பாதைச் சாமான்கள் டாடா கம்பெனியாரால் செய்து கொடுக்கப்பட்டன. இதன் விருத்திக்காக திட்டம் போடப் பட்டு, அத் திட்டம் 1917-ல் ஆரம்பிக்கப்பட்டு, 1924-ம் வருஷத்தில் முடிவு பெற்றது. இப் புதிய யந்திரங்கள் மூலம் பல வித கைத் தொழில்களுக்கும், முக்கியமாய் ரயில் பாதைகளுக்கு வேண்டிய சாமான்கள் செய்யப் பட்டு வருகின்றன. இதற்குப் பின் மைசூர் பத்ராவதி இரும்புத் தொழிற் சாலை (Badravati Iron Works) முதலிய தொழிற்சாலைகள் ஏற்படுத்தப்பட்டிருக்கின்றன.

இரும்பு எஃகுக் கைத் தொழில்களின் விருத்தி கீழே காண்பிக்கப் பட்டிருக்கிறது. இந்த நூற்றாண்டு ஆரம்பத்தில் இந்தியாவில் இரும்பு (Pig Iron) 35000 டன்கள் தான் உண்டாக்கப்பட்டன.

1914-ம் வருஷத்தில் 162,282 டன்களும்
1919-ம் வருஷத்தில் 232,268 டன்களும்
1927-28-ம் வருஷத்தில் 1,162.000 டன்களும்
1928-29-ம் வருஷத்தில் 1,050,000 டன்களும்

உண்டாக்கப் பட்டன. கடைசியில் குறிப்பிட்டிருக்கிற வருஷத்தில் உற்பத்தி குறைந்ததற்குக் காரணம் அவ்வருஷத்தில் ஜாம்ஷட்பூரில் (டாடா கம்பெனியாரால் ஸ்தாபிக்கப் பட்டிருக்குமிடம்) உண்டான தொழிலாளர் சம்பந்தமான சச்சரவுகளே. தற்காலத்தில் அன்னிய நாடுகளின் இறக்குமதிகள் குறைந்துவிட்டன. 1928-29-ல், இக் குறைந்த வெளியீட்டிலும் 4,49,000 டன்கள் 2,115 லக்ஷம் ரூபாய் பெறுமான சரக்குகள், வெளி நாடுகளுக்கு, குறிப்பாக ஜப்பா

னுக்கு ஏற்றுமதி செய்யப்பட்டன.

எஃகுக் கைத்தொழிலும் விருத்தி யடைந்திருக்கிறது

1916-17-ம் வருஷத்தில் 1,39,433 டன்களும்
1927-28-ம் வருஷத்தில் 5,99,565 டன்களும்
உற்பத்தி செய்யப்பட்டன.

நன்ருகப் பதமிட்ட எஃகு (Finished Steel)
1916-17-ம் வருஷத்தில் 98,726 டன்களும்
1927-28-ம் வருஷத்தில் 428,654 டன்களும்
உற்பத்தி செய்யப்பட்டன. இக் கைத் தொழில்கள் இன்னும் அதிகமாக விருத்தி செய்யப்பட வேண்டும். இந்தியாவின் அவசியத்துக்கு வேண்டிய எஃகு சாமான்களும் இரும்பு சாமான்களும் முழுதும் இப்பொழுது நம் நாட்டில் செய்யப்படுவதில்லை யாதலால், ஏராளமாக இச் சாக்குகள் அன்னிய நாடுகளிலிருந்து இறக்குமதி செய்யப்படுகின்றன. 1928-29-ம் வருஷத்தில் சுமார் 2,024 கோடி ரூபாய் எஃகு இரும்பு சாமான்கள் இறக்குமதி செய்யப்பட்டன.

இரும்பு, எஃகுக் கைத் தொழிலுக்குப் பாதுகாப்புகள் :—இக் கைத் தொழில் தேசத்தின் அபிவிருத்திக்கு முக்கியமான கைத் தொழிலா யிருப்பது பற்றியும், கைத் தொழில் அபிவிருத்திக்கு வேண்டிய உதவி கவர்ன்மெண்டார் கொடுக்க வேண்டியது கடமை யென்ற காரணத்தாலும், இக் கைத் தொழில் முன்னேற்றத்திற்காக, பாதுகாப்புகள் (Protection) கொடுக்கப்பட வேண்டுமென டாடா கம்பெனியார் கேட்டனர். இக் கைத் தொழிலுக்கு பாதுகாப்புகள் அளிக்கப்பட வேண்டுமா, பாதுகாப்பு அளிப்பதற்கு அவசியமான குணங்கள் இக் கைத்

தொழிலில் இருக்கின்றனவா, பாதுகாப்புகள் அளிக்கப் பட வேண்டுமானுல், எவ்விதத்தில், எந்த அளவுக்கு அளிக் கப்பட வேண்டும் என்று விசாரணை செய்து சிபார்சு செய்யும்படி டாரிப் போர்டு (Tariff Board) க்குச் சொல்லப்பட்டது. (டாரிப் போர்டு என்பது பாதுகாப்பு கள் சம்பந்தமாக கைத் தொழில்களை விசாரணை செய்து ரிப்போர்ட் அல்லது சிபார்சுகள் செய்வதற்காக கவர்ன் மெண்டாரால் ஏற்படுத்தப்பட்ட ஒரு சபை.)

டாரிப் போர்டாரும் விசாரணை செய்து, இக்கைத் தொழில் அபிவிருத்திக்கு அவசியமான சாதனங்கள் நம் நாட்டில் இருக்கின்றனவென்றும், பாதுகாப்புகள் கவர்ன் மெண்டாரால் அளிக்கப்பட்டால் சில வருஷங்களில் நல்ல விருத்தியடைந்து மற்ற நாடுகளின் போட்டியை எதிர்க்கக் கூடிய சக்தி பெறத் தக்கதென்றும், தற்காலத்தில் பாது காப்புகள் அளிக்கப்படாவிடில் இக்கைத்தொழில் அழிக்கப் படலாமென்றும்—இக்காரணங்களால் இதற்கு அவசியம் பாதுகாப்புகள் அளிக்கப்பட வேண்டுமென்றும் சிபார்சு செய்தனர். கவர்ன்மெண்டாரும் இச் சிபார்சுகள் அங்கீ கரிக்கப்பட்டு, சில இரும்பு எஃகு இறக்குமதிச் சாமான்கள் பேரில் இறக்குமதி வரியை உயர்த்தியும், மற்ற சில உள் நாட்டு உற்பத்திகளுக்குப் பவுண்டி (Bounty) யாகப் பொருளுதவி கொடுத்தும், பாதுகாப்புகள் அளிக்கப் பட்டன. இப் பாதுகாப்புகள் மூன்று வருஷத்துக்குக் கொடுக்கப்படுமெனவும், இன்னும் மேற்கண்ட ஷரத்துகள் கண்ட எஃகு பாதுகாப்பு மசோதா (The steel protection Bill) 1924-ல் இந்திய சட்டசபையில் நிறைவேற்றப் பட்டது.

1927-ல் ஐரோப்பாவில் எஃகுச் சாமான்களின் விலை

மிகவும் குறைந்தது. நம் ரூபாயின் நாணயமாற்று விகிதமும் 16 பென்சிலிருந்து 18 பென்சுகளுக்கு உயர்த்தப்பட்டது; இதனால் அன்னியநாட்டு சாமான்களை நம் நாட்டில் 16 பென்சு நாணயமாற்றாக இருந்த சமயத்தைவிட 100-க்கு $12\frac{1}{2}$ குறைத்து விற்க முடிந்தது. இக் காரணங்களால் எஃகுத் தொழிலுக்குக் கொடுக்கப்பட்ட பாதுகாப்புகள் போதுமானவையாய் இல்லையென்றும், ஆகையால் இன்னும் அதிக பாதுகாப்புகள் கொடுக்கப்பட வேண்டுமென்றும் கேட்கப்பட்டது. இதற்காக 1927-ல் இந்திய சாக்குகளுடன் போட்டிபோடும் இறக்குமதி எஃகு சாமான்கள்பேரில் வரி அதிகம் செய்யப்பட்டது. இப் பாதுகாப்புகள் ஏழு வருஷங்களுக்கு அதாவது 1934-ம் வருஷம் வரை கொடுக்கப்படும். அதற்குள் நம் நாட்டு எஃகு இரும்பு கைத்தொழில் வலிமை 'யடையும் என எதிர்பார்க்கப்படுகிறது.

தோல் கைத்தொழில்கள்:—தோல்கள், குடியானவர்களால் அவர்கள் விவசாய அவசியத்துக்காக வைத்துக்கொண்டிருக்கப்படும் கால் நடைகளிலிருந்து கிடைக்கின்றன. ஆனால் தோல்களினால் செய்யக்கூடிய சாமான்கள் இந்தியாவில் அதிகமாய்ச் செய்யப்படுவது இல்லை; தோலில் பெரும்பகுதி அன்னியநாட்டுக்கு முக்கியமாய் ஜர்மனிக்கும், அமெரிக்கா யுனைடெட் ஸ்டேட்ஸ்க்கும் ஏற்றுமதி செய்யப்பட்டது. யுத்தகாலத்தில் சிப்பாய்களுக்கு பூட்சுகளுக்காகவும், மற்ற சாமான்களுக்காகவும் தோல் வேண்டியிருந்தபடியால், இவ்வியாபாரம் விருத்தியாயிற்று. 1913-ம் வருஷத்தில் 1·75கோடி ரூபாய் பெறுமான தோல்கள் ஏற்றுமதி செய்யப்பட்டன. 1917-18ல் 4·86 கோடி ரூபாய் பெறுமான தோல்கள் ஏற்றுமதி செய்யப்பட்டன. தவிர,

உள்நாட்டிலும் தோல் தொழிற்சாலைகள் பல ஏற்படுத்தப் பட்டு, யுத்தகளங்களுக்கு வேண்டிய சாமான்கள் செய்யப் பட்டன.

தோல் கைத்தொழிலை விருத்தி செய்வதற்கு அதிக இடமிருக்கிறது. கைத்தொழில்களுக்கு உதவக்கூடிய தோல்கள் அன்னியநாட்டுகளுக்கு ஏற்றுமதி செய்யப்படாமல் தடுக்கப்பட்டு, அக் கைத் தொழில்கள் நம் நாட்டில் ஏற்படுத்தப்பட வேண்டும்.

இரசாயன கைத்தொழில்கள்:—இவை மற்ற கைத் தொழில்களுக்கு வேண்டிய அவசியங்களையும் கொடுக்கின்றமையால் மிகவும் முக்கியமான கைத்தொழில்களாகக் கருதப் படவேண்டும். யுத்த காலங்களிலும், இது ஒரு பிரதானமான கைத்தொழில். ஆகையால் இது கூடிய சீக்கிரத்தில் விருத்தி செய்யப்படவேண்டும். ஐரோப்பிய யுத்த காலத்தில் இது கொஞ்சம் விருத்தி செய்யப்பட்டாலும், அந்த விருத்தி போதுமானதாக யில்லை. யுத்தத்துக்குமுன் ஒரு வருஷத்தில் சராசரி 90 லக்ஷம் ரூபாய் இரசாயன சரக்குகள்தான் இறக்குமதி செய்யப்பட்டன. ஆனால் 1928-29-ம் வருஷத்தில் 248 லக்ஷம் ரூபாய் சரக்குகள் இறக்குமதி செய்யப் பட்டன. இக் கைத்தொழில்களை விருத்தி செய்வதற்கு அவசியமான உலோகங்கள் முதலியன இந்தியாவில் கிடைக்கின்றன. சில தொழிற் சாலைகளும் ஏற்படுத்தப்பட்டு கந்தக திராவகம் (Sulphuric acid) முதலிய செய்யப்பட்டு வருகின்றன. ஆனால் ஜர்மனி, இங்கிலாந்து, யுனைடெட் ஸ்டேட்ஸ் முதலியவைகளின் போட்டியால் இக் கைத்தொழில்கள் கஷ்டப்படுகின்றன. ஆகையால் இவைகளை விருத்தி செய்வதற்கு ஏற்ற பாதுகாப்புகள் அல்லது பொருளுதவி அவசியம் அளிக்கப்பட வேண்டும்.

எண்ணெய் விதைகள் கைத்தொழில்கள்:-இந்தியாவில் பலவிதமான எண்ணெய் விதைகளும் உற்பத்தி செய்யப் படுகின்றன. எனினும், இவ் விதைகள் சம்பந்தமான கைத் தொழில்கள் இந்தியாவில் ஸ்தாபிக்கப் படவில்லை. விதை களில் பெரும்பகுதி ஏற்றுமதி செய்யப்படுகிறது. நம் எண் ணெய் எடுக்கும் விதமும் பூர்வீகமானது. மாடுகளால் சுற்றப்படும் செக்குகள்மூலம் நம் நாட்டில் எண்ணெய் எடுக்கப்படுகிறது. இவ் விதத்தால் பூரா எண்ணெயும் எடுக்கப் படாததுடன், புண்ணாக்கில் பூரா எண்ணெயும் எடுக்கப் படாததால் கால்நடைகளுக்கும் பூமிக்கு உரம் போடுவதற் கும் சரியாக உபயோகப்படுத்தப் படுவதில்லை. ஏனெனில், அதிக எண்ணெயிருக்கும் புண்ணாக்கு மாடுகளுக்கும் நல்லதல்ல; பயிர்களுக்கும் நல்லதல்ல; எண்ணெயும் வீணு கின்றது.

ஆகையால், நவீன முறைகளைக் கைக்கொண்டு எண் ணெய் எடுக்கும் தொழிற்சாலைகள் ஏற்படுத்தப் பட்டால், எண்ணெய் அதிகமாகவும் பரிசுத்தமாகவும் கிடைப்பதுடன், இதைச் சேர்ந்த பல கிளைக் கைத்தொழில்கள் ஸ்தாபிப்பதற் கும் அனுகூலமா யிருக்கும்.

காகிதக் கைத்தொழில்:—நம் தேசத்தில் ஒவ்வொரு வருஷமும் சராசரி சுமார் 10,000 டன்கள் பேப்பர் செலவு செய்யப்படுகிறது. ஆகையால், காகிதக் கைத் தொழில் விருத்திக்கு அதிக இட மிருக்கிறது. காகிதம் உண் டாக்குவதற்கு வேண்டிய சாமான்களும் நம் நாட்டிலேயே கிடைக்கின்றன. 1928-ல் சுதேசி மில்களில் 38,100 டன் காகிதம் செய்யப்பட்டது. 1930-31-ல் 260 லக்ஷம் ரூபாய் கள் பெறுமான காகிதமும் 112 லக்ஷ ரூபாய் பெறுமான அட்டைகளும் இறக்குமதி செய்யப்பட்டன.

இக் கைத்தொழிலை விருத்தி செய்வதற்காக, இந்திய காகிதங்களுக்குப் போட்டியாக யிருக்கும் அன்னிய நாட்டு காகித இறக்குமதிகளின் பேரில் ஒரு ராத்தலுக்கு ஒரு அணு வீதம் வரி போடப்பட் டிருக்கிறது. இப் பாதுகாப்பு காகிதக் கைத்தொழிலுக்கு ஏழு வருடங்களுக்குக் கொடுக் கப்படும். அதற்குள் அக் கைத்தொழில் ஸ்திரமாக ஸ்தா பிக்கப்படும் என எதிர்பார்க்கப் படுகிறது.

சிமேண்ட் கைத்தொழில் (Cement Industry) :— இக் கைத்தொழிலுக்கு வேண்டிய சௌகரியங்கள் அனைத் தும் இருந்தும், நம் நாட்டில் இது விருத்தி செய்யப்படா மல் இருந்தது ஆச்சரியப்படத்தக்கது. ஐரோப்பிய யுத்தத் துக்கு முன்பு இந்தியாவில் மிகவும் குறைவாகவே உற்பத்தி செய்யப்பட்டு, அன்னிய நாடுகளிலிருந்து அதிகமாக சிமென்ட் இறக்குமதி செய்யப்பட்டு வந்தது. யுத்த காலத் தில் இக் கைத்தொழிலும் விருத்தி செய்யப்பட்டது. 1914-ல் நம் நாட்டில் 945 டன் சிமென்ட்தான் செய்யப்பட்டது. 1914-ல் 236,746 டன் செய்யப்பட்டது. இதற்குத் தகுந்தபடி அன்னிய நாட்டு இறக்குமதியும் குறைந்தது. ஆனால், 1930-31-லும் 121,000 டன் அதாவது 55 லக்ஷ ரூபாய் பெறுமானது அன்னிய நாடுகளிலிருந்து இறக்குமதி செய்யப்பட்ட்து. கூடிய சீக்கிரத்தில் அன்னிய நாட்டு இறக்குமதி பூராவும் இல்லாமல் போகும் என எதிர்பார்க்கப் படுகிறது.

குடிசைக் கைத்தொழில்கள் :—இதுவரை இயந்திரங் களைக்கொண்டு அதிகமாய் உற்பத்தி செய்யும் முறைகளைக் கைக்கொண்ட கைத்தொழில்களைப் பற்றி விவரித்தோம். ஆனால் நம் நாடு மேல் நாடுகளைப்போல் பெரிய அளவில் உற்பத்தி முறையை (Large scale production)

கைக்கொள்ள வில்லை. பல லக்ஷக் கணக்கான மக்கள் தங்கள் தங்கள் குடிசைகளில், தங்களிடத்தி லிருக்கும் குறுகிய முதலையும் உழைப்பையும் கொண்டு, கைத்தொழில் நடத்தி வருகின்றனர். இயந்திரங்களின் உதவியைக்கொண்டும், பல தொழிலாளர்களை ஒருங்கு திரட்டி, தொழிற்சாலைகளில் பெரிய அளவில் உற்பத்திசெய்யும் முறையால் இக் குடிசைக் கைத்தொழில்கள் பல அழிக்கப்பட்டாலும், இன்னும் நம் நாட்டில் குடிசைக் கைத்தொழில்கள் நிறைந்திருக்கின்றன. இதற்குக் காரணங்கள் பலவுள. மக்களின் தேவைகள் முழுதும் பெரிய அளவு உற்பத்தி முறைகளால் சப்ளை செய்ய முடிவதில்லை. சில மக்கள் விரும்பும் குறிப்பிட்ட ரகங்களை இயந்திர உற்பத்திகளால் பூர்த்தி செய்வது அசாத்தியம். தவிர, பல குடிசைத்தொழில்கள் புதிய முறைகளை அனுஷ்டித்து, பெரிய அளவு முறைகளுடன் போட்டி போடவும் தயாராக விளங்குகின்றன. இங்ஙனம் நம் நாட்டில் குடிசைத் தொழிலில் ஈடுபட்டிருக்கும் மக்கள் ஏராளமாக இருப்பதுடன், அவர்கள் நம் தேசத்தின் பொருளாதாரத்தில் ஒரு முக்கியமான நிலைமையைப் பெற்றிருக்கிறார்கள்.

குடிசைத் தொழில்களில் முக்கியமான சில வற்றைப் பற்றி கீழே சொல்லப் பட்டிருக்கிறது.

கைத்தறி நெசவு :—குடிசைத் தொழில்களில் நெய்தல் தொழிலே பிரதானமானதா யிருக்கின்றது. நூற்கும் தொழில், மில்களில் செய்யப்படும் நூலின் போட்டியால் முழுதும் அழிக்கப்படாது, இப்பொழுது மகாத்மா காந்தி அவர்களின் புதிய கதர் இயக்கத்தால் புத்துயிர் பெற்று பல்லாயிரக்கணக்கான மக்களுக்கு உணவு கொடுத்து வருகிறது. கதர் இயக்கத்தால் பல்லாயிரக்கணக்கான தறிக்காரர்

களுக்கும் தொழில் கொடுக்கப்படுகிறது. கதரைப் பரப்பு வதற்காக மகாத்மா காந்தியடிகளின் தலைமையின் கீழ் அகில இந்திய சர்க்கா சங்கம் ஒன்று ஏற்படுத்தப்பட்டு, மாகாணங்கள் தோறும் பல நகரங்களில் அச்சங்கத்தின் கிளைகள் ஏற்படுத்தப்பட்டும், கதர் பரப்பப்பட்டு வருகிறது.

ஆனால் பெரும்பான்மையான தறிகள் மில் நூலே நெய்கின்றன. அதில் பெரும்பகுதி அன்னிய நாட்டிலிருந்து இறக்குமதி செய்யப்படும் நூலாயிருக்கிறது. இந்தியாவில் சுமார் 25 லக்ஷம் தறிகள் வேலை செய்கின்றனவென்றும், அவைகளில் சுமார் 50 கோடி ரூபாய் வருமானம் வருகிற தென்றும், இது சுமார் 60 லக்ஷம் மக்களுக்கு ஜீவனம் கொடுக்கிறதென்றும் இந்திய கைத்தொழில் கமிஷனர்களால் (The Indian Industrial Commission) சொல்லப்படுகிறது. தற்காலத்தில் கைத்தறிகள், கதர் அபி விருத்தியின் காரணமாகவும், தேசிய இயக்கங்களால் பரவி வரும் சுதேசியத்தின் காரணமாகவும் அதிகமாகிக் கொண்டு வருகின்றன. 1913-14-ல் கைத்தறி உற்பத்தி 10,680 லக்ஷம் கெஜம் துணிகளாக யிருந்தது, 1927-28-ல் 13,160 லக்ஷம் கெஜங்களாக அதிகமானது முன் பக்கங்களில் காண் பிக்கப்பட்டிருக்கிறது. அதாவது நம் தேவையில் 100-க்கு 25 பங்கு கைத்தறிகளால் சப்ளை செய்யப்படுகிறது என ஏற்படுகிறது.

தறிக்காரர்களின் நிலைமையை உயர்த்துவதற்கு வேண்டிய முயற்சிகள் செய்யப்பட வேண்டும். தற்சமயம் அவர்கள் மில் துணிகளின் போட்டியாலும், அன்னிய நாட்டு—ஜப்பான் ஆங்கில நாடுகளிலிருந்து இறக்குமதி செய்யப்படும் போட்டியாலும், மிகுந்த கஷ்டத்துக்குள்ளாகி, மிகவும் ஏழ்மையான ஸ்திதியில் இருக்கின்றனர்.

அவர்கள் இரவும் பகலும் பாடுபட்ட போதிலும், அவர்களுக்குக் கிடைக்கும் ஊதியம் மிகக் குறைவாகவே யிருக்கின்றது. ஆகையால் அவர்கள் உழைப்புக்குத் தகுந்த ஊதியம் கிடைக்கும்படிக்கும், அவர்கள் ஊதியத்தை அதிகப்படுத்துவதற்கும் வேண்டிய உதவிகள் அளிக்கப்பட வேண்டும்.

கம்பளி நெசவுகள் :—இது தேசத்தில் எல்லா பாகங்களிலும், ஆட்டு ரோமங்களைக் கொண்டு நெய்யப் பட்டு வருகிறது. முகலாயர் ஆண்டகாலத்தில் உயர்ந்த இரத்தின கம்பளங்கள் நெய்யப்பட்டு வந்தன. ஆனால் அவர்களுடைய வீழ்ச்சிக்குப்பின், இவை ஐரோப்பிய நாடுகளுக்கு ஏற்றுமதி செய்யப்பட்டு வந்தன. ஆனால் இவ் வியாபாரமும் பிற் காலத்தில் குறையத் தலைப்பட்டு, இப்பொழுது மிகவும் க்ஷீணித்த நிலைமையி லிருக்கின்றது.

காஷ்மீர் சால்வைகளுக்கு இந்தியா பெயர் பெற்றிருந்தது. அக்பர் பாதுஷாவின் முயற்சியால் அம்ருதசாஸ், லாகூர் முதலிய நகரங்களில் இக் கைத்தொழில் ஸ்தாபிக்கப் பட்டு, ஒரு காலத்தில் சுமார் 15,000 மக்களுக்கு வேலை கொடுத்து வந்தது. இவை ஐரோப்பிய நாடுகளுக்கும் ஏற்றுமதி செய்யப்பட்டன. ஆனால் 1871-ல் பிரான்சுக்கும் ஜர்மனிக்கும் ஏற்பட்ட யுத்தத்தின் காரணமாக, ஏற்றுமதி குறைந்து, இக் கைத்தொழிலும் குறைந்தது.

நம் நாடு முழுதும் சாதாரணமாக ஏழை மக்கள் உபயோகப் படுத்தும் முரட்டுக் கம்பளங்களும் பல ஆயிரக் கணக்கான மக்களுக்கு வேலை கொடுத்து வருகிறது.

பட்டுக் கைத்தொழில்கள் :—17-ம் நூற்றுண்டிலும் 18-ம் நூற்றுண்டின் ஒரு பகுதியிலும் இந்தியா பட்டுச் சரக்குகளுக்கு பெயர் பெற்ற நாடாக இருந்தது. ஆனால்

பட்டு நெசவைக் குறைக்கவும், ஆங்கில நெசவுத் தொழி லுக்கு உதவியாயிருக்கும்படி பட்டை அபிவிருத்தி செய்ய வும் கிழக்கு இந்திய கம்பெனியார் முயற்சி செய்து வந்தார்கள். ஜப்பான், சீனு, யுனைடெட் ஸ்டேட்ஸ் முதலிய தேசங்கள் தங்கள் பட்டுத் தொழிலை அபிவிருத்தி செய்தன. அவைகளின் போட்டியால் நம்முடைய பட்டுக் கைத்தொழில் மிகவும் குறைந்துவிட்டது.

பட்டுப் பூச்சியை வளர்ப்பதற்கு வேண்டிய சௌகரி யங்கள் யாவும் நம் நாட்டில் இருக்கின்றன. எனினும், பட்டு அதிகமாக உண்டாக்கப் படுவதில்லை. தற்காலத்திலும் நம் நாட்டில் பட்டு நூலாக சரியாக சுற்றப்படுவதில்லை யெனச் சொல்லப்படுகிறது. இக் காரணத்தினுல்தான் நம் பட்டு ஏற்றுமதி குறைந்ததைத் தவிர, பட்டு நூலாகச் செய்யப்பட்டு ஏற்றுமதி செய்வதற்குப் பதிலாக, கூடுகளாக கவே (Cocoons) அனுப்பப் படுகிறது. இக் காரணத்திற் காகவே நம் நாட்டுத் தறிக்காரர்களும் அன்னிய நாட்டு பட்டு நூல்களையே வாங்குகிருர்கள்.

வங்காளத்திலும், அஸ்ஸாமிலும், காஷ்மீரிலும், மைசூ ரிலும் பட்டு உண்டாக்கப்படுகிறது. வங்காளத்தில் இக் கைத்தொழிலை விருத்தி செய்வதற்கு பலவிதமான முயற்சி செய்யப்பட்டு வருகிறது. நம் மக்களுக்கு புதிய முறைகள் சொல்லித் தரப்பட்டால், பட்டுக் கைத்தொழிலை விருத்தி செய்வதற்கு, அதிக இடமிருக்கின்றது.

மேற் சொன்னவைகளைத் தவிர மற்ற குடிசைக் கைத் தொழில்கள் பல இருக்கின்றன. தச்சுத் தொழில், சோப்பு செய்தல், குல்லாய்கள், பித்தளைப் பாத்திரங்கள், வெங் கலப் பாத்திரங்கள், பொம்மை முதலியன செய்தல், தங்க வெள்ளி ஜரிகைகள் செய்தல், சுருட்டு பீடிகள் செய்தல்,

பாய்கள், கம்பளிகள் செய்தல் முதலிய பல்வேறு குடிசைத் தொழில்கள் பல மாகாணங்களிலும் செய்யப்பட்டு வருகின்றன. இக் கைத்தொழில்களால் லக்ஷக்கணக்கான நம் மக்கள் ஜீவனம் செய்து வருவதுடன், லக்ஷக் கணக்கான குடியானவர்களுக்கும் இவைகளே விவசாயத்துக்கு உப தொழில்களாக இருக்கின்றன. ஆகையால் இவைகளை விருத்தி செய்யவேண்டியது மிகவும் அவசியம்.

கீழ்க்கண்ட முறைகளை அனுஷ்டித்து குடிசைக் கைத் தொழில்கள் விருத்தி செய்யப்படலாம்.

1. குடிசைத் தொழில்களில் ஈடுபட்டிருப்பவர்கள் பரம ஏழைகளாகவும், எப்பொழுதும் கடனில் மூழ்கியவர்களாகவும் இருப்பதால், அவர்கள் தங்கள் கைத்தொழிலைச் சரியாக நடத்த முடியாமலிருப்பதுடன், தங்கள் தொழிலினுல் வரும் லாபத்தையும் சரிவர அடைய முடியாதவர்களாயிருக்கின்றனர். இவர்களுக்கு கோ ஆபரேடிவ் சங்கங்கள் மூலம் அவர்கள் அவசியத்துக்கும், அவர்கள் தொழிலுக்கும் வேண்டிய பொருள் கொடுக்கவும், அவர்கள் கைத்தொழிற் சாமான்களைத் தகுந்த மார்க்கெட்டுகளுக்கு அனுப்பி விற்கவும், ஏற்பாடுகள் செய்யப்படவேண்டும்.

2. அவர்களில் பெரும் பகுதியோர் கல்வியற்றவர்களாயிருப்பதால், அவர்கள் தொழிலின் விருத்திக்கேற்ற நவீன முறைகளை அனுஷ்டிக்க அசக்தர்களாய் இருக்கின்றனர். ஆதலால் அவர்களுக்கு கல்வி கற்றுக்கொடுப்பதுடன், அவர்கள் தொழில்களிலும் பயிற்சி கொடுப்பதற்காக தொழில் பள்ளிக்கூடங்கள் ஸ்தாபிக்கப்பட வேண்டும். அவர்கள் தொழில்களில் உபயோகப்படும் பழைய கருவிகள் செம்மையாக்கப்பட வேண்டும்.

3. கைத்தொழில் சரக்குகளை விற்பதற்குத் தகுந்த

ஏற்பாடுகள் செய்யப்பட வேண்டும். உலகின் எந்த பாகத்துக்கு நம் கைத்தொழில் சாக்குகளை அனுப்பினால் நல்ல லாபம் கிடைக்கும் என்று தெரிந்து, அந்த நாட்டுக்கு நம் சரக்குகள் அனுப்பப்படவேண்டும். அந்த நாட்டின் விருப்பங்களை அனுசரித்து நம் கைத்தொழில் சாமான்கள் செய்யப்படவேண்டும். இது விஷயங்களைத் தீர ஆராய்ந்து தெரிவிப்பதற்காக வியாபார சமாசார சங்கம் (Commercial Board of Information) ஒன்று ஏற்படுத்தப்பட வேண்டும். நம் கைத்தெழில் சாமான்களைப்பற்றி அன்னிய நாடுகளில் போதுமான அளவு விளம்பரம் செய்யவேண்டும்.

இம் முறைகளை கைக்கொண்டால் நம் குடிசைக் கைத்தொழில்களும் சொற்ப காலத்திலேயே விருத்தியடையும் என்பதற்கு ஐயமில்லை.



## எட்டாவது அதிகாரம்



### கைத்தொழில்களின் அபிவிருத்தி

குடிசைத் தொழில்களின் அபிவிருத்திக் கேற்ற முறைகளை முன் பக்கத்தில் ஆராய்ந்தோம். நம்முடைய பெரிய கைத்தொழில்களும் விருத்தி செய்யப்படவேண்டும். மற்ற கைத்தொழில் நாடுகளோடு ஒப்பிட்டுப் பார்க்குங்கால், கைத்தொழில் திறத்தில் நாம் மிகப் பின் அணியில்தான் இருக்கிறோமென்று தெளிவாக விளங்கும். நம் தேசத்தில் கைத்தொழில் அபிவிருத்திக்கு வேண்டிய சாதனங்கள் யாவும் இருக்கின்றன. எனினும், இச் சாதனங்களை அன்னிய

நாடுகளுக்கு அனுப்பி, அவர்கள் கைத்தொழில்களுக்கு உதவி செய்து, அச் சாமான்களை வருவித்து உபயோகப் படுத்துகிறோம். இதனால் இக் கைத்தொழில் லாபங்களை நம் தேசத்தை விட்டு வெளியே அனுப்புவது மல்லாமல், லக்ஷக்கணக்கான நம் மக்கள் தொழிலும் உணவுமின்றிக் கஷ்டப்படும்படி செய்கிறோம். உலகத்திலுள்ள நாகரிக தேசங்களின் மத்தியில் நாம் தலை நிமிர்ந்து நிற்க வேண்டுமானால், நாம் கைத்தொழில்களை விருத்தி செய்யவேண்டியது அத்தியாவசியம்.

பாதுகாப்புகள் :—சாதாரணமாக கைத்தொழில்களை விருத்தி செய்வதற்காக அவைகளுக்கு பாதுகாப்புகள் அளிக்கப்படுகின்றன. ஒரு இளஞ் செடியை கால் நடைகள் மேய்ந்து விடாமல் வேலியிட்டுக் காப்பாற்றுவதைப்போல், புதிதாக ஆரம்பிக்கப்பட்ட கைத்தொழில்கள் அன்னிய தேசத்தாரின போட்டியால் அழிக்கப்படாமலிருக்கும் பொருட்டு, பாதுகாப்புகள் அளிக்கப்படவேண்டும். இப் பாதுகாப்புகளின் உதவியால் கைத்தொழில்கள் பலமடைந்து, சில வருடங்களில் ஸ்திரமாக ஏற்படுத்தப்பட்டு, உலகப் போட்டியை எதிர்ப்பதற்குத் தயாராயிருக்கும். இப் பாதுகாப்புகளின் உதவியைக் கொண்டே தற்காலத்திற் பெரிய கைத்தொழில் நாடுகளாக விளங்கும் இங்கிலாந்து, யுனைடெட் ஸ்டேட்ஸ், ஜர்மனி, ஜப்பான் முதலிய நாடுகள் தங்கள் கைத்தொழில்களை விருத்தி செய்தன.

இப் பாதுகாப்பு சாதாரணமாய் இறக்குமதி வரிகள் மூலம் அளிக்கப்படுகின்றது. நம் கைத்தொழில்களுக்குப் போட்டியாக விருக்கும் இறக்குமதி சாமான்களின் பேரில் உயர்ந்த வரிபோடப்பட்டால், அதனால் அச் சாமான்களின் விலை அதிகமாக, அவைகள் ஒருவாராலும் வாங்கப்பட

மாட்டா; அப்பொழுது சுதேசி சாமான்கள் செலவாகி, அக் கைத்தொழில் விருத்தியடையும். உதாரணமாக 100 கெஜம் துணி நம் நாட்டில் செய்வதற்கு ரூ. 100 ஆகிறதென வைத்துக்கொள்வோம். அன்னிய நாடுகள் இதே மாதிரி 100 கெஜம் துணியை ரூ. 90-க்கு நமது நாட்டில் விற்பார்களானல், துணி வாங்குபவர்கள் குறைந்த விலைக்குக் கிடைக்கக் கூடிய அன்னிய நாட்டு துணிகளைத்தான் வாங்குவார்கள். நம் சுதேசித் துணிகளை ஒருவரும் வாங்கமாட்டார்கள். ஆனல் அன்னிய நாட்டுத் துணியின்பேரில் 100-க்கு 15 பங்கு வரிபோட்டால், முன் ரூ. 90-க்கு விற்றுக்கொண் டிருந்த துணி இப்பொழுது ரூ. 103-8-0 க்குத்தான் விற்கப்படும். ஆகையால் குறைந்த விலைக்கு அதாவது ரூ. 100-க்குக் கிடைக்கும் நம் துணிகளை மக்கள் வாங்குவார்கள்; நம் கைத்தொழில்களும் இப் பாதுகாப்பால் விருத்தி யடையும்.

இப் பாதுகாப்புகள் கொடுப்பதில், ஒரு பிரதிகூலமும் இருப்பதாகச் சொல்லப்படுகிறது. அன்னிய நாட்டுச் சரக்குகளின் பேரில் வரி போடுவதால், அவைகளின் விலை உயர்த்தப்பட்டு, அச் சாமான்கள் வாங்குவோர் அதிகப் பணம் செலவு செய்ய நேரிடுகிறது. மேலே கொடுக்கப்பட்ட உதாரணத்தின் படியே, இறக்குமதி வரிப் பாதுகாப்புகள் கொடுப்பதற்குமுன் ரூ. 90 க்குக் கிடைத்துக் கொண்டிருந்த சரக்குகளுக்குப் பதிலாக ரூ. 100 கொடுத்து சுதேசிச் சரக்குகள் வாங்கவேண்டி யிருக்கிறது. இதனல் அவர்கள் ரூ. 10 அதிகம் இப் பாதுகாப்பின் காரணமாய்ச் செலவு செய்ய வேண்டி யிருக்கிறது. எனினும் இது உண்மையில் ஒரு பிரதிகூலமாகக் கருதப்பட லாகாது. ஏனெனில் இதன் மூலம் நம் கைத்தொழில்கள் விருத்தி

அடைந்து, நம் நாடும் முன்னேற்ற மடைவதுடன், நம் செல்வமும் அதிகப்படுகிறது. இவ் வதிகப் பணம் நம் நாட்டிற்குள்ளேயே இருப்பதுடன், நம் சகோதரர்கள் பலருக்கு அவர்கள் உய்ய ஊதியம் அளிக்கின்றது. கைத்தொழிலின் லாபம் நம் நாட்டைவிட்டு வெளியே போகாமல் தடுக்கப்படுகின்றது.

எத்தகைய கைத் தொழில்களுக்கு பாதுகாப்புகள் அளிக்கப்பட வேண்டும்:—இறக்குமதி வரிகள் போடுவதின் மூலம், பாதுகாப்புகள் அளிக்கப்பட்டு, அவைமூலம் கைத்தொழில்கள் விருத்தி செய்யப்படுகின்றன வென்றும், அன்னிய நாடுகள் பலவும் இம்முறைகளைக் கைக்கொண்டே தங்கள் கைத்தொழில்களை விருத்தி செய்கின்றன என்றும் முன் பக்கங்களில் சொல்லப்பட்டது. ஆனால், பாதுகாப்புகள் கொடுப்பதால் மாத்திரம் கைத்தொழில்களை விருத்தி செய்வது அசாத்தியம். கைத்தொழில்களை ஸ்தாபிப்பதற்கு வேண்டிய சாதனங்கள் அனைத்தும் இருந்தால் தான், இப்பாதுகாப்புகளின் பிரயோஜனத்தைப் பெற்றவர்களாவோம். அச் சாதனங்கள் இல்லாவிடில், எத்தகைய பாதுகாப்புகளும் கைத்தொழில்களை விருத்தி செய்ய முடியாது; பாதுகாப்புகளும் வீணாகும். ஆதலால், நாம் ஒரு கைத்தொழிலுக்கு பாதுகாப்புகள் கொடுப்பதற்கு முன், இப் பாதுகாப்புகளின் பயனால் அக் கைத்தொழில் முன்னேற்ற மடையமுடியுமா, அக் கைத்தொழிலின் முன்னேற்றத்திற்கு அவசியமான பொருட்கள் யாவும் நம் நாட்டில் இருக்கின்றனவா, என்று தீர ஆலோசித்து பின்பே பாதுகாப்புகள் அளிக்க வேண்டும்.

பாதுகாப்புகள் அளிக்கப் படுவதற்குமுன், பாதுகாப்பை நாடிய கைத்தொழில்கள் எத்தகையனவா

யிருக்கவேண்டும் ; அவை எம் மாதிரி நிபந்தனைகளுக்கு உட்பட்டிருக்கவேண்டும் என கீழே சொல்லப்பட்டிருக்கிறது.

1. அக் கைத்தொழிலின் அபிவிருத்திக்கு அவசியமான இயற்கை சௌகரியங்களும், சாமான்களும், அக் கைத்தொழிலை நடத்துவதற்கு வேண்டிய தொழிலாளர்களும், அக் கைத்தொழிலால் செய்யப்பட்ட சாமான்களை செலவு செய்வதற்கு வேண்டிய மார்க்கெட்டும், நம் நாட்டிலேயே இருக்கவேண்டும்.

2. பாதுகாப்புகள் அல்லாமல் அவை வளரக்கூடாதனவா யிருக்கவேண்டும். அதாவது பாதுகாப்பு இல்லாமலே வளரக்கூடிய கைத்தொழில்களுக்கு பாதுகாப்புகள் அவசியமில்லை. எக் கைத்தொழில்களுக்கு நம் நாட்டில் சௌகரியங்கள் யாவும் இருந்தும், பாதுகாப்புகள் இல்லாமல் முன்னேற்றமடைய முடியாதோ, அக் கைத்தொழில்களுக்குத்தான் பாதுகாப்புகள் அளிக்கப்பட வேண்டும்.

3. அக் கைத்தொழில் சில வருடங்களில் பாதுகாப்புகளின்றி மற்ற தேசங்களின் போட்டியை எதிர்க்கக்கூடியதாயிருக்கவேண்டும். பாதுகாப்புகள் சாஸ்வதமாய்ப் போய்விடாமல், அவைகளின் பயனாய், சில வருடங்களிலே அக் கைத்தொழில் விருத்தியடைய வேண்டும்.

4. சில சமயங்களில் அன்னிய நாட்டார் நம் கைத்தொழில்களை அழித்து தங்கள் கைத்தொழிலைப் பரப்புவதற்காக அவர்கள் ஒரு சூழ்ச்சி செய்வதுண்டு. அதாவது தங்கள் சாக்குகளை, நாம் அவர்களுடன் போட்டிபோட முடியாதபடி அவ்வளவு குறைந்த விலைக்கு விற்பது. நம் கைத்தொழில்கள் இவ்வளவு குறைந்த விலைக்கு விற்க முடியாமலோ, அல்லது அப்படி விற்க யத்தனிப்பதில் நஷ்டமடைந்தோ அழிக்கப்படும். நம் கைத்தொழில்கள்

அழிக்கப்பட்டபின், ஒரு தேசமே அக் கைத்தொழிலை விருத்தி செய்திருக்கிறபடியால் (Monopoly) தங்கள் விருப்பம்போல் விலையை ஏற்றி, லாபம் பெற நினைக்கிறார்கள். இதற்கு ஆங்கிலத்தில் டம்பிங் (Dumping) என்று பெயர். இங்ஙனம் நம் கைத்தொழில்களை அழிப்பதற்காக யத்தனம் செய்யப்படும் சமயங்களிலும், அக் கைத்தொழில்களுக்கு பாதுகாப்புகள் அளிக்கப்பட வேண்டும்.

பாதுகாப்புகள் சாதாரணமாக நம் கைத்தொழில்களுக்குப் போட்டியாயிருக்கும் அன்னிய நாட்டுக் சரக்குகளின் பேரில் இறக்குமதி வரிகள் போடப்படுவதன் மூலம், அளிக்கப்படுகின்றன வென முன் சொன்னோம். சில சமயங்களில் ஏற்றுமதி வரிகளும் பாதுகாப்புக்காகப் போடப்பட்டிருக்கிறது. நமது கைத்தொழில் விருத்திக்கு அவசியமான மூலப்பொருள்கள் ஏற்றுமதி செய்யப்பட்டால் ஏற்றுமதி வரிகள் மூலம் அவ் வேற்றுமதியை குறைத்தும் அக் கைத்தொழிலுக்கு வேண்டிய உதவி யளிக்கலாம். ஆனால், ஏற்றுமதி வரிகள் போடப் படுவதற்குமுன் தீர ஆலோசிக்க வேண்டும். ஏனெனில், இவ் வரிகளால் நம் அன்னியநாட்டு மார்க்கெட்களை இழக்க நேரிடலாம்.

கைத்தொழில்களுக்கு பண உதவி அல்லது பவுண்டி:— இறக்குமதி வரிகள் மூலம் பாதுகாப்புகள் அளிப்பதைத்தவிர வேறு விதங்களிலும் கைத்தொழில் அபிவிருத்திக்கு உதவி செய்யலாம். சீக்கிரத்தில் விருத்தியடைந்து, நம்முடைய தேவைக்கு சப்ளை செய்யக்கூடியனவாயும், அன்னியநாட்டுப் போட்டியை சிலவருடங்களில் எதிர்க்கக்கூடிய அளவு விருத்தியாகத் தக்கனவாயும் இருக்கிற கைத் தொழில்களுக்குத்தான் இறக்குமதி வரிகள் மூலம் பாதுகாப்புகள் அளித்து உதவ வேண்டுமென முன்

சொல்லப்பட்டது. ஆனால், சில கைத்தொழில்கள் சிறிதாகவும், பல வருஷங்களிலும் தம் முழுத் தேவையையும் பூர்த்தி செய்ய இயலாதனவாயும் இருக்கலாம். எனினும், அவைகளின் முக்கியத்தை அனுசரித்து அவைகளை விருத்திசெய்ய வேண்டியது அவசியமா யிருப்பின், இவைகளுக்கு எப்படி உதவுவது? இவைகளுக்குப் போட்டியா யிருக்கும் அன்னிய நாட்டு சாமான்களின்பேரில் வரி போடுவதில் யாதொரு பயனுமில்லை. ஏனெனில் நம் தேவை முழுதும் நம் கைத்தொழில்கள் சப்ளை செய்ய இயலாததால், நாம் அவைகளை அன்னிய நாடுகளிலிருந்துதான் வாங்கவேண்டி யிருக்கும். அவைகளின்பேரில் இறக்குமதி வரிகள் விதித்தால், அவ்வரிகளையும் சேர்த்து, நாம்தான் அச் சாமான்களுக்கு அதிக விலை கொடுக்கவேண்டி யிருக்கிறது. ஆகையால் இப்படிப்பட்ட சிறிய கைத்தொழில்களுக்கு அவைகள் அன்னியநாட்டுப் போட்டியால் அழிக்கப்படாதபடி பண உதவி அல்லது பவுண்டிகள் மூலம் உதவி யளிக்கவேண்டும். நமது எஃகு இரும்புக் கைத்தொழிலையே இதற்கு உதாரணமாகச் சொல்லலாம்.

கைத்தொழில் விருத்திக்கு மற்ற அவசியங்கள் :— பாதுகாப்புகளும், பண உதவிகளும் கைத்தொழில்களின் விருத்திக்கு மிகவும் உதவியாக இருக்கின்றன வெனினும், அவைகளால் மாத்திரம், மற்ற சௌகரியங்கள் இன்றி கைத்தொழில்களை முன்னேற்ற மடையச் செய்யமுடியாது. மற்ற அவசியங்களும் இருந்தால்தான், கைத்தொழில்கள் இப் பாதுகாப்புகளின் பயனையும் பெற்று ஓங்கி வளரமுடியும். மற்ற அவசியங்கள் என்ன என்று கீழே சொல்லப்பட்டிருக்கிறது.

1. கைத்தொழில்களுக்கு ரொக்க வசதிகள் :— குடிசைக் கைத்தொழில்களுக்கு அவசியமான ரொக்க வசதிகளைப்பற்றி முன் குறிப்பிட்டோம். இவ் வசதிகள் பெரிய கைத்தொழில்களுக்கு அதிக அவசியமாய் இருக்கின்றன. தற்காலத்தில் கைத்தொழில்கள் பெரிய அளவில் செய்யப் படுகின்றன. பெரிய மில்களும் தொழிற்சாலைகளும் ஏற்படுத்தப்பட்டு, நூற்றுக்கணக்கான தொழிலாளர்களுக்கு வேலை கொடுக்கப்பெற்று, ஏராளமாக சரக்குகள் உண்டாக்கப் படுகின்றன. இதற்குத் தகுந்தாற்போல் அவர்களுடைய ரொக்கத் தேவையும் அதிகமா யிருக்கின்றது. ரொக்கம் அல்லது பணமின்றிக் கைத்தொழில்களை நடத்துவது அசாத்தியம். ஆனால் நம் நாட்டில் கைத்தொழில்களுக்கு வேண்டிய ரொக்க வசதிகள் இன்னும் போதுமான அளவு கிடைப்பதில்லை யென்பது பெருங் குறையா யிருக்கின்றது. நம் நாட்டிலிருக்கும் பாங்குகள் கைத்தொழில்களுக்கு போதுமான அளவு பண உதவி யளிக்க முடியாதவைகளா யிருக்கின்றன. கைத்தொழில்களின் அவசியங்களுக்காகவே இன்டஸ்ட்ரியல் (கைத்தொழில்) பாங்குகள் புதிதாக தேச முழுதும் ஸ்தாபிக்கவேண்டும்.

2. போக்குவரத்து சாதனங்கள் :—கைத்தொழில்களின் அபிவிருத்திக்குப் போக்குவரத்து சாதனங்களை அதிகப்படுத்துவது மிகவும் அவசியம். தற்காலத்திய கைத்தொழில்கள் பெரிய அளவில் செய்யப்பட்டு வருவதால், அவைகளுக்கு வேண்டிய பொருள்கள் நாட்டின் பல பாகங்களிலிருந்தும், சில சமயங்களில் அன்னிய நாடுகளிலிருந்தும் சேகரிக்கவேண்டி யிருக்கிறது. கைத்தொழில்களின் உற்பத்திகளும் இங்ஙனமே நாட்டின் பல பாகங்களுக்கும் அன்னிய நாடுகளுக்கும் அனுப்பப்பட வேண்டும். நல்ல

போக்குவரத்து சாதனங்களின்றி இக்காரியங்களைச் செய்ய முடியாது. நல்ல போக்குவரத்து சாதனங்கள் இருக்கும் சமயத்திலும், சரக்குகளை ஒரு இடத்திலிருந்து மற்றொரு இடத்திற்கு அனுப்புவதற்கு விதிக்கப்படும் சத்தங்களால் கைத்தொழில்களை அழிக்கலாம்; அல்லது விருத்தி செய்யலாம்.

உதாரணமாக கோயமுத்தூரில் நூல்நூற்கும் மில்கள் பல இருக்கின்றன. இம் மில் உற்பத்திகளில் ஒரு பாகம் கல்கத்தாவில் விற்கப்படுகிறது. இந்த நூலை கல்கத்தாவுக்கு அனுப்புவதற்கு ரயில்வே கம்பெனியார் அதிக விகிதச் சத்தம் விதித்தால், இச் சரக்குகளை அங்கே விற்கும் விலை, இதன் காரணமாக அதிகமாகும். விலை அதிகமானால் இதைவிட குறைந்த விலைக்குக் கிடைக்கக்கூடிய இங்கிலாந்து அல்லது ஜப்பான் சரக்குகளைத்தான் கல்கத்தா வாசிகள் வாங்குவார்கள். இதனால் கோயமுத்தூர் மில்கள் தங்கள் மார்க்கெட்டை இழந்து, க்ஷீணிக்கும். ஆனால் கல்கத்தாவுக்கு அனுப்பும் சத்தத்தைக் குறைப்பார்களானால், கோயமுத்தூர் மில் சரக்குகளை கல்கத்தாவில் குறைந்த விலைக்கு விற்க இயலும். இதனால் கோயமுத்தூர் மில்கள் லாபம் பெற்று, விருத்தியடையும்.

நம் ரயில்பாதைகள் நம்முடைய கைத்தொழில் விருத்திக் கேற்றவாறு நடத்தப்படுவதில்லை யென்றும், அவை அன்னிய நாட்டு வியாபாரிகளுடைய சௌகரியத்தை ஒட்டியும், ஆங்கில கைத்தொழில்களின் க்ஷேமத்தைக் கருதியும் தான் நடத்தப்பட்டு வருகின்றனவென்றும் சொல்லப்படுகிறது. இதில் உண்மை யிருக்கின்ற தென்பதற்கு யாதொரு சந்தேகமும் இல்லை. போக்குவரத்து சாதனங்களைப்பற்றிய விவரங்களை அடுத்த அத்தியாயத்தில் காண்போம்.

3. கைத்தொழிற் கல்வி:—கைத்தொழில்களைப்பற்றிய ஞானம் இன்றி கைத்தொழில்களை விருத்தி செய்வது அசாத்தியம். ஆதலால் கைத்தொழிற் கல்வி நம் மக்களுக்குக் கற்றுக்கொடுக்கப் படவேண்டும். நம் நாட்டில் சாதாரணமாக எழுதப் படிக்கக் கற்றவர்களே மிகக் குறைவென்றால், அவர்களில் கைத்தொழிற் கல்வி பெற்றவர்கள் எவ்வளவு பேர்கள் இருக்கலாமென யூகித்துக் கொள்ளலாம். சாதாரண கல்வியை அதிகமாகப் பரப்புவதைத் தவிர, கைத்தொழிற் பாடசாலைகளும் (Industrial Institutes) கைத்தொழில் யந்திரங்களைப்பற்றி அறிவிக்கக் கூடிய பாடசாலைகளும் (Schools of Mechanical Engineering) ஏற்படுத்தி, நம் மக்களுக்குச் சொல்லித் தரப்படவேண்டும். தற்காலத்து கைத்தொழில்களுக்கு ஏற்ற கைத்தொழில் நிபுணர்கள் நம் நாட்டில் கிடைக்காம லிருப்பதே நமக்கு ஒரு பெரிய குறையாயிருக்கின்றது. ஆகையால் இவ் வேலைகளுக்காக நாம் அன்னியநாட்டுத் தொழிலாளரை அதிக சம்பளம் கொடுத்து அமர்த்த வேண்டியிருக்கின்றது. உயர்ந்த கைத்தொழிற் பாடசாலைகள் ஏற்படுத்தப்பட்டால், இக்குறை நீங்குவதற்கு அது ஒரு உபாயமாகும்.

இந்தியக் கைத்தொழில்களின் அபிவிருத்திக் கேற்ற முறைகளை விசாரணை செய்வதற்காக ஏற்படுத்தப்பட்ட இந்தியக் கைத்தொழில் விசாரணைக் கமிஷனர்களும் (The Indian Industrial Commission 1916-18) இப்படிப்பட்ட கைத்தொழிற் கல்விச் சாலைகள் எல்லா மாகாணங்களிலும் ஏற்படுத்தப் படுவதுடன், உயர்தரத் தொழிற்கல்வி கொடுக்கக் கூடிய கலாசாலைகள் இரண்டும் நம் நாட்டில் ஏற்படுத்தப்பட வேண்டுமெனச் சிபார்சு செய்திருந்தும், இத் துறையில் கிரியாம்சையில் அதிகமாகச் செய்

யப்படவில்லை. பம்பாயிலுள்ள விக்டோரியா ஜூப்லி கைத்தொழில் பாடசாலை (The Victoria Jubilee Technical Institute) யும், பெங்களூரிலுள்ள இந்திய சாஸ்திர பாடசாலை (The Indian Institute of Science) யும் தான் கைத்தொழில் பாடசாலைகளில் முக்கியமாய் விளங்குகின்றன. இவை யிரண்டும் கவர்ன்மெண்டாரால் ஆரம்பிக்கப் பட்டவையல்ல; தனி மனிதர்களின் முயற்சியால் ஏற்படுத்தப் பட்டவை. பெங்களூரில் ஸ்தாபிக்கப்பட்டிருக்கிற பாடசாலை திரு. ஜெ. என். டாடா (J. N. Tata) அவர்களுடைய குடும்பத்தின் வள்ளல் தன்மையால் உண்டாக்கப் பட்டதாகும்.

நம் நாட்டில் கைத்தொழிற் பாடசாலைகளையும், யந்திரப் பாடசாலைகளையும் ஏற்படுத்துவதைத் தவிர, நம் மக்களில் கைத்தொழிற் துறையிலும், யந்திரத்துறையிலும் விசேஷ தீக்ஷண்யம் இருப்பவர்களை, கைத்தொழில்களில் மேன்மை பெற்று விளங்கும் அன்னிய நாடுகளுக்கு அனுப்பி உயர்தரக்கல்வி அளிக்கப் படவேண்டும். சாதாரணமாக இதர நாட்டார்கள் தங்கள் கைத்தொழில் இரகசியங்களை நம் மக்களுக்குச் சொல்லித் தரமாட்டார்கள். திரு. ஜெ. என். டாடா அவர்கள் இத்துறையில் கஷ்டப்பட்டது யாவருக்கும் தெரிந்ததே. ஆனால் நாம் சில அன்னிய நாட்டுக் கம்பெனிகளிலிருந்து ஏராளமான சாக்குகள் வாங்குகிறோம். அவர்களிடமிருந்து நாம் சாக்குகள் வாங்குவதற்காக, அவர்கள் நம் மக்களில் சிலருக்கு கைத்தொழில் ஞானத்தைக் கற்றுக்கொடுக்க வேண்டுமென நிபந்தனைகள் செய்யப் படவேண்டும். நம் வியாபாரத்தால் அவர்களுக்கு ஏராளமான லாபம் கிடைக்கின்றது. இந்த லாபத்தை இழப்பதற்குப் பதிலாக, நம் மக்களுக்கு இப்பயிற்சி கொடுப்பதற்கு அவர்கள் ஒப்புக்கொள்வார்கள். இந் நிபந்தனைக்கு ஒப்புக்

கொள்பவர்களிடத்தில்தான் நாம் வியாபாரம் செய்ய வேண்டும்.

4. கவர்ன்மெண்டார் சுதேச சாமான்களை வாங்கல்:— ஒவ்வொரு வருஷமும் கவர்ன்மெண்டார் சுமார் 10 கோடி ரூபாய் பெறுமான சாமான்கள் அன்னிய நாடுகளிலிருந்து, முக்கியமாய் இங்கிலாந்திலிருந்து வாங்குகிறார்கள். 1914-15ம் வருஷத்தில் சுமார் 7 கோடி ரூபாய்க்கும், 1921ல் சுமார் $16\frac{1}{4}$ கோடி ரூபாய்க்கும், 1929-ம் வருஷத்தில் சுமார் 10 கோடி ரூபாய்க்கும் கவர்ன்மெண்டார் அன்னிய நாட்டுச் சாமான்களை வாங்கி யிருக்கின்றனர். அன்னிய நாட்டுச் சாமான்களுக்குப் பதிலாக நம் நாட்டுச் சாமான்களையே அவர்கள் வாங்குவார்களானால், அது நம் கைத்தொழில்களுக்கு பெருத்த ஆதரவு அளித்ததாகும். இது சம்பந்தமாக இந்தியக் கைத்தொழில் கமிஷனர்களும் சிபார்சு செய்திருந்தாலும் கூட, நெடுநாட்களாக அச் சிபார்சுகள் கவர்ன்மெண்டால் கவனிக்கப்படவில்லை. சென்ற சில வருடங்களாக கவர்ன்மெண்டார் தங்களுக்கு வேண்டிய சாமான்களின் ஒரு பகுதியை இந்தியாவில் வாங்குகின்றனர். 1926-27ல் 3·98 கோடி ரூபாய்களுக்கும், 1927-28ல் 3·73 கோடி ரூபாய்க்கும் இந்தியாவில் சாமான்கள் வாங்கப்பட்டன. கூடியவரையில் இந்தியச் சாமான்களையே வாங்க வேண்டும் என்ற கொள்கையைப் பின்பற்றுவார்களானால், இதனால் நம் கைத்தொழில்கள் அதிக விருத்தியடைய இடமுண்டு.

5. தற்காலமுறைகள் அனுஷ்டிக்கப் படவேண்டும்:— குறைந்த செலவில் அல்லது உழைப்பில் அதிகப்பயன் (Maximum Effect in Minimum Effort) அடையும் பொருட்டு ஒவ்வொரு வருஷமும் கைத்தொழில்களின்

முறைகளிலும், யந்திரங்களிலும், கைத்தொழில்களின் நிர்வாகத்திலும் பலவிதமான மாறுபாடுகள் செய்யப்பட்டு வருகின்றன. இம் முன்னேற்ற முறைகளை நாம் அவ்வப்போது கற்று, நம் நாட்டிலும் பின்பற்ற வேண்டும். ஒவ்வொரு கைத்தொழிலை ஒட்டியிருக்கிற உதவி கைத்தொழில்களும் (Bye Industries) நம் நாட்டில் பின்பற்றப்பட்டு, கூடியவரையில் எப்பொருளையும் வீணாக்காமல் உபயோகப் படுத்தவேண்டும். கைத்தொழில்களின் நிர்வாகத்திலும் சிக்கன முறைகள் கையாளப்பட வேண்டும்.

6. விற்பதற்கு ஏற்பாடுகள்:—நம் நாட்டில் பலவிதமான கைத்தொழிற் சாமான்கள் உண்டாக்கப்பட்ட போதிலும் அவை வெளி யுலகுக்கு சரியாக விளம்பர செய்யப்படுவதில்லை. ஆகையால், நம் சாமான்கள் தேவையுள்ள நாடுகளை யறிந்து, அந் நாடுகளில் நம் நாட்டுச் சாமான்களின் விசேஷ குணங்களைத் தெரிவித்து, அங்கு அனுப்பி அவைகளை விற்பதற்கு வேண்டிய ஏற்பாடுகளைச் செய்வதற்கு ஒரு சங்கம் உண்டாக்கப் படவேண்டும். தவிர, நம் நாட்டிலிருந்து நல்ல சரக்குகளுடன் கெட்ட சரக்குகளைக் கலந்து ஏற்றுமதி செய்யப்படுவதால், நம் சரக்குகளுக்குள்ள மதிப்பு வெளி தேசங்களில் குன்றியிருக்கின்றது. ஆனால், ஒரு சங்கம் இச் சரக்குகளைத் தரம் வாரியாகப் பிரித்து அனுப்புவார்களானால் நம் சரக்குகளின் பேரிலுள்ள மதிப்பும், நம்பிக்கையும் அதிகமாவதுடன், அவைகளுக்கு நல்ல விலையும் கிடைக்கும்.

மேலும், உலகிலுள்ள வியாபார சமாசாரங்களையும், உலகின் பல பாகங்களிலு மிருக்கும் தேவைகளையும், அத் தேவைகளுக்குத் தக்கவாறு நம் கைத்தொழில்களை எங்ஙனம் மாற்றி யமைக்க வேண்டுமென்ற விவரங்களையும்,

இன்னும் நம் கைத்தொழிற் சாமான்களை அன்னிய நாடுகளுக்கு அனுப்பி லாபம் பெறக்கூடிய மற்ற முறைகளையும் நமக்கு அவ்வப்போது தெரிவிப்பதற்கும் ஒரு சங்கம் ஏற்படுத்தப் படவேண்டும்.

7. சுதேயசிம்:—சுதேசியமே நம் கைத்தொழில்களை வளர்த்த தாயென முன் சொல்லியிருக்கிறோம். நம் யாவர் மனதிலும் நம் நாட்டுத் கைத்தொழில்களை வளர்க்கத் தீரா இச்சை யிருக்கவேண்டும். நம் கைத்தொழில்களை அபிவிருத்தி செய்வது நம் ஒவ்வொருவருடைய கடமையென்று உணரவேண்டும். நம் நாட்டுச் சாமான்கள் அன்னிய நாட்டுச் சாமான்களைப்போல் அவ்வளவு உயர்ந்தவையாய் இல்லாவிடினும், அவைகளை உபயோகப் படுத்துவதில் சந்தோஷப் படவேண்டும். சுதேசிச் சாமான்களை வாங்குவதில் நம் நாட்டுக் கைத்தொழில்களை விருத்தி செய்வதல்லாமல், வறுமையிலும், பசியிலும் வருந்தும் லக்ஷக் கணக்கான நம் ஏழை சகோதரர்களுக்கு உணவும் அளிக்க உதவுகிறோம் என்பதை உணர்ந்து, எக்காலத்திலும் நம் நாட்டுச் சாமான்கள் கிடைக்கும்போது, அன்னிய நாட்டுச்சாமான்களை வாங்குவதில்லை எனப் பிரதிக்ஞை செய்துகொள்ள வேண்டும்.

டாக்டர் மார்ஷலின் புத்திமதி:—சாதாரண மக்களின் கடமை சுதேசியத்தைக் கைப்பற்றுவதா யிருந்தால் கற்றுணர்ந்தவர்களின் கடமை இன்னும் அதிகமாயிருக்க வேண்டுமல்லவா? இந்தியாவின் முன்னேற்றத்தைப்பற்றி இந்திய மாணக்கர்களுக்கு டாக்டர் மார்ஷல் (Dr. Marshall) சொன்ன புத்திமதி கவனிக்கத்தக்கது. அது கீழே சொல்லப் பட்டிருக்கிறது. 'இந்தியாவில் திரு. டாடாவைப் போன்றவர்கள் 20 அல்லது 40 பேர்கள் இருந்தால்,

கோர்ட்டுகளிலும் இராஜீயத்திலும், வெறும் பேச்சளவில் வேலை செய்வதை இகழ்ந்தவர்களாய், மனதில் உயர்ந்த நினைவுகள் நிறைய, உலகக் காரியங்களைக் கையால் செய்யக் கூடியவர்கள் சில ஆயிரம் பேர்கள் இந்தியாவில் இருப்பார்களானால், இந்தியர்கள் கொஞ்ச காலத்தில் உயர்ந்த மக்களாகி விடுவார்கள். அப்பொழுது எவரும், இந்தியா தன் இலக்ஷியத்தை யடைவதைத் தடுக்க முடியாது; எவ்வித மான பிரதிகூலமான வரிகளும் இந்தியாவின் முன்னேற்றத்தைக் தடுக்கமுடியாது. ஆனால், எவ்வளவுகாலம் உயர்தரக் கல்விபெற்ற இந்திய மக்கள், தங்கள் நாட்களை சுகத்தில் கழிக்க நினைக்கிறார்களோ, அல்லது வக்கீல் தொழிலால் சம்பாதிக்க யத்தனிக்கிறார்களோ, (இவை கடற்கரையின் மணற் குவியல்களைப்போல தேசத்துக்கு யாதொரு பயனையும் அளிக்காதவை), அவ்வளவு காலம் ஒன்றும் (வரிப்பாதுகாப்புகள் முதலிய) பயனைத்தாராது............

'நான் சென்ற 20 வருஷங்களாக காம்பிரிட்ஜ் கலாசாலைகளில் படிக்கும் இந்திய மாணவர்களைப் பின்வருமாறு தங்களுக்குள்ளே நினைக்குமாறு வற்புறுத்திக் கொண்டுவருகிறேன். "நம்மில் எவ்வளவு குறைந்த பேர்கள், மேல் நாடுகளுக்குப் போகும்போது தங்கள் சொந்த பயிற்சியையும் சொந்த லாபத்தையும் தவிர மற்ற எண்ணங்களை நினைக்கிறார்கள்? ஆனால் ஜப்பானிய மாணக்கன் ஒவ்வொருவனும், தன் தேசத்துக்குச் சேவை செய்யும் பொருட்டு, எங்ஙனம் ஆற்றல் பெறுவது என்றுதான் நினைக்கிறான். ஜப்பானிய மாணக்கர்களல்லவா உண்மையான கல்வியை நாடுகிறார்கள்? அவர்கள் தங்கள் நாட்டின் முன்னேற்றத்திற்காக மேல் நாடுகளின் சக்தியின் அடிப்படையைக் கவனிக்கிறார்கள். நாம் ஜப்பானியர்களைப்போல நடக்க

முடியாதா? நமது தேசத்தின் நன்மையை முதலில் கருதி, நமது சுய நலத்தை மிகப் பின் வைத்து நினைக்கப் பழகுவதே நாம் நம் தேசத்தின் முன்னேற்றத்திற்காக செய்ய வேண்டிய மாறுதல்.''†



# ஒன்பதாவது அதிகாரம்



## போக்குவரத்து சாதனங்கள்

போக்குவரத்து சாதனங்களின் முக்கியத்தைப்பற்றி முன் பக்கங்களில் சொல்லப்பட்டிருக்கிறது. பொருளாதார சரித்திரத்திலும், இராஜீய சரித்திரத்திலும், நாகரிகத்தைப் பரப்புவதிலும் போக்குவரத்து சாதனங்கள் மிகவும் முக்கியமாய் விளங்கியிருக்கின்றன. தற்காலத்தில் இவை முன் காலத்தை விட மிகவும் முக்கியமாயிருக்கின்றன. ஏனெனில் புகைக் கப்பல்கள், நீராவி யந்திரங்கள், மின்சார சக்திகள், கம்பியில்லாத் தந்திகள், ஆகாய விமானங்கள்—இவைகள் கண்டுபிடிக்கப்பட்டபின், தூரம் என்பது அழிக்கப்பட்டு விட்டது. போக்குவரத்து சாதனங்கள் மிகவும் விருத்தி செய்யப்பட்டதால், நமது முன்னோர்கள் சில நூற்றாண்டுகளுக்கு முன் சில மாதங்களில் கடந்த தூரத்தை, நாம் மணிக்கு சுமார் 100 மைல்கள் போகும் ஆகாய விமானங்களில் சில தினங்களிலும், புகைக் கப்பல்களில் சில வாரங்களிலும் செல்லுகிறோம். கைத்தொழில் விருத்தியும் நம் போக்குவரத்து சாதனங்களின் விருத்தியை யொட்டி

† Page 17, Jathas and Beri's Indian Economics Vol. II.

யிருக்கின்றது. நம் இராஜ்ய நாகரிக வளர்ச்சியும் இவைகளை யொட்டியிருக்கின்றது. ஆகையால் உலகில் முன்னணியில் நிற்க விரும்புகிற நாடுகள் அனைத்தும் நிலத்திலும், கடலிலும், காற்றிலும், வேண்டிய போக்குவாத்து சாதனங்களைப் பெற்றிருக்க வேண்டும்.

போக்குவாத்து சாதனங்களில் மூன்று வகைகள் உண்டு.

1. ரயில்பாதைகள். 2. ரஸ்தாக்கள். 3. நீர்ப்பாதைகள்.

ரயில் பாதைத் திட்டங்களும் நீர்ப்பாய்ச்சல் திட்டங்களும்:—கோதாவரி, கிருஷ்ணா, கொள்ளிடம் முதலிய நதிகளின் நீரைக் கொண்டு கவர்ன்மெண்டார் பல நீர்ப்பாய்ச்சல் திட்டங்களைச் செய்தனர். இவைகளால் தேசத்துக்கு நற்பயன்கள் பல உண்டாயின. இவை இந்திய மக்களின் நன்மையைக் கோரிச் செய்யப்பட்டவை. ஆனால் ரயில் பாதைத் திட்டங்களின் கதை வேறு.

நீர்ப் பாய்ச்சல் திட்டங்கள் ஆரம்பத்திலிருந்தே அவைகளில் செலவு செய்யப்பட்ட முதலுக்குப் போதுமான வருமானம் கொடுத்துவந்தன. ஆனால் ரயில்பாதைகள் அவைகளில் செலவு செய்யப்பட்ட முதலுக்குத் தக்க வருமானம் பல வருடங்களுக்குத் தரவில்லை. நீர்ப்பாய்ச்சல் திட்டங்களிலிருந்து கவர்ன்மெண்டாருக்குச் செலவுபோக வரும்படி வந்துகொண்டிருந்தது. ஆனால் ரயில் பாதைகளால் பல வருஷங்களில் கவர்ன்மெண்டாருக்கு பெருத்த நஷ்டங்கள் உண்டாகிக் கொண்டிருந்தன. நீர்ப்பாய்ச்சல்கள், மழையில்லாத காலங்களில் பயிர்களுக்கு நீர் கொடுத்துதவி, வெள்ளாமையை அதிகப்படுத்தி, தேசத்தில் அதிக செல்வத்தையுண்டாக்கியது. ரயில்பாதைகள் பஞ்ச காலங்களில் உதவியா

யிருந்தபோதிலும், தேசத்தின் செல்வத்தை யதிகப்படுத்த வில்லை. விவசாயத்தில் ஈடுபட்டிருக்கும் நம் நாட்டுக்கு நீர்ப் பாய்ச்சல் திட்டங்களால் அதிக லாபம் உண்டு. ஆகையால் நம் கவர்ன்மெண்டார், நம் மக்களுக்கு பெருவாரியான பய னைத் தரத்தக்க நீர்ப்பாய்ச்சல் திட்டங்களையே அதிகமாய் அனுசரித்திருப்பார்கள் என எதிர்பார்க்கப்படலாம். ஆனால் ரயில்பாதைகளைப் போடுவதிலேயே அதிக முயற்சி செய்யப் பட்டது. அதன் காரணத்தைக் கீழே காண்க.

ஆங்கில வியாபாரிகள் தங்கள் கைத்தொழில் சாக்கு களை இந்தியாவின் உள் நாட்டிலே கொண்டுபோய் விற்க விரும்பினார்கள். உள் நாட்டிற்குத் தங்கள் சாக்குகளைக் கொண்டுபோவதற்கு ரயில்பாதைகளே அவர்களுக்கேற்ற கருவியென நினைத்தனர். அவர்கள் லாபத்தைக் கருதி, இந் திய கவர்ன்மெண்டார் பெருத்த நஷ்டங்களை யடைந்தாலுங் கூட, ரயில் பாதைத் திட்டங்களை மேற்கொள்ள வேண்டிய தாயிற்று. இந்திய மக்களோ வாயில்லாப் பிராணிகளா யிருந் தனர். அவர்களுடைய நன்மைக்குரிய விஷயங்களை யெடுத் துக் சொல்லவும், வற்புறுத்தவும் எவரும் இலர். ஆகையால் நீர்ப்பாய்ச்சல் திட்டக்கள் கவனிக்கப்படவில்லை. ரயில் பாதைத் திட்டங்களில் அளவுக்கு மீறி செலவு செய்யப்பட் டது. 1870ம் வருஷம் முதல் 1880ம் வருஷம் வரை நீர்ப் பாய்ச்சல் திட்டங்களிலும் ரயில் பாதைத் திட்டங்களிலும் இந்தியா கவர்ன்மெண்டாரால் செலவு செய்யப்பட்ட தொகைகளின் விவரத்தை அடுத்த பக்கத்தில் காண்க:†

| † வருஷம் | ரயில்பாதைத் திட்டங்கள் | நீர்ப்பாய்ச்சல் திட்டங்கள் |
|---|---|---|
| | பவுன்கள் | பவுன்கள் |
| 1870 | 743,862 | 2,695,465 |
| 1871 | 449,372 | 718,438 |
| 1872 | 644,620 | 983,854 |
| 1873 | 1,413,649 | 770,920 |
| 1874 | 2,354,625 | 1,198,682 |
| 1875 | 3,014,180 | 1,235,391 |
| 1876 | 3,165,184 | 1,105,445 |
| 1877 | 2,865,861 | 943,423 |
| 1878 | 3,984,968 | 806,084 |
| 1879 | 3,327,888 | 794,654 |
| 1880 | 2,680,493 | 598,837 |
| ஆகமொத்தம் | 24,644,702 | 11,851,193 |

மேலே காட்டப்பட்ட தொகைகள் கவர்ன்மெண்டாரால் செலவு செய்யப்பட்டவை. இதைத்தவிர கவர்ன்மெண்டார் வட்டிக்குப் பொறுப்பு ஏற்றுக்கொண்டு, கம்பெனிகள் மூலம் செய்யப்பட்ட செலவுகளையும் சேர்த்து சுமார் 125,000,000 பவுன்கள் ரயில் பாதைகளில் செலவு செய்யப்பட்டன. அதாவது நீர்ப்பாய்ச்சல்களில் செலவு செய்ததைப்போல பதினொரு பங்குகள் இரயில்பாதைகளில் செலவு செய்யப்பட்டன.

1853-ம் வருஷத்தில் அப்பொழுது கவர்னர் ஜெனரலாகவிருந்த லார்ட் டெல்ஹவுசி பின்வருமாறு எழுதினர். 'இங்கிலாந்துக்கு மிக அவசியமாயிருக்கும் பருத்தி, இந்தியாவில் தற்சமயம் கொஞ்சம் விளைகின்றது. அவைகளை, அவைகள் விளையுமிடங்களி லிருந்து துறைமுகங்களுக்குக்

† Page 362 Dutt's Economic History of India Vol II.

கொண்டு போவதற்குச் சரியான போக்குவரத்து சாதனங்களை உண்டாக்கினால், இன்னும் உயர்த்த பருத்தி அதிகமாக உண்டாக்கலாம்................நமக்கு வேண்டிய பொருள்கள் பல நமக்கு இந்தியாவின் உள்நாட்டில் கிடைக்கின்றன. ஆனால், போக்குவரத்து சௌகரியங்கள் இல்லாமையால் அவைகளை லாபகரமாய் உபயோகப்படுத்த முடிவதில்லை. அங்ஙனமே, கணக்கிட முடியாதபடி அவ்வளவு பெரிய மார்க்கெட், நம்முடைய (ஆங்கில) சாமான்களைச் செலவு செய்ய ஏற்றது, நம்முன் திறந்து வைக்கப்பட்டிருக்கிறது' இவ்வித வார்த்தைகளில், ஆங்கில வியாபாரத்தை வளர்ப்பதற்காக, ரயில்பாதைகளின் அவசியத்தைப்பற்றி லார்ட் டெல்ஹவுசி வற்புறுத்தினார். அவ் வருஷத்திலிருந்து ரயில்பாதைகள் போட ஆரம்பிக்கப்பட்டன.

ரயில் பாதைகளின் சரித்திரம்:—லார்ட் டெல்ஹவுசியின் குறிப்புக்குப் பிறகுதான் ரயில் பாதைகள் மும்மரமாக இந்தியாவில் போட ஆரம்பிக்கப்பட்டன. ரயில்பாதைகள் போடும் வேலையைத் தாங்களே ஏற்றுக்கொள்வது கவர்ன்மெண்டாருக்குக் கடினமெனத் தோன்றியது. எனவே இதற்காக கம்பெனிகள் உண்டாக்கப்பட்டன. இவை முழுதும் ஆங்கிலக் கம்பெனிகளாயிருந்தன. இவைகளுடன் கவர்ன்மெண்டார் கீழ்க்கண்ட நிபந்தனைகள் கண்ட ஒப்பந்தங்கள் செய்துகொண்டனர்.

1. ரயில்பாதை போடுவதற்கு வேண்டிய நிலத்தை கவர்ன்மெண்டார் விலையின்றிக் கொடுக்கவேண்டியது.

2. கம்பெனிகள் ரயில்பாதைகள் போடுவதற்குச் செலவு செய்யும் தொகைகளின்பேரில், சில கம்பெனிகளுடன் 100-க்கு $4\frac{1}{2}$ வீதமும், சில கம்பெனிகளுடன்

100-க்கு 5 வீதமும் வட்டி, கவர்ன்மெண்டாரால் உத்தரவாதம் செய்யப்பட்டது.

3. முக்கியமான விஷயங்களின் நிர்வாகத்தில் கவர்ன்மெண்டாருக்கு அதிகாரம் இருக்கவேண்டும்.

4. 25 அல்லது 50 வருஷங்களுக்குப்பின், கம்பெனிகளின் உரிமைகளுக்குப் பணத்தைக் கொடுத்து கவர்ன்மெண்டார் விரும்பினுல் அவைகளை வாங்கிக்கொள்ளலாம்.

இம் முறைக்கு உத்தரவாதமுறை (Guarantee System) என்று பெயர். இம் முறையைக் கைக்கொண்டதில் இந்திய மக்களின் பணம் பெருவாரியாக வீணுக்கப்பட்டது. கம்பெனிகள் செலவு செய்த எல்லாத்தொகைகள் பேரிலும் கவர்ன்மெண்டார் வட்டி உத்தரவாதம் செய்திருந்தபடியால், கம்பெனிகள் கொஞ்சமும் சிக்கனமின்றி, அதிகப்படி செலவு செய்தனர். பணம் எவ்விதம் செலவு செய்யப்பட்டாலும், கவர்ன்மெண்டாரால் வட்டி உத்தரவாதம் செய்யப்பட்டிருந்ததால், பங்குக்காரர்களுக்கு யாதொரு கவலையுமில்லை. ஆதலால் ரயில்பாதைகளில் ஏராளமானதொகைகள் செலவு செய்யப்பட்டன. ஈஸ்ட் இந்தியன் ரயில்பாதை (E. I. R.) போட எவ்வளவு பணம் நியாயமாய் செலவு செய்யப்பட வேண்டுமோ அதைவிட இரண்டு மடங்கு அதைப் போடுவதில் செலவு செய்யப்பட்டு பணம் வீணுக்கப்பட்டதென ஆங்கில நிபுணர்களே கூறியிருக்கின்றனர். †

தவிர, உத்தரவாதம் செய்யப்பட்ட வட்டியும் மிகவும் அதிகம். போட்டு வைப்பதற்கு இடமில்லாமல், ரொக்கத்தை இங்கிலாந்தில் பலர் கையில் வைத்துக்கொண்டிருந்தனர்.

† Page 355. Dutt's Economic History of India Vol II.

மற்ற நாடுகளில் பல விஷயங்களில் அப் பணம் போடப் பட்டது. ஆகையால் இதைவிட மிகக் குறைந்தவட்டி உத்தர வாதம் செய்யப்பட் டிருந்தாலும் ஏராளமான பணம் முன் வந்திருக்கும். ஆங்கில வியாபாரத்தை அதிகப்படுத்த, ரயில் பாதைகளை சீக்கிரத்திலே போடவேண்டு மென்ற ஆத்திரத் தால், இந்திய பொக்கிஷத்தின் நன்மை கவனிக்கப்படவில்லை.

வட்டிகள் உத்தரவாதம் செய்யப்பட்டதால் இந்திய பொக்கிஷத்துக்கு ஏராளமான நஷ்டம் ஏற்பட்டது. பல வருடங்களாக ரயில்பாதைகளில் செலவுக்கேற்ற வருமானம் வரவில்லை. எனவே, கவர்ன்மெண்டார் தாங்கள் உத்தரவா தம் செய்தபடி, ரயில்பாதை கம்பெனிகளுக்கு வட்டிகொடுக்க வேண்டியதாயிற்று. 1849-வருஷம் முதல் 1858 வரை இம்மாதிரி வட்டி கொடுத்ததில் இந்தியர்களுக்கு உண்டான நஷ்டம் கீழே காண்பிக்கப்பட் டிருக்கிறது.

| † வருஷம் | ஈஸ்ட் இந்தியன் ரயில்பாதை | ஜி. ஐ. பி. ரயில்பாதை | சென்னை ரயில்பாதை |
|---|---|---|---|
| | பவுன்களில் | பவுன்களில் | பவுன்களில் |
| 1849 | 5,602 | | |
| 1850 | 17,471 | 3,063 | |
| 1851 | 37,185 | 6,319 | |
| 1852 | 45,234 | 16,310 | |
| 1853 | 52,071 | 22,825 | |
| 1854 | 88,884 | 25,002 | 9,703 |
| 1855 | 195,730 | 30,259 | 18,115 |
| 1856 | 297,390 | 60,370 | 42,510 |
| 1857 | 354,511 | 116,612 | 81,139 |
| 1858 | 433,968 | 175,289 | 109,267 |
| ஆக மொத்தம் | 1,528,046 | 456,049 | 260,734 |

† Page 176. Dutt's Economic History of India Vol II.

வட்டி உத்தரவாதம் செய்யப்பட்டதால் பணம் சிக்கனமின்றி வீணுகச் செலவழிக்கப்பட்டதைக் கவனித்த கவர்ன்மெண்டார், தாங்களே நேராகக் கடன்கள்வாங்கி ரயில் பாதைகள் போட யத்தனித்தனர். 1878ம் வருஷத்திலிருந்து பல வருஷங்களில் இம் மாதிரி செய்யப்பட்டது. ஆனல் அதற்குப்பின் ஏற்பட்ட ஆப்கன் யுத்தத்தின் காரணமாகவும் பஞ்சத்தின் காரணமாகவும் பணத்தட்டுதல் ஏற்படவே கவர்ன்மெண்டார் தாங்களே ரயில்பாதைகள் போடுவதை நிறுத்த வேண்டியதாயிற்று.

மறுபடியும் உத்தரவாதம் செய்யப்பட்ட கம்பெனிகள் வசமே ரயில் பாதைகள் விடப்பட்டனர். ஆனல் இக் கம்பெனிகளின் நிர்வாகத்தில் கவர்ன்மெண்டாருக்கு அதிகாரம் கொடுக்கப்பட்டதுடன், இப் புதிய கம்பெனிகளின் பங்குகளின் பேரில் 100 க்கு $3\frac{1}{2}$ வட்டிதான் உத்தரவாதம் செய்யப்பட்டது.

1900-ம் வருஷத்திலிருந்து ரயில்பாதைகள் அதிகம் போடப்பட்டன. இவைகளின் நிர்வாகத்திற்காக ஒரு தனி இலாகா ஏற்படுத்தப்பட்டது. இந்த நிர்வாகம் மூன்று அங்கத்தினர்கள் கொண்ட ஒரு ரயில்வே போர்டின் வசத்தில் ஒப்புவிக்கப்பட்டது. ரயில்பாதைகளும் லாபம் கொடுக்க ஆரம்பித்தன. 1913-14-ம் வருஷத்தில் இந்தியாவில் 34,656 மைல்கள் ரயில்பாதைகள் இருந்தன. தற்காலத்தில் இவைகளில் பெரும்பகுதி கவர்ன்மெண்டுக்குச் சேர்ந்தனவாகவே யிருக்கின்றன. ஆனல், அவைகளின் நிர்வாகம் இங்கிலாந்தில் ரிஜிஸ்டர் செய்யப்பட்ட ஆங்கிலக் கம்பெனிகள் வசம் விடப்பட்டிருக்கிறது. சில முக்கியமான விஷயங்களில், கவர்ன்மெண்டாருக்கு அதிகாரம் உண்டு. இவ் வதிகாரத்தை கவர்ன்மெண்டார் ரயில்வே போர்டு மூலம்

செலுத்திவருகிறார்கள். இந்தக் கம்பெனிகளுடன் கவர்ன்மெண்டார் செய்து கொண்டிருக்கும் ஒப்பந்தங்கள் இந்தியா மந்திரியின் யுக்தப்படி குறிப்பிட்ட தேதிகளில் ரத்து செய்யப்படலாம். இந்த ஒப்பந்தங்களில் வங்காள நாகபுரி ரயில்பாதை (Bengal Nagpur Railway) யுடன் செய்யப்பட்ட ஒப்பந்தம்தான் 1950-ம் வருஷத்தில் எல்லா ஒப்பந்தங்களிலும் கடைசியில் முடிகிறது.

ஆக்வர்த் ரயில்பாதை கமிட்டி:—ஐரோப்பா யுத்த காலத்தின்போது இந்திய ரயில்பாதைகள் திறமையுடன் நிர்வாகம் செய்யப்படவில்லை. இந்திய ரயில்பாதைகளின் உதவியைக்கொண்டே மெஸபொடோமியா முதலிய யுத்தகளங்களில் ரயில்பாதைகள் போடவேண்டியிருந்தது. வேலையின் மிகுதியால், இவை சரியாக நிர்வாகம் செய்யப்படவில்லை. இந்திய வியாபாரத்தின் அவசியங்களும், பிராணிகளின் சௌகரியங்களும் சரியாகக் கவனிக்கப்படவில்லை. கம்பெனிகளால் சரியாக நிர்வாகம் செய்யப்படுவதில்லை. யென்றும் கவர்ன்மெண்டாரே ரயில்பாதைகளின் முழு நிர்வாகத்தையும் ஏற்றுக்கொள்வது நலமென்றும், பெருத்த புகார் கிளம்பிற்று. இது விஷயங்களைப்பற்றி விசாரணை செய்து, சிபார்சுகள் செய்ய ஆக்வர்த் (Sir William Acworth) என்பவர் தலைமையின் கீழ் ஒரு கமிட்டி ஏற்படுத்தப்பட்டது.

கவர்ன்மெண்டார் நிர்வாகமா அல்லது கம்பெனிகள் நிர்வாகமா ?:—இக் கேள்வியே ஆக்வர்த் கமிட்டியார் விசாரணை செய்யவேண்டிய முக்கிய விஷயமாயிருந்தது. இந்தியாவிலிருக்கும் சந்தர்ப்பங்களை உத்தேசித்து, கவர்ன்மெண்டார் நிர்வாகமே நல்லதென கமிட்டியின் பெரும்பான்மையோர் அபிப்பிராயப்பட்டனர்.

ஆனால், கமிட்டியின் சிறுபான்மையோர், (Minority Report) இந்தியாவில் இந்தியர்களால் இந்திய மூல தனங்களைக்கொண்டு ஏற்படுத்தப்பட்ட கம்பெனிகளின் நிர்வாகத்தில் நம் ரயில்பாதைகள் விடப்பட வேண்டுமென்று அபிப்பிராயப் பட்டனர். கம்பெனிகளால்தான் சிக்கனத்துடனும் வல்லமையுடனும் நிர்வகிக்கப்படும் என்பதும், கவர்ன்மெண்டாரால் அவ்வளவு சிக்கனமாகவும் சாமர்த்தியத்துடனும் நிர்வகிக்க முடியாதென்பதுமே, அவர்கள் அபிப்பிராயத்திற்குக் காரணமாயிருந்தது.

ஆனால் இவ் வபிப்பிராயம் சரியெனத் தோன்றவில்லை. பல நாடுகளில் கவர்ன்மெண்டார்களே மிகச் சிக்கனமாகவும் சாமர்த்தியத்துடனும் நிர்வாகம் செய்து வந்திருக்கின்றனர். தவிர நம் நாட்டில் ரயில்பாதைகள் பலவும், கவர்ன்மெண்டாருக்கே சொந்தமாயிருக்க அவைகளிலிருந்து வரக்கூடிய விசேஷ லாபங்களை மற்றவர்களுக்குக் கொடுக்கவேண்டிய அவசியமில்லை. கவர்ன்மெண்டார் நிர்வாகத்தி லிருந்தால் ஜனங்களுடைய அசௌகரியங்கள் அவர்கள் பிரதிநிதிகள் மூலம் தெரிவிக்கப்பட்டு, நீக்கப்படுவதற்கும் ஏதுக்கள் இருக்கும். தவிர, ஐரோப்பியக் கம்பெனிகள் இதுகாறும் நிர்வாகம் செய்துவருவதில், தங்கள் இனத்தைச் சேர்ந்த ஆங்கிலேய வர்த்தகர்களின் லாபங்களைக் கருதியும், இந்திய மக்களின் நன்மையைக் கருதாமலும் நடத்தப்பட்டன. கவர்ன்மெண்டு நிர்வாகத்தில் இவ்விதக் குறை இருக்காதென எதிர் பார்க்கப்படுகிறது.

இந்த சிபார்சுகளை அனுசரித்து ஈஸ்ட் இந்தியன் ரயில் பாதை (E. I. R.), ஜீ. ஐ. பி. ரயில் பாதை, பர்மா ரயில் பாதைகள் முதலியன கவர்ன்மெண்டாரால் நிர்வாகம் செய்யப்பட்டு வருகின்றன. இவைகளின் நிர்வாகத்தில்

உதவியா யிருக்க, உதவி கமிட்டிகளும் (Advisory Committees) ஏற்படுத்தப் பட்டிருக்கின்றன.

இந்தியாவில் 1930-31-ல் 42,280 மைல்கள் ரயில் பாதைகள் இருக்கின்றன.

தற்கால ரயில் பாதைகளின் நிர்வாகத்தில் மூன்று முக்கியமான குறைகள் இருக்கின்றன.

1. ரயில் பாதைச் சத்தங்கள் (Railway Rates Policy):—ரயில் பாதைகளின் சத்தங்கள் ஆங்கில வர்த்தகர்களுடைய நன்மையைக் கோரி, அதற்குத் தக்கபடி ஏற்படுத்தப் படுகின்றன வென்று வெகு நாட்களாகக் குறை சொல்லப்பட்டு வருகிறது. இந்திய வியாபாரிகளுடைய சௌகரியங்களும் அவசியங்களும் கவனிக்கப் படுவதில்லை யென்று தக்க ஆதாரத்துடன் சொல்லப்படுகிறது. இந்திய ரயில்பாதைகள் இந்திய மக்களுடைய நன்மைக்கு விரோதமாகவும், இந்தியாவின் கைத் தொழில் விருத்திக்கு விரோதமாகவும் நடத்தப்பட்டு வருகின்றன. இங்கிலாந்தின் கைத்தொழில்களுக்கு அவசியமான பஞ்சு போன்ற சாமான்கள் ஏற்றுமதி செய்யப் படுவதற்கும், இங்கிலாந்தின் கைத்தொழிற் சாமான்கள், துணிகள் போன்றவை இறக்குமதி செய்யப்படுவதற்கும் ஏற்றவாறு சத்தங்கள் விதிக்கப்படுகின்றன வெனவும் ஆதாரத்துடன் சொல்லப்படுகிறது.

நம் கைத்தொழில்களை விருத்தி செய்ய வேண்டுமானல் இத் தகைய ரயில்பாதைச் சத்தங்கள் எடுக்கப் பட்டு, நம் கைத்தொழில்களை விருத்தி செய்வதற்கேற்றவாறு அவை அமைக்கப்பட வேண்டும். விவசாய விசாரணைக் கமிஷனர்களும், மற்ற பல கமிட்டிகளும், கைத்

தொழில்களின் விருத்திக்குத் தக்கபடி ரயில்வேச் சத்தங்களை ஏற்படுத்துவதின் முக்கியத்தை எடுத்து உரைத்திருக்கின்றனர். ரயில் பாதைக் கம்பெனிகளுக்கும், பொது ஜனங்களுக்கும் இது சம்பந்தமாக ஏற்படும் விவாதங்களை முடிவு செய்வதற்காக ஒரு சத்தங்கள் விசாரணைக் கமிட்டி (Rates Advisory Committee) ஏற்படுத்தும்படி ஆக்வர்த் கமிட்டியார் சிபார்சு செய்திருந்தனர். அச் சிபார்சின்படி சத்தங்கள் விசாரணைக் கமிட்டியும் ஏற்படுத்தப்பட்டு, சத்தங்களைப்பற்றி கொடுக்கப்படும் புகார்களை விசாரணை செய்து வருகிறது.

2. ரயில் பாதைக் கம்பெனிகளில் உயர்ந்த உத்தியோகங்கள் அன்னிய நாட்டு மக்களுக்கே கொடுக்கப்பட்டு வருகின்றன. அவைகளில் 100-க்கு 75-க்குக் குறையாமல் இந்தியர்களுக்குக் கொடுக்கப்பட வேண்டுமென ஆக்வர்த் கமிட்டியாரால் சிபார்சு செய்யப்பட்டது.

3. மூன்றாவது வகுப்புப் பிரயாணிகளுக்கு போதுமான சௌகரியங்கள் செய்து கொடுக்கப் படவில்லை. அவர்களுடைய சௌகரியங்கள் கவனிக்கப்பட வேண்டும்.

ரஸ்தாக்கள்:—நாட்டின் பொருளாதார வாழ்விலும் இராஜீய வாழ்விலும் ரஸ்தாக்களும் முக்கியமா யிருக்கின்றன. நமது கிராமங்கள் இப்பொழுதிருக்கும் தனிமையை விட்டு, உலக நாகரிகத்தோடு அறிமுகம் செய்யப்பட வேண்டுமானால், அது ரஸ்தாக்களின்றி முடியாது. கிராமங்களில் உண்டாக்கப்படும் விளை பொருட்கள், அவைகளுக்குத் தேவை யிருக்கும் இடங்களுக்குக் கொண்டு போகப்பட வேண்டும். கைத் தொழில்களுக்கு வேண்டிய பொருட்கள் அவைகள் விளையும் கிராமங்களிலிருந்து கைத்

தொழிற் சாலைகள் இருக்கும் இடங்களுக்குக் கொண்டு போகப்பட வேண்டும். அப்படியே கைத் தொழிற் சாமான்களும் கிராமங்களுக்குக் கொண்டு போகப்பட வேண்டும். இக் காரியங்கள் நல்ல ரஸ்தாக்களின்றி செய்யமுடியாது.

தற்சமயம் இந்தியாவில் சுமார் 220,000 மைல்கள் ரோடுகள் இருக்கின்றன. இந்தியாவின் விஸ்தீரணம், ஜனத் தொகை, வியாபாரம் முதலியவைகளைக் கருதி மற்ற தேசங்களுடன் ஒப்பிட்டுப் பார்த்தால், நம் தேசத்தில் ரஸ்தாக்கள் போதுமான அளவு இல்லை யெனத் தெளிவாகப் புலப்படும். ரஸ்தாக்கள் சம்பந்தமாக விசாரணை செய்து அவைகளின் விருத்திக்கேற்ற முறைகளைச் சிபார்சு செய்யும்படி ஒரு ரோடுகள் அபிவிருத்திக் கமிட்டி (The Road Development Committee) திரு. எம். ஆர். ஜயகார் அவர்கள் தலைமையின்கீழ் ஏற்படுத்தப்பட்டது. இக் கமிட்டியார் ரோடுகளை விருத்தி செய்வதின் அவசியத்தைப் பற்றியும், அதற்கேற்ற முறையைப் பற்றியும் சிபார்சுகள் செய்திருந்தனர். ரோடுகளில் வாங்கப்பட்ட சுங்கங்கள் எடுக்கப்பட்டு, அதற்குப் பதிலாக வேறு விதமான வரி வசூல் செய்து ரஸ்தாக்கள் போடப்பட வேண்டும் என்றும் அபிப்பிராயப்பட்டனர்.

இச் சிபார்சுகளுக்கு இணங்க சுங்கங்கள் எடுக்கப்பட்டு பெட்ரோலின் பேரில் காலனுக்கு 2 அணு வரிப் போடப்பட்டது. இது 5 வருஷத்துக்கு விதிக்கப்படும். இந்த வரியால் 83 லக்ஷம் ரூபாய் வருமென எதிர்பார்க்கப் பட்டது. இந்தத் தொகை ரஸ்தாக்களின் விருத்திக்காக உபயோகப் படுத்தப்படும். முதலில் இரண்டு வருஷங்களில் வசூல் செய்யப்படும் வரியில் 100-க்குப் 10-பங்கு அவசர வேலைகளுக்காக இந்தியா கவர்ன்மெண்டாரால் வைத்துக்

கொள்ளப்பட்டு, மீதித் தொகையை அந்தந்த மாகாணங்களுக்கு, அவர்களால் வாங்கப்பட்ட பெட்ரோல் அளவுக்குத் தகுந்தவாறு பிரித்துக் கொடுக்கப்படும். ரோடுகள் சம்பந்தமான விஷயங்களை மேல் பார்த்து வருவதற்கு அகில இந்திய சட்ட சபைகள் இரண்டினின்றும் ஒரு கமிட்டி தேர்ந்து எடுக்கப்படும்.

நீர்ப் பாதைகள்:—ரயில் பாதைகளால் அதி சீக்கிரத்தில் சாமான்களை ஒரு இடத்திலிருந்து மற்றொரு இடத்துக்குக் கொண்டு போகலாமெனினும், நீர்ப் பாதைகளில் மற்ற சில சௌகரியங்கள் உண்டு. கப்பல்களில் ஒரே சமயத்தில் அதிக சாமான்களை குறைந்த செலவில் கொண்டு போகலாம்.

நீர்ப்பாதைகளில் இரு விதங்கள் உண்டு.

1. உள் நாட்டிலிருக்கும் நதிகள், கால்வாய்கள்.

2. கடற்கரை.

உள்நாட்டு நீர்ப்பாதைகள்:—இந்தியாவில் சுமார் 26,000 மைல்கள் உள்நாட்டு நீர்ப்பாதைகள் இருக்கின்றன. சிந்து, கங்கை பிரமபுத்ரா, ஐராவதி, இந் நதிகள் வருஷ முழுவதும் நூற்றுக்கணக்கான மைல்களுக்கு கப்பல் போகும்படியான சௌகரியங்களை யுடையனவாக இருக்கின்றன. சிந்து நதியில் சுமார் 800 மைல்களுக்கு அதாவது டேரா இஸ்மேல்கான்வரை கப்பல்கள் போகின்றன. கங்கையில் கான்பூர்வரையிலும், கோக்ரா நதியில் பைசாபாத்வரையிலும் பிரமபுத்ரா நதியில் டிப்ருகார்வரையிலும், ஹூக்ளி நதியில் நாடியாவரையிலும், கப்பல்கள் செல்லுகின்றன. மகாநதி, கோதாவரி, கிருஷ்ணா, காவேரி—இந் நதிகள் கப்பல் போக்குவரத்துக்கு அவ்வளவு சௌகரியமாய் இல்லை.

இந்தியக் கப்பல் தொழிலின் சரித்திரம்:—இங்கிலாந்து முதலிய நாடுகளைப்போல கப்பற்தொழில் விருத்திக்கு ஏற்ற இயற்கைத் துறைமுகங்கள் முதலிய வசதிகள் அதிகமில்லாவிடினும், இந்தியா சுமார் 5000 மைல்கள் கொண்ட கடற்கரையைப் பெற்றிருப்பதுடன், பல துறைமுகங்களையும் பெற்றிருக்கின்றது. 19-ம் நூற்றாண்டின் ஆரம்பம்வரையில் இந்தியா கப்பல்களுக்கு பெயர்பெற்ற நாடாகக் கருதப்பட்டு வந்தது. தேக்குமரத்தால் பெரிய கப்பல்கள் செய்யப்பட்டு, இங்கிலாந்து முதலிய அன்னிய நாடுகளுக்கும், நம் நாட்டுக் கப்பல்கள் வியாபாரத்துக்காக அனுப்பப்பட்டு வந்தன. அக்பர் பாதுஷா காலத்தில் நம் நாட்டு அன்னிய தேசத்து வியாபாரத்தில் பெரும் பகுதியும், நம் நாட்டில் செய்யப்பெற்ற கப்பல்கள் மூலமாகவே நடத்தப்பட்டது. பல மேல்நாட்டுக் கப்பல்களைக் காட்டிலும் அதிக சிரேஷ்டமாகவே நம் கப்பல்கள் கருதப்பட்டு வந்தன. 19-ம் நூற்றாண்டின் மத்தியிலிருந்து நம் கப்பல் தொழில் க்ஷீணிக்கத் தொடங்கிற்று. அதற்குக் காரணங்கள் பலவுள.

19-ம் நூற்றாண்டில் மேல்நாடுகளில் ஏற்பட்ட கைத்தொழில் அபிவிருத்தியின் காரணமாகவும், நீராவியந்திரங்கள் கண்டுபிடிக்கப் பட்டதின் காரணமாகவும், கப்பல்கள் உயர்ந்த மாதிரியில் கட்டப்பட்டன. இரும்புக் கப்பல்கள் பெரிய அளவில் கட்டப்பட்டு, அவை நீராவி யந்திரங்களின் உதவியால் ஓட்டப்பட்டன. இவ்வித இரும்புக் கப்பல்களைக் கட்டவும், நீராவி யந்திரங்களை உண்டாக்கவும் நாம் அறியாதவர்களாய், இருந்தோம். எனவே, நம் கப்பல் தொழிலை விருத்தி செய்ய அசக்தர்களா யிருந்தோம்.

தவிர, நம் கப்பல்கள் அன்னியநாட்டு வியாபாரத்தில் ஈடுபட முடியாமல் தடுக்கப்பட்டன. அன்னியநாட்டுக்

கப்பல்களில் கொண்டுவரப்படும் சரக்குகள் இங்கிலாந்தில் இறக்குமதி செய்யப்பட கூடாதெனவும், இன்னும் ஆங்கில கப்பல் தொழிலை விருத்தி செய்வதற்குத் தகுந்த ஷரத்துகளும் கொண்ட, (English Navigation Acts) பல கப்பல் சட்டங்கள் இங்கிலாந்தில் செய்யப்பட்டன.

இம் மாதிரி க்ஷீணிக்கத் தொடங்கிய கப்பல் தொழிலுக்கு நம் நாட்டு கவர்ன்மெண்டாரால் உதவியளிக்கப்படவில்லை. அன்னியநாட்டுக் கம்பெனிகளுக்கு உதவி கொடுத்து, நம் கப்பல்தொழிலை அழிப்பதற்கும், கவர்ன்மெண்டார் ஏதுவாயிருந்தனர். அன்னியநாட்டுக் கப்பல் கம்பெனிகளும் நம் நாட்டுக் கப்பல் தொழில் விருத்திக்குப் பல இடையூறுகள் செய்தனர். இவைகளின் விருத்தாந்தம் பின் பக்கங்களில் விவரிக்கப்படும்.

கப்பல் தொழிலின் தற்கால நிலைமை:—"தற்சமயம் இந்தியக்கப்பல் தொழில் மிகக் கேவலமான நிலைமையில் இருக்கிறது. நம் நாட்டின் ஒரு பாகத்திலிருந்து மற்றொரு பாகத்துக்கு சாமான்களைக் கொண்டுபோகும் கடற்கரைக் கப்பல் வியாபாரத்திலும் பெரும்பகுதி அன்னியநாட்டு, முக்கியமாய் ஆங்கிலேயக் கப்பல்களால் செய்யப்பட்டு வருகிறது. அன்னியநாட்டு வியாபாரம் அனைத்தும் அன்னியநாட்டுக் கப்பல்களிலேயே செய்யப்பட்டு வருகிறது. நம் நாட்டுக் கடற்கரை வியாபாரத்தில் 100-க்கு 13 பங்குகள் தான் நம் கப்பல்கள் மூலம் செய்யப்பட்டு வருகின்றது. பாக்கி 87 பங்குகள் அன்னியநாட்டுக் கப்பல்களால் செய்யப்பட்டு வருகின்றது. அன்னியநாட்டு வியாபாரத்தில் 100-க்கு 2 பாகம்தான் நம் கப்பல்கள் மூலம் செய்யப்பட்டு வருகின்றது. 1928-ல் நம் அன்னியநாட்டு வியாபாரத்தில் ஈடுபட்டிருக்கும் கப்பல்களின் தொகையும், அவைகளின்

விவரங்களும், அவை எந்த தேசத்துக்குச் சேர்ந்தவை என்ற விவரங்களும் கீழே கொடுக்கப் பட்டிருக்கிறது. †

| கப்பல்களின் தேசங்கள் | கப்பல்களின் தொகை | கப்பல்களின் கனம் | அன்னியநாட்டு வியாபாரத்தில் 100க்குஎவ்வளவு பங்குகள் |
|---|---|---|---|
| | | 1000 டன்களில் | |
| இங்கிலாந்து | 2323 | 6521 | 69·7 |
| இந்தியா | 994 | 173 | 1·8 |
| மற்ற நாடுகள் | 757 | 2661 | 28·5 |

இங்ஙனம் நம் கடற்கரை வியாபாரமும் அன்னியநாட்டு வியாபாரமும் இதர நாட்டுக் கப்பல்கள் மூலம் செய்யப்படுவதில் நமக்கு பெருத்த நஷ்டம் ஏற்படுகின்றது. ஒவ்வொரு வருஷமும் நம் வியாபாரத்தில் கப்பல் சத்தமாக சுமார் 57 கோடி ரூபாய் செலவுசெய்கிறோம். இக் தொகையில் சுமார் 55 கோடி ரூபாய்கள் அன்னிய நாட்டார்களால் கொண்டு போகப்படுகிறது. கடற்கரை வியாபாரத்தில் 9 கோடி ரூபாய்களும், அன்னியநாட்டு வியாபாரத்தில் 38 கோடி ரூபாய்களும், பிரயாணிகளின் சத்தங்களின் மூலம் 3 கோடி ரூபாய்களும், ஆகமொத்தம் 50 கோடி ரூபாய் லாபத்தை அன்னியநாட்டுக் கப்பற் கம்பெனிகள் பெறுகின்றன.

நம் கப்பல் தொழில் விருத்திக்கு இடையூறுகள் :— நம் கப்பல்தொழிலை விருத்தி செய்தால், கப்பல் சத்தமாக நாம் அன்னிய நாட்டுக் கப்பல்களுக்குக் கொடுக்கும் 50 கோடி ரூபாயும் நாமே பெறலாம். நமது தேசத்திலிருந்து ஒவ்வொரு வருடமும் 50 கோடி ரூபாய் தற்காலம் அன்னிய நாடுகளுக்கு அனுப்பப்படுவதை, நம் நாட்டிலே

† Page 222 Jathar & Beri's Indian Economics Vol. II.

இருக்கும்படி செய்யலாம். இந்தியக் கப்பற்தொழில் விருத்தி யடைந்தால் அன்னிய நாட்டு கப்பல் கம்பெனிகளின் லாபம் குறையும்; ஆதலால் நம் கப்பற்தொழில் விருத்தி யடையாமல் செய்வதற்கு வேண்டிய முறைகள் அனைத்தை யும் அவர்கள் அனுஷ்டிக்கிறார்கள். நம் கப்பற்தொழில் விருத்திக்கு அவர்களால் இயன்ற இடையூறுகள் அனைத்தும் செய்து வருகிறார்கள். அன்னிய நாட்டுக் கப்பல் கம்பெனி கள் பெரிய முதல்களை வைத்துக்கொண் டிருப்பவைகளாய் இருப்பதாலும், அவை இதற்குள் ஏராளமான லாபங்களை சம்பாதித்த கம்பெனிகளாய் இருப்பதாலும் குறைந்த முதல்களைக் கொண்டு புதிதாக ஆரம்பிக்கப்படும் இந்தியக் கம்பெனிகளை, அக்கிரமமான முறைகளைக் கையாடி நசுக்கு வது எளிதாக யிருக்கின்றது.

இந்தியக் கப்பற் தொழிலை நசுக்குவதற்கு அவர்கள் இரண்டு முறைகளைக் கையாளுகிறார்கள்.

1. சத்தங்களில் போட்டி:—இந்தியக் கப்பல் கம் பெனிகளுக்குக் கட்டுபடியாகாதபடி, அவ்வளவு குறைந்த சத்தத்துக்கு தங்கள் கப்பல்களை யோட்டி, இந்தியக் கம் பெனிகள் வேலை செய்ய முடியாமல் செய்வதே அவர்கள் முதல் ஆயுதமா யிருக்கிறது. இந்திய கம்பெனிகளுடன் போட்டி போட்டு, சத்தங்களை அதிகமாகக் குறைத்தால், இந்திய கம்பெனிகள் ஒரு அளவுக்குக் குறைத்து தங்கள் கப்பல்களின் சத்தத்தைக் குறைக்க முடியாமல் கஷ்டப் படுவார்கள். வியாபாரம், குறைந்த சத்தம் விதிக்கும் கப்பல்களுக்குத்தான் செல்லும். எனவே, இந்தியக் கம் பெனிகள் வியாபாரமின்றி, தங்கள் தொழிலை விட்டுவிட நேரிடும். ஆங்கிலக் கம்பெனிகள் அதிகமான தொகை களை மூல திரவியமாகப் பெற்றிருப்பதாலும், இதுவரை

அதிகமான லாபத்தைப் பெற்று வந்திருப்பதாலும், கடல் வியாபாரத்தின் பெரும் பகுதியையும் தங்கள் வசத்திலேயே வைத்துக் கொண்டிருப்பதாலும், இந்தியக் கம்பெனிகளின் கப்பல் வியாபாரத்தை அழித்து, முழு வியாபாரத்தையும் தாங்கள் பெறும் பொருட்டு, தற்காலிகமாக குறைந்த சத்தத்துக்கு தங்கள் கப்பல்களை ஓட்டத் தயாராயிருக்கின்றனர். இந்தியக் கப்பல் கம்பெனிகள் அழிக்கப் பட்ட பின்பு, சத்தம் குறைத்த சமயத்தில் ஏற்பட்ட நஷ்டத்தையும் பெற்று இன்னும் அதிக லாபம் கிடைக்கும்படி சத்தத்தை உயர்த்துவார்கள். இந்தியக் கம்பெனிகள் சிறிய மூலதனத்துடன் புதிதாக ஆரம்பிக்கப் படுவனவாகையால் இந்த சத்தப் போட்டியில் ஒருபொழுதும் வெல்ல முடிவதில்லை. புதிதாக ஆரம்பிக்கப் பெற்ற பல இந்தியக் கம்பெனிகள், இந்தச் சத்தப் போட்டியைத் தாங்க மாட்டாமல் மூடப்பட்டன. தூத்துக்குடி இந்தியன் ஸ்டீம் நாவிகேஷன் கம்பெனியை இதற்கு உதாரணமாகச் சொல்லலாம்.

2. காலம் தள்ளி ரிபேட் அல்லது வட்டம் கொடுக்கும் முறை:—(இது ஆங்கிலத்தில் The Deferred rebate System என்று சொல்லப்படுகிறது) வியாபாரிகள் தங்கள் சாக்குகளை இந்திய கம்பெனிகளுக்குச் சேர்ந்த கப்பல்களில் அனுப்பாமல் தங்கள் கப்பல்களிலே அனுப்பும் பொருட்டு, அன்னிய நாட்டுக் கப்பற் கம்பெனிகளால் செய்யப்பட்ட சூழ்ச்சிகளில் இது முக்கியமானது. அன்னியக் கப்பற் கம்பெனிகளில் பெரும்பான்மை ஆங்கிலக் கம்பெனிகளா யிருக்கின்றன. இவ் வாங்கிலக் கம்பெனிகள் யாவும் சேர்ந்து, ஒரு சங்கம் ஏற்படுத்தி யிருக்கின்றன. அன்னியநாட்டு வியாபாரம் செய்யும் வியாபாரிகளுக்கு அவர்

கள் கீழ்க்கண்ட அறிக்கையை விடுக்கின்றனர். "எவ் வியாபாரிகள், தங்கள் சாக்கை இச் சங்கத்தார் கப்பல்களில் அனுப்பி, அதற்குப்பிறகு கொஞ்சகாலம், 4 அல்லது 6 மாதங்கள் இச் சங்கத்தார் கப்பல்களைத் தவிர மற்றவர்களுடைய கப்பல்களில் அனுப்பாம லிருந்தால், அவர்கள் சரக்குகளுக்காகக் கொடுத்த சத்தத்தில் ஒரு பகுதி ரிபேட் அல்லது வட்டம் (சாதாரணமாக 100-க்கு 10) அவர்கள் சார்பாக கம்பெனிகளின் கணக்குப் புஸ்தகங்களில் வரவு வைக்கப்படும். இன்னும் கொஞ்ச காலம், அதாவது 6 மாதங்கள் அவ் வியாபாரிகள் இச் சங்கத்தாருக்குச் சேர்ந்த கப்பல்களைத் தவிர மற்ற கப்பல்களில், தங்கள் சரக்குகளை அனுப்பாமல் இருந்து, இக் கூட்டத்தார் கப்பல்களிலேயே அனுப்புவார்களானல், அவர்கள் சார்பில் வரவு வைக்கப் பட்டதொகை அவர்களுக்கு கொடுக்கப்படும்." இம் முறையால் வியாபாரிகள் இந்தியக் கப்பல்கள் மூலம் சரக்குகள் அனுப்ப முடியாமல் கட்டுப்படுத்தப் படுகின்றனர். இம் முறையைக் கைக்கொண்டு இந்தியக் கப்பல் தொழிலை அழிக்க, அன்னியநாட்டுக் கம்பெனிகள் முயற்சி செய்கின்றன.

3. இன்சூரன்ஸ் கம்பெனிகளின் பாரபக்ஷ நடத்தை:—கப்பல் இன்சூரன்ஸ் கம்பெனிகள் அனைத்தும் ஆங்கிலக் கம்பெனிகளாகவே யிருக்கின்றன. இவ்வாங்கிலக் கம்பெனிகள் இந்திய கம்பெனிகளின் கப்பல்களை சரியானபடி இன்சூர் செய்வதில்லை. முதல் தரமான கப்பல்களையும், இரண்டாந்தரம் எனக்குறைந்த மதிப்பிட்டு இன்சூர் செய்கிறார்கள். இந்தியக் கம்பெனிகளுக்குச் சேர்ந்தவை என்ற ஒரு காரணத்திற்காகவே இந்தியக் கப்பல்களுக்கு குறைந்த மதிப்பிடுகின்றனர். இந்தப் பாரபக்ஷ

நடத்தையும் இந்தியக் கம்பெனிகளுக்குக் கஷ்டத்தைக் கொடுக்கின்றன.

4. மற்ற ஆங்கிலக் கம்பெனிகளும், ஆங்கில வியாபாரிகளும் இந்தியக் கப்பல் கம்பெனிகளுக்கு யாதொரு விதமான உதவியும் அளிப்பதில்லை. ஆங்கிலேயக் கப்பல்கள் தங்கள் சரக்குகளை ஆங்கிலேய கம்பெனிகளைச் சேர்ந்த கப்பல்களிலேயே ஏற்றுமதி செய்கின்றனர். இதற்கு கல்கத்தா சணல் வியாபாரத்தையே உதாரணமாகக் கொள்ளலாம். சணல் வியாபாரம் முழுதும் ஆங்கிலேயர் வசத்திலிருக்கிறது என்பதை முன்பக்கங்களில் கண்டோம். அவர்கள் தங்கள் சரக்குகள் அனைத்தையும் ஆங்கிலக் கப்பல்களிலேயே அனுப்புகின்றனர்.

5. தவிர, இந்தியா கவர்ன்மெண்டாருடைய கடமை இந்திய கப்பல் கம்பெனிகளுக்கு உதவி செய்வதாயிருக்க, அவர்களும், இந்திய கம்பெனிகளை ஆதரிக்காமல் ஆங்கிலக் கம்பெனிகளையே ஆதரிக்கின்றனர். கவர்ன்மெண்டார் வாங்கும் ஏராளமான சாமான்களைக் கொண்டு வருவதற்கும், தபால்கள் கொண்டு வருவதற்கும், அவர்கள் ஆங்கிலேய கம்பெனிகளைத் சேர்ந்த கப்பல்களையே உபயோகித்து, ஆங்கிலக் கம்பெனிகளுக்கே ஆதரவு அளிக்கின்றனர். இரங்கூனுக்கு நிலக்கரி அனுப்புவதும் ஆங்கிலக் கம்பெனிகளைச் சேர்ந்த கப்பல்கள் மூலமே அனுப்பப்படுகின்றன.

கப்பல் தொழில் அபிவிருத்தியின் அவசியம்:—இங்ஙனம் இந்திய கப்பற் கம்பெனிகள் பல இடையூறுகளுக்கு மத்தியில் வேலை செய்ய வேண்டி யிருக்கின்றன. ஆங்கிலக் கம்பெனிகளே இந்தியாவின் கப்பற் வியாபாரம் அனைத்தையும் தங்கள் வசத்தில் வைத்திருப்பதாகச் சொல்லலாம். இதனால் பல கெடுதல்கள் உண்டாயிருக்கின்றன.

அன்னிய நாட்டுக் கம்பெனிகள், கீழ் வகுப்புப் பிரயாணி களின் சௌகரியத்தைச் சரிவர கவனிப்பதில்லை. இது சம்பந்தமாக விசாரணை செய்ய பல கமிஷன்களும், கமிட்டி களும் ஏற்படுத்தப்பட்டும், அப் பிரயாணிகளுடைய அவசி யங்கள் போதுமான அளவு கவனிக்கப்படுவதில்லை. அன் னிய நாட்டுக் கப்பற் கம்பெனிகளில் உயர்ந்த உத்தியோ கங்களுக்கு இந்தியர்கள் நியமிக்கப் படுவதில்லை. இந்திய மக்களுக்கு கப்பற் தொழிலைப் பழக்கித் தருவதற்கும் ஆங் கிலக் கம்பெனிகள் ஒப்புக் கொள்வதில்லை. இந்தியக் கப்பற் தொழிலை விருத்தி செய்தால் இக் குறைகள் நீங்கும்.

கப்பல் தொழிலை விருத்தி செய்தால், தற் காலத்தில் அது வியாபாரத்துக்கே பயன்பட்டாலும், யுத்த காலத் திலும் நம் தேசத்தைக் காப்பதற்கு உதவக் கூடியதாயும் இருக்கும். தவிர, கப்பற் சத்தங்களாக அன்னிய நாடு களுக்கு ஒவ்வொரு வருஷமும் அனுப்பப்படும் 50-கோடி ரூபாயும் நாமே பெற்றவர்க ளாவோம். ஆகையால், நம் நாட்டில் கப்பற் தொழில் கூடிய சீக்கிரத்தில் விருத்தி செய்யப்பட வேண்டும்.

இந்தியக் கப்பற் தொழில் அபிவிருத்திக் கமிட்டி:— இந்தியாவின் கப்பற் தொழில் அபிவிருத்தி செய்யப்பட வேண்டு மென்றும், இந்தியக் கப்பற் கம்பெனிகளுக்கு கவர்ன்மெண்டால் போதுமான உதவி அளிக்கப்படவில்லை யென்றும், பொது ஜனங்களால் கிளர்ச்சி செய்யப்பட்டது. இக் கிளர்ச்சியின் காரணமாக, எம் முறைகளைக் கைக் கொண்டு கப்பற் தொழிலை விருத்தி செய்யலாம் என்பதைப் பற்றி விசாரணை செய்வதற்காக இந்தியக் கப்பற் தொழில் அபிவிருத்திக் கமிட்டி (The Indian Mercantile

Marine Committee) 1923-ம் வருஷத்தில் நியமிக்கப் பட்டது. அக் கமிட்டியின் முக்கிய சிபார்சுகள் வருமாறு:—

1. கப்பற் தொழில் இந்திய மக்களுக்குக் கற்றுக் கொடுக்கப் படுவதற்காக பம்பாயில் ஏற்பாடு செய்யப்பட வேண்டும்.

2. கப்பல் யந்திரப் படிப்புகள் இன்ஜினியரிங் கலா சாலைகளில் சொல்லித் தரப்படுவதுடன், கடலில் பயிற்சி பெறுவதற்கும் ஏற்பாடுகள் செய்யப்பட வேண்டும்.

3. கடற்கரைக் கப்பற் வியாபாரம் முழுதும் இந்திய மக்களுக்குச் சொந்தமான கப்பல்களுக்கே ஒதுக்கி வைக்கப்பட வேண்டும். இது லைசென்ஸ் (License) அல்லது அனுமதிச் சீட்டுகள் மூலம் செய்யப்பட வேண்டும். கீழ்க் கண்ட நிபந்தனைகளுக்கு உட்பட்ட கப்பல் கம்பெனிகளுக்குத்தான் கடற்கரை வியாபாரம் செய்வதற்கு லைசென்ஸ் கொடுக்கப்பட வேண்டும்.

1. அது இந்தியாவில் ரிஜிஸ்டர் செய்யப்பட்டிருக்க வேண்டும்.

2. அதன் மூல திரவியம் ரூபாயில் வைக்கப்பட்டு, அதன் பங்குகளில் பெரும் பகுதி இந்தியர்களுக்குச் சேர்ந்ததாயும், அதன் நிர்வாக சபையில் பெரும்பான்மையோர் இந்தியர்களாயும் இருக்க வேண்டும்.

3. அக் கம்பெனியின் நிர்வாகம் பிரதானமாக இந்தியர்கள் வசமிருக்க வேண்டும்.

4. கொஞ்ச காலத்தில் உத்தியோகங்கள் அனைத்திற்கும் இந்தியர்களே நியமிக்கப்பட வேண்டும்.

4. கடற்கரை வியாபாரத்தில் தேர்ச்சி யடைந்த பிறகு, அன்னிய நாட்டு வியாபாரம் செய்வதற்கும், இந்

தியக் கப்பல் கம்பெனிகளுக்கு பவுண்டிகள் மூலம் கவர்ன் மெண்டாரால் உதவி செய்யப்பட வேண்டும்.

5. மேற்சொன்ன லைசென்ஸ் முறை கவர்ன்மெண்டாரால் ஒப்புக் கொள்ளப்படாவிட்டால், பவுண்டிகள் மூலம் பண உதவி செய்தும், தபால் கண்டிராக்டுகள் (Mail Contracts) கொடுத்தும், தங்கள் சாமான்களை இந்தியக் கப்பல்களின் மூலமே கொண்டு வந்தும், இந்தியக் கப்பற் கம்பெனிகளுக்கு உதவி செய்யவேண்டும்.

6. கப்பல் கட்டும் தொழிற்சாலைகளுக்குக் கவர்ன் மெண்டார், குறைந்த வட்டிக்குக் கடன்கள் கொடுத்தும், இன்னும் பலவிதங்களிலும் உதவி செய்ய வேண்டும்.

7. கப்பற் தொழிலைப் பற்றிக் கற்றுக் கொடுக்கக் கூடிய பாடசாலைகள் ஏற்படுத்துவதுடன், உயர்தரக் கல்வியைப் பெறுவதற்குச் சிலர் அன்னிய நாடுகளுக்கும் அனுப்பப்பட வேண்டும்.

கவர்ன்மெண்டார் இச் சிபார்சுகளைக் காரியாம்சத்தில் கொண்டு வருவதற்குச் சரியான முயற்சி எடுத்துக் கொள்ளவில்லை. 'டப்ரின்' என்னும் கப்பல் ஒன்று, கப்பல் பயிற்சி கொடுப்பதற்காக ஏற்படுத்தப்பட்டதைத்தவிர, மற்ற சிபார்சுகள் கவனிக்கப்படவில்லை.

கடற்கரை வியாபாரத்தை இந்தியக் கப்பல்களுக்கு ஒதிக்க வைக்க மசோதா:—கப்பற்தொழில் அபிவிருத்தி கமிட்டியின் பிரதம சிபார்சு, இந்தியாவின் கடற்கரை வியாபாரம் இந்திய மக்களுக்குச் சேர்ந்த கப்பல்களுக்கே ஒதுக்கி வைக்கப்பட வேண்டும் என்பதாக விருந்தாலும், இது சம்பந்தமாக கவர்ன்மெண்டார் ஒன்றும் செய்யவில்லை. ஆதலால் திரு. ஹாஜி அவர்கள் தம் கடற்கரை வியாபாரத்தை

இந்தியக் கப்பல்களுக்கு ஒதுக்கி வைக்கும் மசோதாவை (Bill for reserving coastal traffic for Indian shipping) 1928-ல் இந்திய சட்டசபையில் கொண்டு வந்தார். இந்தியா கவர்ன்மெண்டாரிடம் லைசென்ஸ் பெற்ற கப்பல்களே கடற்கரை வியாபாரம் செய்ய வேண்டுமென்றும் 100-க்கு 75-க்கு குறையாமல் இந்தியர்களுக்குப் பங்குகள் இருக்கும் கம்பெனிகளுக்கும், அக் கம்பெனிகளின் நிர்வாகத்திலும் 100-க்கு 75 பேர்கள் இந்தியர்களுள்ள கம்பெனிகளுக்கும்தான் கடற்கரை வியாபாரம் செய்ய லைசென்ஸ் கொடுக்கப்பட வேண்டுமென்றும், 5 வருஷத்தில் கடற்கரை கப்பல் வியாபாரம் முழுதும் இந்தியக் கப்பல்களுக்கே ஒதுக்கி வைக்கப்பட வேண்டும் என்று அம் மசோதாவில் கண்டிருந்தது.

இம் மசோதாவை ஐரோப்பிய அங்கத்தினரும் கவர்ன்மெண்டு அங்கத்தினரும் கடுமையாக எதிர்த்தனர். இம் மசோதா நிறவேற்றுமை அல்லது வெறுப்பை (racial discrimination) அடிப்படையாகக் கொண்டதாகச் சொல்லப்பட்டது. ஆதலால், அது அவர்களால் எதிர்க்கப் பட்டு தோற்கடிக்கப் பட்டது.

நிற வேற்றுமை:—நிற வேற்றுமையைப் பற்றி இங்கு சில வார்த்தைகள் சொல்ல வேண்டியது அவசியம். நிற வேற்றுமை என்பது வெறுப்பு அல்லது துவேஷத்தின் காரணமாக ஒரு தேசத்தாருக்குக் கெடுதல் செய்யவேண்டுமென்ற கெட்ட எண்ணங்கொண்டு, அவர்களைக் கெடுப்பதற்கு வேண்டிய காரியங்களைக் செய்தல். ஆனால் ஒரு தேசத்தார் தங்கள் முன்னேற்றத்திற்காகவும், அபிவிருத்திக்காகவும் சில முறைகளைக் கைக் கொள்வார்களானால், அம் முறைகளைக் கைக்கொள்வதில் சில அன்னியநாட்டார்

களுக்கு நஷ்டம் ஏற்பட்டபோதிலும், அது நிறவேற்றுமை யாகாது. ஏனெனில், இம் முறைகள் அந்நாட்டின் முன்னேற்றத்தைக் கருதிக் செய்யப்பட்டனவே யொழிய, மற்ற நாடுகளுக்குக் கெடுதல் செய்யவேண்டும் என்ற நோக்கத்தைக் கொண்டும் கையாளப் படவில்லை. ஒரு நாட்டுக்குக் கெடுதல் செய்ய வேண்டுமென்ற நோக்கமே நிற வேற்றுமையின் முக்கிய குணமாகும்.

இவ் வர்த்தத்தில் திரு. ஹாஜி அவர்களின் மசோதா நிறவேற்றுமையால் தூண்டப் பட்டதாவெனப் பார்ப்போம். அம் மசோதாவின் முக்கிய நோக்கம் இந்தியக் கப்பற் தொழிலை விருத்தி செய்வதே யொழிய, ஆங்கில நாட்டாரை நஷ்டப் படுத்துவதல்ல. அம் மசோதாவில் சொல்லப்பட்ட முறையால் ஆங்கிலக் கப்பல் வியாபாரிகளுக்கு நஷ்டம் உண்டாகலாம். அவர்கள் பேரிலுள்ள வெறுப்பால் நாம் அவர்களுக்கு நஷ்டம் உண்டாக்க விரும்பவில்லை. ஆனால், நம் கைத் தொழில்களையும் வியாபாரத்தையும் விருத்தி செய்யும் யத்தனத்தில், ஆங்கிலேயரை நஷ்டப்படுத்தியே தீர வேண்டுமென்றால் நாம் அதைக் கவனிக்க முடியாது. நம் கைத்தொழில்களை விருத்தி செய்தால், நம் கைத் தொழில்களின் க்ஷீண நிலைமையில் நம்மிட மிருந்து லாபம் அடைந்த அன்னியர்கள், அந்த லாபத்தை இழக்கத்தான் நேரிடும். அவர்கள் லாபமடைவதற்காக நாம் என்றும் க்ஷீண நிலைமையில் இருந்து கொண்டிருக்க முடியாது. திரு. ஹாஜி அவர்களுடைய மசோதாவும் நம்முடைய கைத்தொழில்களில் பிரதானமான ஒன்றை விருத்தி செய்வதற்காகச் சொல்லப்பட்ட ஒரு முறை. இம்மாதிரி முறைகளை அனுஷ்டித்து, கைத்தொழில்களை விருத்தி செய்வது ஒவ்வொரு தேசத்தின் உரிமையும், கடமையுமாகும். இங்கிலாந்து உள்

பட எல்லா சுதந்தா நாடுகளும் இம் முறைகளை அனுஷ்டித்தே தங்கள் கைத்தொழில்களை விருத்தி செய்திருக்கின்றன. இவ்விதமான முறைகளை நாம் அனுஷ்டிக்க முடியாம லிருப்பதற்குக் காரணம் நம் அடிமை வாழ்வே.



# பத்தாவது அதிகாரம்



## அன்னியநாட்டு வியாபாரம்

சரித்திரம் :—சுமார் 5000 வருஷங்களுக்கு முன்னமேயே இந்தியா பெரிய வியாபார நாடாக விருந்தது. கி. மு. 3000 வருஷத்தில் பெரிய இராஜ்ஜியமாக விளங்கியிருந்த பாபிலோன் (Babylon) இந்தியாவிலிருந்து பலவிதமான கைத்தொழிற் சாமான்களைப்பெற்று வந்தது. கி. மு. 2000 வருஷத்தில் உயர்ந்த நாகரிகத்துடன் விளங்கிய எகிப்து தேசமும் நம் நாட்டிலிருந்து விசேஷமான கைத்தொழில் பொருட்களைப் பெற்று வந்தது. கிரேக்கர்கள் முன்னேறி யிருந்த காலத்திலும், ரோமாபுரி ஐரோப்பாவை ஆண்ட சமயத்திலும், அவர்கள் இந்தியாவுக்கு தங்கம் முதலிய உலோகங்கள் அனுப்பி, வஸ்திரங்கள் முதலிய சாமான்களைப் பெற்றனர். டாக்கா மஸ்லின் என்பது அந்தக் காலத்திலும் பெயர் பெற்று விளங்கிற்று. இவை கங்கைப் பிரதேசங்களி லிருந்து அனுப்பப்பட்டதால் காங்காடிகா (gengetika) என்ற பெயரால் வழங்கப்பட்டன. சீனு, பாரசீகம், அராபியா முதலிய பல தேசங்களுக்கும் இந்தியச் சாக்குகள் அனுப்பப்பட்டன. முக்கியமாக, நெசவுசாமான்கள், உலோகத்தால் செய்யப்பட்ட

சாமான்கள், சாயங்கள், வாசனைத் திரவியங்கள் முதலியன நம் நாட்டிலிருந்து ஏற்றுமதி செய்யப்பட்டன. இவைகளுக்குப் பதிலாக தங்கமும், பித்தளை, தகரம், ஈயம் முதலிய கைத்தொழில்களுக்கு வேண்டிய உலோகங்களும், குதிரை முதலியவைகளும், இறக்குமதி செய்யப்பட்டன.

தவிர ஜாவா, சுமத்ரா, சீனம் முதலிய நாடுகளுக்கும் கப்பலில் சென்று இந்திய வியாபாரிகள் வாணிபம் செய்து வந்தனர். இக் கப்பல்கள் யாவும் நம் தேசத்து மக்களுக்குச் சேர்ந்தனவாகவும், நம் மக்களால் ஓட்டப்பட்டும் இருந்தன.

முகம்மதிய அரசர்கள் காலத்திலும் இந்தியா பெரிய வியாபார நாடாகவே விளங்கிற்று: லாகூர், காபூல் மார்க்கம் மூல்டான், காண்டஹார் மார்க்கம் இவ்விரண்டு பாதைகள் மூலமாய் இந்திய மக்கள் மேல்நாடுகளுடன் வியாபாரம் செய்து வந்தார்கள். முன்போலவே நம் நாட்டிலிருந்து நெசவு சாமான்களும், சாயச் சாமான்களும், வாசனைத் திரவியங்களும் அனுப்பப்பட்டன. தங்கமும், பித்தளை முதலிய உலோகங்களும், குதிரைகள் முதலியனவும் நம் நாட்டிற்குள் இறக்குமதி செய்யப்பட்டன. கடற்கரைக் கப்பல் வியாபாரம் முழுதும் இந்திய மக்கள் வசமே யிருந்துவந்தது.

15-ம் நூற்றாண்டில் ஐரோப்பாவி லிருந்து இந்தியாவுக்கு கடல்மூலம் வழி கண்டுபிடிக்கப்பட்டது. ஐரோப்பிய நாட்டு மக்கள் ஒருவருக்குப் பின் ஒருவராக இந்தியாவுடன் வியாபாரம் செய்வதற்கு வந்துகொண் டிருந்தனர். நம் கைத்தொழில் சரக்குகளையும் வாசனைத் திரவியங்களையுமே அவர்கள் முதலில் வாங்கிச் சென்றார்கள். பருத்தி, கம்பளி, பட்டு இவைகளால் நெய்யப்பட்ட வஸ்திரங்களும், மிளகு முதலிய வாசனைத் திரவியங்களும் நம் நாட்டிலிருந்து ஏற்றுமதி

செய்யப்பட்டன. எவ்வளவு காலம் நம் கைத்தொழிற் சாமான்களை வாங்கி விற்று, லாபம்பெற முடிந்ததோ, அவ்வளவு காலம் நம் கைத்தொழில்களைக் கொண்டு லாபம் பெற்றனர். ஆனால் எப்பொழுது நம் கைத்தொழில்கள் அவர்கள்நாட்டுக் கைத்தொழில்களுக்கு போட்டியாக விருந்தனவென்று அவர்களுக்குத் தென்பட்டதோ, அந்நாளிலிருந்து நம் கைத் தொழில்களை அழிப்பதற்கு வேண்டிய முயற்சிகள் செய்யப்பட்டன. இதன் சரித்திரம் முன் பக்கங்களில் சிறிது கூறப்பட் டிருக்கிறது. இதன் காரணமாக நம் கைத்தொழில்கள் குன்றி, நம் வியாபாரத்தின் தன்மை மாறிக்கொண்டுவந்தது. இதுவரை நாம் ஒரு பெரிய கைத்தொழில் நாடாக விளங்கி நம் கைத்தொழில் சரக்குகளையே பிரதானமாய் ஏற்றுமதி செய்து வந்தோம்; நம் கைத்தொழில்களுக்கு வேண்டிய சரக்குகளும், நம் நாட்டில் கிடைக்காத சில சரக்குகளும், தங்கமும் இறக்குமதி செய்யப்பட்டன. தற்காலத்தில் நம் வியாபாரத்தின் தன்மை நேர் மாறுக விருக்கின்றது.

தற்கால வியாபாரம் :—நம் தற்கால வியாபாரத்தின் தன்மையை அறிவதற்குமுன், நம் நாட்டில் எந்தச் சரக்குகள், எவ்வளவு ரூபாய் பெறுமானவை இறக்குமதி செய்யப்படுகின்றன வென்றும், அச் சரக்குகளின் இறக்குமதி நம் மொத்த இறக்குமதியில் 100-க்கு எவ்வளவு பங்காகிறது என்றும், இம் மாதிரியே நம் ஏற்றுமதிக் கணக்குகளுடைய விவரங்களையும் நாம் தெரிந்துகொள்ள வேண்டியது அவசியம். 1928-29ம் வருஷத்திய இறக்குமதிக் கணக்கும், ஏற்றுமதிக் கணக்கும் அடுத்த பக்கத்தில் கொடுக்கப்பட்டிருக்கிறது.

## 1928-29-ம் வருஷத்திய இறக்குமதிக் கணக்கு †

| சரக்குகளின் விவரம் | அவைகளின் மதிப்பு லக்ஷ ரூபாய்களில் | மொத்த இறக்கு மதியில் 100க்கு எவ்வளவு பங்கு |
|---|---|---|
| பருத்திநூல் சாமான்கள் | 67,15 | 26·51 |
| உலோகங்கள் | 26,98 | 10·65 |
| யந்திரங்கள் வகையரா | 18,36 | 7·25 |
| சர்க்கரை | 16,08 | 6·35 |
| எண்ணெய்கள் | 11,53 | 4·55 |
| வண்டிகள் | 11,00 | 4·34 |
| பருப்புவகைகள் | 10,72 | 4·24 |
| மிட்டாய் முதலியன | 6,21 | 2·45 |
| இரும்பு சாமான்கள் | 5,23 | 2·06 |
| கம்பளி சாமான்கள் வகையரா | 5,01 | 1·98 |
| பட்டும், பட்டுச் சாமான்களும் | 5,00 | 1·93 |
| கருவிகள் வகையரா | 4,91 | 1·94 |
| மதுபானங்கள் | 3,57 | 1·41 |
| காகிதம், அட்டை முதலியன | 3,29 | 1·30 |
| வாசனைத் திரவியங்கள் | 2,94 | 1·16 |
| ரப்பர் | 2,86 | 1·13 |
| சாயச் சாமான்கள் | 2,83 | 1·12 |
| புகையிலை | 2,74 | 1·08 |
| இராசயனச் சாமான்கள் | 2,47 | ·98 |
| கண்ணாடி சாமான்கள் | 2,37 | ·94 |
| மருந்துகள் | 2,02 | ·80 |
| உடைகள் (Apparel) | 1,82 | ·72 |
| காய் கனிகள் | 1,68 | ·66 |
| சோப்புகள் | 1,58 | ·62 |
| உப்பு | 1,46 | ·58 |
| வர்ணப் பூச்சுகள் | 1,44 | ·57 |
| பெண்கள் உடைகள் | 1,34 | ·53 |
| மற்ற சாமான்கள் | 30,71 | 12·10 |
| மொத்த இறக்குமதி | 253,30 | 100·00 |

Jathar & Beri's Indian Economics Vol. II Pages 246-247

## 1928-29-ம் வருஷத்திய ஏற்றுமதி விவரங்கள்.

| சரக்குகளின் விவரம் | அவைகளின் மதிப்பு லக்ஷ ரூபாய்களில் | மொத்த ஏற்று மதியில் 100க்கு எவ்வளவு பங்கு |
|---|---|---|
| சணல் | 32,34 | 9·80 |
| சணல் நெசவு சாமான்கள் | 56,90 | 17 24 |
| பஞ்சு | 66,69 | 20·20 |
| பஞ்சுநூல் நெசவு சாமான்கள் | 7,79 | 2·36 |
| பருப்பு வகைகள் | 33,69 | 10·21 |
| விதைகள் | 29,62 | 8 97 |
| தேயிலை | 26,60 | 8·06 |
| தோல்கள் பதனிடாதவை | 9,55 | 2·90 |
| ஷை பதனிட்டவை | 9,30 | 2·82 |
| உலோகங்கள் | 8,91 | 2·70 |
| அரக்கு | 8,64 | 2·62 |
| கம்பளி | 5,90 | 1·79 |
| பிண்ணாக்கு | 3,84 | 1·16 |
| மெழுகு (Paraffin wax) | 2,45 | ·74 |
| ரப்பர் | 1,99 | ·61 |
| மரங்கள், உத்தரங்கள் | 1,76 | ·54 |
| காப்பி | 1,69 | ·51 |
| வாசனைத் திரவியங்கள் | 1,58 | ·48 |
| அபினி | 1,57 | ·48 |
| மற்ற சாமான்கள் | 19,31 | 5·81 |
| மொத்த ஏற்றுமதி | 330,12 | 100·00 |

நம் வியாபாரத்தின் தன்மை:—மேற்கண்ட கணக்கு களைப் பார்த்ததும் நம் மனதில் ஒரு விஷயம் தெளிவாகப் புலப்படுகின்றது. அதாவது நம் இறக்குமதிச் சரக்குகளில் பெரும்பான்மை கைத் தொழில் சாமான்களாய் இருக் கின்றன. இவைகளில் முதலாவதாக நிற்பது பருத்தி நூல் துணிகள். இவை 1924-25-ம் வருஷத்தில் 86,57 லக்ஷம் ரூபாய்களுக்கும், 1927-28-ம் வருஷத்தில் 71,90

லக்ஷம் ரூபாய்களுக்கும், 1928-29-ம் வருஷத்தில் 67,15 லக்ஷம் ரூபாய்களுக்கும் இறக்குமதி செய்யப்பட்டன. 1928-29-ம் வருஷத்தில், 1924-25-ம் வருஷத்திய இறக்குமதியில் கால் பங்குக்கு மேல் இவ்வகை இறக்குமதி குறைந்திருந்தாலும், 1928-29-லும், மற்ற எல்லாச் சாக்குகளை விட அதிகமாய் இறக்குமதி செய்யப்பட்ட தென்பதைக் காணலாம். மொத்த இறக்குமதியில் 100 - க்கு 26·51 பங்கு பருத்தி நூல் கைத் தொழில் சாமான்களாய் இருக்கின்றன.

பருத்தி நூல் சாக்குகளுக்கு அடுத்தபடியாக உலோகங்களும், யந்திரங்களும், மற்ற இரும்புச் சாமான்களும் இறக்குமதி செய்யப்படுகின்றன. நமது இறக்குமதியில் இவைகளுக்கு அடுத்த ஸ்தானத்தை சர்க்கரைப் பெற்றிருப்பதைக் காணலாம். நாம் சென்ற நூற்றாண்டின் ஆரம்பத்திலும்கூட சர்க்கரை ஏற்றுமதி செய்துகொண்டிருந்தோம் என்பது முன் பக்கங்களில் சொல்லப்பட்டிருக்கிறது. ஆனல் சுமார் 16 கோடி ரூபாய் பெறுமான சர்க்கரையைத் தற்காலத்தில் இறக்குமதி செய்கின்றோம். மற்ற இறக்குமதிச் சாமான்களில் பெரும் பகுதியும் கைத் தொழில் சாமான்களா யிருப்பதைக் குறிப்பாக கவனிக்க வேண்டும். இறக்குமதிகளில், நம் நாட்டுக் கைத்தொழில்களை விருத்தி செய்வதற்காக சாமான்களில் யந்திரங்கள் தான் குறிப்பிடத் தக்கது. மற்ற சாமான்களில் பெரும் பகுதி நம் கைத் தொழில் விருத்திக்குச் சாதனமானவையல்ல என்பதையும் காண்க.

நம் ஏற்றுமதிகள் இதற்கு நேர் மாருக இருக்கின்றன. ஏற்றுமதிகளில் முதல் ஸ்தானம் பெற்றிருப்பது பஞ்சு. இது நூற்கும் தொழில், நெசவுத் தொழில், சாயம் போடு

தல் முதலிய கைத் தொழில்களுக்கு அடிப் படையாக விருப்பது; இது நம் நாட்டிலேயே கைத் தொழில்களில் உபயோகப்படுத்தப் படுமானால், நாம் லக்ஷக் கணக்கான தொழில் இல்லா மக்களுக்குத் தொழில் கொடுப்பதுடன், தேசத்திலும் அதிக செல்வம் உண்டாக்கியவர்க ளாவோம். ஆனால், இது அன்னிய நாடுகளுக்கு ஏற்றுமதி செய்யப் படுகிறது. அங்ஙனமே 32 கோடி ரூபாய் பெறுமான சணலும், $9\frac{1}{2}$ கோடி ரூபாய் பெறுமான பதனிடாத தோல்களும், பல ஆயிரக் கணக்கான மக்களுக்கு தொழிலும், தனமும் தரத் தக்கவை. இவையும் ஏற்றுமதி செய்யப்படுகின்றன. $29\frac{1}{2}$ கோடி ரூபாய்கள் பெறுமான விதைகள் ஏற்றுமதி செய்யப்படுகின்றன. இவ் விதைகள் எண்ணெய் எடுப்பதற்கு உபயோகப்படுத்தும் விதைகள். இவ் விதைகளிலிருந்து எண்ணெய் எடுக்க நம் நாட்டில் புதிய முறைத் தொழிற்சாலைகள் ஏற்படுத்தப்படுமானால், இத் தொழிலிலும் நாம் பெருவாரியான மக்களுக்குத் தொழில் கொடுத்து, லாபம் சம்பாதிப்பதுடன், பிண்ணாக்குகளை எருக்களாகவும் உபயோகித்து, இன்னும் கிளைக் கைத் தொழில்கள் பல செய்யவும் உதவியா யிருக்கும்.

நம் ஏற்றுமதி, இறக்குமதிகளில் கைத் தொழில் சாமான்களின் விகிதத்தைக் கணக்கிட்டுப் பார்த்ததில் பின் வருமாறு தெரிய வருகிறது. 1928-29-ம் வருஷத்தில் நம் நாட்டில் இறக்குமதியான 253 கோடி ரூபாய் சரக்குகளில் 180 கோடி ரூபாய்கள் கைத் தொழிற் சாமான்கள். அதாவது 100-க்கு 71-பங்கு கைத் தொழில் சாமான்களாய் இருக்கின்றன. 46 கோடி ரூபாய் சாமான்கள் உணவுப் பொருள்களாய் இருக்கின்றன. இவைகளில், சர்க்கரை, எண்ணெய்கள், தானியங்கள், மாவு தினுசுகள்,

மிட்டாய் வகைகளே முக்கியமாய் இருக்கின்றன. உணவுப் பொருட்களிலும் தானியங்களில் ஒரு பகுதியைத் தவிர, மற்றவை யாவும் கைத் தொழிற் சாமான்கள் என்பது அறியற்பாலது. இவை மொத்த இறக்குமதியில் 100-க்கு 18-பங்கு ஆகின்றன. நமது கைத் தொழில்களுக்குப் பிரயோஜனமாகக் கூடிய இறக்குமதிகள் சுமார் 22·6 கோடி ரூபாய் பெறுமான சாமான்கள் அதாவது மொத்த இறக்குமதியில் 100-க்கு 9 பங்கு ஆகின்றது. எனவே, நம் மொத்த இறக்குமதியில் 100-க்கு 9 பங்கு தான் நமது கைத் தொழில் விருத்திக்கு உபயோகப்படத் தக்கனவா யிருக்கின்றன.

நமது ஏற்றுமதி மொத்தம் 330 கோடி ரூபாய்களில் 170 கோடி ரூபாய்கள் பெறுமான சரக்குகள் பஞ்சு, சணல் முதலியவைகளைப்போல் கைத்தொழில் விருத்திக்கு அவசியமானவை. இவைகள் நம் நாட்டுக் கைத்தொழில்களை விருத்தி செய்வதற்குப் பிரயோஜனப் படுத்தப்படாமல் அன்னிய நாடுகளுக்கு அனுப்பப்படுகின்றன. அவை மொத்த ஏற்றுமதியில் 100-க்கு 51 பங்கு ஆகின்றன. அதற்கு அடுத்தபடியில் முழுதும் அல்லது ஒரு பகுதி கைத்தொழில் செய்யப்பட்ட சாமான்கள் 89·6 கோடி ரூபாய் பெறுமானவையா யிருக்கின்றன. இவை மொத்த ஏற்றுமதியில் 100-க்கு 27 பங்கு ஆகின்றன. உணவுப் பொருள்கள் புகையிலை வகையரா 67·3 கோடி ரூபாய் பெறுமானவை ஏற்றுமதி செய்யப்படுகின்றன. இவை மொத்த ஏற்றுமதியில் 100-க்கு 20 பங்கு ஆகின்றன. நமது ஏற்றுமதியில் ஒரு சிறு பகுதியே கைத்தொழில் சரக்குகள் என்றும், பெரும்பகுதி கைத்தொழில்களுக்கு ஆதாரவாக உதவும் சரக்குகள் என்றும் தெளிவாகப் புலப்படும்.

நாம் நம் கைத்தொழில்களை விருத்தி செய்ய வேண்டுமானால், நம் நாட்டில் விருத்தி செய்யக்கூடிய கைத்தொழில் சரக்குகளை பிற தேசங்களிலிருந்து இறக்குமதி செய்யலாகாது. நமது கைத்தொழில் விருத்திக்கு ஆதாரமாகயிருக்கும், பஞ்சு, சணல், விதைகள் முதலிய சரக்குகளை ஏற்றுமதியும் செய்யக்கூடாது. இச் சரக்குகளைக் கொண்டு நம் நாட்டில் கைத்தொழில்களை விருத்தி செய்யவேண்டும்.

நம் ஏற்றுமதியில் 67·3 கோடி ரூபாய் பெறுமான தானியங்கள் வகையரா உணவுப் பொருட்களை அனுப்புவதும் குறிப்பிடத் தக்கது. நம் நாட்டில் லக்ஷக்கணக்கான மக்கள் ஒரு நாளில் ஒரு வேளைகூட சரியான உணவின்றித் தவிக்கின்றார்கள். பலர் உணவின்றிப் பசியால் இறக்கின்றனர். இன்னும் சிலர் கால் வயிற்றுக்கு, அரை வயிற்றுக்குக் கஞ்சி சாப்பிட்டு ரஸ்தாக்களிலும் மர நிழல்களிலும் வாழுகின்றனர். இங்ஙனம் லக்ஷக்கணக்கான நம் மக்கள் உணவின்றித் தவித்துக் கொண்டிருக்க சுமார் 67 கோடி ரூபாய் பெறுமான உணவு பொருட்களை நாட்டிலிருந்து அன்னிய நாட்டுக்கு ஏற்றுமதி செய்வது ஆச்சரிய மல்லவா? இதற்குக் காரணம் என்ன?

நம் மக்களில் லக்ஷக்கணக்கான பேர்களுக்கு தகுந்த தொழில்கள் இல்லை. ஆதலால், அவர்கள் சரியாக சம்பாதிக்க முடிவதில்லை. அதன் காரணமாக நம் நாட்டில் நம்முடைய சராசரி வரும்படி வருஷத்துக்கு சுமார் ரூ. 45 கணக்குப் போடப்பட்டிருக்கிறது. இங்கிலாந்து, யுனைடெட் ஸ்டேட்ஸ் முதலிய நாடுகளில் கைத்தொழில்களை நன்முக விருத்தி செய்திருக்கிற படியால் அவர்கள் சராசரி வரும்படி மிகவும் அதிகமா யிருக்கின்றது. யுனைடெட் ஸ்டேட்ஸில் சராசரி வருஷ வரும்படி 72 பவுன்கள் அதா

வது 1080 ரூபாயாகவும், இங்கிலாந்தின் சராசரி வருஷ வரும்படி 50 பவுன்கள் அதாவது 750 ரூபாயாகவும் கணக்குப்போடப் பட்டிருக்கிறது. (இதைப்பற்றி விவரங்களை பின் பக்கங்களில் காண்போம்.) ஆகையால் அதிக வருமானத்தையுடைய அன்னிய நாட்டார்கள் நம் நாட்டுக்கு வந்து, நாம் கொடுக்கக் கூடியதைவிட அதிகவிலை கொடுத்து நம் உணவும் பொருள்களை வாங்கிச் செல்கின்றனர். இவ்விதம் உணவுப் பொருள்கள் ஏற்றுமதி செய்யப்படுகிற படியால் நம் மக்கள் உண்பதற்கு உணவின்றி வருந்துகின்றனர்.

நமது கைத்தொழில்களை விருத்தி செய்வதே இவ் வறுமையை அகற்றுவதற்குச் சிறந்த உபாயமாகும்.

நாம் வியாபாரம் செய்யும் நாடுகள்:—இதுவரை நம் அன்னியநாட்டு வியாபாரத்தின் தன்மையைப் பற்றியும், இவ் வியாபாரம் நமது கைத்தொழில்களின் முன்னேற்றத்திற்கு ஏற்றவாறு இல்லை என்பதைப் பற்றியும் ஆராய்ந்தோம். இனிமேல் நாம் வியாபாரம் செய்யும் முக்கிய நாடுகளைப் பற்றியும், எந்த நாடுகளில் எந்த சாமான்களில் வியாபாரம் செய்கிறோம் என்ற விவரங்களைப் பற்றியும் ஆராய்வோம்.

நம் இறக்குமதி வியாபாரத்தில் முக்கிய நாடுகளையும், அந்த நாடுகளிலிருந்து வந்த சரக்குகள், முறையே 1913-14 1918-19, 1922-23, 1927-28, 1928-29-ம் வருஷங்களில் நம் மொத்த இறக்குமதிகளில் 100-க்கு எத்தனை பங்குகள் ஆகின்றன வென்பதையும் அடுத்த பக்கத்தில் காண்பிக்கப் பட்டிருக்கிறது.

இறக்குமதி வியாபார விவரம் †

| தேசங்களின் பெயர். | 1913-14 | 1918-19 | 1922-33 | 1927-28 | 1928-29 |
|---|---|---|---|---|---|
| இங்கிலாந்து ... ... | 64.1 | 45·5 | 60.2 | 47·7 | 44·7 |
| ஜர்மனி ... ... | 6·9 | | 5·1 | 6·1 | 6·3 |
| ஜாவா ... ... | 5·8 | 6·6 | 5·5 | 5·9 | 6·5 |
| யுனைடெட் ஸ்டேட்ஸ் ஆப் அமெரிக்கா ... ... | 2 6 | 9·5 | 5·7 | 8·2 | 6·9 |
| பெல்ஜியம் ... ... | 2·3 | ·8 | 2.7 | 3·0 | 2·8 |
| பாரசீகம், அராபியா வகையரா ... | 1·5 | | | 1·8 | 1·6 |
| பிரான்சு ... ... | 1 5 | 1·1 | ·8 | 1·7 | 1·9 |
| இத்தாலியா ... ... | 1 2 | ·5 | ·9 | 2·7 | 2·9 |
| சீனு ... ... | ·9 | 1·4 | 1 2 | 1 8 | 1.7 |
| ஜப்பான் ... ... | 2·6 | 19 8 | 6·2 | 7 2 | 7·0 |

நம் ஏற்றுமதி வியாபாரத்தில் முக்கியமான நாடுகளேயும், அந்த நாடுகளிலிருந்து வந்த சரக்குகள் முறையே 1913-14, 1918-19, 1922-23, 1927-28, 1928-29-ம் வருஷங்களில் நம் மொத்த ஏற்றுமதியில் 100-க்கு எவ்வளவு பாகம் ஆகின்றதென்பதும் அடுத்த பக்கத்தில் காண்பிக்கப் பட்டிருக்கிறது.

† Page 250 251 Jathar &Beri's Indian Economics Vol II.

ஏற்றுமதி வியாபார விவரம் †

| தேசங்களின் பெயர் | 1913-14 | 1918-19 | 1922-23 | 1927-28 | 1928-29 |
|---|---|---|---|---|---|
| இங்கிலாந்து ... | 23·4 | 29·2 | 22 0 | 25·0 | 21·4 |
| ஜர்மனி ... | 10 6 | | 7·5 | 9·9 | 9·6 |
| ஜப்பான் ... | 9 2 | 12·1 | 13·4 | 8·9 | 10·2 |
| யுனைடெட் ஸ்டேட்ஸ் ... | 8·9 | 13·8 | 11·5 | 11·1 | 11·8 |
| பிரான்சு ... | 7·1 | 3 6 | 5·1 | 4·9 | 5·3 |
| பெல்ஜியம் ... | 9 4 | ·004 | 3.8 | 3·3 | 4·0 |
| இலங்கை ... | 3·7 | 4·2 | 4 1 | 4 8 | 4·2 |
| பாரசீகம், அராபிய வகையரா. | 3·2 | 4·0 | 3 4 | 2·3 | 1·8 |
| இத்தாலி ... | 3 2 | 2·2 | 2·2 | 3·9 | 4·5 |
| சீனு ஜாவா முதலிய கீழ் நாடுகள். | 9·1 | 5 4 | 8·1 | 5·6 | 7·0 |
| மற்ற ஐரோப்பிய நாடுகள் ... (ஆஸ்ட்ரேலியா உள்பட) | 5·2 | 2·6 | 3·103 | 5·6 | 5·5 |

மேற்கண்ட கணக்குகளிலிருந்து விளங்குவதாவது: இங்கிலாந்திலிருந்தே, மற்ற தேசங்கள் எல்லாவற்றைக் காட்டிலும் அதிக சரக்குகள் நம் நாட்டில் இறக்குமதி செய்யப்படுகிறது. ஆனால் வருஷத்துக்கு வருஷம் இது குறைந்து வருகிறது. 1913-14-ல் நம் மொத்த இறக்குமதியில் 100-க்கு 64·1 பங்கு சரக்குகள் இங்கிலாந்திலிருந்து வந்தவை. ஆனால் அது 1928-29-ல் 44·7 ஆக குறைந்திருப்பதைக் காணலாம். இங்கிலாந்துச் சரக்குகளின் இறக்குமதி குறைந்ததற்குக் காரணம், யுனைடெட் ஸ்டேட்ஸ் ஆப் அமெரிக்கா, ஜப்பான்—இத் தேசங்களுடைய போட்டியே. இங்கிலாந்தின் வியாபாரம் குறைந்ததற்குத் தக்கப்படி இவ்விரண்டு தேசங்களின் வியாபாரமும் அதிகமாயிருப்பதைக் காணலாம். 1913-14-ல் யுனைடெட் ஸ்டேட்ஸின் இறக்குமதிக்கு 100-க்கு 2·6 ஆகவும் ஜப்பானுடைய இறக்குமதிகள 100-க்கு 2·6 ஆகவும் இருந்தவை 1928-29-ல் முறையே 6·3 ஆகவும் 7·0 ஆகவும் உயர்ந்திருக்கின்றது.

நம் ஏற்றுமதிச் சரக்குகள் பல வேறு தேசங்களுக்கு அனுப்பப்பட்டாலும், அதிகமான சரக்குகள் இங்கிலாந்துக்கே அனுப்பப்படுகின்றன என்பதும் மேல்கண்ட கணக்குகளிலிருந்து விளங்கும். ஜர்மனி, ஜப்பான், யுனைடெட் ஸ்டேட்ஸ் தேசங்களும் நம் ஏற்றுமதிச் சரக்குகளை அதிகமாய் வாங்குகின்றன. நம் இறக்குமதி ஏற்றுமதிச் சரக்குகளின் விவரங்களும் எச் சரக்குகள் எந் நாடுகளிலிருந்து இறக்குமதி செய்யப் படுகின்றன வென்பதும், எச் சரக்குகள் எந் நாடுகளுக்கு ஏற்றுமதி செய்யப்படுகின்றன வென்பதும் கீழ்கண்ட கணக்குகளிலிருந்து விளங்கும்.†

இறக்குமதி விவரங்கள்—ஒவ்வொரு சரக்கிலும் 100-க்கு எவ்வளவு பங்குகள்.

| தேசத்தின் பெயர் | பருத்தி நூல் சரக்குகள் | | சர்க்கரை | | இரும்பு எஃகு | | யந்திரங்கள் | |
|---|---|---|---|---|---|---|---|---|
| | 1913-14 | 1928-29 | 1913-14 | 1928-29 | 1913-14 | 1928-29 | 1913-14 | 1928-29 |
| இங்கிலாந்து ... | 90·1 | 71·3 | 1·8 | ··6 | 69 9 | 64·5 | 89·8 | 76·8 |
| யுனைடெட் ஸ்டேட்ஸ். | ·4 | 1·3 | | | 2·6 | 3·0 | 3·3 | 11·3 |
| ஜர்மனி ... | 2 1 | ·5 | ·1 | | 14·5 | 5·3 | 5·6 | 6·2 |
| பெல்ஜியம் ... | | ·4 | | | 11·5 | 20 1 | | |
| ஜப்பான் ... | 1·8 | 18·3 | | | | | | |
| பிரான்சு ... | | ·2 | | | | 4·0 | | |
| இத்தாலி ... | 1·5 | 2·2 | | | | | | |
| ஜாவா ... | | | 71·8 | 97 7 | | | | |
| மரிஷஸ் (Mauritius.) | | | 16·9 | | | | | |
| சீனா ... | ·1 | 2·7 | | | | | | |

† Page 256 Jathar and Beri's Indian Economics Vol. II

| தேசங்களின் பெயர். | இரும்புச் சாமான்கள் (Hard-ware) | | மோட்டார் கார்கள் வகையரா | | பெட்ரோல், மண் எண்ணெய் முதலிய (mineral) எண்ணெய்கள் | | காகிதம் | |
|---|---|---|---|---|---|---|---|---|
| | 1913-14 | 1928-29 | 1913-14 | 1928-29 | 1913-14 | 1928-29 | | |
| இங்கிலாந்து ... | 57·2 | 36·0 | 71·3 | 20·9 | 5·7 | 1·9 | 56·0 | 37·3 |
| யுனைடெட் ஸ்டேட்ஸ் ... | 9·7 | 11·7 | 15·1 | 47·0 | 56·1 | 24·5 | | 2·4 |
| ஜர்மனி ... | 18·2 | 32·2 | | | 7·3 | 3·7 | 17·0 | 13·3 |
| பெல்ஜியம் ... | | 1·0 | 4·5 | ·2 | | | | |
| ஜப்பான் ... | . 1·5 | 5·5 | | | | | | |
| பிரான்சு ... | | 9 | 4·5 | 1·3 | | | | 1·2 |
| நார்வே ... | | | | | | | 5·0 | 11·2 |
| ஸ்வீடன் ... | | | | | | | 3·1 | 7·4 |
| கனடா ... | | | | 25·4 | | | | |
| போர்னியோ ... | | | | | 21·8 | 12·9 | | |
| ருஷியா ... | | | | | 3·7 | 29·7 | | |
| சீனு ... | | | | | ·9 | 21·8 | | |

மேற்கண்ட கணக்குகளிலிருந்து பருத்தி நூல் சாமான்கள், சர்க்கரை, எஃகு சாமான்கள், யந்திரங்கள், இரும்பு சாமான்கள் வகையரா, மோட்டார் கார்கள், பெட்ரோல் மண்ணெண்ணெய் முதலிய எண்ணெய்கள் இவைகள்தான் நம்முக்கிய இறக்குமதிகள் எனத் தெரியவரும். இவைகளில் பருத்திக் கைத்தொழிற் சாமான்கள், எஃகு, இரும்பு, மோட்டார்கார்கள் காகிதம்— இச் சாக்குகளின் பெரும் பகுதி 1913-14-ல் இங்கிலாந்திலிருந்து இறக்குமதி செய்யப் பட்டது. ஆனல், 1928-29-ல் இச்சாக்குகள் எல்லாவற்றி லும் இங்கிலாந்தின் விகிதம் குறைந்திருப்பது குறிப்பிடத்

தக்கது. பருத்திக் கைத்தொழிற் சாமான்களில் ஜப்பான் இங்கிலாந்திற்கு முக்கிய போட்டியாக இருக்கிறது. எஃகு சாமான்களில் பெல்ஜியமும், யந்திரங்களில் யுனைடெட் ஸ்டேட்ஸுசும், இரும்பு சாமான்களில் ஜர்மனியும், மோட்டார்களில் யுனைடெட் ஸ்டேட்ஸுசும், கனடாவும், காகிதத்தில் நார்வே ஸ்வீடனும் இங்கிலாந்திற்குப் போட்டியாக யிருக்கின்றன. சர்க்கரை அநேகமாய் முழுதும் ஜாவாவிலிருந்து வருகின்றது. பெட்ரோல், மண்ணெண்ணெய் முதலிய எண்ணெய்கள் யுனைடெட் ஸ்டேட்ஸ், ருஷியா, சீன தேசங்களிலிருந்து வருகின்றன.

1929-30, 1930-31, 1931-32 வருஷங்களில் ஆங்கிலச் சாக்குகளின் இறக்குமதி இன்னும் ஏராளமாய்க் குறைந்திருக்கிறது. 1930-31-ல் நடந்த சட்டமறுப்பு ராஜீயப் போரும் 1932-ம் வருஷத்து ஆரம்பத்தில் ஆரம்பிக்கப்பட்டு இன்னும் நடந்துவரும் ராஜீயப்போருமே இதற்கு முக்கியமான காரணங்கள். இப்போர்களில் இங்கிலாந்தின் சரக்குகள் இந்திய மக்களின் பெரும்பான்மையோரால் பஹிஷ்காரம் செய்யப்பட்டன. இப்போரை நடத்திவரும் காங்கிரஸ் மஹா சபையார் ஆங்கிலச் சரக்குகளின் பஹிஷ்காரத்தை, தங்கள் போர்த்திட்டத்தில் ஒரு முக்கிய அம்சமாகக் கொண்டிருப்பதால் ஆங்கிலச் சரக்குகள் இந்திய மக்களில் பெரும்பான்மையோரால் வாங்கப்படுவதில்லை. கவர்ன்மெண்டின் அடக்குமுறைக் கொடுமைகளும், மக்கள் மனதில் துவேஷத்தை யுண்டாக்கி, பகிஷ்கார இயக்கத்திற்கு உதவி செய்திருக்கின்றன. எனவே, ஆங்கிலச் சரக்குகளின் இறக்குமதி மிகவும் குறைந்திருக்கின்றது. இதுவே தருணமென்று மற்ற நாடுகள் இந்தியாவின் வியாபாரத்தைக் கைப்பற்ற முயற்சி செய்து வருகின்றன.

1930-31-ல் நடந்த ராஜீயப்போரின் காரணமாக எல்லா அந்நிய நாட்டுச் சாமான்களின் இறக்குமதியும் குறைந்திருப்பதைக் கீழே காண்க. குறைவு நன்றாக விளங்கும் பொருட்டு 1927-28, 1929-30-ம் வருஷத்திய கணக்குகளும் கொடுக்கப் பட்டிருக்கின்றன. நம்மக்களுக்கு சாக்கு

களை வாங்குவதற்கு சக்தி குறைந்ததும் (Loss of Purchasing power), அவர்கள் ஏழ்மையும் இக்குறைந்த இறக்குமதிகளுக்கு மற்ற காரணங்களாய்ச் சொல்லப்படுகிறது. முக்கிய இறக்குமதிச் சரக்குகளின் விவரங்கள் மாத்திரம் கொடுக்கப் பட்டிருக்கின்றன.

முக்கிய இறக்குமதிகள் — ஆயிரம் ரூபாய்களில்.

| † சரக்கு விவரம் | 1928-29 | 1929-30 | 1930-31 |
|---|---|---|---|
| பஞ்சும் பஞ்சுநூல் சரக்குகளும். | 67,15,16 | 62 90,88 | 31,64,40 |
| உலோகங்கள் ... | 26,98,84 | 23,61,91 | 15,92,26 |
| யந்திரங்கள் ... | 18,36,04 | 18,21,85 | 14,34,78 |
| சர்க்கரை ... | 16,08,95 | 15,77,65 | 10,96,47 |
| எண்ணெய்கள் ... | 11,53,23 | 11,68,65 | 10,92,25 |
| வண்டிகள் ... | 11,00,60 | 10,84,73 | 7,30,53 |
| மிட்டாய் தினுசுகள் ... | 6,21,24 | 5,63,61 | 4,87,79 |
| கருவிகள் வகையரா ... | 4,91,71 | 5,38,20 | 4,77,47 |
| இரும்புச் சாமான்கள் ... | 5,23,28 | 5,06,65 | 3,60,28 |
| மதுபானம் ... | 3,57,16 | 3,76,63 | 3,31,76 |
| பட்டு, நூலும் நெய்தவையும். | 5,00,67 | 4,58,43 | 2,99,92 |
| காகிதம் வகையரா ... | 3,29,95 | 3,72,31 | 2,86,74 |
| தான்யம், மாவு வகையரா. | 10,72,81 | 5,42,05 | 2,81,63 |
| உப்பு ... | 1,46,82 | 1,30,39 | 1,17,79 |

இந்தியாவின் மொத்த இறக்குமதி, 1927-28-ல் 249,83,64 ஆயிரம் ரூபாயும், 1929-30-ல் 253,30,60 ஆயிரம் ரூபாயுமாயிருந்தது 1930-31-ல் 164,82,09 ஆயிரம் ரூபாயாகக் குறைந்தது.

† Page 839 The Indian Year Book 1932, published by The Times of India Press, Bombay.

1930-31-ல், 1929-30-ம் வருஷத்திய கணக்குடன் ஒப்பிட்டுப் பார்த்தால் மொத்த இறக்குமதிகளில் 100-க்கு 31·5 குறைந்திருக்கிறது. ஆனால் பருத்தி கைத்தொழிற் சாமான்களில் 1930-31-ல் 100-க்கு 57 குறைந்திருக்கிறது. இக்குறைவின் விவரங்கள் கீழே காண்பிக்கப்பட்டிருக்கின்றன †

லக்ஷ ரூபாய்களில்

| சரக்கு விவரம் | 1928-29 | 1929-30 | 1930-31 |
|---|---|---|---|
| நூல்கள் ... | 629 | 600 | 308 |
| ஜவுளித் தினுசுகள் (Piece Goods). | | | |
| வெளுக்காதவை (Grey) ... | 2,019 | 2,093 | 687 |
| வெளுத்தவை (White) ... | 1,533 | 1,327 | 620 |
| சாயம் போட்டவை (Coloured) | 1,735 | 1,515 | 682 |
| பென்ட்ஸ் (Fents) ... | 94 | 90 | 16 |
| ஜவுளி தினுசுகள் மொத்தம் ... | 5,081 | 5,025 | 2,005 |
| பின்னல் துணிகள் (Hosiery) பனியன் முதலியன. | 145 | 144 | 88 |
| சால்வைகள், கைகுட்டைகள் ... | 16 | 17 | 5 |
| தைக்கும் நூல்கள், கயிறுகள் வகையரா (Thread) | 71 | 81 | 60 |
| மற்றவைகள் ... | 82 | 82 | 59 |
| மொத்தம் பருத்திக் கைத்தொழில் சரக்குகள். | 6,324 | 5,949 | 2,525 |

† Page 843 The Indian Year Book 1932 published by the Times of India Press, Bombay.

பருத்தி கைத்தொழிற் சாமான் இறக்குமதியில் முக்கியமானவை ஜவுளிதினுசுகள்தான். இவ்வகை மொத்த இறக்குமதியில் 1928-29-ல் 53,81 லக்ஷ ரூபாய்களுக்கும் 1929-30-ல் 50,25 லக்ஷ ரூபாய்களுக்கும் 1930-31-ல் 20,05 லக்ஷ ரூபாய்களுக்கும் ஜவுளி தினுசுகள் இறக்குமதி செய்யப்பட்டிருக்கின்றன. † ஆனால் இந்த முக்கியமான வியாபாரத்திலும் ஜப்பான் போட்டியின் காரணமாக இங்கிலாந்தின் வியாபாரம் குறைந்து வருகிறது. ஜப்பான் வியாபாரத்தின் வளர்ச்சியும் இங்கிலாந்து வியாபாரத்தின் குறைவும் கீழே காண்க.

மொத்த இறக்குமதியில் 100-க்கு எவ்வளவு பங்குகள். §

| ஜவுளித்தினுசுகள் | 1913-14 | | 1927-28 | | 1929-30 | | 1930-31 | |
|---|---|---|---|---|---|---|---|---|
| | இங்கிலாந்து | ஜப்பான் | இங்கிலாந்து | ஜப்பான் | இங்கிலாந்து | ஜப்பான் | இங்கிலாந்து | ஜப்பான் |
| வெளுக்காதவை ... | 98·8 | ·5 | 74 ·4 | 24·5 | 56·2 | 42·5 | 39 2 | 59·8 |
| வெளுத்தவை ... | 98·5 | | 94 ·7 | 1·0 | 92·1 | 2·9 | 84·6 | 10·3 |
| சாயம் போட்டவை | 92·6 | ·2 | 69.8 | 20·3 | [illegible]7·6 | 31·9 | 60·0 | 30·2 |

† Page 840 The Indian year Book 1932 published by the Times of India Press, Bombay.

§ Indian year Book 1932 P. 842.

**ஏற்றுமதி விவரங்கள்:**—நம் தேசத்திலிருந்து ஏற்றுமதி செய்யப்படும் முக்கியமான சாக்குகளையும் இம்மொத்த ஏற்றுமதியில் ஒவ்வொரு சாக்கும் எந்தெந்த நாடுகளால் 100-க்கு எவ்வளவு பங்கு வாங்கப்படுகின்றன வென்றும் காண்பிக்கப் பட்டிருக்கின்றன. †

| தேசத்தின் பெயர் | தேயிலை | | சணல் raw | | சணல் சாமான்கள் | | பஞ்சு | |
|---|---|---|---|---|---|---|---|---|
| | 1913-14 | 1928-29 | 1913-14 | 1928-29 | 1913-14 | 1928-29 | 1913-14 | 1928-29 |
| இங்கிலாந்து ... | 72·4 | 84.0 | 38·0 | 23·4 | 6.3 | 4·8 | 3·5 | 6·7 |
| கனடா ... | 4·3 | 2·6 | | | | 2·7 | | |
| ஆஸ்திரேலியா ... | 3·1 | 1·4 | | | 10·6 | 10·4 | | |
| யுனைடெட் ஸ்டேட்ஸ். | ·7 | 2·2 | 11·9 | 10·6 | 41·5 | 35.5 | | |
| ஜர்மனி ... | | | 21·8 | 27·7 | | | 14·6 | 8·6 |
| ஜப்பான் ... | | | | 1·1 | ·5 | ·8 | 47·2 | 43·8 |
| பிரான்சு ... | | | 9·9 | 12·5 | | | | |
| இத்தாலி ... | | | 5·5 | 7·0 | | | 7·7 | 10·0 |
| பெல்ஜியம் ... | | | ·5 | 5·9 | | ·5 | 10·3 | 9·3 |
| ஆர்ஜென்டைனு | | | | ·7 | 10·4 | 13·3 | | |

† Page 257 Jathar and Beri's Indian Economics Vol II.

| தேசத்தின் பெயர் | தோல்கள் (பதனிட்டவையும், பதனிடாதவையும்) | | எண்ணெய் விதைகள் | | தானியங்கள் | |
|---|---|---|---|---|---|---|
| | 1913-14 | 1928-29 | 1913-14 | 1928-29 | 1913-14 | 1928-29 |
| இங்கிலாந்து ... | 25·9 | 43·8 | 22·2 | 14·0 | 26·7 | 6·9 |
| யுனைடெட் ஸ்டேட்ஸ் ... | 24·3 | 26·7 | 1·2 | 4·0 | | ·2 |
| ஜர்மனி ... | 20·3 | 10·5 | 16·0 | 21·3 | 7·8 | 11·7 |
| ஜப்பான் ... | | 2·0 | | 1·4 | 3·8 | 1·2 |
| பிரான்சு ... | | 3·1 | 31·4 | 23·8 | | ·3 |
| இத்தாலி ... | 5·3 | 3·0 | 5·0 | 14·4 | | 1·8 |
| பெல்ஜியம் ... | | 1·2 | 16·0 | 1·9 | | 1·2 |
| இலங்கை ... | | | | ·4 | 11·5 | 22·1 |

நாம் ஏற்றுமதி செய்யும் சாக்குகள் முக்கியமானவை தேயிலை, சணல், சணல் சாமான்கள், பஞ்சு, தோல்கள், எண்ணெய் விதைகள். இவைகளில் சணல் கைத்தொழிற் சமான்களைத் தவிர மற்றவை எல்லாம் உணவுப் பொருள் கள், அல்லது கைத்தொழில்களுக்கு வேண்டிய சாமான்கள். தானியங்களும், தேயிலையும், உணவுப்பொருள்கள். சணல், பஞ்சு, தோல்கள் பல பெரிய கைத்தொழில்களுக்கு ஆதார மா யிருக்கக்கூடியவை. எண்ணெய் விதைகள், எண்ணெய் எடுக்கும் தொழில்களுக்கு ஆதாரமாயிருப்பதுடன், உணவுப் பொருளாயுமிருக்கின்றன.

தேயிலையில் பெரும் பகுதி இங்கிலாந்தில் வாங்கப்படு கின்றது. அங்ஙனமே தோல்களின் பெரும் பகுதி இங்கி

லாந்திற்கு ஏற்றுமதி செய்யப்படுகின்றது. யுனைடெட் ஸ்டேட்ஸ், ஆர்ஜென்டைனா, ஆஸ்திரேலியா தேசங்கள் நமது சணல் கைத்தொழிற் சாமான்களை வாங்குகின்றன. இங்கிலாந்து யுனைடெட் ஸ்டேட்ஸ், ஜெர்மனி முதலிய தேசங்களுக்கு சணல் ஏற்றுமதி செய்யப்படுகின்றது. நமது பஞ்சு பெரும்பகுதி ஜப்பானுக்கும், இத்தாலி, பெல்ஜியம், சீனா தேசங்களுக்கும் அனுப்பப்படுகின்றது. தோல்கள் இங்கிலாந்தைத் தவிர யுனைடெட் ஸ்டேட்ஸுக்கும், ஜர்மனிக்கும் அனுப்பப்படுகின்றன. எண்ணெய் விதைகள் பிரான்சு, ஜர்மனி, இத்தாலி, இங்கிலாந்து முதலிய நாடுகளுக்கு அனுப்பப்படுகின்றன. உணவுப் பொருள்கள் இலங்கை, ஜர்மனி முதலிய நாடுகளுக்கு அனுப்பப்படுகின்றன.



# பதினொன்றாவது அதிகாரம்



அன்னியநாட்டு வியாபாரம் :—(தொடர்ச்சி)

முன் பக்கங்களில் நம் தேசத்து அன்னியநாட்டு வியாபாரத்தின் தன்மையைப்பற்றி விளக்கப்பட்டது. நாம் எந்தெந்த தேசங்களுடன் வியாபார சம்பந்தம் வைத்துக்கொண்டிருக்கிறோம், எந்தெந்த நாடுகளிலிருந்து எந்தெந்த சரக்குகள் இறக்குமதி செய்யப்படுகின்றன, அச்சரக்குகள் எத்தன்மையானவை, எம்மாதிரி சரக்குகள் நம் தேசத்திலிருந்து ஏற்றுமதி செய்யப்படுகின்றன என ஆராயப்பட்டது. நம் வெளி

வியாபாரத்தில் நமக்கு லாபமா அல்லது நஷ்டமா வென்பதைப்பற்றி நாமிங்கு ஆராய்வோம்.

அன்னியநாட்டு வியாபாரத்தின் லாப நஷ்டம் :— (Balance of Trade) ஒரு வியாபாரி ஒரு சரக்கை குறைந்த விலைக்கு வாங்கி அதிக விலைக்கு விற்ருல் அவன் லாபம் பெறுபவனுகச் சொல்லப்படுவான், அல்லது அவன் அச்சாமானை உண்டாக்குபவனுயிருந்தால், அச்சாமானில் செலவிட்டதைவிட அதிக விலைக்கு விற்ருல்தான் அவன் லாபம் பெற்றவனுவான். உதாரணமாக ரூ. 100 பெறுமான சரக்கை ரூ. 110-க்கு அதாவது அசலுக்கு மேலான ஒரு தொகைக்கு விற்ருல், அசலுக்கு மேலிருக்கும் அந்த ரூ. 10 அவனுடைய லாபமாகக் கருதப்படும். அப்படியில்லாமல் ரூ. 100 பெறுமான சரக்குகளை ரூ. 90-க்கு விற்பாணுகில் அவன் நஷ்டமடைவான். அதாவது அவன் முதலில் ரூ. 10 குறைந்துவிடும். இம்மாதிரியே தேசங்களின் வியாபாரங்களும்.

ஒரு தேசத்தார் அதிகமான தொகைக்குச் சாமான்களை விற்று, குறைந்த தொகைக்கே வாங்குவார்களாகுல் அந்த வியாபாரத்தில் அவர்களுக்கு அதிக செல்வமுண்டாகும். உதாரணமாக ரூ. 120 கோடி பெறுமான சாமான்களைப் பிறதேசங்களுக்கு விற்று நாம் ரூ. 100 கோடிக்கே பிறதேசங்களிலிருந்து சாமான்களை வாங்குவோமாகுல் இவைகளின் வித்தியாசமாகிய ரூ. 20 கோடி நம் தேசத்திற்குள் ரொக்கமாய்க் கொண்டுவரப்படும். இப்பொழுது நம் வியாபாரம் நமக்கு லாபகரமாக விருப்பதாக சொல்லப்படும். ஆனுல் நாம் அதிக தொகை பெறுமான சரக்குகளை பிற

தேசத்தாரிடம் வாங்கி குறைந்த தொகை பெறுமான சாக்கு களை விற்ருல் அப்பொழுது நம் வியாபாரத்தால் நாம் நஷ்ட மடைந்ததாகச் சொல்லப்படுவோம். ஏனெனில் நம் ஏற்று மதியைவிட அதிகமாகவிருக்கும் இறக்குமதித் தொகைக்கு நாம் ரொக்கமாக தங்கம் அல்லது வெள்ளியில் அனுப்ப வேண்டியிருக்கும்.

ஒரு தேசத்தினுடைய வியாபாரத்தின் லாபநஷ்டத் தைக் கணக்கிடுவது மேற்கண்டபடி அவ்வளவு சுலபமான விஷயமல்ல. ஏனெனில் ஒரு தேசத்திலிருந்து எத்தனையோ துறைகளில் பொருட்களும் செல்வமும் வெளியே செல்கின் றன; எத்தனையோ வழிகளில் உள்ளே வருகின்றன. இவை களில் எல்லாத் துறைகளுக்கும் கணக்குகள் வைக்கப்படுகிற தில்லை. கணக்குகள் வைப்பதும் மிகக் கடினம். ஆகையால் செல்வம் தேசத்திற்குள்வரும் எல்லாத் துறைகளையும்,தேசத் திற்கு வெளியே செல்லும் எல்லாத் துறைகளையும் சரியாகக் கணக்கிட்டுப் பார்த்தாலொழிய நம் வியாபாரத்தின் உண்மை நிலையும், அதில் நமக்கு லாபமா நஷ்டமா வென்பதையும் அறியமுடியாது. சாதாரணமாக கணக்குகள் வைக்கப்பட் டிருக்கும் சில துறைகளைக் கொண்டு மாத்திரம் நமது வியா பாரத்தின் லாப நஷ்டக் கணக்கு போடப்படுகிறது. மற்ற துறைகளின் கணக்கு நமக்கு தெரியாததால், ஏற்றுமதி இறக்குமதி விவரங்களைக்கொண்டு மாத்திரம் நம் தேசத்தின் லாபநஷ்டத்தின் கணக்குகளைப் போடுவது பல சமயங் களில் தப்பான முடிவுகளுக்கு வா ஏதுவாயிருக்கும்.

சென்ற 10 வருஷத்திய ஏற்றுமதி இறக்குமதிக் கணக்குகள் அடுத்த பக்கத்தில் கொடுக்கப்பட்டிருக்கின்றன.

கோடி ரூபாயில் §

| வருஷங்கள் | ஏற்றுமதி | இறக்குமதி | நிகாலாபம் அல்லது நஷ்டம் |
|---|---|---|---|
| 1919-20 | 336·02 | 221·70 | + 114·32 |
| 1920-21 | 267·76 | 347·56 | — 79·80 |
| 1921-22 | 248·65 | 282·59 | — 33·93 |
| 1922-23 | 316·07 | 246·19 | + 69·88 |
| 1923-24 | 363·37 | 237·18 | + 126·10 |
| 1924-25 | 400·24 | 253·37 | + 146·87 |
| 1925-26 | 386·82 | 236·00 | + 150·82 |
| 1927-28 | 330·26 | 261·54 | + 68·72 |
| 1928-29 | 339·15 | 263·40 | + 75·75 |

+ என்பது நிகர லாபத்தைக் காட்டும் குறி.

— என்பது நிகர நஷ்டத்தைக் காட்டும் குறி.

மேற்கண்ட கணக்கிலிருந்து இரண்டு வருஷங்கள் தவிர மற்ற வருஷங்கள் எல்லாவற்றிலும் நமக்கு லாபம் வந்திருப்பதாகத் தோன்றும். இவ் வேற்றுமதி இறக்குமதிக் கணக்குகளைக் கொண்டு, சாதாரணமாக எல்லா வருஷங்களிலும் நம் ஏற்றுமதிகள் நம் இறக்குமதியைவிட அதிகமாயிருப்பதால், அன்னியநாட்டு வியாபாரத்தில் நாம் லாபம் அடைகிறோமென்றும், அன்னியநாட்டு வியாபாரத்தின் பயனாக நாம் ஒவ்வொரு வருஷமும் அதிக செல்வம் அடைகிறோம் என்றும் பலர் சொல்வதுண்டு. இங்ஙனம் அவர்கள் சொல்வது, தீர யோசிக்காமல் அவசரப்பட்டுச் செய்த முடிவாகும். ஏனெனில் சாக்குகள் ஏற்றுமதி இறக்குமதியைத் தவிர இன்னும் பல்வேறு வழிகளில் செல்வம் நம்

§ Page 241 Jathar and Beri's Indian Economics Vol, II

நாட்டைவிட்டு அகல்கின்றது; பல்வேறு வழிகளில் நம் நாட்டிற்குள் வருகின்றது. அவைகளுக்குச் சரியான கணக்கு வைக்கப்படுவதில்லை. ஆகையால் அவைகள் நம் கண்களுக்குப் புலப்படாத ஏற்றுமதி இறக்குமதிகள் (invisible exports and imports) என்று சொல்லப்படுகின்றன.

நமது லாப நஷ்டக் கணக்கு சரியாக போடப்பட வேண்டுமானால் செல்வம் நம் நாட்டை விட்டுப்போகும் எல்லாத் துறைகளையும் நம் நாட்டிற்கு வரும் எல்லாத் துறைகளையும் நாம் அறியவேண்டும். செல்வம் நம் நாட்டிற்குள் வரும் துறைகள் கீழே சொல்லப்பட்டிருக்கின்றன.

1. சாக்குகளை ஏற்றுமதி செய்வதால். அவைகளின் கிரயமாக செல்வம் நம் நாட்டிற்குள் வரும். இறக்குமதியை விட அதிகமாக ஏற்றுமதி செய்தால் அதிகமாகவிருக்கும் ஏற்றுமதியின் அளவு செல்வம் நம் நாட்டிற்குள் வரும். இவ்வகையால் சாதாரணமாக நம் ஏற்றுமதி இறக்குமதியைவிட அதிகமாயிருப்பதால், நமக்கு பணம் வரவேண்டியிருக்கிறது.

2. அன்னிய நாடுகளில் கடன் வாங்கினால் அத்தொகைகள் நம் தேசத்துக்குள் வரும். இத்தொகைகள் நம் தேசத்துக்குள்ளும் கொண்டு வரப்படுவதால், நம் தேசம் அதிக செல்வமடைவதாக நினைக்கக்கூடாது. ஏனெனில் இத்தொகைகள் கடனே யொழிய, லாபமல்ல. இவை வட்டியுடன் திருப்பிக்கொடுக்கப்பட வேண்டியவை.

3. அன்னியநாட்டுப் பாதிரிகள் நம் தேசத்தில் வைத்திருக்கும் பள்ளிக்கூடம் முதலியவைகளுக்கு உதவியாக அன்னிய நாட்டிலிருந்து வரும் நன்கொடை முதலியன.

4. அன்னியநாட்டார் நம் நாட்டைச் சுற்றிப்பார்க்க வரும் சமயத்தில் அவர்கள் நம் நாட்டில் செலவு செய்யும் தொகைகள்.

கீழ்கண்ட வகைகளில் செல்வம் நம்நாட்டை விட்டு வெளியே செல்லுகின்றது.

1. தங்கம் வெள்ளி வருவிப்பதற்குக் கிரயமாக பணம் வெளிநாடுகளுக்கு அனுப்பவேண்டியிருக்கிறது.

2. இந்தியா கவர்ன்மெண்டார் அன்னியநாடுகளில் கடன்வாங்கியிருக்கிறார்கள். இக்கடன்களின் விவரங்களைப் பற்றி பின் ஆராயப்படும். 1931-32-ம் வருஷத்தில் இந்தியா கவர்ன்மெண்டின் கடன்களின் வட்டிக்காக ரூ. 1877 லக்ஷம் மேற்படி கவர்ன்மெண்டின் வரவு செலவு கணக்கில் (Budget) ஒதுக்கி வைக்கப்பட்டிருக்கிறது. 1930-31-ல் இந்தியா கவர்ன்மெண்டாரின் மொத்தக்கடன் ரூ. 1171·96 கோடி என்று சொல்லப்படுகின்றது. இதில் சுமார் ரூ. 517·01 கோடி இங்கிலாந்தில் வாங்கப்பட்டிருக்கிறது. இவைகளுக்காக வட்டி ஒவ்வொரு வருஷமும் அனுப்பவேண்டும். இதன் மூலம் செல்வம் நம் நாட்டை விட்டு வெளியே அனுப்பப்படுகிறது.

3. கடன்கள் திருப்பிக்கொடுக்கப்படும்பொழுது அந்தத் தொகைகளும் நாட்டைவிட்டு வெளியே அனுப்பப்படுகிறது.

4. இங்கிலாந்து முதலிய அன்னிய நாடுகளில் படிக்கும் நம் மாணுக்கர்களுக்குச் சம்ரக்ஷணைக்காகவும் வெளிநாடுகள் சுற்றிப் பார்க்கச் செல்பவர்களுக்காகவும் நம் நாட்டிலிருந்து பணம் அனுப்பப்படவேண்டும்.

5. நம் நாட்டிலிருக்கும் ஆங்கில வக்கீல்கள், உத்தியோகஸ்தர்கள் முதலியோர் தங்கள் வருமானத்தில் பெரும் பகுதியைத் தங்கள் நாட்டுக்கு அனுப்புகின்றனர். அத்தொகைகள் நம் நாட்டைவிட்டு வெளியே செல்லுகின்றன

6. இன்சூரன்ஸ் கம்பெனிகள், பாங்கிங் கம்பெனிகள் இன்னும் ஆங்கிலேயர் முதலிய இதர தேசத்தாரைச் சேர்ந்த கம்பெனிகளும், அன்னியநாட்டுக் கப்பல் கம்பெனிகளும், அன்னியநாட்டு வியாபாரிகளும் நம் நாட்டில் சம்பாதிக்கும் லாபத்தை தங்கள் நாட்டுக்கு அனுப்புகின்றனர். அன்னிய நாட்டுக் கப்பல் கம்பெனிகள் மாத்திரம் நம்மிடமிருந்து கப்பல் சத்தமாக ரூ. 50 கோடி பெறுகின்றன.

7. இவைகளைத் தவிர கவர்ன்மெண்டார், தங்களுக்கு வேண்டிய சாமான்கள் வாங்குவதற்காகவும், பழைய உத்தியோகஸ்தர்களுக்குப் பென்ஷன் முதலியவைகள் கொடுப்பதற்காகவும் இங்கிலாந்தில் ஒவ்வொரு வருஷமும் பெரிய தொகைகள் செலவு செய்கின்றனர். இவைகளின் விவரம் பின் சொல்லப்படும். இவைகளுக்காகவும் செல்வம் நம் நாட்டைவிட்டு வெளியே அனுப்பவேண்டியிருக்கின்றது.

மேற்சொன்ன முறைகளில் செல்வம் நம் நாட்டிற்குள் வந்துகொண்டும் நாட்டிற்கு வெளியே, சென்றுகொண்டும் இருக்கிறது. இவைகளின் கணக்குத் தெளிவாகத் தெரிந்தாலொழிய இந்தியாவின் லாப நஷ்டக் கணக்கு சரியாகச் சொல்வது அசாத்தியம்.

ஏற்றுமதி இறக்குமதி கணக்குகளைக்கொண்டு இறக்குமதியைவிட ஏற்றுமதி அதிகமாக விருக்கிறதென்ற வொரு காரணத்தினாலே நாம் அதிக செல்வமடைகிறோமென்று நினைப்பது தவறு. உண்மையில் இதற்கு நேர் விரோதமாக விருக்கலாம். இறக்குமதியைவிட ஏற்றுமதி யதிகமாகயிருப்பதே நாம் கடன்பட்டிருக்கும் நிலைமையையும் ஒவ்வொரு வருஷமும் நஷ்டமடைவதையும் காட்டும் அறிகுறியென சில பொருளாதார சாஸ்திர நிபுணர்கள் சொல்லியிருக்கின்றனர். ஹார்டிலி விதர்ஸ் (Hartley Withers) என்னும் பெயர்

பெற்ற ஆங்கில நிபுணர் இவ்வபிப்பிராயமே கொண்டிருக்கிறார். ஆகையால் எந்த நாடு மற்ற நாடுகளிடமிருந்து கடன் வாங்கியிருக்கின்றதோ அந்த நாடு அக்கடன் பேரிலுள்ள வட்டிகளைக் கொடுப்பதற்காக ஒவ்வொரு வருஷமும் இறக்குமதியைவிட ஏற்றுமதி அதிகமாக, அதாவது அத்தேசம் கொடுக்கவேண்டிய வட்டி முதலியனவுக்குத் தகுந்தபடி அதிக சாக்குகள் அனுப்பத்தான் வேண்டும். ஆகையால் கடன் வாங்கியிருக்கும் நாடுகள் எப்பொழுதும் இறக்குமதியைவிட ஏற்றுமதி அதிகமாகத்தான் அனுப்பவேண்டும்.

ஹார்டிலி விதர்ஸ் சொல்லுவதாவது: மற்ற நாட்டாரிடமிருந்து அதிகமாகக் கடன் வாங்கியிருக்கும் ஒரு தேசம் தப்பர்த்தம் படும்படியாகச் சொல்லப்படும் நஷ்டகாமான வியாபாரம் என்னும் சுகத்தை என்றும் பெறமுடியாது. கடன்களைத் தீர்ப்பதற்காகவும் வட்டி கொடுப்பதற்காகவும் அத்தேசம் ஒவ்வொரு வருஷமும் இறக்குமதியைவிட அதிக ஏற்றுமதி அனுப்பவேண்டியிருக்கிறது. இல்லாவிடில் புதிய கடன்கள் வாங்கிக் கட்டவேண்டியிருக்கிறது. உண்மையில் பொருளாதார நிலையில் உயர்ந்திருந்து, மற்ற நாடுகளுக்கு அதிகமாகக் கடன்களும் மற்ற சேவைகளும் கொடுத்து வரும் நாடுகளே தப்பர்த்தம் படும்படியாகச் சொல்லப்படும் 'நஷ்டகரமான வியாபாரம்' என்ற சுகத்தைப் பெறமுடியும். இந்தப் பெருமை இங்கிலாந்து, ஜர்மெனி, பிரான்சு முதலிய தேசங்களால் அனுபவிக்கப்பட்டு வருகிறது.*

ஆகையால் இறக்குமதியைவிட ஏற்றுமதி அதிகமாயிருப்பதால் நம் நாட்டிற்கு அதிக செல்வம் வருவதில்லை. அன்னியநாட்டாருக்கு இந்தியா கவர்ன்மெண்டார் கொடுக்கவேண்டிய கடன்களில் வட்டிக்காகவும் ஐரோப்பிய ஆங்கில

*Hartley Withers—Meaning of money P. 187, 188.

வர்த்தகம் இந்தியாவில் பெறும் லாபங்களுக்காகவும், இந்திய கவர்ன்மெண்டார் ஒவ்வொரு வருஷமும் இங்கிலாந்தில் செய்யும் செலவுகளுக்காகவும் நாம் இவ்வளவு அதிக ஏற்றுமதி அனுப்பவேண்டியதாயிருக்கிறது. இங்ஙனம் அனுப்புவதில் நம் தேசம் ஒவ்வொரு வருஷமும் ஏழ்மையடைகின்றது.

இங்கிலாந்தில் இந்தியா கவர்ன்மேண்டார் செய்யும் செலவுகள் (Home charges) :—இனி இந்தியா கவர்ன்மெண்டார் எதற்காக இங்கிலாந்தில் இந்திய வரிகளிலிருந்து பணம் செலவு செய்கிறார்கள் என்பதைப்பற்றி ஆராய்வோம். முக்கியமாக மூன்று வகைகளில் இச்செலவுகள் செய்யப்படுகின்றன.

(1) கடன்களுக்காகக் கொடுக்கவேண்டிய வட்டிகள்:— இந்தியா கவர்ன்மெண்டார் இங்கிலாந்திலிருந்து ஏராளமான கடன் வாங்கியிருக்கிறார்கள். இந்தியா கவர்ன்மெண்டின் மொத்தக் கடன் 1930-31-ல் ரூ. 1171·96 கோடி என்றும் அதில் ரூ. 517·01 கோடி இங்கிலாந்தில் வாங்கப்பட்டதென்றும் முன் சொல்லப்பட்டது. இந்தியாவில் வாங்கப்பட்டிருக்கும் கடனிலும் பல ஆங்கிலேயர்கள் பணம் கொடுத்திருக்கின்றனர். இவைகளில் வட்டிக்காகத் தொகைகள் ஒவ்வொரு வருஷமும் இந்திய வரிகளிலிருந்து இங்கிலாந்தில் செலவு செய்யப்படுகிறது.

நம் தேசத்தின் நன்மைக்காக வாங்கப்பட்ட கடன்களையும், அவைகளின் பேரிலேற்பட்ட வட்டிகளையும் கொடுக்க நாம் எப்பொழுதும் கடமைப்பட்டிருக்கிறோம். ஆனால் இக்கடன்கள் யாவும் நம் தேச நன்மையைக் கோரி வாங்கப்பட்டன வல்லவென்றும், இக்கடன்களில் ஒரு பெரும் பகுதி ஆங்கிலேயருடைய நன்மைக்காகவும், பிரிட்

டிஷ் ஏகாதிபத்தியத்தின் நன்மைக்காகவும், வாங்கப்பட்டன வென்றும் தகுந்த ஆதாரங்களுடன் சொல்லப்படுகிறது. ஆகையால் பக்ஷபாத மற்ற ஒரு நீதி சபை, இக்கடன்களில் எவ்வளவு பாகம் இந்தியாவின் நன்மைக்காகக் கோரி வாங் கப்பட்டு, இந்தியாவைக் கட்டுப்படுத்தக் கூடியதென்றும், எவ்வளவு பாகம் இந்தியாவின் நன்மையைக்கோரி வாங்கப் படாது, இந்தியாவைக் கட்டுப்படுத்தாதவை யென்றும் தீர் மானம் செய்ய வேண்டுமென்று பலர் அபிப்பிராயப்படுகின் றனர். இந்திய சிவில் சர்விஸில் பல வருஷங்கள் ஈடுபட் டிருந்தவரும் இந்திய பொருளாதார சரித்திரம் (Economic History of India) என்னும் அரிய நூலுக்காசிரியரும், சிறந்த தேச பக்தருமான ஆர். சி. தத்தர் (R. C. Dutt) என்பவரால் முதன் முதலில் இவ்வபிப்பிராயம் வெளியிடப் பட்டது. இந்தியாவின் இராஜீயக் கட்சிகளில் முதன்மை பெற்று விளங்கும் காங்கிரஸ் வாதிகளும் இம்மாதிரி அபிப் பிராயப்பட்டு 22-ம் வருஷத்தில் கயாவில் கூடின காங்கிரசில் ஒரு தீர்மானம் செய்து இக்கடன் விவரங்களை ஆராய்வதற் காக 1931-ம் வருஷத்தில் காரச்சியில் கூடிய அகில இந்திய காங்கிரஸ் கமிட்டியில் ஒரு விசாரணைக் கமிட்டி ஏற்படுத்தப் பட்டது. அக்கமிட்டியின் விசாரணைகளும் வெளியிடப்பட் டிருக்கின்றன.

இக்கடன்களைப்பற்றிய விவரங்களை பின்னர் ஆராய் வோம். இங்கு ஒன்று மாத்திரம் சொல்லவேண்டியது அவசியம். நியாயமான கடன்களையும் அவைகளின் பேரி லுள்ள வட்டிகளையும் கொடுக்கவேண்டியது நம் கடமை. ஆனால் நம்மை நியாயமாய் கட்டுப்படுத்தாத, நம் நாட்டு நன்மைக்கல்லாமல் பிறர் நன்மைக்காகவே வாங்கப்பட்ட கடன்களின் பேரில், பிரதி வருஷமும் நம் வரிகளிலிருந்து

வட்டி கொடுப்பது பெருத்த அநியாயமாகும். நம்மைக் கட்டுப்படுத்தாத கடன்களின் பேரில் கொடுக்கப்படும் வட்டித் தொகைகள், விருதாவாக ஏற்றுமதி செய்யப்பட்டு வீணுவதாகவே மதிக்கப்படவேண்டும்.

2. இந்தியாவில் சேவகம் செய்த ஆங்கில உத்தியோகஸ்தர்களுக்கு பென்ஷன்கள் முதலியன இங்கிலாந்தில் கொடுக்கப்படுகின்றன. நம் நாட்டுக்குச் சேவை செய்யும் உத்தியோகஸ்தர்களுக்கு அவர்கள் வயது சென்ற காலத்திலும் விடுமுறை நாட்களிலும் பென்ஷன்கள், சம்பளங்கள் முதலியன கொடுக்கவேண்டியது நியாயமே. ஆனால், நம் தேசத்து மக்களில் கற்றவர் பலர் குறைந்த சம்பளத்துக்கு மேற்படி வேலைகளைத் திறமையுடன் செய்யக் காத்துக் கொண்டிருக்கும் இந்நாட்களில் அன்னிய நாட்டார்களை அதிக சம்பளத்துக்கு அமர்த்துவது தவறு. நம்மக்களில் சேவைகளுக்குத் தகுந்தவர்கள் இருக்க, அன்னிய நாட்டார்களை அவ்வுத்தியோகங்களுக்கு நியமித்து, அதிக சம்பளமும் கொடுப்பது நம் நாட்டு வரிப்பணத்தை வீண் செய்வதுமன்றி, பணத்தை வீணுக அன்னியநாட்டுக்கு அனுப்புவதாகும். நம்மக்களுக்கு இல்லாத உயர்ந்த சாஸ்திர ஞானம் பெற்ற அன்னியர்களை, அவசியமான சில ஸ்தானங்களுக்கு நியமித்து உயர்ந்த சம்பளம் கொடுத்தால் அது தவறுகாது. ராணுவ உத்தியோகஸ்தர்களுக்கும் பென்ஷன் முதலியன கொடுக்கவும் இங்கிலாந்தில் செலவு செய்யப்படுகின்றது. ராணுவத்தில் மேற்கூறிய குறை இன்னும் அதிகமாயிருக்கின்றது. ராணுவத்தில் உயர்தர உத்தியோகங்கள் இந்திய மக்களுக்குக் கொடுக்கப்படாமல் ஆங்கிலேயருக்காகவே ஒதுக்கி வைக்கப்பட்டு, அவர்களுக்கு அதிகமான சம்பளம் கொடுக்கப்படுகின்றது. இதனுல் பெருவாரியான இந்திய

வரிப்பணங்கள் வீணாக்கப்படுகின்றன.

மேலும் இந்தியாவில் வைக்கப்பட்டிருக்கும் சேனை இந்தியாவின் அவசியத்துக்கு அதிகமானது. பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்தின் பிரயோஜனத்துக்காகவே, இவ்வளவு பெரிய சேனை நம் நாட்டில் வைக்கப்பட்டிருக்கிறது, என்று பல ஆங்கில நிபுணர்களும் கூட ஒப்புக்கொண்டிருக்கின்றனர். பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்திற்காக வைக்கப்பட்டிருக்கும் சேனைச் செலவுகளை இந்திய வரிகளிலிருந்து செலவு செய்வது நியாயமாகாது.

3. மேற்கண்ட இரு துறைகளிலேயே இந்தியாவின் வரிகளிலிருந்து இங்கிலாந்தில் பெரும்பாகம் செலவு செய்யப்படுகிறது. இந்தியா மந்திரியின் ஆபீஸ் செலவுகளுக்காகவும், இந்தியா கவர்ன்மெண்டாருக்கு வேண்டிய சாமான்களை வாங்குவதற்காகவும் ஒரு பாகம் செலவு செய்யப்படுகின்றது.

இந்தியாவின் நியாயமான கடன்களைக் கட்டுவதும் அக்கடன்களின் வட்டியைக் கொடுப்பதும் நம் கடமையென எல்லோராலும் ஒத்துக்கொள்ளப்படுகிறது. அதுபோல் இந்தியாவில் சேவை செய்த உத்தியோகஸ்தர்களுக்கு பென்ஷன் முதலியன கொடுப்பதும் சரியென எல்லோராலும் ஒத்துக்கொள்ளப்படுகிறது. ஆனால் மேலே சொல்லப்பட்டிருக்கிற காரணங்களுக்காக, இந்தியாவின் வரிகளிலிருந்து இங்கிலாந்தில் செலவு செய்யப்படும் தொகைகளில் பெரும் பகுதிக்கு நம் நாடு சரியான பிரதிப் பிரயோஜனம் பெறுவதில்லை. அத்தொகைகள் இந்தியாவுக்கு யாதொரு பயனையும் அளிக்காமல் வீணாகவே நாட்டைவிட்டு வெளியே அனுப்பப்படுகின்றன வென்றும், இந்தியாவின் இராஜீய அடிமைத்தன்மையின் காரணமாக, இவை கப்பங்களாக

இங்கிலாந்துக்கு அனுப்பப்படுகின்றன என்றும், பல இராஜீய நிபுணர்களும் தேசபக்தர்களும் சொல்லியிருக்கின்றனர்.

இந்திய வரிகளிலிருந்து இங்கிலாந்தில் செய்யப்படும் செலவுகள் தற்காலத்தில் அதிகமாகிக்கொண்டு வந்திருக்கின்றன. அவ்வளர்ச்சியைக் கீழே காண்க.*

| வருஷம் | செலவு செய்யப்பட்ட தொகை |
|---|---|
| 1859 | 50,42,945 பவுன்கள் |
| 1879 | 1,45,43,277 ,, |
| 1899-1900 | 1,63,92,864 |
| 1909-10 | 1,91,22,936 |
| 1913-14 | 2,03,11,673 |
| 1922-23 | 3,18,60,179 |
| 1927-28 | 2,88,64,765 |

இப்படி பகிரங்கமாக இந்தியா வரியின் ஒரு பாகம் இங்கிலாந்தில் செலவு செய்யப்படுவதைத் தவிர, மறைமுகமாக அதாவது தெளிவாகக் கணக்கெடுக்க முடியாதபடி, ஆங்கிலக் கப்பல் வியாபாரிகள், ஆங்கில இன்சூரன்ஸ் கம்பெனிகள், ஆங்கில பாங்குகள், ஆங்கில கைத்தொழிற் கம்பெனிகள் முதலிய இந்தியாவில் சம்பாதித்த லாபத்தையும், ஆங்கில உத்தியோகஸ்தர்கள் தங்கள் சம்பளத்தில் பெரும் பகுதியையும், நம் நாட்டிலிருந்து இங்கிலாந்துக்கு அனுப்புகிறார்கள் என்பதும், இவைகளின் மொத்தம் ஒரு பெருந்தொகையாகும் என்பதையும் நாம் மறக்கக்கூடாது.



* Page 267, Jathar & Beri's Indian Economics, Vol. II.

# பன்னிரண்டாவது அதிகாரம்

## நாணயங்கள் (Currency)

தொழில்களின் பிரிவினை (Division of Labour):— மக்கள் அவரவர்களுக்கு வேண்டிய தேவைகள் அனைத்தையும் அவரவர்களே உண்டாக்கிக் கொள்வதில்லை. உதாரணமாக மக்களுக்கு இன்றியமையாத உணவுப்பொருள்களான அரிசி, பருப்பு, முதலிய நவதானியங்கள், நெய், தயிர், பால் முதலியன யாவும் ஒருவனால் சாதாரணமாக உண்டாக்கப் படுவதில்லை. உணவுக்கு அடுத்தபடியாக இன்றியமையாத வஸ்துவான உடைக்கு வேண்டிய துணிகள், வசிப்பதற்கு அவசியமான வீடு முதலிய சௌகரியங்கள், இவை யாவையும் ஒவ்வொரு மனிதனும் தானே செய்துகொள்வதில்லை, ஏனெனில், இவை யாவையும் உண்டாக்க ஒவ்வொரு மனிதனுக்கும் அல்லது ஒவ்வொரு குடும்பத்திற்கும் தகுந்த ஆற்றல் இல்லை. தவிர, ஒருவன் இவை யாவையும் தானே செய்யத் தலைப்பட்டால் அவன் சக்தி பல வழிகளிலும் செலுத்தப்பட்டு, ஒரு தொழிலிலும் வல்லவன் ஆகான். ஆதலால், நம் சமூகத்திற்கு வேண்டிய தேவைகள் யாவும் உண்டாக்க அல்லது சப்ளை செய்வதற்காகவும் ஒவ்வொருவனும் ஒவ்வொரு தொழிலில் வல்லமையடைந்து அத் தொழிலில் தேர்ச்சியடைவதற்காகவும், நம் சமூகத்தில் ஒரு பகுதியார் உணவுப் பொருள்களை விளைவிக்கும் விவசாயிகளாகவும், ஒரு சிலர் ஆடுமாடுகளைப் பரிபாலிப்பவர்களாகவும், ஒரு சிலர் நூல் நூற்பவர்களாகவும், ஒரு சிலர் நெய்தல் தொழிலை மேற்கொண்டவர்களாகவும், ஒரு சிலர் வீடு கட்டு

பவர்களாகவும், இவ்வாறு பல்வேறு தொழில்களில் ஈடுபட்டிருக்கின்றனர். இன்னும் சமூகத்தின் மற்ற தேவைகளுக்குத் தக்கபடி, தொழில்களும் பிரிக்கப்பட்டு, தேவைகளுக்கு வேண்டிய சாமான்கள் செய்யப்பட்டு வருகின்றன.

பண்ட மாற்றுதலும், அதற்கு அளவையும் :—மக்கள் தமக்கு வேண்டிய பொருள்கள் யாவையும் அவரவர்களே உண்டாக்காததால், அவர்கள் உண்டாக்கும் பொருளில் அவரவர் அவசியத்துக்கு அதிகமாக விருப்பதை மற்றவர்களுக்குக் கொடுத்து, மற்றவர்களிடமிருந்து தமக்கு அவசியமான தம்மிடத்தில் இல்லாத பொருட்களைப் பெறவேண்டியிருக்கிறது. அதாவது தம்மிடத்தில் அதிகமாகயிருக்கும் பண்டத்தைக் கொடுத்து தமக்கு வேண்டிய பொருளாக மாற்ற வேண்டியிருக்கிறது. இதற்குப் பண்ட மாற்றுதல் (Barter) என்று பெயர். பண்ட மாற்றுதல் செய்வதற்கும் ஒரு அளவை வேண்டியிருக்கிறது. பொருள்களின் மதிப்பை யளப்பதற்கு ஒரு அளவு வஸ்து (Standard of measurement of value) இருந்தாலொழிய ஒரு பண்டத்தின் எவ்வளவை இன்னொரு பண்டத்தின் எவ்வளவிற்கு மாற்றுவதென்று நிச்சயிக்க முடியாது. எந்த வஸ்து சாதாரணமாக மக்களுக்குக் கிடைக்கக்கூடுமோ, எது மக்களுக்குச் சுலபமாகக் கிடைத்து, அதைப் பிரயோஜனப் படுத்தக்கூடியதோ, அவ்வஸ்துவை மக்கள் பண்டம் மாற்றுதலுக்கு அளவு கருவியாக உபயோகப்படுத்தி வந்திருக்கின்றனர். உதாரணமாக முற்காலங்களில் ஆடுமாடுகளை அளவு கருவிகளாய் உபயோகித்து வந்ததாகத் தெரியவருகிறது. இதர நாடுகளில் ஆங்காங்கு கிடைக்கக்கூடிய மற்ற சாமான்களையும் பண்டமாற்றுதலுக்கு அளவையாக வைத்துக் கொண்டிருந்திருக்கிறார்கள். வர்ஜீனியா (Virginia) வில்

புகையிலையும், மற்ற சில நாடுகளில் மெல்லிய ரோமமுடைய தோல்களும் (furs), உப்பு, தேயிலை, கோகோ முதலிய சாமான்களும் பண்டமாற்றுதலுக்கு அளவு கருவிகளாக உபயோகப்படுத்தப்பட்டிருக்கின்றன.

நாணயம் :—ஆடுமாடுகள் முதலிய அளவைகள் பருமனாகவும், ஓரிடத்திலிருந்து மற்றொரு இடத்திற்குக் கொண்டு போவதற்குக் கஷ்டமானவாயும் இருந்தன. பருமனில் சிறியதாகவும், போக்குவரத்துக்குச் சௌகரியமானதாகவும், மக்களால் மதிக்கத் தக்கதாகவும், ஒரு வஸ்து இருந்தால் அதைப் பண்டமாற்றுதலுக்கு அளவையாக்குதல் இன்னும் சௌகரியமாயிருக்கும். உலோகங்கள் இத்தகைய குணங்களைப் பெற்றிருந்தன. ஆகையால் உலோகங்கள் பண்டங்களின் மதிப்பைக் குறிப்பதற்கு அளவு கருவிகளாக உண்டாக்கப்பட்டன. பண்டமாற்றுதலுக்கு அளவையாக்கப்பட்ட உலோகங்களுக்கு நாணயங்கள் (Coins) என்று பெயர்.

பொன் வெள்ளி நாணயங்கள் :—அளவையாய்த் தேர்ந்தெடுக்கப்பட்ட நாணயம் சமூகத்தில் வழங்குவதற்கும் போதுமானதாயும், ஆனால் அதற்கு மதிப்பு இருக்கும்படி குறைந்த அளவே கிடைக்கக் கூடியதாகவும், இருக்கவேண்டும். முன் காலத்தில் இரும்பு, செம்பு, முதலிய உலோகங்களால் நாணயங்கள் வழங்கப்பட்டன. பிற்காலங்களில் இரும்புச் சுரங்கங்களும், செப்புச் சுரங்கங்களும் அதிகமாகக் கண்டுபிடிக்கப்பட்டபடியால் இவ் வுலோகங்களின் மதிப்புக் குன்றிற்று. பொன் வெள்ளி உலோகங்கள், இரும்பு முதலியனபோல் அவ்வளவு அதிகமாகக் கிடைக்காததாலும், அவை உயர்ந்த மதிப்புப் பெற்றிருந்ததாலும், நாணயமாகக் கிடைப்பதற்குப் போதுமான அளவு தற்

காலத்தில் கிடக்கின்றமையாலும், அவைகளால் நாணயங்கள் அச்சிடப்படுகின்றன. தவிர, அவை மக்களுடைய மனதைக் கவரக்கூடியனவாயிருக்கிறபடியாலும், அவை பண்டம் மாற்றுதல் அல்லது வியாபாரத்துக்குத் தற்காலத்தில் அளவைகளாயிருந்து வருகின்றன.

தங்கம் வெள்ளிகளால் நாணயங்கள் அச்சிடப்பட்டாலும், நாணயங்கள் ஒரே மாதிரி அச்சிடப்படாவிடில் ஒவ்வொருவரும் நாணயங்களை நிறுத்து வாங்க நேரிடும். இந்த அசௌகரியத்தைப் போக்குவதற்காக எல்லா நாடுகளிலும் கவர்ன்மெண்டார் நாணயம் அச்சிடும் பொறுப்பை எடுத்துக்கொண்டு, ஒரே அளவிலும், கனத்திலும் நாணயங்களை அச்சிட்டு வழங்கி வந்தார்கள். ஆனால் சில மக்கள் நாணயங்களை உரைத்துக் கொஞ்சம் கொஞ்சமாகத் திருட ஆரம்பித்தனர். இங்ஙனம் அவைகளை உரைக்கப்படாமல் காப்பாற்றும் பொருட்டு, நாணயங்களின் இருபக்கங்களிலும் முத்திரைகளும் ஓரங்களில் சிறு கோடுகளும் போடப்பட்டன. தனித் தங்கமும் தனி வெள்ளியும் மிருதுவாக இருப்பதுடன் பழக்கத்தில் தேயக்கூடிய தன்மையை உடையனவாகையால் அவைகள் தேயாமலிருக்கும் பொருட்டு, தனித் தங்கத்துடனும், தனி வெள்ளியுடனும் வேறு மட்ட உலோகங்களும் ஒரு பகுதிசேர்த்து நாணயங்கள் அச்சிடப்பட்டன. தற்காலத்திய சவரினில் 12-ல் 11 பங்கு தான் தனித் தங்கம், மற்றொரு பகுதி செப்பு. நம் ரூபாயில் 12-ல் 11 பங்குதான் தனி வெள்ளி, மற்றொரு பங்கு வேறு மட்ட உலோகம்.

தேவை - சப்ளை தத்துவம்: The principle of Demand & Supply:—ஒரு சாமானின் விலை அதன் தேவையையும் சப்ளையையும் பொறுத்தது. தேவை அதிக

மாயிருந்து சப்ளை குறைவாயிருந்தால் அதன் விலை அதிக மாகும். ஏனெனில் அதை வாங்குவதற்கு பலர் காத்துக் கொண்டிருக்கும் சமயம், ஒரு சிலருடைய தேவைக்கும் போதுமானதுதான் விற்பனைக் கிடைத்தால், அச்சாமானை வாங்குவதற்குப் போட்டி ஏற்படும். அப் போட்டியில் விலை உயரும். அதிகமான விலைக்குக் கேட்பவர்களுக்கு அச் சாமான் விற்கப்படும். ஆனால் தேவை குறைவாயிருந்து, சப்ளை அதிகமாயிருந்தால், அச் சாமான்களை வைத்திருப்ப வர்கள் ஒருவருக் கொருவர் போட்டி போட்டுக்கொண்டு விற்க முன் வருவார்கள். யார் குறைந்த விலைக்கு விற்க முன் வருகிறார்களோ அவர்களுடைய சரக்குகள்தான் விற்பனை யாகும். ஆதலால் தேவைக்கு அதிகமான சப்ளை யிருந்தால், சாமான்களின் விலை குறையும்.

தேவைக்குத் தகுந்த சப்ளை யிருந்தால், சாமான் களின் விலை அதிகமாகாமலும், குறையாமலும் நிதான மாகவே யிருக்கும். அல்லது தேவை யதிகமாகி, அச் சாமான்களின் சப்ளையும் அதற்கேற்றவாறு அதிகமானால், சாமான்களின் விலை முன்போலவே, குறையாமலும் கூடா மலும் இருக்கும். இம்மாதிரியே சப்ளை குறைந்து, தேவை யும் அதற்குத் தகுந்தமாதிரி குறைந்தால், விலை ஏறாமலும் இறங்காமலும் இருக்கும். இங்ஙனம் சாமான்களின் தேவையையும் சப்ளையையும் அனுசரித்து, அவைகளின் மதிப்பு ஏறுவது அல்லது இறங்குவதற்கு தேவை சப்ளை தத்துவம் என்று பெயர் (The principle of Demand and Supply).

உதாரணமாக ஒரு ஊரில் 100 சேலைகள் வேண்டி யிருந்து, மார்க்கெட்டில் 75 சேலைகள்தான் கிடைக்கு மென்றால், சேலைகளின் விலை 100 சேலைகள் கிடைத்தால்

என்ன விலை யிருக்குமோ, அதைவிட அதிக மாகும். 75 சேலைகளுக்கு 100 பேர்கள் போட்டி போடுவதில், சேலைகளின் விலை கொஞ்சம் உயரும். இம்மாதிரியே 100 சேலைகளுக்குத் தேவை யிருக்கும் சமயத்தில் 125 சேலைகள் மார்க்கெட்டில் இருந்தால், சேலைகள் வைத்திருக்கும் வியாபாரிகள் அனைவரும் கொஞ்சம் விலை குறைத்தாவது சேலைகளை விற்க முன் வருவதில், அவைகளின் விலை குறையும்.

தேவை சப்ளை தத்துவத்தை அனுசரித்தே நாணயங்களுடைய மதிப்பும் குறையும் அல்லது ஏறும்:—நாணயங்கள் மற்ற பொருட்களின் மதிப்பை அளப்பதற்கு அளவையாக இருக்க ஏற்படுத்தப் பட்டனவானாலும், அவைகளின் மதிப்பும், தேவை சப்ளைத் தத்துவத்தை அனுசரித்து குறைந்துகொண்டும் ஏறிக்கொண்டும் இருக்கும். புதிய தங்கம், வெள்ளிச் சுரங்கங்களிலிருந்து வெளியீடுகள் அதிகமாகி, இந்த சப்ளைக்குத் தகுந்தபடி அவைகளின் தேவை அதிகமாகாவிட்டால், தங்கமும், வெள்ளியும் அவைகளுடைய மதிப்புக் குன்றும். தங்கமும், வெள்ளியும் மதிப்புக் குறைந்தால் அவைகளால் செய்யப்பட்ட தங்கம், வெள்ளி நாணயங்களின் மதிப்பும் குறையும்.

நாட்டின் வியாபாரத்தின் தேவையையும், நாணயங்களின் சப்ளையையும் அனுசரித்து, நாணயங்களின் மதிப்பு ஏறுவதும் இறங்குவதும் இரண்டு விதங்களில் புலப்படும்.

நாணயத்தின் மதிப்பு அதிகமானால், அந் நாணயத்திற்கு முன் கிடைத்துக் கொண்டிருந்ததைவிட அதிகமான சாமான்கள் கிடைக்கும். உதாரணமாக ஒரு ஊரில் புகையிலை வியாபாரத்துக்கு ரூ. 10,000 வேண்டி யிருக்கிறது. அவ்வூரில் 100 பாரம் புகையிலை யிருக்கின்றது.

அவ் வியாபாரத்துக்குத் தேவையான ரூ. 10,000 அவ்வூரில் கிடைத்தால், புகையிலையின் விலை பாரம் ஒன்றுக்கு ரூ. 100 இருக்கும். ஆனால் ரூ. 5000 தான் இருக்கிறது. தேவைக்குக் குறைவாக நாணயங்கள் இருப்பதால் நாணயத்தின் மதிப்பு அதிகமாகும். இப்பொழுது ரூ. 50-க்கு ஒரு பாரம் புகையிலை கிடைக்கும். முன் ரூ. 50-க்கு அரை பாரம் புகையிலை தான் கிடைத்திருக்கும். நாணயத்தின் மதிப்பு அதிகமானதன் காரணமாக, ரூ. 50-க்கு ஒரு பாரம் புகையிலை கிடைக்கும். தேவைக்கு அதிகமாக அவ்வூரில், அதாவது ரூ. 15000 இருக்கும் பக்ஷத்தில், புகையிலையின் விலை அதிகமாகி, பாரம் ஒன்றுக்கு ரூ. 150-க்கு விற்கப்படும். மார்க்கெட்டில் ரூ. 5000 உலாவும் சமயத்தில் ரூ. 50 - க்கு ஒரு பாரம் புகையிலை கிடைத்தால், ரூ. 15000 மார்க்கெட்டில் உலாவும் சமயம் ரூ. 50-க்கு $\frac{1}{3}$ பாகம் புகையிலை தான் கிடைக்கும்.

அதாவது தேவைக்கு அதிகமாக நாணயங்கள் உலாவுவதால் நாணயங்களின் மதிப்பு குறையும். தேவைக்குக் குறைவாய் நாணயங்கள் உலாவினால், நாணயங்களின் மதிப்பு அதிக மாகும். நாணயங்களின் மதிப்பு அதிகமானால் அவைகளுக்கு அதிக சாமான்கள் கிடைக்கும். நாணயங்களின் மதிப்புக் குறைந்தால், அதற்குத் தகுந்தபடி குறைவான சாமான்கள் தான் கிடைக்கும்.

நாணயங்களின் மதிப்பு ஏறுவதும் இறங்குவதும் இன்னுமொரு விதமாகவும் புலப்படும். ஒரு ஊரில் வியாபாரத்துக்கு ரூ. 10000 வேண்டியிருந்து, ஆனால் அவ்வூரில் ரூ. 5000 தான் இருந்தால், வியாபாரம் செய்ய இச்சை கொண்டு, ஆனால் கையில் பணமில்லாதவர்கள், அதிகமான வட்டி கொடுத்தாவது பணம் பெற விரும்பு

வார்கள். இதற்குப் பதிலாக ரூ. 15000 அவ்வூரில் இருந்தால் பணம் வேண்டியவர்களுக்குக் குறைந்த வட்டிக்குக் கடன்கள் கிடைக்கும். நாணயங்கள் தேவைக்குக் குறைவாக உலாவினால், அவைகளின் மதிப்பு அதிகமாகிக் கடன் வாங்குபவர்கள் அவைகளுக்கு அதிகமாக வட்டி கொடுப்பார்கள். ஆனால் அவை தேவைக்கு அதிகமா யிருந்தால் அவைகளின் மதிப்புக் குறைந்து, குறைந்த வட்டிக்குக் கடன்கள் கிடைக்கும்.

தேவை சப்ளை தத்துவத்தை அனுசரித்து தங்கம் வெள்ளி நாணயங்கள் ஒன்றுக்கொன்று மதிப்பு ஏறும் அல்லது குறையும்:—எப்படி நாணயங்கள் தேவை சப்ளைத் தத்துவத்தை அனுசரித்து மதிப்பில் அதிகம் அல்லது குறைவாகின்றனவோ, அப்படியே தங்கமும் வெள்ளியும் அவைகளின்பாலுள்ள தேவையையும் சப்ளையையும் அனுசரித்து ஒன்றுக்கொன்று மதிப்பில் வித்தியாசப்படும். உலகத்தில் தங்கம் ஒரே அளவு இருந்து, வெள்ளியின் சப்ளை அதிகமாகி, வெள்ளியின் தேவை அதற்குத் தகுந்தபடி அதிகமாகாவிட்டால், வெள்ளி தங்கத்தால் அளக்கப்படின் மதிப்புக் குறையும்; தங்கம் வெள்ளியால் அளக்கப்படின் மதிப்பு அதிகமாகும். அதாவது ஒரு அவுன்சு தங்கத்துக்கு முன்னை விட அதிகமான வெள்ளி கிடைக்கும். ஆனால், ஒரு அவுன்ஸ் வெள்ளிக்கு முன்னை விடக் குறைந்த தங்கம்தான் கிடைக்கும். இங்ஙனமே தங்கத்தின் சப்ளையும் தேவைக்கு அதிகமாகி, வெள்ளியின் சப்ளை ஒரே மாதிரி யிருந்தால், தங்கத்தின் மதிப்பு, வெள்ளியால் அளப்பின் குறையும்; வெள்ளியின் மதிப்பு அதிகமாகும். அதாவது ஒரு அவுன்ஸ் வெள்ளிக்கு முன்னைவிட அதிகத் தங்கம் கிடைக்கும். ஆகையால் இவ்விரண்டு உலோகங்

களும், தேவையையும் சப்ளையையும் அனுசரித்து ஒன்றுக் கொன்று மதிப்பு ஏறும் அல்லது இறங்கும்.

1850-ம் வருஷத்தில் உலகில் 3,80,00,000 அவுன்சு கள் தங்கம் இருந்ததாகக் கணக்கெடுக்கப் பட்டிருக்கிறது. புதிய தங்கச் சுரங்கங்கள் கண்டு பிடிக்கப்பட்டதன் காரண மாக பத்து வருஷங்களில் உலகிலுள்ள தங்கம் இரண்டு பங்குகளுக்கு அதிகமாயிற்று. 1860 - ம் வருஷத்தில் 8,80,00,000 அவுன்சுகள் தங்கம் இருந்ததாக கணக் கெடுக்கப் பட்டிருக்கிறது †. ஆனல், தங்கம் இவ்வளவு அதிகமானது தங்கத்தின் விலையை அதிகமாகக் குறைக்க வில்லை. ஏனெனில் தங்கத்தினுடைய தேவையும் உலகில் அதிகமாகிக்கொண்டு வந்தது. ஐரோப்பிய, அமெரிக்க தேசங்களின் கைத் தொழில்களும், வியாபாரங்களும் நீராவி யந்திரங்கள் முதலியன கண்டு பிடிக்கப்பட்டதன் காரணமாய், மிகவும் அதிகமாயின. இந்த வியாபாரங் களுக்கு அதிகப் பொன் நாணயங்கள் தேவையா யிருந் தன. பொன் நாணயங்களுக்குத் தேவையும், அவைகளின் சப்ளைக்குத் தக்கபடி அதிகமா யிருந்தது. எனவே தங் கத்தின் விலை குறையவில்லை.

ஆனல், வெள்ளியின் கதை வேறு. 1870-ம் வருஷத் துக்கு முன், வருஷம் ஒன்றுக்கு சராசரி 3,00,00,000 அவுன்சு வெள்ளி, சுரங்கங்களிலிருந்து வெளி வந்து கொண்டிருந்தது. அந்த வருஷம் முதல் வெள்ளியின் சப்ளை மிகவும் அதிகமாகத் தொடங்கிற்று. அமெரிக்கா வில் புதிதாகக் கண்டு பிடிக்கப்பட்ட சுரங்கங்களிலிருந்து, ஏராளமான வெள்ளி கிடைக்கத் தலைப்பட்டது. 1871-ம்

† Page 256, Prof. F. G. Taussig's Principles of Economics Vol. I.

வருஷத்திலிருந்து 1905-ம் வருஷம் வரை ஒவ்வொரு வருஷத்திய சராசரி வெள்ளி வெளியீடும் கீழே காண்பிக்கப்பட்டிருக்கிறது.

| † வருஷம் | சராசரி வெளியீடு |
|---|---|
| 1871-1875 | 6,30,00,000 அவுன்சுகள் |
| 1875-1880 | 7,90,00,000 ,, |
| 1881-1885 | 9,20,00,000 ,, |
| 1886-1890 | 10,90,00,000 ,, |
| 1891-1895 | 15,80,00,000 ,, |
| 1896-1940 | 16,50,00,000 ,, |
| 1901-1905 | 16,80,00,000 |

இவ்விதம் அதிகமானதன் காரணமாக, வெள்ளியின் விலை குறையத் தலைப்பட்டது. 1875-ம் வருஷத்தில் ஒரு அவுன்சு வெள்ளி 58 பென்சுக்கு விற்கப்பட்டது. 1879-ம் வருஷத்தில் $52\frac{1}{2}$ பென்சாகவும், 1888-ம் வருஷத்தில் 43 பென்சாகவும் 1892-ம் வருஷத்திய $37\frac{1}{2}$ பென்சாகவும் 1899-ம் வருஷத்தில் 27 பென்சாகவும் மதிப்பில் குறைந்தது. வெள்ளியின் விலை குறைவதற்கு முதற் காரணம், வெள்ளியின் அதிக வெளியீடு, அதாவது வெள்ளியின் சப்ளை அதிகமானது, அதற்கு வேறு ஒரு காரணமும் உண்டு.

தங்கம் அதிகமான சமயத்தில், அதன் தேவையும் அதிகமானதால் அதன் மதிப்புக் குறையவில்லை. வெள்ளியின் சப்ளை அதிகமான காலத்திலும், வெள்ளியின் தேவை அதற்குத் தகுந்தபடி அதிகமாயிருந்தால், வெள்ளியின்

† Page 279 Prof Taussig's Principles of Economics Vol. I

மதிப்புக் குறைந்திருக்காது. ஆனால் அதற்குப் பதிலாக, வெள்ளியின் தேவை குறையத் தலைப்பட்டது. இங்கிலாந்து 19-ம் நூற்றாண்டின் ஆரம்பத்திலும், ஜர்மெனி 1873-ம் வருஷத்திலும், ஸ்வீடன் டென்மார்க்கு முதலிய தேசங்கள் 1874-ம் வருஷத்திலும், தங்கத்தையே தங்கள் முக்கிய நாணயமாக்கி தனித் தங்க நாணய முறையைக் கைக்கொண்டார்கள். இதனால் வெள்ளி நாணயங்கள் முன்போல் அச்சிடப்படாமல் போகவே, வெள்ளியின் தேவை குன்றிற்று. இங்ஙனம் தேவை குன்றியதே வெள்ளியின் மதிப்பு இவ்வளவு அதிகமாகக் குறைந்ததற்கு மற்றொரு காரணமாகும்.

இரண்டு உலோக நாணய முறை :—(Bimetallism) பல நூற்றாண்டுகளாக உலகிலுள்ள முக்கியமான தேசங்கள் எல்லாவற்றிலும், தங்கம் வெள்ளி இரண்டு உலோகங்களிலும் நாணயங்கள் அச்சிடப்பட்டு, வழங்கப்பட்டன. இவ்விரண்டு உலோகங்களிலும், முக்கியமான நாணயங்கள் அச்சிடப்பட்டது மன்றியில் இவைகளுக்குள், தங்கம் வெள்ளி உலோகங்களின் மதிப்பை அனுசரித்து, ஒரு விகிதமும் ஏற்படுத்தப்பட்டது.

இரண்டு உலோக நாணய முறையின் முக்கிய அம்சங்கள் பின் வருமாறு.

1. தங்கம் வெள்ளி இவ்விரண்டு உலோகங்களையும் கொடுப்போர்களுக்கு, அச்சிடுவதற்காக ஏற்படும் ஒரு கூலி தவிர வேறு எவ்வித கட்டுப்பாடுமின்றி நாணயங்கள் அச்சிட்டுத் தரப்படவேண்டும். இதனால் பொது ஜனங்கள் தங்கம் வெள்ளி உலோகங்களை வாங்கிக்கொடுத்து, தாங்கள் விரும்பின அளவுக்கு, தங்கம் வெள்ளி நாணயங்களை அச்சிட்டுப் பெறலாம். (இதற்கு ஆங்கிலத்தில் free coinage of gold and silver என்று பெயர்.)

2. இரண்டு உலோக நாணய முறையில் வரவு செலவுகளில் தங்க நாணயங்களும், வெள்ளி நாணயங்களும் எத்தனை அளவுக்கு வேண்டுமானாலும் வழங்கப்படலாம். இதற்கு ஆங்கிலத்தில் full legal tender என்று சொல்லப்படும். இந்தியாவில் ரூபாயும், அரை ரூபாயும், இங்கிலாந்தில் பவுனும் இக்குணத்தைப் பெற்றிருக்கின்றன. இந்தியாவில் ரூபாயும் அரை ரூபாயும், இங்கிலாந்தில் பவுன் ஸ்டர்லிங்கும், எல்லா விதமான ரொக்கம் சம்பந்தமான வியாபாரங்களுக்கும், கொடுக்கல் வாங்கல்களுக்கும் எத்தனை வேண்டுமானாலும் கொடுக்கப்படலாம். ஆனால் இந்தியாவில் கால் ரூபாய் நாணயங்களும், இரண்டு அணா, ஒரு அணா முதலிய கீழ்ப்பட்ட நாணயங்களும் சட்டப்படி கொடுக்கல் வாங்கல்களில் ஒரு ரூபாய்க்குமேல் ஒப்புக்கொள்ள வேண்டிய அவசியமில்லை. அங்ஙனமே இங்கிலாந்திலும் பவுன் ஸ்டர்லிங்க்குக் கீழ்ப்பட்ட நாணயங்களை இரண்டு பவுன்களுக்கு அதிகமாய்க் கொடுக்கப்பட்டால், ஒப்புக்கொள்ள வேண்டிய அவசியமுமில்லை.

3. தங்க நாணயங்களும், வெள்ளி, நாணயங்களும், இரண்டும் பிரதானமான நாணயங்களாய் இருப்பதால், இவ்விரண்டு நாணயங்களுக்குள் ஓர் விகிதம் ஏற்படுத்தப்பட வேண்டியது அவசியம். இவ்விகிதம் இந்த நாணயங்களில் உள்ள சொந்த மதிப்பை யொட்டியதாயிருக்கும். தங்கம் வெள்ளி விலையை அனுசரித்து, அவ்விலையின் வித்தியாசத்தை யொட்டி இவ்விகிதம் ஏற்படுத்தப்படும். ஒரு அவுன்ஸ் தங்கத்துக்கு 16 அவுன்சு வெள்ளி கிடைக்கக்கூடியதாயிருந்து, தங்க நாணயமும் வெள்ளி நாணயமும் ஒரே கனமுடையனவாக இருந்தால், இவ்விரண்டு நாணயங்களில் ஒரு தங்க நாணயம் 16 வெள்ளி நாணயங்களுக்குச் சமம் என்று

விகிதம் ஏற்படுத்தப்படும். அல்லது வெள்ளீ நாணயத்தில் பதினாறில் ஒரு பங்கு கனத்தில் தங்க நாணயம் இருந்தால் இவ்விரு நாணயங்களும் மதிப்பில் சமமாகக் கருதப்படும்.

இரண்டு உலோக நாணய முறையின் குறை - கிரஷம் தத்துவம் :—இரண்டு உலோக நாணய முறையை அனுஷ்டிக்கும் நாடுகளுக்கு ஒரு அசௌகரியம் உண்டு. இரண்டு உலோகங்களிலும், அதாவது தங்கத்திலும் வெள்ளியிலும் தங்கள் பிரதான நாணயங்களை அச்சிடும் நாடுகள், அவ்விரண்டு நாணயங்களுக்குள் ஒரு விகிதம் ஏற்படுத்தவேண்டிய அவசியத்தைப்பற்றியும், அவ்விகிதம் தங்கம் வெள்ளியின் விலையை யொட்டியதாயிருக்குமென்பதும் முன் குறிப்பிடப்பட்டது. ஆனால் தங்கத்தின் விலையும், வெள்ளியின் விலையும் தேவை சப்ளையை அனுசரித்து அடிக்கடி மாறிக்கொண்டிருப்பவையாய் இருக்கின்றன. ஆனால் இம்மாறுதலை அனுசரித்து, அனுதினமும் கவர்ன்மெண்டாரும் தங்கள் தங்கம் வெள்ளி நாணயங்களின் விகிதத்தை மாற்றுவது அசாத்தியம். எனவே சிற்சில சமயங்களில், தங்க நாணயங்களும் சிற்சில சமயங்களில் வெள்ளி நாணயங்களும் தங்க சாலைகளில் (mints) அதிகமாய் மதிக்கப்படுகின்றன. அதாவது மார்க்கெட்டில் இருக்கும் மதிப்பைவிட தங்கசாலைகளில் ஒரு உலோகம் அதிக மதிப்பிடப்படுகிறது, அப்பொழுது, உலோகமாய் அதிக மதிப்புப்பெற்று ஆனால் நாணயமாய் குறைந்த மதிப்புப் பெற்றிருக்கும் நாணயங்கள் உருக்கப்பட்டு உலோகமாய் விற்கப்படும். உலோகமாய் குறைந்த மதிப்புடையதாய், ஆனால் நாணயங்களாய் அதிக மதிப்புடன் விளங்கும் நாணயங்கள் அதிகமாக உலாவும். மக்கள் குறைந்த விலைக்கு உலோகம் வாங்கி, நாணயங்களாய் அச்சிட்டு அதிக மதிப்பைப்பெற முயல்வார்கள்.

இங்ஙனம் குறைந்த மதிப்புள்ள உலோக நாணயங்கள் அதிக மாகி, அதிக மதிப்புள்ள உலோக நாணயங்கள் மறையும். இதற்குக் கிரஷம் தத்துவம் என்று பெயர். கிரஷம் என்பவரால் இது முதலில் கண்டுபிடிக்கப்பட்டதால் இதற்கு கிரஷம் தத்துவம் என்று பெயர் கொடுக்கப்பட்டிருக்கிறது.

உதாரணமாக தங்கசாலையில், ஒரு அவுன்ஸ் தங்கம் 16 அவுன்சுகள் வெள்ளிக்குச் சமம் என்ற விகிதம் ஏற்படுத்தப்பட்டிருந்து, மார்க்கெட் நிலவரப்படி ஒரு அவுன்ஸ் தங்கத்துக்கு $15\frac{1}{2}$ அவுன்சுகள் வெள்ளிதான் கிடைக்குமென்றால், என்ன ஏற்படுமென கவனிப்போம். இதனால் மார்க்கெட் நிலவரத்தைவிட அதிக மதிப்பு தங்கத்துக்கும், மார்க்கெட் நிலவரத்தைவிட குறைந்த மதிப்பு வெள்ளிக்கும் நாணயங்கள் அச்சிடப்படும் தங்கசாலையில் கொடுக்கப்படுகிறது. அதாவது மார்க்கெட்டில் $15\frac{1}{2}$ அவுன்சுகள் வெள்ளி கொடுத்தால் ஒரு அவுன்சு தங்கம் கிடைக்கும். ஆனால் தங்கசாலையில் ஒரு அவுன்ஸ் தங்க மதிப்புப் பெறுவதற்கு 16 அவுன்சுகள் வெள்ளி கொடுக்கப்படவேண்டும். எனவே வெள்ளியை மார்க்கெட்டில் வாங்கி, நாணயங்கள் அச்சிடுவதற்காகக் கொடுக்கமாட்டார்கள். வெள்ளி நாணயங்களுக்கு இருக்கும் மதிப்பைவிட, வெள்ளியாக அவைகளுக்கு அதிக மதிப்பு இருப்பதால், நாணயங்களாக 16 அவுன்சுகள் கொடுத்து, 1 அவுன்ஸ் தங்கம் மதிப்புப் பெறுவதற்குப் பதிலாக, வெள்ளி நாணயங்களை உருக்கி, $15\frac{1}{2}$ அவுன்சுகள் வெள்ளி கொடுத்து ஒரு அவுன்ஸ் தங்கத்தின் மதிப்பை பெறுவதுடன், மீத மிருக்கும் $\frac{1}{2}$ அவுன்ஸ் வெள்ளியை லாபமாகப் பெறுவார்கள். ஆனால் ஒரு அவுன்ஸ் தங்கத்துக்கு மார்க்கெட்டில் $15\frac{1}{2}$ அவுன்சுகள் வெள்ளியின் மதிப்புத்தான் கிடைக்கிறபடியாலும், தங்கம் நாணயமாக

அச்சிடப்பட்டால் ஒரு அவுன்ஸ் தங்கம் கொண்ட நாணயத்துக்கு கவர்ன்மெண்டாரால் ஏற்படுத்தப்பட்டிருக்கும் விகிதப்படி 16 அவுன்ஸ் வெள்ளியின் மதிப்புக்கிடைப்பதாலும், மக்கள் $15\frac{1}{2}$ அவுன்சுகள் வெள்ளிக்கு ஒரு அவுன்ஸ் தங்கம் என்ற விலையின்பேரில் தங்கத்தை வாங்கி, அதைத் தங்கசாலைகளில் கொடுத்து, தங்க நாணயங்களாக மாற்றி, அதிக மதிப்பும் பெற முயல்வார்கள். மார்க்கெட் விகிதத்துக்கும், தங்கசாலையின் விகிதத்துக்குமுள்ள மேற்கண்ட வித்தியாசம் கொஞ்சகாலம் நீடித்திருக்குமானால், வெள்ளி நாணயங்கள் யாவும் உருக்கப்பட்டு, உலோகமாக விற்கப்படும். தங்க உலோகமே தங்கசாலைகளில் கொடுக்கப்பட்டு, தங்க நாணயங்கள் மாத்திரம் நாட்டில் உலாவும்.

இதற்குப் பதிலாக மார்க்கெட் நிலவரம் ஒரு அவுன்ஸ் தங்கம் $16\frac{1}{2}$ அவுன்ஸ் வெள்ளி என்று ஏற்பட்டால் என்னவாகுமெனக் கவனிப்போம். இப்பொழுது, தங்கசாலையில் வெள்ளிக்கு அதிக மதிப்பும், தங்கத்துக்குக் குறைந்த மதிப்பும் கொடுக்கப்படுகிறது; தங்கத்துக்கு நாணயமாக இருப்பதைவிட உலோகமாக விற்றால் அதிக மதிப்பு, மார்க்கெட்டில் கொடுக்கப்படும். ஏனெனில் தங்கசாலை விகிதப்படி ஒரு அவுன்ஸ் தங்கம் கொண்ட நாணயத்துக்கு 16 அவுன்சுகள் வெள்ளி மதிப்புத்தான் கிடைக்கும்; ஆனால் தங்க நாணயத்தை உருக்கித் தங்கமாக விற்றால், ஒரு அவுன்ஸ் தங்கத்துக்கு $16\frac{1}{2}$ அவுன்சுகள் வெள்ளி மதிப்புக் கிடைக்கும். எனவே தங்க நாணயங்கள் உருக்கப்பட்டு உலோகமாக விற்கப்படும். ஆனால் வெள்ளிக்கு உலோகமாயிருப்பதைவிட, நாணயமாய் அதிக மதிப்புக் கொடுக்கப்படுவதால், மக்கள் வெள்ளியை வாங்கி, தங்கசாலைகளில் கொடுத்து நாணயமாக மாற்றி அதிக மதிப்புப் பெற முயல்வார்கள்.

மார்க்கெட் விகிதத்துக்கும், தங்கசாலை விகிதத்துக்கும் இவ் வித்தியாசம் நீடித்திருக்குமானால், தங்க நாணயங்கள் யாவும் உருக்கப்பட்டு, உலோகமாக விற்கப்படும்; தேசத்தில் வெள்ளி மாத்திரம் உலாவிவரும்.

ஆகையால் எந்த நாணய முறையில் இருவித நாணயங்கள் வழங்கப்பட்டு, அவைகளில் எந்த ஒன்று உலோகமாய் அதிக மதிப்புப் பெறத்தக்கதாயிருந்து நாணயமாய்க் குறைவாய் மதிக்கப்படுகிறதோ, அப்பேர்ப்பட்ட நாணயங்கள் உருக்கப்பட்டு மறையும். உலோகமாய் குறைந்த மதிப்பு உடையனவாயும், நாணயமாய் அதிக மதிப்பு உடையனவாக விருக்கும் நாணயங்கள்தான் நாட்டில் வழங்கும். இங்ஙனம் குறைந்த மதிப்பு நாணயங்களும், உயர்ந்த மதிப்பு நாணயங்களும், சமமாய்க் கருதப்பட்டால், உயர்ந்த மதிப்புள்ள நாணயங்கள் கொஞ்சம் கொஞ்சமாய் மறைந்து, சில நாட்களில் குறைந்த மதிப்புள்ள நாணயங்கள் மாத்திரம் நாட்டில் உலாவும். இவ் வுண்மையைத்தான் கிரஷம் தத்துவம் என்று சொல்லப்படுகிறது.

கிரஷம் தத்துவம் 1834-ம் வருஷத்துக்குமேல் யுனைடெட் ஸ்டேட்ஸ் ஆப் அமெரிக்காவில் அனுபவத்தில் காணப்பட்டது. அக் காலத்தில் அத் தேசத்தில் இரண்டு உலோக நாணய முறை அனுஷ்டிக்கப்பட்டு, தங்கத்தாலும், வெள்ளியாலும், நாணயங்கள் அச்சிட்டுக் கொடுக்கப்பட்டன. பல காரணங்களால் மார்க்கெட்டில் வெள்ளியின் விலை உயர்ந்தது; எனவே, வெள்ளிக்கு தங்கசாலைகளில், அதாவது நாணயமாக முன் குறைந்த மதிப்பே கொடுக்கப்பட்டு வந்தது. தங்கத்துக்கு மார்க்கெட்டில் விலை குறைந்தபோதிலும், நாணயமாக அதிக மதிப்புக் கொடுக்கப்பட்டது. எனவே வெள்ளி நாணயங்கள் உருக்கப்பட்டு,

மெல்ல மறைந்தன. வியாபாரிகள் தங்கம் வாங்கிக் கொடுத்து, நாணயங்களாக அச்சிடப் பெற்றனர். தங்க நாணயங்களே அதிகமாக வழங்கப்பட்டன. கடைசியில் 1850-ம் வருஷத்தில் தங்க நாணயங்கள் மாத்திரம் உலாவ, வெள்ளி நாணயங்கள் முழுதும் மறைந்து போயின.

ஆனல், வெள்ளி நாணயங்கள் உபயோகத்துக்கு வேண்டியிருந்தன. ஆகையால், கவர்ன்மெண்டார் வெள்ளி நாணயங்களை அச்சிட்டு வழங்கவேண்டியிருந்தது. எதிர்காலத்தில் வெள்ளி நாணயங்கள் உருக்கப்படாமல் இருப்பதற்காக, குறைந்த வெள்ளியுடன் நாணயங்கள் அச்சிடப்பட்டு, அவைகளுக்கு அதிக மதிப்புக் கொடுக்கப்பட்டன. இந்த நாணயங்களில் அவைகளுக்குக் கொடுக்கப்பட்ட மதிப்புக்கேற்ற உலோகம் இல்லாமையாலும், இவைகள் மதிப்பை அளப்பதற்கு, முக்கிய நாணயத்தின் அடையாளமாய் இருக்கின்றபடியாலும், இவைகளுக்கு அடையாள நாணயங்கள் (Token coins) என்று பெயர். வியாபாரிகள் வெள்ளி கொடுத்தால் நாணயச் சாலைகளில் நாணயங்களாக அச்சிட்டுத் தரப்படமாட்டா தென்றும் (No free coinage of silver), வெள்ளி நாணயங்கள் பத்து டாலர்கள் வரையில் தான் ஒரு தடவையில் வரவு செலவுகளுக்கும், வரிகளுக்கும் கொடுக்கலாமென்றும் (Limited legal tender) 1853 - ல் சட்டம் செய்யப்பட்டது. இங்ஙனம் இயற்கை வழியில், யுனைடெட் ஸ்டேட்ஸ் இரண்டு உலோக நாணய முறையை விட்டு தனித் தங்க உலோக நாணய முறையை (Gold Monometallism)க் கைப்பற்றிற்று.

ஒரு உலோக நாணயமுறை:—(Monometallism)

இரண்டு உலோக நாணய முறையில் இரண்டு உலோகங்

களிலும், நாட்டின் பிரதானமான நாணயங்கள் அச்சிடப் படுமென்றும், இவ் வுலோகங்கள் கொடுப்போர்களுக்கு தங்க சாலைகளில் நாணயங்கள் அச்சிட்டுத் தரப்படுமென்றும், சொல்லப்பட்டது. வரவு செலவுகளிலும் கொடுக்கல் வாங் கல்களிலும்,கவர்ன்மெண்டு பாங்கிகளுக்காகவும்,இவ்விரண்டு, உலோகத்தால் செய்யப்பட்ட பிரதம நாணயங்களும் எத் தனை வேண்டுமானாலும் கொடுக்கப்படலாமென்றும் சொல் லப்பட்டது. ஆனால் ஒரு உலோக நாணய முறையில், ஒரு உலோகத்தில்தான் நாட்டின் பிரதம நாணயம் அச்சிட்டு வழங்கப்படும். மக்கள் அந்த உலோகத்தை கொண்டுவந்து கொடுத்து, தங்கசாலைகளில் நாணயங்களாக அச்சிட்டுப் பெறலாம். இந்த நாணயங்கள் மாத்திரம்தான் வரவு செலவுகளிலும், கொடுக்கல் வாங்கல்களிலும் வரையின்றிப் உபயோகப்படுத்தப்படலாம். இம் முறையில் ஒரே உலோகத் தில் நாட்டின் முக்கிய நாணயம் அச்சிடப்படுவதால், இதற்கு ஒரு உலோக நாணய முறை (Monometallism) என்று பெயர்.

அந்தப் பிரதம நாணயத்தில் மாத்திரம் அதன் மதிப்புக் கேற்ற உலோகம் அதனுள் இருக்கும். மற்ற குறைந்த நாணயங்களில் அவைகளின் மதிப்புக்கேற்ற உலோகம் இருக்காது. அவை அடையாள நாணயங்களாகவே (Token Coins) விளங்கும். இவைகளில், மதிப்புக்கேற்ற உலோகம் இன்மையால் அவை எப்பொழுதும் உருக்கப் படமாட்டா.

உலகிலுள்ள முக்கியமான நாடுகள் யாவும் ஒரு உலோக முறையையே கைக்கொண்டு, தங்கத்தால் மாத்திரம் தங் கள் முக்கிய நாணயங்களை வழங்குகின்றன. இங்கிலாந்து, பிரான்சு, ஜர்மனி, முதலிய ஐரோப்பிய நாடுகளும், யுனை

டெட் ஸ்டேட்ஸ் முதலிய நாடுகளும் தங்க உலோக முறை யையே கைக் கொண்டிருக்கின்றன.



## பதின்மூன்ருவது அதிகாரம்



### நாணய மாற்று:—(Exchange)

நாணய முறைகளைப் பற்றியும், தற்காலத்தில் உலகி லுள்ள முக்கியமான நாடுகள் அனைத்தும் ஒரு உலோக முறையைக் கைக்கொண்டு தங்கத்திஞல் தங்கள் பிரதான நாணயத்தை வழங்கி வருகிருர்கள் என்பதைப் பற்றியும் முந்திய அத்தியாயத்தில் கூறப்பட்டது. நம் நாட்டில் மாத் திரம் வெள்ளியால் நமது முக்கிய நாணயமாகிய ரூபாய் வழங்கப்பட்டு வருகின்றது. நமது நாணய முறை உலகில் இதுவரையில் அனுஷ்டிக்கப்பட்டு வந்திருக்கிற முறைகளை அதாவது இரண்டு உலோக முறையையும், ஒரு உலோக முறையையும், பின்பற்ருமல், ஒரு தனி, அசாதாரண முறையை யொட்டியிருக்கின்றது. இம்முறைக்கு தங்க நாணய மாற்று முறை (Gold Exchange Standard) என்ற பெயர் கொடுக்கப்பட்டிருக்கிறது. இதைப்பற்றி விபர மாக அறிவதற்குமுன் நாணய மாற்றின் அவசியத்தைப் பற்றியும், நாணயமாற்று எப்படி எப்படி செய்யப்படுகிற தென்பதைப் பற்றியும் அறிந்து கொள்ளவேண்டியது அவசியம்.

நாணய மாற்றின் அவசியம்:—உலகிலுள்ள முக்கிய மான தேசங்கள் யாவும் தங்கத்திலேயே தங்கள் பிரதம நாணயங்களை வழங்கி வந்தபோதிலும் அவை ஓரே மாதிரி

நாணயங்களை வழங்குவதில்லை. ஒவ்வொரு நாட்டிலும் வெவ்வேறு கனத்திலும், வெவ்வேறு இடையிலும், வெவ்வேறு பெயரால் நாணயங்கள் வழங்கப்படுகின்றன. இங்கிலாந்தின் பிரதம நாணயம் பவுன் ஸ்டர்லிங் என்றும், யுனைடெட் ஸ்டேட்ஸ் ஆப் அமெரிக்காவின் நாணயம் டாலர் என்றும், ஜர்மன் தேசத்து நாணயம் மார்க் என்றும், ருஷ்யா தேசத்து நாணயம் ரூபிள் என்றும், ஜப்பான் தேசத்து நாணயம் யென் என்றும், இதாலி தேசத்து நாணயம் லயர் என்றும் வெவ்வேறு பெயர்களில், வெவ்வேறு இடைகளில் உலாவி வருகின்றன.

வெவ்வேறு நாணயங்கள் பெற்ற நாடுகள் ஒன்றோடொன்று வியாபாரம் செய்யவேண்டியிருக்கின்றது. ஒவ்வொரு நாடும், அது உண்டாக்கும் சாக்குகளை மற்ற நாடுகளுக்கு அனுப்பி, அதற்கு வேண்டிய சாமான்களை மற்ற நாடுகளிலிருந்து பெறவேண்டியிருக்கிறது. ஆனால் ஒரு தேசத்து நாணயம் மற்றொரு நாட்டில் ஒப்புக்கொள்ளப் படுவதில்லை. ஆகையால் நாடுகளுக்குள் வியாபாரம் நடக்க வேண்டுமானால் ஒரு தேசத்து நாணயம் மற்றொரு தேசத்து நாணயமாய் மாற்றப்பட வேண்டும். உதாரணமாக இங்கிலாந்தில் ஒரு மோட்டார் கார் வண்டி 100 பவுன் களுக்கு விற்கப்படுகிறது. அதை பிரான்சு தேசத்தில் ஒருவன் வாங்க விரும்புகிறான். ஆனால் பிரான்சு தேசத்தில் பவுன்கள் இல்லை, பிரான்க்குகள் தானுண்டு. பிரான்குகளை பவுனாக மாற்ற, ஒரு ஏற்பாடு இருந்தாலொழிய ஆங்கில தேசத்தில் செய்யப்படும் அச் சாமானை பிரான்சு தேசத்திலிருப்பவன் வாங்க முடியாது. பிரான்சு தேசத்து பிரான்க் நாணயத்தை ஆங்கில நாட்டுப் பவுன் நாணயமாக மாற்றி, ஆங்கில நாட்டு வியாபாரிக்குக்

கொடுக்கவேண்டும். இங்ஙனம் ஒரு நாட்டு நாணயம் மற்றொரு நாட்டு நாணயமாக மாற்றப்படுவதற்கு நாணய மாற்று என்று பெயர். இது ஆங்கிலத்தில் எக்ஸ்சேன்ஜ் (Exchange) என்று சொல்லப்படுகிறது.

நாணய மாற்று விகிதம்:—(Exchange Rate) ஒரு நாட்டு நாணயம் மற்றொரு நாட்டு நாணயமாய் மாற்றப்படவேண்டுமானால், ஒரு நாணயத்தில் எவ்வளவு மற்றொரு நாணயத்தில் எவ்வளவாக மாற்றப்படவேண்டுமென விகிதம் நிச்சயம் செய்யப்படவேண்டும், இவ்விகிதத்துக்கு நாணய மாற்று விகிதம் என்று பெயர். இவ்விகிதம் எப்படி ஏற்படுத்தப்படுகிறது என்பதைக் கவனிப்போம்.

இவ் விகிதம் அந்த இரண்டு நாடுகளுடைய நாணயங்களின் சொந்த மதிப்பின் (Intrinsic Value) தாரதம்மியத்தை அனுசரித்து ஏற்படுத்தப்படும். யுனைடெட் ஸ்டேட்ஸ் ஆப் அமெரிக்கா டாலர் நாணயத்துக்கும் இங்கிலாந்து பவுன் ஸ்டர்லிங் நாணயத்துக்கும் நாணய மாற்று விகிதம் எப்படி ஏற்படுத்தப்பட்டிருக்கிறதென்பதைப் பார்ப்போம். மேற்படி நாணயங்கள் இரண்டும் தங்க நாணயங்களாகையால், அவைகளில் உள்ள தங்கத்தின் நிறையைத் தெரிந்தால், இவைகளை ஒன்றுக்கொன்று மாற்றுவதற்கு நாணயமாற்று விகிதத்தை ஏற்படுத்திவிடலாம். ஒரு பவுனில் 4·866 டாலர்கள் நிறையுள்ள தங்கம் இருக்கின்றது. அதாவது ஒரு பவுன் ஸ்டர்லிங் 4·866 டாலர்கள் மதிப்புக்கொண்டது. ஆகையால் ஒரு ஆங்கிலப் பவுன் ஸ்டர்லிங்கை யுனைடெட் ஸ்டேட்ஸ் ஆப் அமெரிக்கா டாலராக மாற்றுவதற்கு நாணயமாற்று விகிதம், ஒரு பவுனுக்கு 4 866 டாலர்கள் என்று வைக்கப்பட்டிருக்கிறது.

இம் முறைப்படியே ஆங்கில தேசத்துப் பவுனையும்

பிரான்சு தேசத்து பிரான்க் நாணயத்தையும் ஒப்பிட்டுப் பார்த்தால், ஒரு பவுனில் 25 பிரான்குகள் 22-சென்டுகள் தங்கம் இருக்கிறதெனத் தெரியவரும். எனவே இந்த இரண்டு நாணயங்களையும் மாற்றுவதற்கு நாணயமாற்று விகிதம் ஒரு பவுனுக்கு 25 பிரான்குகள் 22 சென்டுகள் என்று வைக்கப்பட்டிருக்கிறது.

ஆனால் மேற்குறிப்பிட்டிருக்கிற நாணயமாற்று விகிதம் ஸ்திரமாயிருப்பதில்லை. அது அடிக்கடி மாறிக்கொண்டு வருகிறது என்பது பத்திரிகைகளின் மூலம் நமக்குத் தெரியவரும். இங்ஙனம் அடிக்கடி மாறுவதுதான், மக்கள் மனதில் மலைப்பை உண்டாக்குகின்றது. நாணயமாற்று விகிதங்கள் ஏன் அடிக்கடி மாறுகின்றன, அவை மாறுவதற்குக் காரணங்கள் என்ன, என்று நாம் ஆராயவேண்டும். ஆனால் இவ் விஷயத்தைப்பற்றி ஆராய்வதற்குமுன், நாணய மாற்றுக்கு அடிப்படையாக விருக்கும் அன்னிய நாட்டு வியாபாரம் எப்படிச் செய்யப்படுகிறது என்பதைப்பற்றி சில விவரங்கள் தெரிந்துகொள்ளவேண்டியது மிகவும் அவசியம்.

அன்னிய நாட்டு வியாபாரம் எப்படி நடக்கிறது:— அன்னிய நாட்டு வியாபாரம் நாம் அனுதினமும் செய்யும் வியாபாரத்திலிருந்து ஒரு முக்கிய அம்சத்தில் வேறுபட்டிருக்கிறது. சாதாரணமாக நாம் சாமான்கள் விலைக்கு வாங்கும்போதும் ரொக்கம் கொடுத்து வாங்குகிறோம். விற்கும்போது ரொக்கம் பெற்றுக்கொண்டு விற்கிறோம். குடியானவன் ஒருவன் தன் பூமியில் பருத்தி சாகுபடி செய்கிறான். அவனுக்கு அரிசி பருப்பு முதலிய சாமான்கள் வேண்டியிருக்கின்றன. அவன் தன் பருத்தியை ஒரு பருத்தி வியாபாரிக்கு விற்று, அதன் விலையை ரொக்கமாகக் கையில் பெறுகிறான். பின் தனக்கு வேண்டிய அரிசி பருப்பு

முதலிய சாமான்கள் விற்பவனிடத்தில் சென்று, ரொக்க மாய் பணம் கொடுத்து, தனக்கு வேண்டிய எல்லா சாமான் களையும் பெறுகிறான்.

ஆனால் அன்னிய நாட்டு வியாபாரத்தில் ரொக்கம் அவ்வளவு உபயோகப்படுத்தப்படுவதில்லை. உதாரணமாக 1928-29-ம் வருஷத்தில் 330 கோடி ரூபாய் சாக்குகள் இந்தியாவிலிருந்து ஏற்றுமதி செய்யப்பட்டன. 253 கோடி ரூபாய் சரக்குகள் இந்தியாவில் இறக்குமதி செய்யப்பட்டன. எனினும் ஏற்றுமதிக்களுக்காக, நம்மிடத்தில் சரக்குகள் வாங்கும் அன்னிய நாட்டு வியாபாரிகள் ரொக்கமாக 330கோடி ரூபாய்கள் நம் நாட்டுக்கு அனுப்பவுமில்லை. நாமும் நம் இறக்கு மதிகளின் கிரயமாக 253 கோடி ரூபாய் ரொக்கமாக அன்னிய நாடுகளுக்கு அனுப்பவுமில்லை. இங்ஙனம் சுமார் 600 கோடி ரூபாய்களை அங்குமிங்கும் கப்பல்களில் அனுப்புவதில் எவ்வளவு சிரமம், கூலிச் சத்தம் செலவாகும் என யோசித்தால், ஏன் ரொக்கமாக இத்தொகைகள் அனுப்பப்படுவதில்லை யென விளங்கும். இவ் வீண் செலவுகளையும், சிரமங்களையும் தொலைப்பதற்காக வேறு முறைகள் கையாளப்படுகின்றன.

தபாலாபீசுகள் மூலம் மணியார்டர்கள் (Money order) அனுப்பும் முறையை நேயர்கள் அறிந்திருப்பார்கள். நான் கோயமுத்தூரிலிருந்து ரூ. 100/-க்கு ஒரு மணியார்டர் கீழ் வங்காளத்தில் டாக்காவிலிருக்கும் எனது நண்பர் ஒருவருக்கு அனுப்புவதாக வைத்துக்கொள்வோம். நான், ரூ. 100/-ம், விலாச விவரங்கள் எழுதப்பெற்ற ஒரு மணியார்டர் பாரமும், அதற்குள்ள கட்டணமும், கோயமுத்தூர் தபாலாபீசில் கொடுக்கிறேன். இந்த மணியார்டர் பாரம் டாக்காவுக்கு மற்ற தாபால்களோடு அனுப்பப்பட்டு, அங்கு

எனது நண்பருக்கு ரூ. 100/- கொடுக்கப்படுகிறது. ஆனால் நான் கோயமுத்தூர் தபாலாபீசில் கொடுத்த ரூ. 100/- டாக்காவுக்கு அனுப்பப்பட்டதா? இல்லை. அந்த ரூ. 100/- கோயமுத்தூர் தபாலாபிசிலேயே வைத்துக்கொள்ளப் பட்டு, இந்த மணியார்டருக்காக ரூ. 100/-கொடுத்துவிடும்படி டாக்காவிலிருக்கும் தபாலாபீசுக்கு உத்தரவு கொடுக்கப்பட்டது. ஏனெனில் பணத்தை ரயிலில் அனுப்புவதால் ஏற்படும் வீண் சிரமத்தைத்தவிர, ரயிலில் பணம் அனுப்பப்பட்டால், ரயில் போய் டாக்கா சேர்ந்து, மணியார்டர் பாரத்தில் கண்ட விலாச தாரருக்கு அது கொடுக்கப்படும் வரை, அந் நாட்களில் அத் தொகை எவருக்கும் பிரயோஜனப்படாமல் வட்டி நஷ்டமும் ஏற்படுகிறது. ஆகையால் டாக்கா தபாலா பீசாரால் மணியார்டர் தொகை கொடுக்கச் செய்வதில் ரயிலில் பணத்தை அனுப்பும் வீண் சிரமத்தையும், கூலியை யும், தவிர்ப்பதுமல்லாமல், அனுப்புவதால் உண்டாகும் வட்டி நஷ்டத்தையும் தவிர்த்து, மணியார்டர் செய்யப்படுவ தற்காக தபாலாபீசில் கொடுக்கப்படும் தொகைகளின்பேரில் கவர்ன்மெண்டார் வட்டிலாபமும் பெறுகின்றனர். கோயமுத் தூர் தபாலாபீசிலிருந்து அனுப்பப்பட்ட மணியார்டருக்கு டாக்கா தபாலாபீசு பணம் கொடுப்பதுபோல், டாக்காவி லிருந்து கோயமுத்தூருக்கு அனுப்பப்படும் மணியார்டர் களுக்கு கோயமுத்தூர் தபாலாபீசாரால் பணம் கொடுக் கப்படும்.

தந்தி மணியார்டர்கள் மூலம் நாம் பணம் அனுப்பினால், நம் தந்தி மணியார்டர் பாரத்தையும், மணியார்டர் தொகை யையும், அதற்குரிய கட்டணத்தையும், நாம் அனுப்பும் ஊரி லிருக்கும் தபாலாபீசில் வாங்கிக்கொள்ளுகின்றனர். இதில் மணியார்டர் பாரம் கூட அவ் விலாசதாரருக்கு அனுப்பப்

படுவதில்லை. தந்தி மணியார்டர் பாரத்தில் கண்ட விலாசமும் விவரங்களும் தந்தி மூலம் விலாசதார் இருக்கும் ஊரிலுள்ள தபாலாபீசுக்கு அனுப்பப்பட்டு, இவ் விவரங்கள் கிடைத்தவுடன், அத் தபாலாபீசார் அவ் விலாசதாருக்கு மணியார்டர் விவரத்தின்படி தொகைகொடுத்து விடுகிறார்கள்.

நாணய மாற்று பாங்குகள்:—(Exchange Banks) இம் மாதிரியே அன்னிய நாட்டு வியாபாரத்திலும், ஒரு நாட்டிலிருந்து மற்றொரு நாட்டுக்குப் பணம் அனுப்பப்படுவதில்லை. எப்படி தபாலாபீசுகள் தேசமுழுதும் ஸ்தாபிக்கப்பட்டு, தேசத்தின் ஒரு பாகத்திலிருந்து மற்ற பாகங்களுக்கு அனுப்ப உதவுகின்றனவோ, அப்படியே நாணய மாற்று பாங்குகளும், தங்கள் கிளை ஆபீசுகளை பல தேசங்களிலும் ஸ்தாபித்து, ஒரு நாட்டிலிருந்து மற்றொரு நாட்டுக்குப்பணம் அனுப்ப உதவுகின்றன. இப் பாங்குகளுக்கு ஆங்கிலத்தில் எக்ஸ்சேன்ஜ் பாங்குகள் (Exchange Banks) என்று பெயர். பதினெட்டு நாணயமாற்று பாங்குகள் நம் நாட்டில் ஸ்தாபிக்கப்பட்டு, நாணய மாற்று வியாபாரத்தை செய்து வருகின்றன. ஆனால் இவைகள் யாவும் அன்னிய நாட்டு பாங்குகளாக இருப்பது வருந்தத்தக்கது. இவைகளைப்பற்றிய விவரங்கள் பின் வரும் அதிகாரங்களில் சொல்லப்படும்.

ஆனால் தபாலாபீசுகள் மூலம் நாட்டின் ஒரு பாகத்திலிருந்து மற்றொரு பாகத்துக்கு பணம் அனுப்புவதற்கும், ஒரு நாட்டிலிருந்து மற்றொரு நாட்டுக்கு நாணயமாற்று அல்லது எக்ஸ்சேன்ஜ் பாங்குகள் மூலம் பணம் அனுப்புவதற்கும் ஒரு பெரிய வித்தியாசம் இருக்கின்றது. மணியார்டர்களுக்காக விதிக்கப்பட்ட சட்டத்தின்படி சத்தம் அல்லது கட்டணம் வாங்கப்படுகிறது. ஒரு ஊரிலிருந்து மற்றொரு ஊருக்கு எத்தனை அனுப்பப்பட்டாலும், இக்கட்ட

ணம் உயர்த்தப்படுவதில்லை. உதாரணமாக கோயமுத்தூரி லிருந்து 100 மணியார்டர்கள் டாக்காவுக்கு அனுப்பப்பட்டு, டாக்காவிலிருந்து கோயமுத்தூருக்கு ஒரு மணியார்டர் கூட அனுப்பப்படாவிட்டாலும், மணியார்டர் கட்டணம் மாற்றப்பட மாட்டாது. கோயமுத்தூரில் பணத்துக்குத் தேவை குறைவாயிருந்து சப்ளை அதிகமாயிருந்து, அதனால் பணத்துக்கு மதிப்புக் குறைந்திருந்தபோதிலும், டாக்காவில் பணத்துக்குத் தேவை யதிகமிருந்து சப்ளை குறைந்திருந்து, அதனால் மதிப்பு அதிகப் பெற்றிருந்த போதிலும், மணியார் டர்களை அனுபபும் தபாலாபீசுகள் இத்தேவை சப்ளை தத்துவத்தையும், அதனால் பணத்துக்கு உண்டாகும் கிராக்கி அல்லது சவதத்தை கவனியாமல், ஒரே விதமான கட்டணத்துக்கே மணியார்டர்களை அனுப்புவார்கள். ஆனால் நாணயமாற்று பாங்குகள் மூலம் செய்யப்படும் நாணய மாற்று வியாபாரத்தில் நாளுக்கு நாள் நாடுகளின் நாணயங் களின் தேவை சப்ளையை அனுசரித்து நாணய மாற்று விகி தம் மாறிக்கொண்டு வரும்.

நாணய மாற்று விகிதம் மாறுவது ஏன்:—சுலபமாக விளங்கும் பொருட்டு, ஒரே நாணயத்தை வழங்கிவரும் இரண்டு நாடுகளுக்குள் நடக்கும் நாணய மாற்று எப்படி நடக்கிறது என கவனிப்போம். இங்கிலாந்திலும் ஆஸ்ட்ரேலி யாவிலும் சவரன் அல்லது பவுன்கள் தான் முக்கியநாணய மாக வழங்கப்பட்டு வருகின்றன. ஆஸ்ட்ரேலியாவிலிருக்கும் ஜான் என்பவன் இங்கிலாந்தி லிருக்கும் உட் என்பவ னுக்கு 1000 புவுன்கள் பெறத்தக்க சாக்குகள் விற்றிருப்ப தாக வைத்துக் கொள்வோம். ஜான் என்பவனுடைய சாக்கு கள் இங்கிலாந்துக்கு ஏற்றுமதி செய்யப்பட்டு, இங்ஙனம் ஏற்றுமதி செய்யப்பட்ட சாக்குகளின் கிரயமான 1000பவுன்

வசூல் செய்வதற்காக, ஜான் இங்கிலாந்திலிருக்கும் உட் என்பவன் பேரில் ஒரு உண்டியல் எழுதி, அதை வேண்டுபவர்களுக்கு விற்பதற்குத் தயாராய் இருக்கிறான். அதே சமயத்தில் ஜோசப் என்ற மற்றொரு ஆஸ்ட்ரேலிய வாசி இங்கிலாந்திலிருக்கும் டானியல் என்பவரிடமிருந்து 1000 பவுன்கள் பெறும்படியான சராக்குகள் வாங்கி யிருப்பதாக வைத்துக் கொள்வோம். இப்பொழுது டானியல் ஆஸ்ட்ரேலியாவிலிருக்கும் ஜோசப் என்பவன்பேரில் 1000 பவுன்களுக்கு விற்கத் தயாராயிருக்கிறான்.

ஆங்கிலேய உட் என்பவன் ஆஸ்ட்ரேலியா ஜானுக்கு பவுன்கள் ரொக்கமாய் அனுப்புவதற்கும், ஆஸ்ட்ரேலியா ஜோசப் ஆங்கில டானியலுக்கு ரொக்கமாய் அனுப்புவதற்கும், பணம் செலவாவதுடன் சிரமமும் அதிகம். ஆனால் இச் செலவும் சிரமும் இல்லாம லிருக்கச் செய்யும் பொருட்டு, உட் ஆஸ்ட்ரேலியாவில் செலாவணியாகும் உண்டியல்களுக்காக எதிர் பார்த்துக் கொண்டிருக்கிறான்; ஜோசப் இங்கிலாந்தில் செலாவணி யாகும் உண்டியல்களுக்காக எதிர் பார்த்துக் கொண்டிருக்கிறான்.

| இங்கிலாந்து | ஆஸ்ட்ரேலியா |
|---|---|
| உட்க்கு ஆஸ்ட்ரேலியாவில் செலாவணியாகும் 1000 பவுன்கள் உண்டியல்கள் தேவை. | ஜானிடத்தில் இங்கிலாந்தில் செலாவணியாகும் 1000 பவுன்கள் உண்டியல் விற்பனைக்கு இருக்கின்றது. |
| டானியலிடத்தில் ஆஸ்ட்ரேலியாவில் செலாவணியாகும் 1000பவுன்கள் உண்டியல் விற்பனைக்கு இருக்கிறது. | ஜோசப்க்கு இங்கிலாந்தில் செலாவணியாகும் 1000 பவுன்கள் உண்டியல் தேவை. |

இப்பொழுது டானியல் வைத்திருக்கும் ஆஸ்ட்ரேலியாவில் செலாவணியாகும் உண்டியலை உட் விலைக்கு வாங்கி,

அதை ஆஸ்ட்ரேலியாவிலிருக்கும ஜானுக்கு அனுப்புகிறான். ஜான் அவ் வுண்டியலை ஜோசப்புக்குக் காட்டி தனக்கு வரவேண்டிய 1000 பவுன்களைப் பெறுகிறான். ஜோசப் ஜானிடத்தில் இருக்கிற இங்கிலாந்தில் செலாவணியாகக் கூடிய உண்டியலை வாங்கி டானியலுக்கு அனுப்புகிறான். டானியல் அதை உட்க்குக் காட்டித் தனக்கு வரவேண்டிய 1000பவுன்களைப் பெறுகிறான். இங்ஙனம் ஒரு பவுனும் இரண்டு நாடுகளுக்கு வெளியில் அனுப்பப்படாமல் அன்னிய நாட்டு வியாபாரம் நடத்தப்படுகிறது.

ஒரு தேசத்தின் ஏற்றுமதியும் இறக்குமதியும் மேற்சொன்னபடி அவ்வளவு சுலபமாக யிருக்காது. எத்தனையோ லக்ஷக் கணக்கான ரூபாய்க்கு ஏற்றுமதியும், இறக்குமதியும் செய்யப்படும். இறக்குமதியும் ஏற்றுமதியும் இரண்டும் சமமாய் இருக்குமானால், அப்பொழுது ஏற்றுமதி செய்பவர்கள் வைத்திருக்கும் உண்டியல்கள் யாவும் இறக்குமதி செய்பவர்களால் வாங்கப்பட்டு விடும். இறக்குமதி செய்பவர்கள் பணம் அனுப்புவதற்கு தேவையான உண்டியல்களும் ஏற்றுமதி செய்பவர்கள் விற்பனைக்கு சப்ளை செய்யும் உண்டியல்களும் சமமாயிருந்தால், அப்பொழுது நாணய மாற்று சமமாயிருப்பதாகச் (at par) சொல்லப்படும். இப்படி யிருந்தால் ஒரு ரூபாய் கூட இவ் வியாபார சம்பந்தமாய் அன்னிய நாடுகளுக்கு ஏற்றுமதி செய்யவோ, அல்லது அன்னிய நாடுகளிலிருந்துஇறக்குமதி செய்யவோ அவசியமிராது.

ஆனால் சாதாரணமாக இறக்குமதிகளும் ஏற்றுமதிகளும் சமமாக இருக்காது. இறக்குமதி ஏற்றுமதியை விட அதிகமாயிருந்தால், ஏற்றுமதி செய்பவர்கள் சப்ளை செய்யக்கூடிய உண்டியல்களுக்கு தேவை யதிகமாயிருக்கும். இறக்குமதி செய்பவர்களுடைய தேவையைவிட இவ்வுண்டியல்

களின் சப்ளை குறைவாயிருப்பதால், இவ் வுண்டியல்களை வாங்குவதற்குப் போட்டி ஏற்படும். ஏற்றுமதி உண்டியல் என்றால் அன்னிய நாடுகளில் கிடைக்கக் கூடிய பணம் என்று அர்த்தம். அன்னிய நாட்டு உண்டியல்களுக்கு போட்டி யென்றால், அன்னிய நாட்டில் கிடைக்கக் கூடிய பணத்துக்குப் போட்டி யென்று பொருள். அன்னிய நாட்டு நாணயத்துக்குத் தேவை அதிகமானால் தேவை, சப்ளை தத்துவத்தின்படி அதன் மதிப்பு அதிகமாகும். அப்பொழுது அத்தேசத்து நாணயத்தின் மதிப்புக் குறையும். அத்தேசத்து நாணயத்தின் மதிப்புக் குறைந்தால் பிறதேசத்து நாண யங்களுக்கு அத் தேசத்து நாணயம் அதிகமாக நாணய மாற்றில் கொடுக்க நேரிடும்.

ஏற்றுமதி, இறக்குமதியை விட அதிகமா யிருந்தால் அன்னிய நாட்டார்களுக்கு இந்நாட்டில் செலாவணியாகக் கூடிய உண்டியல்களுக்குத் தேவை யதிகமாயிருக்கும். இறக்குமதி செய்பவர்களால் கொடுக்கப்பட வேண்டிய உண் டியல்களை விட, அவர்களுடைய தேவை யதிகமா யிருக்கும் எனவே, இந்நாட்டில் செலாவணியாகக் கூடிய உண்டியல் களுக்கு, அதாவது இந்நாட்டு நாணயங்களுக்குத் தேவை அதிகமாகும். தேவை அதிகமாகி, சப்ளை குறைந்தால் இந் நாட்டு நாணயத்தின் மதிப்பு அதிகமாகி பிறருடைய நாணயங் களுக்கு நாணயமாற்றில் இந்நாட்டு நாணயம் குறைவாகக் கொடுக்கப்படும்.

உதாரணமாக இங்கிலாந்திலிருந்து 120 கோடி பவுன் பெறுமானசரக்குகள் ஆஸ்ட்ரேலியாவுக்குஅனுப்பட்டு ஆஸ்ட் ரேலியாவிலிருந்து 100 கோடி பவுன் சாமானே இங்கிலாந் துக்கு அனுப்பப்பட்டால், இங்கிலாந்திற்கு 20கோடி பவுன் கள் அதிகமாக ஆஸ்டிரேலியாவிலிருந்து அனுப்பப்பட

வேண்டுமென ஏற்படுகிறது. ஆஸ்ட்ரேலியாவிலிருந்து இங்கிலாந்தில் 100கோடிபவுன் பெறுமான சாமான்களை இறக்குமதி செய்திருக்கிறபடியால், இங்கிலாந்தில் செலாவணியாகக் கூடிய உண்டியல்கள் 100 கோடி பவுன்களுக்குத் தான் ஆஸ்டிரேலியாவில் கிடைக்கும். இங்கிலாந்தின் சாக்குகளை வாங்கி இங்கிலாந்துக்குப் பணம் அனுப்ப வேண்டியவர்கள், தங்கத்தைக் கப்பலில் அனுப்புவதற்குப் பதிலாக, இந்த இங்கிலாந்தில் செலாவணியாகக்கூடிய உண்டியல்களை வாங்குவதற்கு முன் வருவார்கள். ஆனால் இங்கிலாந்துக்கு அனுப்ப வேண்டியது 120 கோடி பவுன்களாயிருக்க, இங்கிலாந்தில் செலாவணியாகக் கூடிய உண்டியல்கள் 100 கோடி பவுன்களுக்குத்தான் கிடைப்பதால், மேற்படி உண்டியல்களை வாங்குவதற்குப் போட்டி இருக்கும். தங்கத்தையே கப்பலில் ஏற்றி அனுப்புவதற்கு ஒரு பவுனுக்கு 6 பென்சுகளாகுமென வைத்துக்கொண்டால், இந்த இங்கிலாந்தில் செலாவணியாகும் உண்டியல்களை ஒரு பவுனுக்கு 6 பென்சு வரை அதிகம் கொடுத்து, வாங்கப் பிரயத்தனப்படுவார்கள், ஆனால் அதைவிட அதிக விலை கொடுக்க முன் வரமாட்டார்கள். ஏனெனில் ஒரு பவுன் உண்டியலுக்கு 6 பென்சுக்கு அதிகம் கொடுப்பதைவிட, இச் செலவிலேயே பவுன்களை கப்பலில் ஏற்றுமதி செய்யலாம் என்று வியாபாரிகள் நினைப்பார்கள். இந் நிலையில் ஆஸ்ட்ரேலியா நாணயத்துக்கும் இங்கிலாந்து நாணயத்துக்கும் நாணய மாற்று விகிதம் ஒரு ஆங்கிலப் பவுன் ஆஸ்ட்ரேலியா 1 பவுன் 6 பென்சுக்குச் சமம் என்று சொல்லப்படும். அதாவது ஆஸ்ட்ரேலியாவில் 1பவுன் 6 பென்சு கொடுத்து இங்கிலாந்தில் 1 பவுன் வாங்க ஆஸ்ட்ரேலியா வியாபாரிகள் தயாராயிருக்கின்றனர் என்பது இதற்குப் பொருள்.

இதற்கு மாருக இங்கிலாந்தின் இறக்குமதி 120 கோடியாயிருந்து, ஏற்றுமதி 100 கோடி பவுன்கள் தானிருந்தால், இங்கிலாந்திலிருந்து 20 கோடி பவுன்கள் அதிகமாய் ஆஸ்ட்ரேலியாவுக்கு அனுப்ப வேண்டியிருக்கும். ஆகையால் ஆஸ்ட்ரேலியாவில் செலாவணியாகக்கூடிய உண்டியல்களுக்குத் தேவை அதிகமாயிருக்கும். அதனுல் அவைகளின் மதிப்பு அதிகமாகும். இங்கிலாந்திலிருந்து ஒரு பவுன் ஆஸ்ட்ரேலியாவுக்கு அனுப்பப்பட்டால், அதை அனுப்புவதற்குக் கப்பல் சத்தம் 6 பென்சு கழிக்கப்பட்ட பின் 19ஷி. 6 பென்சு தான் ஆஸ்ட்ரேலியாவில் கொடுக்கப்படும். எனவே இங்கிலாந்தில் ஒரு பவுன் கொடுத்து ஆஸ்ட்ரேலியாவில் 19 ஷி 6 பென்சு கொடுக்கக் கூடிய ஆஸ்ட்ரேலியாவில் செலாவணியாகக் கூடிய உண்டியல்களை வாங்குவதற்கு வியாபாரிகள் முன் வருவார்கள். ஆனுல் அதைவிடக் அதிக மதிப்புக் கொடுத்து உதாரணமாக 19 ஷி 5 பென்சுக்கு இந்த உண்டியல்களை வாங்கமாட்டார்கள். அதாவது இங்கிலாந்தில் ஒரு பவுனுக்கு ஆஸ்ட்ரேலியாவில் 19 ஷி. 6 பென்சைவிட குறைந்த மதிப்புப் பெறச் சம்மதிக்கமாட்டார்கள். ஏனெனில், இவ்விலைக்கு இவ் வுண்டியல்களை வாங்குவதைவிட, பவுன்களை ஆஸ்ட்ரேலியாவுக்குக் கப்பல்களில் அனுப்புவது லாபகரமாயிருக்கும். இந் நிலையில் அவ்விரண்டு தேசத்து நாணயங்களுக்கும் நாணய மாற்று விகிதம் ஒரு ஆங்கிலப் பவுன் ஆஸ்ட்ரேலிய 19 ஷி. 6 பென்சுக்குச் சமம் என்று சொல்லப்படும்.

இப்பொழுது வேறு நாணயங்கள் வழங்கப் பெற்ற இரண்டு நாடுகளுக்குள் நாணய மாற்று எப்படி நடக்கிறதென்பதைப் பார்ப்போம். பிரான்சின் நாணயம் பிரான்க்; ஆங்கில நாணயம் பவுன். பிரான்சு தேசத்தில் ஒருவன்

இங்கிலாந்துக்குப் பணம் அனுப்ப வேண்டுமானால் பிரான்கைப் பவுனாக மாற்றி அனுப்பவேண்டும். ஆங்கிலேயன் ஒருவன் பிரான்சுக்குப் பணம் அனுப்ப வேண்டுமானால் பவுனை பிரான்குகளாக மாற்றி அனுப்பவேண்டும். ஒரு பவுனில் 25 பிரான்குகள் 22 சென்டுகள் மதிப்பு இருக்கிறதென முன் பக்கங்களில் கண்டோம். இவ்விரண்டு தேசங்களுக்குள் நடக்கும் வியாபாரத்தில் ஏற்றுமதியும் இறக்குமதியும் சமமாயிருந்து, பிரான்சால் இங்கிலாந்துக்குக் கொடுக்கப்பட வேண்டிய தொகையும், இங்கிலாந்தால் பிரான்சுக்குக் கொடுக்கப்படவேண்டிய தொகையும் சமமாய் இருக்கும் பட்சத்தில் நாணய மாற்று சமமாக யிருப்பதாகச் சொல்லப்படும். இரண்டு தேசங்களிலும் இறக்குமதி செய்பவர்களுக்குத் தேவையான உண்டியல்களும் ஏற்றுமதி செய்பவர்கள் சப்ளை செய்யக்கூடிய உண்டியல்களும் ஒன்றுக்கொன்று சமமாய் இருப்பதால் இரு தேசத்து நாணயங்களின் மதிப்பும் ஒன்றுக்கொன்று அதிகப்படாமலும் குறையாமலும் இருக்கும். இந்நிலையில் இங்கிலாந்தில் ஒரு பவுன் கொடுத்தால், பிரான்சு தேசத்தில் செலாவணியாகக் கூடிய 25 பிரான்க் 22 சென்டு உண்டியல் பெறலாம். பிரான்சில் 25 பிரான்க் 22 சென்டுகள் கொடுத்து, இங்கிலாந்தில் செலாவணியாகக் கூடிய ஒரு பவுன் உண்டியல் பெறலாம்.

ஆனால், ஏற்றுமதிகளும் இறக்குமதிகளும் என்றும் சமமாய் இருப்பதில்லை. ரொக்கம் ஒவ்வொரு சமயத்தில் இங்கிலாந்தை நோக்கியும் சில சமயங்களில் பிரான்சை நோக்கியும் ஓடிக்கொண்டிருக்கும். ரொக்க ஓட்டத்தை அனுசரித்து, உண்டியல்களின் தேவையும் சப்ளையும் மாறிக்கொண்டு வரும். ரொக்கம் இங்கிலாந்தை நோக்கி ஓடிக்

கொண்டிருந்தால் இங்கிலாந்தில் செலாவணி யாகக்கூடிய உண்டியல்களுக்குப் பிரான்சில் போட்டி ஏற்பட்டு அவை களின் மதிப்பு அதிகமாகும். அச்சமயம் இங்கிலாந்தில் ஒரு பவுனுக்கு பிரான்சில் 25 பிரான்குகள் 22 சென்டை விட அதிகம் கொடுக்க மக்கள் முன் வருவார்கள். ஆனால் ரொக்கம் பிரான்சை நோக்கிச் சென்றுகொண் டிருந்தால் பிரான்சில் செலாவணியாகக் கூடிய உண்டியல்களுக்கு இங்கி லாந்தில் தேவை யதிகமாகி அவைகளுக்காக போட்டி ஏற் பட்டு ஒரு பவுன் கொடுத்து பிரான்சில் 25 பிரான்குகள் 22 சென்டைவிடக் குறைந்த தொகைக்குத் தங்கள் ஆங் கில நாணயங்களை பிரான்சு நாணயங்களாக மாற்ற மக்கள் முன் வருவார்கள்.

தங்க வரம்புகள் (Specie points):—இங்ஙனம் நாணய மாற்றில் ஒரு நாட்டின் நாணயம் சில சமயங்களில் மதிப்பில் குறைகின்றது; சில சமயங்களில் அந் நாணயம் மதிப்பில் அதிகமாகின்றது. ஆனால், இந்தக் குறைதலும் கூடுதலும் ஒரு அளவுக்குமேல் போகாது. வியாபாரிகள் தாங்கள் அன்னிய நாடுகளுக்கு அனுப்ப வேண்டிய தொகைகளை ரொக்கமாய்க் கப்பல்களில் ஏற்றுமதி செய் யாமல், உண்டியல்களை வாங்கி அனுப்புவதற்குக் காரணம், அவைகளை வாங்கி அனுப்புவது, அவர்களுக்கு லாபகாமாக வும் சௌகரியமாகவும் இருக்கின்றதென்பதே.

உதாரணமாக இங்கிலாந்திலிருந்து பிரான்சுக்கு ஒரு பவுன் அனுப்புவதற்கும், பிரான்சிலிருந்து இங்கிலாந்துக்கு ஒரு பவுனுக்குச் சமமான 25 பிரான்குகள் 22 சென்டுகள் தங்கம் அனுப்புவதற்கும், 7 சென்டுகள் கப்பல் சத்தம் முதலியவைகளில் செலவாகுமென வைத்துக்கொள்வோம். வியாபாரிகள் உண்டியல்கள் வாங்கி அனுப்புவதற்குக்

காரணம், இந்த 7 சென்டுகளை மீதம் செய்வதே. நாணய மாற்று சமமாய் இருக்கும் சமயத்தில்தான் அவர்களுக்கு இந்த 7 சென்டுகளும் மீதமாகும். மற்ற சமயங்களில் தேவைக்குத் தக்க உண்டியல்கள் சப்ளையில்லாத சமயத்தில், உண்டியல்களுக்கு அதிக விலை கொடுக்க வேண்டி ஏற்படுகிறது. ஆனால் எப்பொழுதும் இந்த 7 சென்டுகளுக்கு அதிகமாகக் கொடுக்க மாட்டார்கள்; 7 சென்டுகளுக்கு அதிகமாகக் குறைத்து, உண்டியல்களை வாங்கவும் மாட்டார்கள். ரொக்கம் பிரான்சு தேசத்தை நோக்கி வந்து கொண்டிருந்தால், எப்பொழுதும் 1-பவுனுக்கு 25 பிரான்கு 15 சென்டுகளுக்குக் குறைத்து ஒரு ஆங்கிலேயனும் உண்டியல்கள் வாங்கமாட்டான்; ஏனெனில் இதற்குக் குறைந்த மதிப்புப் பெறுவதைவிட பவுனைக் கப்பலில் ஏற்றுமதி செய்து பிரான்சுக்கு அனுப்புவது சௌகரியமாயிருக்கும். இம் மாதிரியே ரொக்கம் இங்கிலாந்தை நோக்கிப் போய்க் கொண்டிருந்தால் ஒரு பவுனுக்கு 25பிரான்குகள் 29 சென்டுகளுக்கு அதிகமாகக் கொடுக்கப்படமாட்டாது.

நாணய மாற்று விகிதம் இந்த இரண்டு வரம்புகளுக்குள் தான் ரொக்கத்தின் போக்கு வரத்தை அனுசரித்து மாறிக்கொண்டிருக்கும். நாணயமாற்று விகிதம் இவ்வரம்புகளைக் கடந்து சென்றால் தங்கமே நாட்டைக்கடந்து செல்லுமாகையால், இந்த இரண்டு வரம்புகளுக்கும் தங்க வரம்புகள் என்று பெயர் (Specie Points).

நாணயமாற்று விகிதம் பண ஓட்டத்தைத் தெரிவிக்கும் அறிகுறி:—நாணய மாற்று விகிதத்திலிருந்து பணம் எத்திக்கில் செல்கின்றதென்பதை யுணரலாம். ஒரு தேசத்தின் நாணயமாற்று விகிதம் குறைவாயிருந்தால் ரொக்கம் அத்தேசத்தை நோக்கி ஓடுகிறதென்பதை யுணரலாம். நாணய

மாற்று விகிதம் அதிகமாயிருந்தால் பணம் அத்தேசத்திற்கு வெளியே ஓடுவதை ஊகிக்கலாம். இவைகளைப்பற்றி முன் பங்கங்களில் விவரமாகச் சொல்லப்பட்டிருக்கிறது.

ஆனல் நாணய மாற்று விகிதத்திலிருந்து மாத்திரம், ஒரு தேசத்தினுடைய செல்வம் அதிகமாயிருக்கின்றதென்ருவது, அல்லது ஒரு தேசம் நஷ்டமடைகின்றதென்ருவது சொல்லமுடியாது. அன்னிய நாட்டு வியாபாரத்தைத் தவிர, வேறு பல வழிகளிலும் செல்வம் நாட்டிற்குள் வரலாம். அன்னிய நாடுகளில் கடன் வாங்கினல், அக்கடன் தொகைகள் கடன் வாங்கின நாட்டுக்குள் கொண்டுவரப்படவேண்டும். அல்லது அன்னிய நாட்டார்கள் அவர்கள் ரொக்கத்தை நமது நாட்டுக் கைத்தொழில்களில் அல்லது மற்ற வகைகளில் நம் நாட்டில் உபயோகப்படுத்த விரும்பினல் நம் நாணய மாற்று விகிதம் குறையும். இத்தொகைகள் நம் நாட்டிற்குள் வருவதால் நம் நாட்டின் செல்வம் அதிகப்படுவதில்லை. உண்மையில் பிரதி வருஷமும் செல்வம் நம் நாட்டிலிருந்து அனுப்பப்படுவதற்கு இது அடிப்படையான காரணமாய் ஏற்படலாம். ஆதலால் நாணய மாற்று விகிதத்திலிருந்து மாத்திரம், நம் தேசம் லாபம் அல்லது நஷ்டம் அடைகின்றது என்று சொல்வது பிசகு.

ரொக்க ஓட்டத்தை பாங்குகள் கட்டுப்படுத்துகின்றன:- ஒரு தேசத்திலிருந்து மற்ற தேசங்களுக்கு ரொக்கம் ஓடுவதையும், மற்ற தேசங்களிலிருந்து ஒரு தேசத்துக்குள் ரொக்கம் வருவதையும் பாங்குகள் கட்டுப்படுத்துகின்றன.

சாதாரணமாக ஒரு பாங்கில் அதிக ரொக்கம் இருந்தால் அந்த பாங்குக்காரர்கள் என்ன செய்கிருர்கள்? வட்டியைக்

குறைக்கின்றார்கள். குறைந்த வட்டிக்கு அவர்கள் கடன் கொடுப்பது தெரிந்ததும், பணம் வேண்டியிருக்கும் பலர் அவர்களிடத்தில் வந்து பணம் வாங்குகிறார்கள். இதன் மூலம் பாங்கின் ரொக்க யிருப்புக் குறைவு படுகிறது. ஆனால் அவர்கள் ரொக்கம் மிகவும் குறைந்து போனால் அவர்கள் என்ன செய்கிறார்கள்? வட்டியை உயர்த்துகின்றார்கள். வட்டி உயர்த்தப்பட்டால் கடன் வேண்டியவர்கள் இப் பாங்கில் கடன் வாங்காமல், இன்னும் குறைந்த வட்டிக்குப் பணம் கிடைக்கக்கூடிய இடங்களுக்குச் சென்று கடன் வாங்குகிறார்கள். பாங்கால் கொடுக்கப்பட்ட கடன்கள் வசூலாகி, அதன் மூலம் பாங்கின் ரொக்கம் மறுபடியும் அதிகமாகும்.

தேசங்களும், ரொக்கம் அதாவது தங்கம், தங்கள் நாட்டுக்குள் வருவதையும், வெளியே போவதையும் இவ்வாறு கட்டுப்படுத்துகின்றன. அந்தந்த தேசத்தின் நன்மையைக் கோரி நாணய சம்பந்தமான விஷயங்களையும், நாணய மாற்று சம்பந்தமான காரியங்களையும் செய்வதற்கும், அந் நாட்டின் வியாபார விருத்திக்கு வேண்டிய சௌகரியங்களைச் செய்வதற்கும், ஒவ்வொரு நாட்டிலும் பெரிய பாங்குகள் ஸ்தாபிக்கப்பட்டிருக்கின்றன. இங்கிலாந்தில் இவ்விஷயங்களைக் கவனிக்க ஏற்படுத்தப்பட்டிருக்கும் பாங்கின் பெயர் 'பாங்கு ஆப் இங்கிலண்டு' (Bank of England) பிரான்சு தேசத்து பாங்கியின் பெயர் 'பாங்கு டீ பிரான்சு' (Banqu de France); யுனைடெட் ஸ்டேட்ஸ் ஆப் அமெரிக்கா பாங்கியின் பெயர் பெடரல் ரிசர்வ் போர்டாரால் நிர்வாகம் செய்யப்பட்ட 'பெடரல் ரிசர்வ் பாங்கு ஆப் நியூ யார்க்' முதலியன. The Federal Reserve Bank of New York etc., controlled by the Federal

Reserve Board); ஜர்மனியின் பாங்கின் பெயர் 'ரீச்ஸ் பாங்கு'(Reichs bank of Germany). நம்முடைய நாணய முறையையும், நாணயமாற்று சம்பந்தமான விஷயங்களையும் நம்முடைய நன்மையைக் கோரிச் செய்வதற்கும் நம் கைத்தொழில்களையும் வியாபாரத்தையும் அபிவிருத்தி செய்வதற்கும், இம் மாதிரி பாங்கு ஒன்று நம் தேசத்தில் இல்லாதது ஒரு பெருங் குறையாகும்.

இப் பாங்குகள் தங்கள் நாட்டுக்குள் தங்கம் வருவதையும், வெளியே போவதையும் டிஸ்கவுண்ட் (Discount) அல்லது வட்டத்தை உயர்த்தியும் தாழ்த்தியும் கட்டுப்படுத்துகின்றன. இப் பாங்குகள் டிஸ்கவுன்ட் அல்லது வட்டம் பெற்றுக்கொண்டு, உண்டியல்களின் பேரில் பணம் கொடுக்கின்றன. தங்கள் தேசத்துக்குள் அதிகமாகத் தங்கம் இறக்குமதி செய்யப்படுவதாகவும் அல்லது தங்கள் பாங்கில் அதிக ரொக்கம் கையிருப்பு இருப்பதாகவும் அவர்களுக்குத் தென்பட்டால், அவர்கள் உண்டியல்களின் பேரில் வட்டியைக் குறைக்கின்றனர். உதாரணமாக பாங்கு ஆப் இங்கிலண்டு, பான்கு டி பிரான்சு முதலிய பாங்குகளில் உண்டியல்கள் 100-க்கு 3 வட்டத்திற்கு ஒப்புக்கொள்ளப்படுகின்றன; அதாவது டிஸ்கவுண்ட் செய்யப்படுகின்றன வென்று வைத்துக்கொள்வோம். 100 பவுன்கள் மதிப்புக்கொண்ட உண்டியல்களுக்கு அவர்கள் 97 பவுன்கள் கொடுக்கத் தயாராயிருக்கிறார்கள் என்பது இதற்குப் பொருள். இந்நிலையில் தங்கம் அதிகமாக இங்கிலாந்துக்குள் வருவதாகவோ அல்லது பாங்கு ஆப் இங்கிலண்டின் கஜானாவில் அதிக ரொக்கயிருப்பு இருப்பதாகவோ தோன்றினால், பாங்கு ஆப் இங்கிலண்டு உடனே உண்டியல்களின் பேரில் வட்டம் அல்லது டிஸ்கவுண்ட் விகிதத்தைக் குறைப்பார்கள்; 100-க்கு 2 ஆகக்

குறைப்பதாக வைத்துக்கொள்வோம். இப்பொழுது 100 பவுன் உண்டியல் கொடுத்து பாங்கு ஆப் இங்கிலண்டில் 98 பவுன்கள் பெறமுடியும். மற்ற நாட்டு பாங்குகளில் 100 பவுன்கள் உண்டியல்கள் கொடுத்தால் 97 பவுன்கள் தான் பெறமுடியும்; ஆதலால் உண்டியல்களின் பேரில் பணம் பெற நினைப்பவர்கள் யாவரும் பாங்கு ஆப் இங்கிலண்டில் தங்கள் உண்டியல்களைக் கொடுத்துப் பணம் பெறுவார்கள். அன்னிய நாடுகளிலிருந்து உண்டியல்கள் வந்து குவியும், இவ் வுண்டியல்களுக்காகப் பணம் அன்னிய நாட்டுக்கு அனுப்பநேரிடும். இதனுல் தங்கம் நாட்டுக்குள் வருவது நிறுத்தப்பட்டு, பாங்கு ஆப் இங்கிலண்டு கையிருப்பும் குறையும்.

ஆனுல் தங்கம் அதிகமாக தேசத்தை விட்டு வெளிச் செல்வதாகவும், அல்லது பாங்கு ஆப் இங்கிலண்டின் கை யிருப்பு மிகக் குறைந்து போனதாகவும் தோன்றினுல், உண் டியல்களின்பேரில் டிஸ்கவுண்ட் அல்லது வட்டம் உயர்த்தப் படும். 100-க்கு 4 வட்டியாக உயர்த்தப்பட்டதாக வைத்துக் கொள்வோம். இப்பொழுது 100 பவுன் உண்டியல் கொடுத்தால் 96 பவுன்கள் தான் பாங்கு ஆப் இங்கிலண்டி லிருந்து பெறமுடியும். ஆனுல் பாங்கு டீ பிரான்சிலிருந்து 97 பவுன்கள் பெறமுடியுமாதலால், வியாபாரிகள் தங்கள் உண்டி யல்களை பாங்கு டீ பிரான்சில் கொடுத்து மாற்றுவார்கள். இங்கிலாந்தில் உண்டியல்களின் பேரில் கொடுக்கப்பட்ட பணம் வசூல் செய்யப்பட்டு, மறுபடியும் உண்டியல்களின் பேரில் கொடுக்கப்படாததால், ரொக்கம் தேசத்தைவிட்டு வெளியே அனுப்பப்படமாட்டாது. பாங்கு ஆப் இங்கி லண்டின் கையிருப்பும் அதிகமாகும்.

இங்ஙனம் பாங்குகள் ரொக்க ஓட்டத்தைக்கட்டுப் படுத்தி, அதன் மூலம் நாணயமாற்று விகிதம் அல்லது எக்ஸ் சேன்ஜ் ரேட்டையும் கட்டுப்படுத்துகின்றன.

அதிகாரத்தின் சுருக்கம்:—இவ்வதிகாரத்தை சுருங்கச் சொல்லுமிடத்து கீழ்க்கண்ட கருத்துகள் புலப்படும்.

நாணய மாற்று விகிதம், ஒரு தேசத்தால் மற்றதேசங் களுக்குக் கொடுக்கப்படவேண்டிய, அல்லது மற்ற தேசங்க ளால் அந்த தேசத்துக்கு கிடைக்கவேண்டிய ரொக்கத் தைப் பொறுத்தது.

நாடுகளுக்குள் நடக்கும் வியாபாரத்தாலும், ஒரு தேசத் திலிருந்து மற்ற தேசங்களுக்கு, தேவை, கடன் வாங்குதல் முதலிய காரணங்களுக்காக கொடுக்கப்படவேண்டிய தொகைகளாலும், உண்டியல்களின்பேரில் பணம் கொடுப்ப தாலும், ரொக்கம் ஒரு நாட்டிலிருந்து மற்ற நாடுகளுக்கு ஓடிக்கொண்டிருக்கிறது.

இப் பண ஓட்டம் பாங்குகள் ஏற்படுத்தும் டிஸ்கவுன்ட் ரேட்கள் அல்லது உண்டியல்கள் வட்ட விகிதத்தால் கட்டுப் படுத்தப்படுகின்றது.

பாங்குகள் இவ்விதமாக ரொக்க ஓட்டத்தைக் கட்டுப் படுத்துவதின் மூலம், நாணயமாற்று விகிதத்தையும் கட்டுப் படுத்துகின்றன.

நாணயமாற்று விகிதத்தின் மாறுதல்கள் இரு தங்க வரம்புகளுக்கு அதிகமாகவும் குறைவாகவும் ஆகமுடியாது. இவ்விரு வரம்புகளுக்குள் தான் நாணயமாற்று விகிதம் மாறிக் கொண்டிருக்கும்.



# பதினான்காவது அதிகாரம்

## இந்தியாவின் நாணய முறையும் நாணய மாற்றும் 20 நூற்றாண்டின் ஆரம்பம் வரை

இந்திய நாணய முறையின் சரித்திரம்—1801 முதல் 1873 வரை:—(Indian currency and Exchange) பல நூற்றாண்டுகளாக நம் நாட்டில் பல விதமான நாணயங்கள் வழங்கப்பட்டு வந்தன. தங்க நாணயங்களும் வெள்ளி நாணயங்களும் பல அரசர்களால் அச்சிட்டு வழங்கப்பட்டன. அக்பர் பாதுஷா காலத்தில் தங்கம், வெள்ளி இவ்விரண்டு உலோகங்களிலும் நாணயங்கள் அச்சிடப்பட்டன. வட இந்தியாவைக் காட்டிலும் தென் இந்தியாவில் தங்க நாணயங்கள் அதிகம் இருந்தன. முகலாய அரசர்களுக்குப் பின் பல சிற்றரசர்களும் பலவிதமான நாணயங்களை வெளியிட்டனர். எனவே, நாடு முழுதும் பல் வேறுவிதமான நாணயங்கள் நிறைந்திருந்தன. 19-ம் நூற்றாண்டின் ஆரம்பத்தில் இந்தியாவில் சுமார் 994 வகை நாணயங்கள் உலாவி வந்ததாகச் சொல்லப்படுகிறது. *

ஆங்கிலேயர் நம் நாட்டைக் கைப்பற்றிய சமயம், நாணயங்கள் இவ்வாறு இருந்தது, அவர்கள் வியாபாரத்துக்கு அசௌகரியமா யிருந்தது. ஒரே விதமான நாணயம் நாடு முழுதும் வழங்கப்பட்டு வந்தால் அது அவர்கள் வியாபாரத்துக்கு உதவியா யிருக்குமென அவர்களுக்குத் தோன்றிற்று. எனவே, முதலில் 1818-ம் வருஷத்திலும் பின் 1835-ம் வருஷத்தி லிருந்தும் 180 தான்ய எடையில்

* Macleod's Indian Currency page 13.

11/12 பங்கு வெள்ளியாகவும் 1/12 பங்கு மட்ட உலோக மாகவும் சேர்த்து ரூபாய் அச்சிட்டு வெளியிடப்பட்டது. வெள்ளி கொடுக்கப்பட்டால் நாணயங்கள் அச்சிடும் சாலைகளில் (Mints) ரூபாய் அச்சிட்டுக் கொடுக்கப்படும். (Free coinage of silver) என்றும், வியாபாரங்களி லும் வரிகளுக்காகவும் ரூபாய்கள் எத்தனை வேண்டுமாகு லும், கொடுக்கப்படலா மென்றும் (Unlimited legal tender) சட்டம் செய்யப்பட்டது. இதை வெள்ளி ஒரு உலோக முறை (Silver monometallism) என்று சொல்லலாம். ஆனல் அதே சமயத்தில் தங்க நாணயங்க ளான மோகராக்கள், மோகரா ஒன்று 15 ரூபாய் விகிதம், வரிகளுக்காக கஜானுவில் ஒப்புக்கொள்ளப்படும் என்றும் கவர்ன்மெண்டாரால் தெரிவிக்கப்பட்டது.

அக் காலத்தில் ஆஸ்ட்ரேலியாவிலும் அமெரிக்காவிலும் காலிபோர்னியாவிலும் தங்கச் சுரங்கங்கள் பல புதிதாகக் கண்டு பிடிக்கப்பட்டு அவைகளி லிருந்து அதிகமாகத் தங்கம் வரத் தொடங்கிற்று. அதே சமயத்தில் வெள்ளிச் சுரங்கங்களின் வெளியீடு குறைந்தது. இதன் காரணமாக வெள்ளியின் விலை அதிகமாகி, தங்கத்தின் விலை குறையத் தலைப்பட்டது. எனவே கிரஷம் தத்துவம் † அனுபவத்தில் காணப்பட்டது. வெள்ளி நாணயங்கள், வெள்ளியாக அதிக மதிப்புப்பெற்றிருந்தபடியால், அவைகள் நடமாட்டத்திலிரு ந்து எடுத்துக்கொள்ளப்பட்டு, உருக்கி விற்கப்பட்டன. தங் கம், நாணயமாய் அதிக மதிப்புப் பெற்றிருந்தபடியால், தங்க நாணயங்கள் அதிகமாக வரிகளுக்காகக் கொடுக்கப்பட்டன. இதனல் கவர்ன்மெண்டாருக்கு நஷ்டமுண்டாயிற்று. ஆத

---

† கிரஷம் தத்துவத்தைப்பற்றி அறிய, நாணயங்கள் என்ற தலைப்புக்கொண்ட அதிகாரத்தைப்பார்க்க.

லால் தங்க நாணயங்கள் வரிகளுக்காக கஜானாக்களில் ஒப்புக் கொள்ளக்கூடாதென்று கவர்ன்மெண்டாரால் உத்தரவு பிறப்பிக்கப்பட்டது.

19ம் நூற்றாண்டின் ஆரம்பத்தில், 1816 ம் வருஷத்தில் இங்கிலாந்து தங்க ஒரு உலோக நாணய முறையைக் (Gold monometalism) கைப்பற்றிற்று. ஐரோப்பிய நாடுகளில் பல, இத்தங்க ஒரு உலோக நாணய முறையைப் பின்பற்ற ஆரம்பித்தன. தங்கமும் விலை குறைந்திருந்தது.

அச் சமயத்தில் அமெரிக்காவிலுண்டான தேவைக்கு நம் தேசத்திலிருந்து ஏராளமான பருத்தி ஏற்றுமதி செய்து சப்ளை செய்யப்பட்டது. இப் பருத்தி ஏற்றுமதிகளுக்கு நல்ல விலை கிடைத்து, இதன்மூலம் ஏராளமான தங்கம் இறக்குமதி செய்யப்பட்டது. நம் நாட்டின் தங்க ஒரு உலோக நாணய முறையை அனுஷ்டிப்பதற்கு வேண்டிய தங்கம், நம் நாட்டில் இருப்பதாகக் கருதப்பட்டது. ஐரோப்பிய நாடுகளில் பல இத் தங்க ஒரு உலோக நாணய முறையையே அனுஷ்டித்து வருவதால், இந்தியாவும் அம்முறையைக் கைக்கொள்வதே வியாபார விருத்திக்கு ஏற்றதாகும் என்று நினைத்து, 1866ம் வருஷத்தில் ஆங்கில வியாபாரச் சங்கத்தார்கள் இந்தியாவிலும் தங்க ஒரு உலோகமுறை பின்பற்றப்படவேண்டுமென அபிப்பிராயப்பட்டனர்.

வெள்ளியின் மதிப்பும், ரூபாயின் மதிப்பும் குறைதல் 1871—1893:— 1873ம் வருஷத்திலிருந்து பல புதிய வெள்ளிச் சுரங்கங்கள் அமெரிக்காவில் கண்டுபிடிக்கப்பட்டு, அவைகளிலிருந்து ஏராளமாக வெள்ளி வெளியிடப்பட்டது. இதைப்பற்றி முன் அதிகாரத்தில் விவரமாகச் சொல்லப்பட்டிருக்கிறது. தவிர, ஐரோப்பிய நாடுகளில் பல, தாங்கள்

அதுவரை அனுஷ்டித்து வந்த தங்கம் வெள்ளி இரு உலோக நாணய முறையை விட்டு, தங்க ஒரு உலோக நாணய முறையைக் கைப்பற்றின. எனவே, ஒரு பக்கத்தில் சப்ளை மிகவும் அதிமாகி, மற்றொரு பக்கத்தில் தேவை மிகவும் குறையவே, வெள்ளியின் விலை மிகவும் குறைந்தது.

நமது நாட்டின் முக்கிய நாணயமாகிய ரூபாய் வெள்ளி யால் செய்யப்பட்டது. வெள்ளியின் மதிப்புக் குறையக் குறைய, நாணய மாற்றில் நம் ரூபாயின் மதிப்பும் குறைந்தது. அதாவது நாணய மாற்றில் ஒரு பவுனுக்கு, முன், நாம் கொடுத்ததைவிட அதிகமாகக் கொடுக்க நேர்ந்தது. வேறு விதமாகச் சொன்னால், ஒரு ரூபாய்க்கு முன் கிடைத்ததை விட இப்பொழுது குறைந்த தங்கம் தான் கிடைக்கும். கீழ்க் கண்ட வருஷங்களில், வெள்ளியின் விலை குறைந்ததும், அதை அனுசரித்து ரூபாயின் மதிப்புக் குறைந்ததும் காண்பிக்கப்பட்டிருக்கிறது.

| †வருஷம் | வெள்ளியின் சராசரி விலை ஒரு அவுன்சின் விலை பென்சுகளில் | சராசரி நாணய மாற்று விகிதம்: ஒரு ரூபாய்க்குபென்சுகள் |
|---|---|---|
| 1874 | $59\frac{1}{4}$ | 22·351 |
| 1875 | $58\frac{5}{16}$ | 22·221 |
| 1876 | $56\frac{7}{8}$ | 21·645 |
| 1877 | $52\frac{3}{4}$ | 20·491 |
| 1878 | $54\frac{13}{16}$ | 20·790 |
| 1879 | $52\frac{9}{16}$ | 19·761 |
| 1880 | $51\frac{1}{4}$ | 19·961 |
| 1881 | $52\frac{1}{4}$ | 19·956 |
| 1882 | $51\frac{11}{16}$ | 19·895 |
| 1883 | $51\frac{5}{8}$ | 19·525 |

| †வருஷம் | வெள்ளியின் சராசரி விலை ஒரு அவுன்சின் விலை பென்சுகளில் | சராசரி நாணய மாற்று விகிதம்: ஒரு ரூபாய்க்குபென்சுகள் |
|---|---|---|
| 1884 | $50\frac{9}{16}$ | 19·536 |
| 1885 | $50\frac{5}{1}$ | 19·308 |
| 1886 | $48\frac{5}{8}$ | 18·254 |
| 1887 | $45\frac{3}{8}$ | 17·441 |
| 1888 | $44_{58}$ | 16·899 |
| 1889 | $42\frac{7}{8}$ | 16·379 |
| 1890 | $42\frac{11}{16}$ | 16·566 |
| 1891 | $47\frac{11}{16}$ | 18·089 |
| 1892 | $45\frac{1}{16}$ | 16·733 |
| 1893 | $39\frac{13}{16}$ | 14·984 |

1874ம் வருஷத்தில் ஒரு அவுன்ஸ் வெள்ளியின் விலை $59\frac{1}{4}$ பென்சு என்று யிருந்தது 1893ம் வருஷத்தில் $39\frac{13}{16}$ பென்சுகளாகக் குறைந்தது. இதற்குத் தகுந்தபடி ரூபாயின் மதிப்பும் குறைந்தது. 1874ம் வருஷத்தில் ரூபாயின் நாணயமாற்று விகிதம் 22·351 பென்சுகளா யிருந்தது. ஆனால் 1893 ல் இவ்விகிதம் 14·984 பென்சுகளாகத் தாழ்ந்தது. இங்ஙனம் ரூபாய் மதிப்பில் குறைந்தது, பலவிதமான பயன்களை விளைவித்தது.

ரூபாய் மதிப்புக் குறைந்ததனால் உண்டான பயன்கள்:—1. இதனால் அன்னிய நாட்டு வியாபாரம் கஷ்டப்பட்டது. இங்கிலாந்தின் இந்திய வியாபாரம் தொந்தரவுக்களுக்குள்ளாயிற்று. நாணயமாற்று விகிதம் அடிக்கடி மாறிக்கொண்டிருக்கும்போது வியாபாரம் செய்வது மிகவும் கடின

† Findlay Shirras Indian Finance and Banking pages 122, 125 132.

மாக இருக்கும். ரூபாயின் நாணயமாற்று மதிப்புக் குறைந்தால் ஒவ்வொரு பவுனுக்கும் அதிக ரூபாய்கள் கொடுக்க நேரிடும். உதாரணமாக ரூபாயின் நாணயமாற்று மதிப்பு 18 பென்சுகளாக யிருக்கும் சமயம், 100 பவுன் பெறுமான சரக்குகள் வாங்கினால் ரூ. 1333-5-4 கொடுக்க வேண்டி ஏற்படும். ஆனால் சரக்குகள் இந்தியாவுக்கு வந்து சேருவதற்கு முன் வெள்ளியின் விலை குறைந்து, ரூபாயின் நாணயமாற்று மதிப்பும் 16 பென்சுகளாகக் குறைந்தால், அவன் அதே சரக்குகளுக்கு ரூ. 1500-கொடுக்க நேரிடும். ஆகையால் சரக்குகளுக்கு ஆர்டர் கொடுக்கும்போது ஒரு விலையும், சரக்குகள் வந்து சேரும் சமயத்தில் அதைவிட அதிக விலையும் கொடுக்க வேண்டியிருந்தால், அன்னிய நாட்டு இறக்குமதிகள் மிகவும் குறையும்.

2. கவர்ன்மெண்டாருக்கும், ரூபாயின் மதிப்புக் குறைந்ததால் நஷ்டம் உண்டாயிற்று. இந்தியா கவர்ன்மெண்டார் இந்திய வரிகளில் ஒரு பெரிய பகுதியை இங்கிலாந்தில் பவுனாகச் செலவு செய்துவந்தனர் (Home charges). இவை எதற்காகச் செலவு செய்யப்படுகின்றனவென்று முன் பக்கங்களில் சொல்லப்பட்டிருக்கிறது. ரூபாயின் மதிப்புக் குறைந்தால், அதாவது ரூபாயின் நாணய மாற்று விகிதம் குறைந்தால், அதே பவுன்கள் இங்கிலாந்தில் செலவு செய்வதற்கு அதிக ரூபாய்கள் அனுப்பப்படவேண்டும். உதாரணமாக 100 பவுன்களுக்காக, ரூபாயின் நாணயமாற்று 18 பென்சுகள் இருக்கும் சமயம் ரூ 1333-5-4 அனுப்பினால் போதுமானது. ஆனால் நாணய மாற்று 16 பென்சுகளாகக் குறைந்தால் ரூ. 1500. அனுப்பப்படவேண்டும். ஆதலால் நாணயமாற்று விகிதம் குறையக்குறைய இந்திய வரிகளி

லிருந்து அதிகத் தொகைகள் அனுப்பவேண்டியிருந்தது.

3. இந்தியாவில் சேவகம் செய்த ஆங்கிலேய உத்தியோகஸ்தர்கள் ரூபாயில் சம்பளம் பெற்றுவந்தார்கள். அவர்கள், தங்கள் சம்பளத்தில் ஒரு பாகத்தை மாத்திரம் இந்தியாவில் செலவுசெய்து, மற்ற பாகத்தை தங்கள் நாட்டுக்கு அனுப்பி வந்தனர். ரூபாயின் நாணயமாற்று மதிப்புக் குறையவே, அவர்கள் அனுப்பும் ரூபாய்களுக்கு குறைந்த பவுன்கள் தான் அவர்களுக்கு இங்கிலாந்தில் கிடைத்தன. இதனுல் அவர்கள் மிகவும் கஷ்டப்படுவதாகக் கூக்குரலிட்டனர். இதன் காரணமாக நாணயமாற்ருல் உண்டான நஷ்டத்தை ஈடுசெய்ய அதிகச் சம்பளமும் கொடுக்கப்பட்டது (Exchange Compensation allowance).

4. தவிர, ரூபாயின் நாணய மாற்று மதிப்புக்குறைந்தது, இங்கிலாந்திலிருந்து இந்தியாவுக்குள் ரொக்கம் வருவதைத் தடுத்தது. இந்தியாவின் முன்னேற்றத்திற்கு ஆங்கில ரொக்கம் இந்தியாவுக்குள் வரவேண்டுமானுல், ஆங்கிலப்பவுன் இந்திய ரூபாயாக மாற்றித்தான், உபயோகப்படுத்த வேண்டியிருந்தது. ரூபாயின் மதிப்பு நாளுக்கு நாள் குறைந்து கொண்டே போனது ஆங்கில ரொக்க வியாபாரிகளுக்கு பீதியை உண்டாக்கியது. ஏனெனில் 100-பவுன்கள் ரூபாயின் நாணய மாற்று விகிதம் 18 பென்சாக இருக்கும் போது இந்தியாவுக்குள் கொண்டு வரப்பட்டால், அது இந்தியாவில் ரூ.1333-5-4 ஆக மாற்றப்படும். இந்த ரூ1333-5-4ம் இந்திய வியாபாரம் அல்லது கைத்தொழிலில் உபயோகப்படுத்தப்படும். அடுத்த வருடம் ரூபாயின் நாணய மாற்று விகிதம் 16-பென்சாகக் குறைந்து, இந்த ரூ 1333-5-4 இங்கிலாந்துக்கு மாற்றப்பட வேண்டுமானுல், மறுபடியும் 100 பவுன்கள் கிடைக்காது; ஏனெனில் ஒவ்வொரு

ரூபாய்க்கும் 2-பென்சு மதிப்புக் குறைந்து விட்டது. இப்பொழுது ரூ 1333-5-4-க்கு 88 பவுன்கள் 17-ஷி 6-பென்சுகள்தான் கிடைக்கும். ஆதலால் ஆங்கில வியாபாரிகள் இந்தியாவுக்குள் பணம் கொண்டு வருவதற்குப் பயந்தனர்.

இந்திய நாணய முறையைச் சீர்திருத்த முயற்சிகள்:— நாம் வியாபாரம் செய்யும் இங்கிலாந்து முதலிய மேல் நாடுகள் தங்க ஒரு உலோக நாணய முறையைக் கைக்கொண்டிருப்பதால், இந்தியாவும் அம் முறையையே மேற்கொள்வது அன்னிய நாட்டு வியாபாரத்துக்குச் சௌகரியமாயிருக்குமென, 1866-ம் வருஷத்திலேயே பல வியாபாரிகளால் சொல்லப்பட்டதென முன் குறிப்பிடப்பட்டது. 1861-ம் வருஷத்திலிருந்து எல்லா பொக்கிஷ மந்திரிகளாலும் (Finance Member) இந்தியாவில் தங்க உலோக நாணய முறை ஸ்தாபிக்கவேண்டும் என்று சிபார்சு செய்யப்பட்டாலும், ஆங்கில கவர்ன்மெண்டார் இச் சிபார்சுகளை ஏற்றுக் கொள்ள மறுத்தனர். 1876-ல் தனித்தங்க நாணய முறை இந்தியாவில் ஏற்படுத்துவதற்கு, அனுமதியும் கேட்கப்பட்டது. ஆனால் ஆங்கில கவர்ன்மெண்டார் அனுமதி கொடுக்க மறுத்தனர்.

இந்தியாவில் தங்க உலோக நாணய முறையை ஸ்தாபிப்பதற்கு இங்கிலாந்து மறுத்ததற்குக் காரணங்கள் பலவுள. அவை பின் வருமாறு. 1. இந்தியாவும் தங்க நாணய முறையைப்பின் பற்றினால், உலகத்தின் தங்கத்தில் ஒரு பகுதி இந்தியாவுக்கு வர நேரிடும். அதனால் இங்கிலாந்துக்குக் கிடைக்கக்கூடிய தங்கம் குறைந்து, தங்கத்தின் விலை உயரும்.

2. ஐரோப்பிய நாடுகள் தங்க நாணய முறையைக் கைக்கொண்டதால் வெள்ளி திரஸ்கரிக்கப்பட்டு அதன் விலை

மிகவும் குறைந்துகொண்டிருந்தது. வெள்ளியின் விலை குறைந்ததால், வெள்ளிச்சுரங்கங்களை அதிகமாய்பெற்றிருந்த யுனைடெட் ஸ்டேட்ஸ் வெள்ளி வியாபாரிகளுக்கு அதிக நஷ்டம் உண்டாகிக் கொண்டிருந்தது. எனவே யுனைடெட் ஸ்டேட்ஸ் கவர்ன்மெண்டார் இவ்வியாபாரிகளால் தூண்டப் பட்டு, வெள்ளியின் விலையை உயர்த்த முயற்சி செய்து கொண்டிருந்தனர். தங்கள் நாட்டில் ஏராளமான வெள்ளி நாணயங்கள் அச்சிடப்படவேண்டும் என்று ஏற்பாடுகள் செய்ததுடன், மற்ற நாடுகளிலும் ஒரு தங்க உலோக நாணய முறையை இரண்டு உலோக முறையாக மாற்றவும் பிரயத் தனம் செய்து கொண்டிருந்தனர். இரண்டு உலோக முறை உலகில் பல நாடுகளாலும் ஒப்புக்கொள்ளப்பட்டால், இதன் மூலம் வெள்ளி அந்நாடுகளில் நாணயங்கள் அச்சிடுவதற் காக வாங்கப்பட்டு, விலை உயரும் என்று எதிர்பார்க்கப் பட்டது.

இதற்காக தேசங்களின் பிரதிநிதிகள் கூட்டங்கள் 1878-ம் வருஷத்திலும், 1881-ம் வருஷத்திலும் கூட்டப்பட்டன. இக் கூட்டங்களில் இரண்டு உலோக நாணய முறை யே நன்மை தரக்கூடியதென வற்புறுத்தப்பட்டது. இதில் ஆங்கிலேய கவர்ன்மெண்டார் தங்கள் நாட்டில் தங்க உலோக நாணய முறையை மாற்றி, இரண்டு உலோக நாணய முறை யை ஸ்தாபிக்க மறுத்துவிட்டனர். ஆனால் இந்தியா வில் மாத்திரம் வெள்ளி நாணய முறையைப் பின்பற்று வதாக ஒப்புக்கொண்டனர். இந்த நாணய முறையால் இந்தியா படும் நஷ்டங்கள் அனைத்தையும் நன்றாகத் தெரிந் திருந்தும், யுனைடெட் ஸ்டேட்ஸ் முதலிய நாடுகளைச் சந்தோ ஷிப்பிப்பதற்காக, நம் நாடு தங்க நாணய முறையைப் பின் பற்றுவதற்கு அனுமதி மறுக்கப்பட்டது.

ஹெர்ஷல் கமிட்டியின் சிபார்சுகளும், (Herchell Committee) அதற்குப் பிறகும் :—ஆனால் காலம் ஆக ஆக நாணய முறை சரியாய் இல்லாமையால் நாடு பலவித கஷ்டங்களுக்கு உட்பட்டிருந்தது. இவைகளால் கவர்ன் மெண்டாருக்கும் பலவித இடையூறுகள் உண்டாயின. இக் கஷ்டங்களைத் தாங்கமாட்டாமல், நாணயமுறை, நாணய மாற்று விஷயங்களைப்பற்றி விசாரணை செய்து, இந்தியா வுக்கு ஏற்ற நாணய முறையைச் சிபார்சு செய்வதற்காக, 1892-ம் வருஷம் லார்ட் ஹெர்ஷல் என்பவர் தலைமையின் கீழ் ஒரு கமிட்டி ஏற்படுத்தப்பட்டது.

இந்தியாவில் தங்க நாணய முறை ஏற்படுத்தப் படுவ தற்கு முன், வெள்ளி கொண்டுவந்து கொடுப்பவர்களுக்கு ரூபாய்கள் அச்சிட்டுத்தரப்படுவது நிறுத்தப்பட வேண்டு மென்றும், கவர்ன்மெண்டார் அவசியமான காலங்களில் ரூபாய்கள் அச்சிட வேண்டுமென்றும், ரூபாய்க்கு நாணய மாற்று 16 பென்சுகளாக வைக்கப்பட வேண்டுமென் றும், கவர்மெண்டு கஜானாக்களில் வரிகளுக்காக தங்கம் வாங்கிக் கொள்ளப்படவேண்டுமென்றும் ஹெர்ஷல் கமிட்டி யார் சிபார்சு செய்தனர்.

இந்த சிபார்சுகளுக்கு இணங்க, கவர்ன்மெண்டாரால் கீழ்க்கண்ட மூன்று அறிக்கைகள் 1893 ம் வருஷத்தில் பிரசுரிக்கப்பட்டன. சில நிபந்தனைகளுக்கு உட்பட்டு தங் கம் வாங்கிக்கொள்ளப்பட்டு ரூபாய்கள் கொடுக்கப்படு மென்றும், வரிகள் முதலியனவுக்காக பவுன்களும் அரைப் பவுன்களும் வாங்கிக் கொள்ளப் படுமென்றும், தங் கத்தை ஆதாரமாகக்கொண்டு கான்சி நோட்டுகள் வெளி யிடப்படலாமென்றும், சட்டங்கள் செய்யப்பட்டன.

1893 ம் வருஷத்தில் மேற்கண்ட அறிக்கைப்படி நாணயச்சாலைகள் மூடப்பட்டன. அதாவது பொதுஜனங்கள் அல்லது வியாபாரிகள் தங்களுக்கு ரொக்கம் வேண்டிய சமயங்களில் வெள்ளி கொடுத்து நாணயங்களாகப் பெற முடியாமல் போயிற்று. அந் நாளிலிருந்து கவர்ன்மெண்டார், மார்க்கெட்டின் அவசியத்தையும், வியாபாரிகளுடைய அவசியத்தையும் அறிந்து, ரொக்க வசதிகள் சப்ளை செய்யும் கடமையை ஏற்றுக்கொண்டனர். இந்நாள் வரையும் அங்ஙனமே நடந்து வருகிறது. நாணயங்கள் அச்சிடுவதில் கவர்ன்மெண்டார் பல தடவைகளில் தெரிந்தும் தெரியாமலும் பல விதமான குற்றங்களைச் செய்திருக்கின்றனர். இயற்கை விதிப்படியும், மக்களின் தேவைக்குத் தக்கபடியும் சப்ளை செய்யக்கூடிய ஒரு முறைக்குப் பதிலாக, கவர்ன்மெண்டாரின் அதிகாரம் ஏற்படுத்தப்பட்டது. இதனால் பிற்காலத்தில் பல கேடுகள் விளைந்தன.

நாணயச்சாலைகள் மூடப்பட்டபடியால் ரூபாயின் விலை உயர்ந்து 16 பென்சு மதிப்புக்கு வந்தது. ஆனால் வியாபாரத்துக்கு வேண்டிய ரொக்கம் இல்லாததால் வியாபாரிகள் முறையிட்டனர். இந்தியா கவர்ன்மெண்டாரும், தங்க நாணய முறையை இந்தியாவில் ஸ்தாபிப்பதற்குவேண்டிய ஏற்பாடுகள் செய்யப்படவேண்டுமென்று நினைத்தனர். இவ்விஷயங்களை மறுபடியும் தீர ஆலோசித்து முடிவு செய்வதற்காக, சர் ஹென்ரி பௌலர் என்பவர் தலைமையில் ஒரு கமிட்டி 1898 ம் வருஷத்தில் ஏற்படுத்தப்பட்டது.

பௌலர் கமிட்டி (Fowler Committee) யின் சிபார்சுகள் :—இந்தியாவிலும் தங்க நாணய முறையை ஏற்படுத்துவதே ஏற்றதென்றும், இங்கிலாந்திலும் ஆஸ்ட்

ரேலியாவிலும் அக்காலத்தில் இருந்த மாதிரி, நாணயமுறை இந்தியாவிலும் ஏற்படுத்தப்பட வேண்டுமென்றும் அவர்கள் அபிப்பிராயப்பட்டனர். அவர்களுடைய சிபார்சுகள் பின்வருமாறு.

1. ஆஸ்ட்ரேலியாவில் ஸ்தாபிக்கப்பட்டிருந்த ஆங்கில தங்கசாலையின் கிளை போல், இந்தியாவிலும் ஒரு தங்கசாலை ஏற்படுத்தி பவுன்களும் ½ பவுன்களும், வெளியிடப்படவேண்டும். தங்கம் கொண்டுவந்து கொடுப்பவர்களுக்குத் தங்க நாணயங்கள் அச்சிட்டுத் தரப்படவேண்டும். (Free coinage of Gold) வெள்ளி கொடுப்பவர்களுக்கு ரூபாய்கள் அச்சிட்டுத் தரப்படமாட்டாது. (No free coiniage of silver) ரூபாய்கள் அச்சிடும் அதிகாரம் கவர்ன்மெண்டாருக்குத் தானிருக்கும். ஆனால் போதுமான தங்க நாணயங்கள், அச்சிட்டு வெளியிட்ட பின்புதான் ரூபாய்கள் அச்சிடப்படவேண்டும்.

2. பவுனுக்கும் ரூபாய்க்கும் விகிதம் 16-பென்சுகளாக வைக்கப்படவேண்டும்.

3. தங்க நாணயத்துடன் ரூபாயும் வரவு செலவுகளுக்காகவும் வரிகளுக்காகவும் எத்தனை வேண்டுமானாலும் கொடுக்கப்படலாம். (Both Rupees & Pounds unlimited legal tender)

4. தங்க நாணய முறையை ஸ்தாபிப்பதற்கு வேண்டிய தங்கத்தை வாங்குவதற்காக, ரூபாய்கள் அச்சிடுவதில் வரும் லாபம், கான்சி நோட்டு பாதுகாப்புத் திரவியத்திலிருந்து ஒதுக்கி வைக்கப்பட்டு தங்க நாணயமுறை காப்புத் திரவியம் (Gold Standard Reserve) என்று ஒரு தனி நிதி உண்டாக்கப்படவேண்டும்.

5. அன்னியநாட்டு வியாபாரத்தில் நிகர நஷ்டம் உண்டானால், அதற்காகத்தங்கம் அன்னிய நாடுகளுக்கு அனுப்புவதற்கு, கவர்ன்மெண்டார் இந் நிதிகள் மூலமோ அல்லது மற்ற வழிகளிலோ, ஏற்பாடு செய்யவேண்டும்.

பௌலர் கமிட்டிக்குப்பிறகு

இந்தியாவுக்குத் தங்கசாலை —1. பௌலர் கமிட்டியார் தங்க நாணய முறையைத்தான் சிபார்சு செய்திருந்தார்கள் என்பது முன்கண்ட சிபார்சுகளிலிருந்து விளங்கும். இச்சிபார்சுகள் அனைத்தும் இந்தியா கவர்ன்மெண்டாரால் அங்கீகரிக்கப்பட்டன. இந்தியாவில் ஒரு தங்கசாலை ஸ்தாபிப்பதற்கும் ஏற்பாடுகள் செய்யப்பட்டன. ஆங்கில பொக்கிஷ இலாகா (British Treasury) வின் கடுமையான எதிர்ப்பால் இது கைகூடவில்லை தங்க நாணய முறை பௌலர் கமிட்டியால் சிபார்சு செய்யப்பட்டு கவர்ன்மெண்டாரால் ஒப்புக்கொள்ளப்பட்டாலும், பின் வந்த சந்தர்ப்பங்கள் நம் நாட்டில் தங்க நாணய முறை ஸ்தாபிக்கப்படாமல் தடுத்து, மற்ற தேசங்களில் காணாத ஒரு புது முறைக்குக்கொண்டுவந்து விட்டன. இம்முறையே தங்க நாணய மாற்று முறை (Gold Exchange Standard) என்று சொல்லப்படுவது.

2. தங்க நாணய வெளியீடு:—பௌலர் கமிட்டியார் இந்தியாவில் தங்க நாணயங்கள் அச்சிட்டு வெளியிடப்படவேண்டுமென்றும், தங்க நாணயங்கள் போதுமான அளவு வெளியிட்ட பின்புதான் ரூபாய்கள் புதிதாக அச்சிடப்பட வேண்டுமென்றும் சிபார்சு செய்திருந்தனர். அச்சிபார்சின்படி தங்க நாணயங்கள் பவுன்களும், அரைப்பவுன்களும் வெளியிடப்பட்டன. 1899, 1900-ம் வருஷங்களில்

தபாலாபீசுகளிலும், கஜானாக்களிலும், ரயில் பாதைகளிலும் தங்க நாணயங்களைப் அதிகமாக பழக்கத்துக்குக் கொண்டு வருவதற்கு வேண்டிய ஏற்பாடுகள் செய்யப்பட்டன. ஆனால் இவைகளின் மூலம் வெளியிடப்பட்ட தங்க நாணயங்கள் மறுபடியும் கஜானாக்களிலேயே வந்து குவிந்தன. இதனால் மக்கள் தங்க நாணயங்களின்பேரில் பிரியப்படவில்லையென்ற முடிவுக்கு கவர்ன்மெண்டார் வந்தனர்.

இம் முடிவு அவசரப்பட்டு வந்த முடிவாகும். தங்க நாணயங்கள் மிகக் குறுகிய காலத்துக்குத்தான் வழங்கப்பட்டன. தவிர, அக்காலத்தில் ஒரு பெரிய பஞ்சம் மக்களை வருத்திக்கொண்டிருந்ததால் பவுன்களை விட ரூபாய்களுக்கே ஏராளமான தேவையிருந்தது. ஆதலால் வெளியில் உலாவிக் கொண்டிருந்த பவுன்களில் பெரும் பகுதி கஜானாக்களில் கொடுக்கப்பட்டு, அவைகளுக்காக ரூபாய்கள் கேட்கப்பட்டன. பவுன்கள் கஜானாக்களில் வாபீஸ் செய்யப்பட்டதை ஆங்கில நிபுணர்கள் பலரும் விபரீதமாக நினைக்கவில்லை. அதை சகஜமாகவே அவர்கள் நினைத்தனர். இதனால் மக்கள் தங்க நாணயங்களை விரும்பவில்லை யென்று சொல்லுவது தப்பு என அவர்கள் கண்டித்தனர்.

2. ரூபாய்கள் நோட்டுகள் மறுபடியும் வெளியிடல்:- பௌலர் கமிட்டியார், போதுமான அளவு தங்க நாணயங்களை வெளியிட்டபின்தான் வெள்ளி நாணயங்கள் அச்சிடப்படவேண்டுமெனச் சிபார்சு செய்திருந்தனர். 1899 1900-ம் வருஷங்களில் கொஞ்சம் தங்க நாணயங்கள் வெளியிடப்பட்டன. ஆனால் அவை மறுபடியும் கஜானாக்களில் வந்து சேரவே, அவைகளை மக்கள் பிரியப்படவில்லை என்ற முடிவுக்கு வரப்பட்டது. ஆனால் ஜனத்தொகையும் வியாபாரமும் அதிகமாகிக்கொண்டு வரவே, ரொக்கத்தின் தேவை

யும் நாணயங்களின் அவசியமும் அதிகமாயிற்று. வியாபாரமும் கைத்தொழிலும் நாணய வசதிகள் இன்றிக் கஷ்டப்பட்டன.

1898-ம் வருஷத்தில், இந்தியாவில் வெளியிடப்படும் கரன்சி நோட்டுக்களுக்கு ஆதாரமாக தங்கம் இங்கிலாந்தில் இந்தியா மந்திரிவசம் வைத்துக்கொள்ளப்பட்டு, இந்தியாவில் கரன்சி நோட்டுகள் வெளியிடப்படலாம் என்று சட்டம் செய்யப்பட்டது. இந்தியாவில் செலாவணியாகக்கூடிய உண்டியல்களை (Council Bill) விற்று அதனால் வரும் தங்கத்தை இங்கிலாந்தில் இந்திய கரன்சி நோட்டு நிதியின் ஒரு பாகமாக வைத்துக்கொள்ளப்பட்டது. இந் நிதியின் ஆதாரவின் பேரில் இந்தியாவில் நோட்டுகள் வழங்கப்பட்டன. 1898-ல் இவ் வேற்பாடு கொஞ்சகாலத்துக்கெனத் தான் ஆரம்பிக்கப்பட்டாலும், 1902-ல் உறுதி செய்யப்பட்டது. இதை அனுசரித்து, இந்தியாவுக்கு அனுப்புவதற்காக இந்திய உண்டியல்கள் தேவையானவர்களுக்கு, உண்டியல்கள் (Council Bills) விற்கப்பட்டு, அப்பணம் இங்கிலாந்திலேயே நிறுத்திக்கொள்ளப்பட்டது; அவ் வுண்டியல்களுக்குப் பணம் இந்திய கவர்ன்மெண்டாரால் கொடுக்கப்பட்டது.

4. தங்க நாணய முறை பாதுகாப்புத் திரவியம்:—(The Gold Standard Reserve) தங்க நாணய முறையை இந்தியாவில் ஸ்தாபிப்பதற்கு ஒரு நிதி ஏற்படுத்தப்பட வேண்டுமென்றும், ரூபாய்கள் அச்சிடுவதால் வரும் லாபத்தைக்கொண்டு, இந் நிதி ஏற்படுத்தப்படலா மென்றும் பௌலர் கமிட்டியார் சிபார்சு செய்திருந்தனர். இந்தியாவின் நாணய முறைக்கு ஆதாரமாக விருக்க அது ஏற்படுத்தப்பட்டதாகையால், அது நியாயப்படி இந்தியாவில் வைக்கப்

பட்டிருக்க வேண்டும். ஆனால் இந்தியா மந்திரியால் வேறு விதமாக உத்தரவு செய்யப்பட்டது. இந் நிதி எதற்காக ஸ்தாபிக்கப்பட்டது என்று கவனிக்கப்படாமல் இங்கிலாந்தில் வைக்கப்பட்டு, இங்கிலாந்து அடகுகளில் (investments, உபயோகப்படுத்தப்பட்டது.

தவிர, நாணய முறைக்கு யாதொரு சம்பந்தமும் இல்லாத விஷயங்களிலும் இந் நிதி உபயோகப்படுத்தப்பட்டது. ஆங்கில வியாபாரிகள், தங்கள் சாக்குகளை இந்தியாவின் உள் நாடுகளில் கொண்டுபோய் விற்பதற்கு ரயில் பாதைகள் அவசியமென நினைத்தனர். அவர்களுடைய லாபத்தைக் கருதி, ரயில்பாதைகள் போடுவதற்காக, ரூபாய்கள் அச்சிடுவதில் வரும் லாபத்தில் ஒரு பகுதியை, உபயோகப்படுத்த வேண்டும் என்றும் தீர்மானம் செய்யப்பட்டது. இங்ஙனம் இந்திய நாணய நிதிகள் ஆங்கிலேயர் நன்மையைக் கருதி உபயோகப் படுத்தப்பட்டன.

நாணய நிதிகளின் இருப்பு:—

இந்தியா மத்திரியின் உத்தரவுப்படி தங்க நாணய முறைக் காப்புத் திரவியமும் இங்கிலாந்துக்கு அனுப்பப்பட்டது. 1898ம் வருஷத்திலிருந்தே கான்சி நோட்டு காப்பு திரவியத்தின் ஒரு பகுதியும், இங்கிலாந்தில் வைக்கப்பட்டிருந்தது. எனவே, 20ம் நூற்றாண்டின் ஆரம்பத்திலிருந்து, கீழ்க்கண்ட, இந்தியாவுக்குச் சேர்ந்த, நிதிகள் இங்கிலாந்தில் இந்தியா மந்திரி வசம் இருந்தன.

1. கான்சி நோட்டுக்காப்பு திரவியம். (Paper currency Reserve)

2. தங்க நாணய முறைக் காப்பு திரவியம் (Gold Standard Reserve) ரூபாய்கள் அச்சிடுவதால் வரும் லாபத்திலிருந்து இது சேர்க்கப்பட்டது.

3. இந்தியா மந்திரி இந்தியாவின் சார்பாக செலவு செய்வதற்காக வைத்திருக்கும் நிதி (The Secretary of State's Balances.)

இம்மூன்று நிதிகளிலும், உபயோகத்துக்காக வேண்டியிருக்கும் பாகத்தைத் தவிர, மற்றப்பாகங்கள் ஆங்கில அடகுகளில் உபயோகப்படுத்தப்பட்டன. காலம் செல்லச் செல்ல, இக்காப்புத் திரவியங்கள் எவைகளுக்காக உண்டாக்கப்பட்டனவோ அவைகளுக்காக ஒதுக்கி வைக்கப்படவில்லை. இம்மூன்று நிதிகளும் ஒரு நிதி போல் கருதப்பட்டு, கீழ்க்கண்ட வகைகளில் உபயோகப்படுத்தப்பட்டன.

1. இந்தியாவில் ரூபாய்கள் அச்சிடுவதற்கு வேண்டிய வெள்ளி வாங்குவதற்கு, இந்நிதிகள் அல்லது காப்புத் திரவியங்கள் உபயோகப் படுத்தப்பட்டன.

2. இந்தியாவின் ஏற்றுமதியை விட இறக்குமதி அதிகமான காலங்களில், இந்தியாவிலிருந்து தங்கம் ஏற்றுமதி செய்யவேண்டியிருக்கும். அதற்குப் பதிலாக இந்தியா மந்திரியிடமிருந்த காப்புத் திரவியங்களிருந்து, மேற்படி தங்கம் கொடுக்கப்பட்டது.

3. இங்கிலாந்திலிருந்து இந்தியாவுக்கு ரொக்கம் அனுப்ப வேண்டிய காலங்களில், மேற்படி தொகைகள் இந்தியா மந்திரியால் வாங்கி, இந் நிதிகளோடு சேர்த்து வைக்கப்பட்டன. அத்தொகைகளுக்காக இந்தியா மந்திரியால் உண்டியல்கள் கொடுக்கப்பட்டு, அவ்வுண்டியல்களுக்கு இந்தியாவில் ரூபாய்கள் கொடுக்கப்பட்டன.

பௌலர் கமிட்டியார் 1898ம் வருஷத்தில், இந்தியாவுக்குத் தங்க நாணய முறையே ஏற்றதெனச் சிபார்சு செய்திருந்தனர். ஆனால் இந்தியா கவர்ன்மெண்டார்

அதை லக்ஷியமாய் வைத்துக்கொண்டு, காரியங்களை நிர்வகிக்காததன் காரணத்தினாலும், சில சமயங்களில் சந்தர்ப்பங்களின் வேகத்தால் தள்ளப்பட்டும், சில சமயங்களில் இங்கிலாந்தின் நன்மைக்கேற்றபடி நடக்கும்படி இந்தியா மந்திரியால் கட்டாயப்படுத்தப்பட்டும், தங்க நாணய முறையை நழுவ விட்டு, தங்க நாணய மாற்று முறை (Gold Exchange Standard) என்ற நூதன முறையை அனுசரித்தனர். இம்முறை இன்னும் அனுஷ்டிக்கப்படுகிறது. இம் முறையைப் பற்றிய விவரங்களை அடுத்த அதிகாரத்தில் காண்போம்.



## பதினைந்தாவது அதிகாரம்.



### இந்தியாவின் நாணய முறையும் நாணயமாற்றும் (தொடர்ச்சி.)

தங்க நாணய மாற்றுமுறை:—Gold Exchange Standard)—தங்க நாணய முறையில் தங்க நாணயம் பிரதம நாணயமாய் இருப்பதுடன் ஒவ்வொரு தங்க நாணயத்திலும் அதன் மதிப்புக் கேற்ற உலோகம் இருக்கும். தங்கம் கொண்டுவந்து கொடுப்பவர்களுக்கு, தங்க நாணயங்கள் அச்சிட்டுக் கொடுக்கப்படும். மற்றொரு தேசத்து நாணயத்துடன் அதை மாற்ற நேரிடும் போது, அந்த இரண்டு தேசங்களுடைய நாணயங்களிலுள்ள தங்கத்தின் எடை வித்தியாசத்தை அடிப்படையாகக் கொண்டு, நாணய மாற்று விகிதம் ஏற்படுத்தப்படும். நாணய மாற்று விகிதம், நாணயங்களின் மதிப்பையும், வியாபாரத்தின்

போக்கையும் அனுசரித்து, முன் அத்தியாயங்களில் விளக்கிக் காட்டியிருக்கிறபடி இரண்டு தங்க வாம்புகளுக்குள் மாறிக்கொண்டுவரும். இம்முறை இயற்கை விதிப்படியிருப்பதால், இவைகளில் கவர்ன்மெண்டார் தலையிட அவசியம் ஏற்படுவதில்லை.

ரூபாய் பிரதம நாணயம்:—ஆனால் தங்க நாணய மாற்று முறை, தங்கநாணய முறையிலிருந்து மாறுபட்டது. இம்முறையில் நம் தேசத்துப் பிரதம நாணயம் வெள்ளியாய் இருப்பதுடன், அந்த நாணயத்தில் அதற்குக் கொடுக்கப்பட்ட மதிப்பு இல்லை. இன்றைய தேதியில் (17-7-32) ரூபாயில் எவ்வளவு மதிப்பு இருக்கிறதெனக்கவனிப்போம் 100-தோலா வெள்ளிக்கு இன்றைய விலை ரூ 56-0-0. ஒரு தோலா அதாவது ஒரு ரூபாய் எடை வெள்ளி ரூ 0-8-11½ விலை ஆகிறது. ரூபாயில் $\frac{11}{12}$-பங்கு தான் வெள்ளி யென்றும் $\frac{1}{12}$-பங்கு வேறு மட்ட உலோகம் என்றும் முன்னமே சொல்லப்பட்டிருக்கிறது. ஆகையால் ரூபாயில் 0-8-11½ × $\frac{11}{12}$ ரூ 0-8-2½ பெறத்தக்க வெள்ளிதான் இருக்கிறது. ஒரு ரூபாயை உருக்கினால் அது ரூ 0-8-2½-தான் பெறும். ஒரு அவுன்ஸ் அதாவது 437½தானிய எடை வெள்ளிக்கு 0-7-6 இறக்கு மதி வரிப்போடப்பட் டிருக்கிறது. எனவே ரூபாயில் இருக்கும் 165-தானிய எடை வெள்ளிக்கு 0-2-10 வரியாகிறது. ஆதலால் ஒரு ரூபாய் வெளி நாட்டுக்கு அனுப்பப்பட்டால் அதற்கு 0-5-4½-தான் கொடுப்பார்கள்.

ரூபாய்கள் உள்நாட்டு வியாபாரத்துக்கும், மற்ற அவசியங்களுக்கும் மட்டுமே உபயோகப்படுத்தப்படும். அன்னிய நாட்டார், குறைந்த வெள்ளியுடன் அதிக மதிப்புக் கொடுக்கப்பட்டிருக்கும் ரூபாய்க்கு நாம் கொடுக்கும் மதிப்புக் கொடுக்கமாட்டார்கள். ஆதலால் அன்னிய நாட்டு

வியாபாரம் நடப்பதற்கு ஏற்றவாறு நம் நாணயத்தை அன்னியநாட்டு நாணயங்களாக மாற்ற ஒரு ஏற்பாடு செய்யப்பட வேண்டும்.

நாணய மாற்று :— நம் நாணய முறை தங்க நாணய முறையாகச் செய்யப்பட வேண்டுமென்பதற்கு முக்கிய காரணம், நாம் வியாபாரம் செய்யும் நாடுகள் அனைத்தும் தங்க நாணய முறையை பெற்றனவா யிருக்கிறபடியால், நாமும் தங்க நாணய முறையைப் பின் பற்றுவதே நாணய மாற்றுக்குச் சௌகரியமாயிருக்கும் என்பதே. நம் நாட்டிலும் தங்க நாணய முறை ஸ்தாபிக்கப்பட்டால் தான், ஒரு ஸ்திரமான நாணய மாற்று விகிதம் ஏற்படுத்த முடியும். ஆனால் நம் நாட்டில் வெள்ளியால் நாணயங்கள் வழங்கப்பட்டால், தங்கம் வெள்ளி உலோகங்களின் விலை ஏறுவது இறங்குவதை பொட்டி, நாணய மாற்று விகிதமும் அடிக்கடி மாறுபடும். எனவே, ஒரு ஸ்திரமான நாணய மாற்று விகிதம் ஏற்படுத்துவதற்காகவே நம் நாட்டில் தங்க நாணய முறை ஸ்தாபிக்கப்படவேண்டும் என்று சொல்லப்படுகிறது.

தங்க நாணயமுறையில் நாணயமாற்று இயற்கை விதிகளை அனுசரித்து, செல்வம் நாட்டிற்குள் வருவதை அல்லது நாட்டிற்கு வெளியே போவதை அனுசரித்து, தானே வேலை செய்யும் நாணய மாற்று விகிதம் இரண்டு தங்க வரம்புகளுக்குள், ரொக்க ஓட்டத்தை அனுசரித்து மாறுவதைத்தவிர மற்றெல்லாக் காரியங்களுக்கும் ஸ்திரமாகவே யிருக்கும். தங்க நாணய மாற்று விகிதம் ஸ்திரமாக யிருப்பதற்காக கீழே காணப்பட்ட ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறது.

நாணய மாற்று விகிதம் ரூபாய்க்கு 16 பென்சுகள் என்று கவர்ன்மெண்டாரால் வைக்கப்பட்டது. ரூபாயின்

நாணயமாற்று 16-பென்சுகள் என ஸ்திரமாக இருக்க வேண்டுமானல், எத்தனை பேர்கள் எவ்வளவு ரூபாய் இந்தியாவிலிருந்து இங்கிலாந்துக்கு அனுப்ப வேண்டியிருந்தாலும் அத்தனை பேர்களுக்கும் அவ்வளவு ரூபாய்களுக்கும் ஒரு ரூபாய்க்கு 16 பென்சுகள் விகிதத்தின் பேரில் இங்கிலாந்தில் பவுன்கள் கொடுக்க கவர்ன்மெண்டார் தயாராயிருக்க வேண்டும். இம்மாதிரியே எத்தனை பேர்கள் எவ்வளவு பவுன்கள் இங்கிலாந்திலிருந்து இந்தியாவுக்கு அனுப்ப வேண்டியிருந்தாலும், அத்தனை பேர்களுக்கு அவ்வளவு பவுன்களுக்கும் 16-பென்சுகளுக்கு ஒரு ரூபாய் என்ற விகிதத்தின் பேரில் இந்தியாவில் ரூபாய் கொடுப்பதற்குத் தயாராயிருக்க வேண்டும்.

இங்கிலாந்தில் இந்தியா மந்திரியிடத்தில் கீழ்க்கண்ட நிதிகள் இருக்கின்றன.

1. ரூபாய்கள் அச்சிடுவதிலிருந்து சேகரிக்கப்பட்ட தங்க நாணயக் காப்புத் திரவியத்தின் ஒரு பகுதி.

2. இந்தியாவில் வழங்கப்பட்டிருக்கும் நோட்டுகளுக்கு அடிப்படையாக விருக்கும் கான்சி நோட்டுக் காப்புத் திரவியம்.

3. இந்தியா மந்திரி இந்தியாவின் சார்பாக இந்திய வரிகளிலிருந்து செலவு செய்வதற்காக வைத்திருக்கும் நிதி.

இந்தியா கவர்ன்மெண்டாரிடத்திலும் கீழ்க்கண்ட மூன்று நிதிகள் இருக்கின்றன.

1. தங்க நாணய முறை காப்புத் திரவியத்தின் மற்றொரு பாகம்.

2. கான்சி நோட்டுக் காப்புத் திரவியத்தின் மற்றொரு பாகம்.

3. இந்திய கவர்ன்மெண்டாரின் கஜானு (Treasury) இங்கிலாந்திலிருந்து இந்தியாவுக்குப் பணம் அனுப்ப வேண்டியவர்கள் இங்கிலாந்தில் இந்தியா மந்திரியிடத்தில் பவுன்களைக் கொடுத்து அப்பொழுது இருக்கும் நாணய மாற்று நிலவரத்தை அனுசரித்துக் கணக்குப்போட்டு அவ்வளவு ரூபாய்களுக்கு உண்டியல்கள் பெறுகிறார்கள். இவ் வுண்டியல்களுக்காக பெறப்படும் பவுன்கள் இந்தியா மந்திரியிடத்திலிருக்கும் நிதிகளுடன் சேர்த்து வைக்கப்படுகிறது. இந்தியா மந்திரியால் கொடுக்கப்படும் உண்டியல்களுக்குக் கவுன்சில் பில்கள் (Council Bills) அல்லது கவுன்சில் டிராப்டுகள் (Council Drafts) என்று பெயர். இவைகளை வாங்கி வியாபாரிகள் இந்தியாவில் பணம் கொடுக்க வேண்டியவர்களுக்கு அனுப்புகின்றனர். இவைகளைப்பெற்றவர்கள் இந்தியா கவர்ன்மெண்டாரின் கஜானுவில் கொடுத்து, உண்டியல்களில் குறிப்பிட்டிருக்கும் தொகைகளைப் பெறுகிறார்கள். இந்தியா கவர்ன்மெண்டாரிடத்தில் இருக்கும் மேற்சொன்ன நிதிகளிலிருந்து இந்த உண்டியல்களுக்குப் பணம் கொடுக்கப்படுகின்றது.

கவுன்சில் பில்கள் இங்கிலாந்திலிருந்து இந்தியாவுக்குத் தபாலில் வந்து சேருவதற்குப் பல நாட்களாகின்றன. ஆகையால் உடனே பணம் அனுப்ப வேண்டியவர்கள் இவ் வுண்டியல்களைத் தந்தி மூலம் அறிவித்து அனுப்புவதும் உண்டு. இவைகளுக்கு தந்தி டிரான்ஸ்பர்கள் (Telegraphic Transfers) என்று பெயர்.

இம் மாதிரியே இந்தியாவிலிருந்து இங்கிலாந்துக்குப் பணம் அனுப்பவேண்டியவர்கள், ரூபாயை இந்தியா கவர்ன்மெண்டாரின் கஜானுக்களில் கட்டி அன்று இருக்கும் நாணயமாற்று நிலவரத்தை அனுசரித்து, அவர்கள் அனுப்ப

வேண்டிய ரூபாய்க்கு ஏற்றபடி பவுன் உண்டியல்கள் (Sterling Bills) பெறுகிறார்கள். இந்த உண்டியல்களுக்கு ரிவர்ஸ் கவுன்சில்கள் (Reverse Councils) அல்லது ரிவர்ஸ் டிராப்ட்டுகள் (Reverse Drafts) என்று பெயர். இந்தியாவில் இந்த உண்டியல்களுக்காகக் கொடுக்கப்படும் பணம், இந்தியா கவர்ன்மெண்டாரிடத்தி லிருக்கும் நிதிகளுடன் சேர்த்து வைக்கப்படும். இவ் வுண்டியல்கள் இங்கிலாந்துக்கு அனுப்பப்பட்டு இவ் வுண்டியல்களைப் பெற்றவர்கள் அவைகளை இந்தியா மந்திரியிடம் கொடுத்துப் பவுன்கள் பெறுகிறார்கள். இந்தியா மந்திரியிடமிருக்கும் முன் சொல்லப்பட்ட நிதிகளிலிருந்து இந்த உண்டியல்களில் குறிப்பிடப்பட்டிருக்கிற தொகைக்கு பவுன்கள் கொடுக்கப்படும். இவ்வுண்டியல்களும் தந்திமூலம் அனுப்பப்படலாம்.

ரூபாய்க்கும் பவுனுக்கும் ஒரு நாணய மாற்று விகிதத்தை ஏற்படுத்தி, அந்த விகிதம் ஸ்திரமா யிருக்கும்படி, இந்தியாவிலிருந்து வெளியே போகும் தொகைகளுக்காக, இந்தியாவில் அவ்விகிதப்படி ரூபாய்கள் வாங்கிக்கொண்டு, இங்கிலாந்தில் பவுன்கள் வாங்கிக்கொண்டு, அதே விகிதத்தில் இந்தியாவில் ரூபாயும் கொடுப்பதுதான் தங்க நாணய மாற்று முறையின் முக்கிய குணமாகும். நாணய மாற்றுக்கு வேண்டிய ஏற்பாடுகள் அனைத்தும் சர்க்காரால் செய்யப்பட்டு வருகின்றது. இங்ஙனம் செய்வதில் கவர்ன்மெண்டாருக்குச் சில சமயங்களில் நஷ்டமேற்பட்ட போதிலும், அவர்கள் வியாபாரத்துக்கு வேண்டிய கவுன்சில் பில்களையும் ரிவர்ஸ் கவுன்சில்களையும் விற்பதற்கு ஒப்புக்கொண்டிருக்கின்றனர்.

### தங்க நாணய மாற்று முறையின் அனுகூலங்கள்.

1. தங்க நாணய முறையில் தங்க நாணயங்கள் வெளியிடப்பட வேண்டும். தங்க நாணயங்கள் வழங்குவதற்கு அதிகமான செலவுகள் ஏற்படும். ஆனால், தங்க நாணய மாற்று முறையில், குறைந்த மதிப்புடைய நாணயங்களே உள் நாட்டு அவசியங்களுக்காக வெளியிடப்படுகின்றன வாகையால், தங்க நாணயங்கள் வெளியிடுவதாலாகும் செலவு தேசத்திற்கு மீதமாகின்றது.

2. நாணய மாற்று சௌகரியங்களுக்காகவே தங்க நாணய முறை அனுஷ்டிக்கப்பட வேண்டும் என்று சொல்லப்படுகிறது. ஆனால் இம்முறையிலும் நாணய மாற்றுக்கு வேண்டிய ஏற்பாடுகள் சரிவரச் செய்யப் பட்டிருக்கின்றன. இங்கிலாந்தில் விற்கப்படும் ரூபாய் உண்டியல்களும் (Rupee bills) இந்தியாவில் விற்கப்படும் பவுன் உண்டியல்களும், நாணய மாற்றுதலுக்கு அவசியமான சௌகரியத்தைச் செய்கின்றன.

### தங்க நாணய மாற்று முறையின் பிரதிகூலங்கள்.

1. தங்க நாணய முறையிலும், மற்ற நாணய முறைகளிலும், தேவை சப்ளை தத்துவத்தை அனுசரித்து நாணயங்கள் வழங்கப்படும். நாணயங்கள் தேவைக்கு அதிகமாகி மதிப்புக்குறைந்தால், அவைகளில் சில உருக்கப்பட்டு, மறுபடியும் விலை உயரும். நாணயங்களின் சப்ளை தேவைக்குக் குறைவாக இருந்து, நாணயத்தின் மதிப்பு அதிகமானல், வியாபாரிகள் தங்கச்சாலைகளில் தங்கம் கொண்டுவந்து கொடுத்து நாணயங்களாக அச்சிட்டுப் பெறுவார்கள். அப்பொழுது மதிப்புக்குறைந்து முந்திய நிலைமையை அடையும். இம்

மாதிரி மற்ற நாணய முறைகள் இயற்கை விதிகளை அனுசரித்து வேலை செய்கின்றன.

ஆனால் இந்தியாவில் நாணயங்கள் அதிகமாவதும் குறைவதும் இந்தியாவின் சௌகரியங்களைப் பொருத்தாக வில்லை. இந்தியா மந்திரியால் கவுன்சில் பில்கள் அதிகமாக விற்கப்பட்டால், இந்தியாவில் நாணயங்கள் அதிகமாகும். இந்தியாவில் ரிவர்ஸ் கவுன்சில்கள் விற்கப்பட்டால் ரூபாய்கள் குறையும். இந்தியாவின் ரூபாய்கள் குறைவதும் அதிகமாவதும் உள்நாட்டு சௌகரியங்கள் அனுசரிக்கப்படாமல் ஏற்படுவதால், இந்தியாவில் விலைவாசிகள் ஸ்திரமாக யிருப்பதில்லை.

2. மேலும் நாணயங்களை அதிகமாக்குவதும், குறைப்பதும் கவர்ன்மெண்டார் வசமிருப்பது, இந்த நாணய மாற்று முறையில் பெரியதொரு குறையாகும். இந்தியா கவர்ன்மெண்டார் பல தடவைகளிலும் தப்பு அபிப்பிராயங்களுக்கு உட்பட்டு, தங்கள் அபிப்பிராயப்படி நாணயங்களைக் குறைக்கவும் அதிகமாக்கவும் முயற்சி செய்து வந்திருக்கின்றனர். இதனால் நம் நாட்டுக்குப் பல கேடுகளும் விளைந்திருக்கின்றன.

3. அன்னிய நாட்டு வியாபாரத்துக்காக நாணய மாற்று விகிதத்தை ஸ்திரமாக வைத்திருக்க முயற்சி செய்வதில், உள்நாட்டு விலை வாசிகளின் ஸ்திரம் பலிகொடுக்கப் பட்டது. வியாபாரத்தின் அவசியத்துக்கு ஏற்றபடி நாணயங்களை உருக்கிக் குறைக்கவோ, அல்லது தங்கச்சாலைகளில் அச்சிட்டு அதிகமாக்கவோ, இந்த நாணய முறையில் இயலுவதில்லை. எனவே, உள்நாட்டு வியாபாரத்துக்கு ரொக்கம் வேண்டியிருந்தது. ஆனால் இங்கிலாந்தில் கவுன்சில் பில்கள் விற்கப்படாத காலங்களில், நமக்குப் போதுமான ரொக்கம்

இல்லாமையால், விலைவாசிகள் அதிகமாகின்றது. நமக்கு ரொக்கம் அவசியமில்லாத காலங்களில் இங்கிலாந்தில் கவுன்சில் பில்கள் அதிகமாக விற்கப்படுவதால் நாணயங்கள் அதிகமாகி, விலைவாசிகள் குறைகின்றன. இங்ஙனம் நாம் நாணய முறையின் குறையால் உள்நாட்டு விலைவாசிகள் ஸ்திரமின்றி ஏறி இறங்கிக்கொண்டிருக்கின்றன.

4. வெள்ளியின் விலை ஏறினால் இம்முறை ஒடிந்து விழும். ஒரு நாணய மாற்று விகிதத்தை ஏற்படுத்தி, அதை ஸ்திரமா யிருக்கச் செய்வதே இதன் முக்கிய பெருமையாய் இருக்கின்றது. ஆனால் வெள்ளியின் விலை அதிகமாகி, ரூபாயிலிருக்கும் வெள்ளி, ரூபாயின் மதிப்பை விட அதிகமானால், அப்பொழுது ரூபாயின் நாணயமாற்று விகிதத்தை அதிகமாக்கினாலொழிய, ரூபாய் உருக்கப்பட்டு விற்கப்படும். ரூபாய் உருக்கப்படாமலிருக்க வேண்டுமானால், ரூபாயின் நாணயமாற்று விகிதம் உயர்த்தப்படவேண்டும். உயர்த்தப் பட்டால் நாணயமாற்று விகிதம் ஸ்திரமழிந்து, மாறு பாட்டை அடைகின்றது. அதனால் இம்முறையின் முக்கிய இலக்ஷியத்தை இழக்க நேரிடுகிறது.

5. நாணய மாற்று விகிதம் ஒன்று ஏற்படுத்தி, அதை ஸ்திரமாக வைக்கவேண்டுமென்று முயற்சி செய்ததில் பல தடவைகளில் கவர்ன்மெண்டார் இந்திய மக்களுக்குப் பலத்த நஷ்டங்களை உண்டாக்கி யிருக்கின்றனர். 1919-20-ம் வருஷத்தில் மாத்திரம் 35-கோடி ரூபாய்கள் இந்திய மக்களுக்கு நஷ்டமுண்டாயிற்று.

6. இம்முறையில் ரூபாய் ஆங்கில பவுன் ஸ்டர்லிங் உடன் பிணைக்கப்பட்டிருக்கிறது. ஆங்கில நாணயமாகிய ஸ்டர்லிங், தங்கமாக மாற்றக்கூடிய காலத்தில் தான், ரூபாய்கள் பவுன் ஸ்டர்லிங்காக மாற்றப்படுவது, தங்கத்துக்கு மாற்

றப்படுவதற்குச் சமமாகும். ஆனால் ஆங்கில ஸ்டர்லிங் தங்கத்துக்கு மாற்றமுடியாத காலத்தில் (When the sterling is off gold standard), ரூபாய்கள் ஸ்டர்லிங்காக மாற்றப்பட்டால், அது தங்கமாக மாற்றப்படுவதற்குச் சமம் இல்லை. இப்பேர்ப்பட்ட சமயங்களில் நம் நாணய முறைக்குக் கொடுக்கப்பட்டிருக்கிற, தங்க நாணய மாற்று முறை என்ற பெயரும், பொய்க்கின்றது. இச்சமயங்களில் நம் நாணயம் தங்கமாக மாற்றப்படுவதற்குப் பதிலாக, தங்கத்தைவிட மதிப்பில் குறைந்த ஸ்டர்லிங்காகத் தான் மாற்றப்படுகிறது.

இதனால் தங்க நாணய முறையில் இருக்கப்படுவதாகச் சொல்லப்படும் கொஞ்ச அனுகூலமும் மறைகின்றது. நம் நாணய முறையின் பிரதிகூலங்கள் அனைத்தும் நம் நாட்டின் பிற்காலத்திய சரித்திரத்தில் அனுபவத்தில் காணப்பட்டன. அவைகளின் விபரங்கள் பின்வரும் பக்கங்களில் சொல்லப்படும்.

சாம்பர்லெயின் கமிஷன் (Chamberlain commission):—நம் நாணய முறையில் பல குறைகள் இருக்கின்றனவென்று பல தேசபக்தர்களால் கூக்குரலிடப்பட்டது. எனவே நாணய முறையை விசாரணை செய்து சிபார்சுகள் செய்வதற்காக 1913-ம் வருஷத்தில் ஆஸ்டின் சாம்பர்லெயின் என்பவர் தலைமையின் கீழ் ஒரு கமிஷன் ஏற்படுத்தப்பட்டது. இக் கமிஷன் விசாரணை செய்து தங்க மாற்று முறையே இந்தியாவுக்கு ஏற்றமுறை என்று சிபார்சு செய்தது.

ஆனால் இதற்குப் பின் தோன்றின ஐரோப்பிய மகாயுத்த காலத்தில் நம் தங்க நாணயமாற்று முறையின் குறைகள் விளங்கின.

# பதினாறுவது அதிகாரம்

## இந்தியாவின் நாணய முறையும், நாணய மாற்றும் 1914ஆம் முதல் 1921ஆம் வரை

யுத்தகாலத்தில் நாணயமுறையின் சரித்திரம் 1914ம் ஆம் 1919ம் ஆம் வரை:—ஐரோப்பிய மகாயுத்தம் திடீரென்று 1914-ம் வருஷத்திய மத்தியில் ஆரம்பிக்கப்பட்டு, 1918-ம் வருஷம் வரை நடந்தது. யுத்தத்தினால் வாழ்க்கையின் எல்லா பாகங்களிலும் மாறுபாடு உண்டாக்கப்பட்டிருக்கிறது. நாணய முறையிலும் யுத்தம் பல புதிய மாறுபாடுகளைப் புகுத்தியது. நாணய முறையைப் பொருத்த மட்டில் யுத்த காலம் இரு பாகமாகப் பிரிக்கப்படலாம். 1914-ம் ஆம் முதல் 1915-ம் ஆல் ஒரு பகுதி வரை கவர்ன்மெண்டார் நாணய முறையைச் சுலபமாகச் சமாளிக்க முடிந்தது. ஆனால் 1915-ம் ஆம் முதல் 1919-ம் ஆம் வரை கஷ்டமான சந்தர்ப்பங்கள் நேரிட்டன.

முதல் பாகம் 1914-1915,—ஐரோப்பிய யுத்தம் ஆரம்பித்த உடனே, மக்களுக்கு நோட்டுக்களில் அவநம்பிக்கையுண்டாயிற்று. ஆகையால் நோட்டுக்களைக் கொடுத்து அவைகளுக்குப் பதிலாக ரூபாய்கள் பெற விரும்பினார்கள்; தபாலாபீசு சேவிங்ஸ் பாங்குகளில் பணம் போட்டிருந்தவர்களும், தங்கள் பணத்தை வாபீசு பெற ஆவல் கொண்டார்கள். நோட்டுக்களுக்காக பணம் கேட்பவர்களுக்கெல்லாம், கொடுக்கப்பட்டது. நோட்டுக்கள் தற்காலீகமாகக் கொஞ்சம் குறைந்தன. 1914-ம் வருஷத்தில் 54 கோடி ரூபாய் நோட்டுக்கள் உலாவிக்கொண்டிருந்தன. 1915-ம் ஆல் இது 44-கோடியாகக் குறைந்தது. நோட்டுக்களுக்கு கேட்டபொழுது ரொக்கம் கொடுக்கப்பட்டது, மக்கள் மனதில்

நம்பிக்கையை உண்டுபண்ணிற்று. எனவே, பிந்திய வருடங்களில் ஏராளமான நோட்டுக்கள் வெளியிடப்பட்டன. 1916-ம் வருஷத்தில் 53 கோடி ரூபாய்க்கும், 1917-ல் 67-கோடி ரூபாய்க்கும், 1918-ம் ஷை 84 கோடி ரூபாய்க்கும் 1919-ம்வருஷம் 134 கோடி ரூபாய்க்கும் நோட்டுக்கள் வெளியிடப்பட்டன.†

தபாலாபீசு சேவிங்ஸ் பாங்குகளில் பணம் வாபீசு கேட்பவர்களுக்கெல்லாம், அவர்கள் கோரியபடி பணம் வாபீசு கொடுக்கப்பட்டது. தபாலாபீசு சேவிங்ஸ் பாங்குகளில் யுத்த ஆரம்பத்தில் டிபாசிட்டுகளின் மொத்தம் $24\frac{1}{2}$-கோடி ரூபாய்களா யிருந்தது. யுத்தம் ஆரம்பித்த இரண்டு மாதங்களில் மாத்திரம், மொத்தத் தொகையில் $\frac{3}{4}$ பாகம் அதாவது 6 கோடி வாபீசு கொடுக்கப்பட்டது. அதற்குப் பிறகு பணம் வாபீசு கேட்கும் வேகம் குறைந்தது. கேட்ட சமயத்தில் பணம் வாபீசு கொடுக்கப்பட்டதும் மக்கள் மனதில் நம்பிக்கையை உண்டாக்கிற்று.

இரண்டாவது பாகம்—1915-ம்வருஷமுதல் 1919-ம்வருஷ வரை:—யுத்தத்தின் முதல் பாகத்தில் ஏற்பட்ட தொந்தரவுகளை கவர்ன்மெண்டார் சாமர்த்தியமாக நிர்வகித்ததாகவே சொல்லலாம். ஆனால் நம் நாணய முறையை பாதிக்கத் தக்க சில விஷயங்கள் யுத்தத்தின் இரண்டாம் பாகம், அதாவது 1915-ம் வருஷத்துக்குப் பிறகு தான் நேரிட்டன. ஏற்றுமதிகள் அதிகமாகி, இறக்குமதிகள் குறைந்தன; தங்க வெள்ளியின் உலோகங்களின் இறக்குமதியும் குறைந்தன. வெள்ளியின் விலை பல காரணங்களினால் அதிகமாயிற்று. அது ரூபாயின் நாணய மாற்று மதிப்பையும் அதிகமாக்கிற்று.

† Page 24. Findlay Shirra's India's Finance and Banking.

## வெள்ளியின் மதிப்பும் ரூபாயின் மதிப்பும் ஏறுவதற்குக் காரணங்கள்

1. ஏற்றுமதி அதிகமாகி, இறக்குமதி குறைந்தது. மேல் நாடுகள் அனைத்தும் யுத்தத்தில் ஆழ்ந்திருந்தன. எனவே, அவைகளுக்கு தம் தேசத்திலிருந்து உணவுப் பொருள்களும் இன்னும் மற்ற சாக்குகளும் தேவையாயிருந்தன. ஆதலால் சரக்குகள் லாபகரமான விலைக்கு, ஏராளமாக ஏற்றுமதி செய்யப்பட்டன. ஆனால் இச்சாக்குகளுக்குப் பதிலாக நமக்கு வேறு சரக்குகள் அனுப்ப, அவர்கள் அசக்தர்களாய் இருந்தனராகையால், இறக்குமதி மிகவும் குறைந்தது. இறக்குமதியைவிட அதிகமா யிருந்த ஏற்றுமதிக்கு, நமக்கு ரொக்கமாய்ப் பணம் வரவேண்டி யிருந்தது. மற்ற வருஷங்களில் விட யுத்த காலத்தில், அதிக ஏற்றுமதியின் காரணமாக அதிக ரொக்கம் வரவேண்டி யிருந்தது.

2. தவிர யுத்தத்துக்கு வேண்டிய சாமான்களைச் சேகரிப்பதற்காக கவர்ன்மெண்டாரும் பெருந் தொகைகளை இந்தியாவில் செலவு செய்ய நேர்ந்தது. மெசபொடாமியா முதலிய பிரதேசங்களில் ஏற்பட்ட யுத்தங்களுக்கு அவசியமான சேனை சம்பந்தமாகவும், யுத்த சாமான்கள் சம்பந்தமாகவும், இந்தியாவில் ஏராளமான தொகை செலவு செய்யவேண்டி யிருந்தது. 1914-ம் வருஷம் முதல் 1919-ம் வருஷம் வரை யுத்த சம்பந்தமாக கவர்ன்மெண்டார் 2400 லக்ஷம் பவுன்கள் செலவு செய்யவேண்டி யிருந்தது.

3. இச் செலவுகளுக்காக ரொக்கத்தின் தேவை அதிகமாயிருக்க, தங்கம் வெள்ளி உலோகங்களின் சப்ளை குறையத் தலைப்பட்டது. யுத்தத்திற்கு முன், ஒவ்வொரு வருடமும் ஏராளமான தங்கமும் வெள்ளியும் நம் நாட்டிற்குள் இறக்குமதி செய்யப்பட்டு வந்தது. ஆனால் யுத்த

காலத்தில் இவ் விறக்குமதி குன்றிற்று. யுத்த காலத்தில் வெள்ளி தங்க உலோகங்களைக் கப்பல்களில் கொண்டு வருவதற்கு, போதுமான பத்திரமில்லாததாலும், இன்னும் மற்ற காரணங்களினாலும், இவ்வுலோகங்கள் முன் போல் நம் நாட்டிற்குள் இறக்குமதி செய்யப்படவில்லை.

யுத்தத்துக்கு முந்திய ஐந்து வருஷங்களிலும், யுத்த காலத்தில் சராசரி அதிக ஏற்றுமதியின் கணக்கும், அதற்காக எவ்விதம் கவுன்சில் பில்கள் மூலம் ரொக்கமும் தங்க வெள்ளி இறக்குமதியும் செய்யப்பட்ட தென்பதும், யுத்த காலத்தில் தங்க வெள்ளி இறக்குமதி குறைந்ததும் இதனடியில் தெளிவாகக் காணப்பட்டிருக்கிறது.

| † | 1909-10 முதல் 1913-14 வரை சராசரி. | 1914-15 முதல் 1918-19 வரை சராசரி. | 1917-18 | 1918-19 |
|---|---|---|---|---|
| | ஆயிரம் பவுன்களில் | | | |
| சரக்குகளின் அதிக ஏற்றுமதி | 52,179 | 50,871 | 61,420 | 56,553 |
| கவுன்சில் பில்கள் மூலம் ரூபாயின் இறக்குமதி. | 28,416 | 20,098 | 34,553 | 15,598 |
| தங்க வெள்ளி உலோகங்களின் இறக்குமதி. | 24,048 | 7,196 | 15,277 | 53 |
| ரொக்கம், தங்கம் வெள்ளி இவைகளின் மொத்த இறக்குமதி. | 52,464 | 27,294 | 49,830 | 15,651 |
| இந்தியாவின் வியாபாரத்தில் நிகர லாபம். | | 23,577 | 11,590 | 40,902 |
| இந்தியாவின் வியாபாரத்தில் நிகர நஷ்டம். | 285 | | | |

† Page 50 Findlay Shirra's Indian Finance and Banking.

இதிலிருந்து எவ்வளவு குறைவாக தங்க வெள்ளி உலோகங்கள் யுத்த காலத்தில் இறக்குமதி செய்யப்பட்டன வென்பது தெளிவாக விளங்கும். யுத்தத்தின் கடைசி வருஷமாகிய 1918-19ம் வருஷத்தில் இவ்விறக்குமதி 50,000 பவுன்களாகக் குறைந்தது.

தங்கம் வெள்ளியின் இறக்குமதி குறைவாயிருக்க, ஏற்றுமதிச் சாக்குகளுக்கு விலை கொடுக்கவும், கவர்ன்மெண்டார் வாங்கின யுத்தச் சாமான்களுக்காக கிரயம் கொடுக்கவும், ரூபாய் அதிகமாய் வேண்டியிருந்தது. ரூபாயின் தேவை யதிகமாயிருந்தது; ஆனால் சப்ளை தேவைக்குப் போதுமானதாக இருக்கவில்லை. எனவே ரூபாயின் மதிப்பு அதிகமாயிற்று.

4. ரூபாயின் மதிப்பை யதிகப்படுத்துவதற்கு மற்றொரு சம்பவமும் ஏற்பட்டது. மெக்ஸிகோவில் (Mexico) உண்டான உள்நாட்டுத் தொந்தரவுகளின் காரணமாக, அங்கிருக்கும் வெள்ளிச் சுரங்கங்களின் வெளியீடு குறைந்தது. அதே சமயத்தில் ஐரோப்பாவில் யுத்தம் தீவிரமாய் நடந்து கொண்டிருந்தபடியால், யுத்தத்தில் ஈடுபட்டிருந்த நாடுகளெல்லாம், தங்களிடத்திலிருந்த தங்கத்தையும், வெள்ளியையும் யுத்தச் செலவுகளுக்காக உபயோகப்படுத்தினார்கள். எனவே, வெள்ளி வேண்டியவர்கள் அனைவரும் அமெரிக்கா வெள்ளியை நாடினார்கள். இங்ஙனம் உலகத்தில் வெள்ளி சப்ளை குறைந்து தேவையதிகமா யிருக்கவே, வெள்ளியின் விலை உயர்ந்தது.

5. வெள்ளியின் விலையை அதிகப்படுத்துவதற்கு மற்றொரு முக்கிய காரணமும் இருந்தது. யுத்த காலத்தில் இங்கிலாந்து முதலிய நாடுகளில் நாணயமாக உலாவிக் கொண்டிருந்த தங்கம் அனைத்தும் யுத்த உபயோகத்திற்

காக எடுத்துக்கொள்ளப்பட்டு, நோட்டுக்களே முக்கியமாக உலாவி வந்தன. எந்த நாணய முறையில் நோட்டுக்கள் தங்கமாக மாற்றப்பட முடியாதோ, அந்த தேசத்து நாணயத்தின் மதிப்புக் குறையும். இதை அனுசரித்து இங்கிலாந்து நாணயமாகிய பவுன் ஸ்டர்லிங்கும் மதிப்பில் குறைந்தது. யுத்தத்துக்கு முன், நோட்டுக்கள், தங்க நாணயங்களாக மாற்றப்பட்ட சமயத்தில், ஒரு பவுன் ஸ்டர்லிங் 4·866 டாலர் (அமெரிக்கா யுனைடெட் ஸ்டேட்ஸ் நாணயம்) பெறுமானதாய் இருந்தது. ஆனால் நோட்டுக்களுக்காக பவுன்கள் கொடுக்கப்படாததால், ஸ்டர்லிங்கின் மதிப்புக் குறைய ஆரம்பித்து, 4·76 டாலர் மதிப்பில் கட்டுப்பாடு செய்து வைக்கப்பட்டிருந்தது. (pegging the dollar sterling exchangerate) ஆனால் 1919-ம் வருஷத்தில் இக்கட்டுப்பாடு எடுக்கப்பட்டபோது, ஸ்டர்லிங்கின் மதிப்பு 3·83 டாலர்களாகக் குறைந்தது.

இந்தியா அமெரிக்காவிலிருந்து தான் வெள்ளி வாங்க வேண்டியிருந்தது. நம் நாட்டிலிருக்கும் தங்க நாணயமாற்று நாணய முறைப்படி, நம் நாணயமாகிய ரூபாய் ஆங்கில நாணயத்துடன் பிணைக்கப்பட்டிருப்பதால், நாம் நேராக அமெரிக்காவுடன் வியாபாரம் செய்ய முடியாமல், ஆங்கில நாணயங்களின் மூலம் தான் செய்ய வேண்டியிருக்கிறது. உதாரணமாக அமெரிக்காவில் 4·886 டாலர்கள் பெறுமான வெள்ளி இங்கிலாந்தில் தங்க நாணய முறையிருக்கும் சமயத்தில் 1000 பவுன் ஸ்டர்லிங் விலையுள்ளது, அதே வெள்ளி இந்திய ரூபாயில் நாணயமாற்று விகிதம் ரூபாய்க்கு 16 பென்சுகள் என்று கணக்கிட்டுப் பார்த்தால், ரூ 15,000-ஆகும். ஆனால் ஸ்டர்லிங்கின் மதிப்பு 3·83 டாலர்களாகக் குறைந்தால், முன் 1000 ஸ்டர்லிங் கொடுத்துப் பெற்ற 4886

டாலர்கள் பெறுமான வெள்ளிக்கு அதிக ஸ்டர்லிங்குகள் கொடுக்கப்படவேண்டும்; அதாவது $\frac{4886}{3\cdot83} = 1275\cdot7$ ஸ்டர்லிங்குகள் கொடுக்கப்படவேண்டும். ஸ்டர்லிங்குக்குத் தகுந்த மாதிரி நம் நாணய முறைப்படி ரூபாயும் அதிகமாகக் கொடுக்கப்படவேண்டும். முன் ரூ 15000-ரூபாய்க்குக் கிடைத்துக் கொண்டிருந்த வெள்ளிக்கு, ஸ்டர்லிங் மதிப்புக் குறைந்ததன் காரணமாக நாம் $15000 \times \frac{4.886}{3.83}$ ரூ. 19, ரூ 19, 135·5 ரூபாய்கள் கொடுக்கவேண்டியிருக்கும். இங்ஙனம் இங்கிலாந்து நாணயத்தின் மதிப்புக் குறைந்ததன் காரணமாக நம் நாணயமும் மதிப்பில் குறைந்து, அமெரிக்காவில் வாங்க நேரிட்ட வெள்ளிக்கும் அதிக ரூபாய் கொடுத்து வாங்க வேண்டியதாயிற்று. எனவே, வெள்ளியின் விலை அதிகமாயிற்று.

மேல் கண்ட காரணங்களினால் வெள்ளியின் விலை அதிகமாக ஏற ஆரம்பித்தது. 1915-ம் வருஷத்தில் ஒரு அவுன்சு வெள்ளிக்கு $27\frac{1}{4}$ பென்சு விலையாக இருந்தது. வெள்ளியின் விலை ஒரு அவுன்சுக்கு 1916-ம் வருஷத்தில் 37 பென்சுகளாகவும், 1917-ம் வருஷம் ஆகஸ்டு மாதத்தில் 43 பென்சுகளாகவும், கடைசியில் 1919-ம் வருஷம் மே மாதத்தில் 58 பென்சுகளாகவும், அதே வருஷம் டிசம்பர் மாதத்தில் 78 பென்சுகளாகவும், 1920-ம் வருஷம பெப்ரவரி மாதத்தில் 89 பென்சுகளாகவும் விலை உயர்ந்தது.

வெள்ளிவிலை உயர்ந்ததால் நாணய முறையில் ஏற்பட்ட கஷ்டங்கள் :—வெள்ளியின் விலை உயர்ந்ததாலும், இன்னும் முன் சொல்லப்பட்ட மற்ற காரணங்களினாலும் நம் நாணய முறையில் பல கஷ்டங்கள் ஏற்பட்டன.

1. வெள்ளியின் விலை உயர்ந்ததால் ரூபாயின் மதிப்பும் அதிகரித்துக் கொண்டுவந்தது. வெள்ளியின் விலை ஒரு அவுன்சுக்கு 43 பென்சுக்கு அதிகமாக உயர்ந்தபோது, ஒரு ரூபாயிலிருக்கும் வெள்ளி ஒரு ரூபாயைவிட அதிக மதிப்பையடையும். எனவே, மக்கள் ரூபாயை உருக்கி வெள்ளியாய் விற்கத் தலைப்படுவார்கள். இதனால் கவர்மெண்டார் ஏற்படுத்தியிருந்த நாயணமாற்று விகிதத்தில் ரூபாயை வைத்திருப்பது அசாத்தியமாயிற்று. தங்க நாணயமாற்று நாணயமுறை (Gold Exchange Standard)யின் அடிப்படையான ஸ்திரமான நாணயமாற்று விகிதத்தை வைத்திருப்பதென்பது, இதனால் பாதிக்கப்பட்டது.

2. ஏற்றுமதிகள் மிக அதிகமாயிருந்தபடியாலும், கவர்ன்மெண்டார் யுத்தத்திற்காக இந்தியாவில் ஏராளமாகச் செலவு செய்ய வேணடியிருந்தபடியாலும் அதிக ஏற்றுமதியின் காரணமாக கவுன்சில் பில்கள் இங்கிலாந்தில் ஏராளமாக விற்கப்பட்டபடியாலும், இந்தியாவில் ரூபாய்க்கு மிகவும் தேவை ஏற்பட்டது. இதுவும் ரூபாயின் விலை மதிப்பை யதிகப்படுத்துவதற்கு ஒரு காரணமாயிருந்தது. கவர்ன்மெண்டாரிடத்தில் நாணய மாற்றுக் காரியங்களுக்காக வைக்கப்பட்டிருந்த நிதிகள் இத்தேவைக்குப் போதுமான நாணயங்களை சப்ளை செய்வதற்கு சக்தியற்றவையாய் இருந்தன. நாணய முறையில் ஏற்பட்ட மேற்படி குறைகளை நிவர்த்திக்க கவர்மெண்டாரால் பலவிதப் பிரயத்தனங்கள் செய்யப்பட்டன. ரூபாய் உருக்கப்படாமலிருக்கவும், உள்நாட்டில் பழக்கத்துக்கு நாணயங்களை அதிகமாக்கவும் கவர்மெண்டார் தக்க ஏற்பாடுகள் செய்ய வேண்டியிருந்தது.

1. கவர்ன்மெண்டார் கையாண்ட முறைகள்:—வெள்ளியின் விலை அதிகமாக அதிகமாக, ரூபாயின் நாணயமாற்று

விகிதமும் உயர்த்தப்பட்டது. ரூபாயின் நாணய மாற்று விகிதம் உயர்த்தப்பட்டதன் விபரம் கீழே கொடுக்கப்பட்டிருக்கிறது.

| * தேதி | நாணயமாற்று விகிதம் | தேதி | நாணய மாற்று விகிதம் |
|---|---|---|---|
| ஜன 3, 1917 | 1 ஷி $4\frac{1}{4}$ பெ | ஆக 12,1919 | 1 ஷி 11 பெ |
| ஆக 28, 1917 | 1 ஷி 5 ,, | செப் 15,1919 | 2 ஷி 0 ,, |
| ஏப் 12, 1918 | 1 ஷி 6 ,, | நவம் 22,1919 | 2 ஷி 2 ,, |
| மே 13, 1919 | 1 ஷி 8 ,, | டிசம் 12,1919 | 2 ஷி 4 ,, |

2. இங்கிலாந்தில் கேட்பவர்கள் எல்லோருக்கும் கவுன்சில் பில்கள் விற்கப்பட்டால், அவைகளுக்காக ரூபாய்கள் கொடுப்பது கடினமாயிருந்தபடியால், கவுன்சில் பில்கள் வியாபாரத்தின் அவசியத்திற்கு மாத்திரம் விற்கப்பட வேண்டுமெனக் கட்டுப்பாடு செய்யப்பட்டது.

3. அமெரிக்காவிலிருந்து 2000 லக்ஷம் அவுன்சுகள் வெள்ளி வாங்கி, ரூபாய்கள் அச்சிடுவதற்கும், இன்னும் மற்ற விதமாக ரொக்க வசதிகள் செய்வதற்கும், உபயோகப்படுத்தப்பட்டது.

4. நாணயங்கள் அச்சிடுவதில் கூடிய வரை, வெள்ளி மீதமாகிறமுறைகள் அனுஷ்டிக்கப்பட்டன. 1917-ம் வருஷத்தில் ரூபாய்கள் உருக்கப்படக் கூடாதெனச் சட்டம்செய்யப்பட்டது. அந்த வருஷத்திலேயே ஒரு ரூபாய்க்கும் $2\frac{1}{2}$ ரூபாய்களுக்கும் நோட்டுக்கள் வழங்கப்பட்டன. 2 அணு 4 அணு 8 அணு நாணயங்கள் வெள்ளியில் அச்சிடுவதற்குப்

* P. 113 Currency & Prices in India by Vakil & Muranjan.

பதிலாக நிக்கல் (Nickel) உலோகத்தில் அச்சிடப்பட்டன. தங்க நாணயங்களும் கூட வழங்கப்பட்டன.

5. சரியான காப்புத் திரவியங்களின்றி கான்சி நோட்டு களும் அதிகமாய் வழங்கப்பட்டன. (inflation of paper currency) சில சமயங்களில் நோட்டுக்களை மாற்ற வருபவர் களுக்கு தடவைக்கு ஒருவருக்கு ஒரு குறிப்பிட்ட அளவுக்கு மேல் வெள்ளி ரூபாய்கள் கொடுக்கப்பட வேண்டியதில்லை என்றும் உத்தரவு செய்யப்பட்டது.

6. யுத்தச் செலவுகளுக்காக இந்தியாவிலேயே ஏராள மான கடன்கள் வாங்கப்பட்டன. 1917, 1918, 1919-ம் வருஷங்களில் மாத்திரம் 130 கோடி ரூபாய்கள் கவர்மெண் டாரால் கடன்கள் வாங்கப்பட்டன. குறுகிய காலக்கடன்க ளும்(treasury bills) 1917-ம் வருஷத்திலிருந்து அதிகமாக வாங்கப்பட்டன. கவர்ன்மெண்டாரின் சாதாரண செலவுக ளும், அதிகமான முதல் அவசியமாயிருக்கும் செலவுக ளும் குறைக்கப்பட்டன. அதிக வரியும் போடப்பட்டது.

யுத்த காலத்தில் தோன்றின பணத்தேவையை, இம் முறைகளைக் கையாடி, கவர்ன்மெண்டார் ஒருவாறு சமாளித் தனர்.

பேபிங்டன் ஸ்மித் கமிட்டி :—நம் நாட்டில் ஏற்படுத்தப் பட்ட தங்க நாயணமாற்று நாணயமுறையின் குறைகள் யாவும் யுத்த காலத்தில் வெகு தெளிவாக வெளிப்பட்டன. ஆதலால், இம்முறை திரஸ்கரிக்கப்பட்டு, தங்க நாணய முறையை இந்தியாவில் ஸ்தாபிப்பதற்கு முயற்சி செய்யப் படுமென பலர் எதிர்பார்த்திருந்தனர். ஆனால் கவர்ன்மெண் டாருக்குத் தங்க நாணயமாற்று நிறையிலிருந்த மோகம், இவ் வனுபவங்களுக்குப் பின்னும் குறையவில்லை. இம்முறை யைப் பின் பற்றியதால் நம்மக்களுக்கு ஏராளமான நஷ்ட

முண்டானதுபற்றி பின் பக்கங்களில் சொல்லப்படும். நாணய மாற்று விகிதத்தைத் தகுந்தவாறு ஏற்படுத்தி, இம்முறையையே பின்பற்ற கவர்மெண்டார் நினைத்தனர். நாணயம் நாணயமாற்று சம்பந்தமான விஷயங்களைப் பற்றி விசாரணை செய்து ரிபோர்ட்டு செய்வதற்காக 1919-ம் வருஷம் மே மாதத்தில் சர் ஹென்றி பேபிங்டன் ஸ்மித் என்பவர் தலைமையின் கீழ் ஒரு கமிட்டி ஏற்படுத்தப்பட்டது.

பேபிங்டன் ஸ்மித் கமிட்டியின் சிபார்சுகள்:—1. ரூபாய் முன் இருந்தபடியே எடையில் குறைக்கப்படாமல் பிரதானமான நாணயமாய் இருக்கவேண்டும்.

2. ரூபாய்க்கு ஒரு குறிப்பிட்ட ஸ்திரமான நாணய மாற்று மதிப்பு கொடுக்கப்படவேண்டும். இம்மதிப்பு ஒரு ரூபாய்க்கு 11.30116 தானிய எடைதங்கம், அதாவது ஒரு பவுனில் $\frac{1}{10}$ பாகம், அதாவது 2 ஷிலிங் தங்கம் என்று வைக்கப்படவேண்டும்.

3. பவுன், முன் 15 ரூபாய் மதிப்பிடப்பட்டிருந்தது 10 ரூபாய்க்குச் சமமாகத்தான் ஒப்புக்கொள்ளப் படவேண்டும்.

மேற்கண்ட சிபார்சுகளைத் தவிர, இந்தியாவில் ஒரு தங்கசாலை ஏற்படுத்தித் தங்கம் கொண்டுவந்து கொடுப்பவர்களுக்கு பவுன்கள் அச்சிட்டுத் தரப்படவேண்டுமென்றும், தங்கம் வெள்ளி இவைகளின் இறக்குமதி ஏற்றுமதிகளின் பேரில் யுத்த காலத்தில் ஏற்படுத்தப்பட்டிருந்த கட்டுப்பாடுகள் நீக்கப்படவேண்டுமென்றும், கான்சி நோட்டுப் பாதுகாப்பு நிதிகள் எவ்விதம் வைக்கப்பட வேண்டுமென்பதைப் பற்றியும் பல சிபார்சுகளும், மேற்படி கமிட்டியாரால் செய்யப்பட்டன.

பேபிங்டன் ஸ்மித் கமிட்டியின் பெரும்பான்மையோர் ரூபாயின் நாணயமாற்று மதிப்பு 2 ஷிலிங் தங்கம் என்று வைக்கப்படவேண்டுமெனச் சிபார்சு செய்ததற்குக் கீழ் கண்ட காரணங்கள் எடுத்து காட்டப்பட்டிருக்கின்றன.

1. வெள்ளியின் விலை உயர்ந்திருப்பதால் அதை யொட்டி, ரூபாய்கள் உருக்கப்படாமல் இருப்பதற்காக ரூபா யின் நாணயமாற்று மதிப்பும் உயர்த்தப்படவேண்டும்.

2. நாணயமாற்று விகிதம் உயர்த்தப்பட்டால், இற க்குமதிகள் அதிகமாகி, இறக்குமதிச் சாமான்களும் குறைந்த விலைக்குக் கிடைக்கும்.

3. ஏற்றுமதி வியாபாரம் ஆரம்பத்தில் கஷ்டப்பட் டாலும், நாளாசரியில் சரிப்பட்டுப்போய்விடும்.

4. நாணயமாற்று விகிதத்தை உயர்த்துவதால் இந் தியா கவர்ன்மெண்டார் இங்கிலாந்தில் செய்யவேண்டிய செலவுகளுக்காக, அனுப்பவேண்டிய ரூபாய்கள் குறையும்.

1927-ம் வருஷத்தில் ரூபாயின் நாணயமாற்று விகிதம் 16 பென்சை விடுத்து 18பென்சுகளாய் ஏற்படுத்திய சமயத் திலும், இதே காரணங்கள் தான் சொல்லப்பட்டன. இக்கார ணங்கள் என்று அதைப்பற்றி எழுதும் சமயம் விபரமாய்ச் சொல்லப்படும். தற்சமயம் இச்சிபார்சு பேபிங்டன் ஸமித் கமிட்டியின் ஒரு அங்கத்தினரான திரு. டி. எம். தலால் என்பவரால் எதிர்க்கப்பட்டதென்பது மாத்திரம் குறிப்பிடத் தக்கது. ஆனால் கவர்ன்மெண்டார் திரு. தலால் அவர்கள் கொடுத்த எச்சரிக்கையைக் கவனிக்காமல் ரூபாயின் நாணய மாற்று விகிதத்தை 2ஷில்லிங் தங்கம் என்று நிர்ணயித்தனர். இதனால் இந்தியா மக்களுக்கு 35 கோடி ரூபாய்கள் நஷ்ட முண்டாயிற்று. அதன் கதையைக் கீழே காண்க.

கவர்ன்மெண்டார் பேபிங்டன் ஸ்மித் கமிட்டியின் சிபார்சுகளை அங்கீகரித்தல் :—கவர்மெண்டார் பேபிங்டன் ஸ்மித் கமிட்டியாரின் சிபார்சுகளை அங்கீகரித்து அச்சிபார்சுகளுக்கேற்றவாறு நாணயமுறை கீழ்க்கண்டவாறு மாற்றப்பட்டது.

1. ரூபாயின் நாணயமாற்று விகிதம் 11.30016 தானிய எடை தங்கம் 2 ஷிங் தங்கம் என மாற்றப்பட்டது.

2. அதற்கேற்றபடி பவுன் மதிப்பு ரூ 10-ஆக மாற்றப்பட்டது,

3. பவுன்களும் அரைப்பவுன்களும் வரிகளுக்காக ஒப்புக்கொள்ளப் படாவிடினும், 21 தினங்களுக்குள் கவர்மெண்டு கஜானாவில் கொண்டுவந்து கொடுப்பவர்களுக்கு ரூ 15-வீதம் ரூபாய் கொடுக்கப்படுமென 1920ம் வரு ஜூன் 21-ம் தேதி ஒரு அவசரச்சட்டம்(Ordinance No. 111 of 21 June, 1920) வெளியிடப்பட்டது.

4. பேபிங்டன் ஸ்மித் கமிட்டியார் அரை பவுன்களும் பவுன்களும் கஜானாக்களில் ஒப்புக்கொள்ளப் படவேண்டுமென சிபார்சு செய்திருந்தனர். இதை நடவடிக்கையில் கொண்டு வருவதற்கு, 1920-ம் வருஷத்திய 36-வது சட்டம் (Act No. xxxvi of 1920) செய்யப்பட்டு, இதன் மூலம் 1920ம் வரு ஜூன் 21-ம் தேதி செய்யப்பட்ட அவசரச் சட்டம் தள்ளி வைக்கப்பட்டது. இச்சட்டத்தால் பவுன்களும் அரைப்பவுன்களும் முறையே ரூ. 10. ரூ. 5-வீதம் கஜானாக்களில் ஒப்புக்கொள்ளப்பட வேண்டுமெனச் சட்டம் செய்யப்பட்டது.

5. யுத்த காலத்தில் வெள்ளி, தங்கத்தின் இறக்குமதிகளின்பேரில் போடப்பட்டிருந்த கட்டுப்பாடுகள் நீக்கப்பட்டன.

ரூபாயின் நாணய மாற்று 2-ஷி. தங்கம் என்றால் என்ன:—ரூபாய்க்கு நாணய மாற்று விகிதம் 11. 30016-தானிய எடை தங்கம், அதாவது ஒரு பவுனில் 1/10 பாகம் அதாவது 2 ஷி. பெறுமானமுள்ள தங்கம் என்று ஏற்படுத்தப்பட்டது. ஆங்கில ஸ்டர்லிங்கை தங்கமாய் மாற்ற முடியும் போது, ஸ்டர்லிங்கின் மதிப்பும் தங்கத்தின் மதிப்பும் ஒன்றாயிருக்கும். ஆனால் ஸ்டர்லிங் தங்க மயமாய் மாற்ற முடியாமல் போனபோது ஒரு ஸ்டர்லிங்குக்கு ஒரு பவுன் தங்கம் கிடைக்காது; ஸ்டர்லிங் மதிப்புக் குறைந்ததன் காரணத்தால், அதிக ஸ்டர்லிங் கொடுக்கவேண்டி நேரிடும். அமெரிக்கா நாணய முறையில் எப்பொழுதும் டாலர்கள் தங்கத்துக்கு மாற்றக் கூடிய நிலைமையிலிருந்தபடியால், அமெரிக்கா டாலர்கள் எப்பொழுதும் தங்கத்துக்குச் சமமாகக் கருதப்பட்டு வருகின்றன. ஆதலால் ஸ்டர்லிங், மதிப்பில் குறைந்தால், அம்மதிப்பு, தங்கத்தால் அளக்கப்படுவதற்குப் பதிலாக, அமெரிக்கா டாலர்களால் அளக்கப்படுகிறது.

யுத்தத்துக்குப் பிறகு ஆங்கில ஸ்டர்லிங் தங்கமாக மாற்றப்படாமல், மதிப்பில் குறைந்ததென முன்னமே சொல்லப்பட்டிருக்கிறது. ஸ்டர்லிங் தங்கமாக மாற்றப்படக் கூடிய சமயத்தில் ஒரு ஸ்டர்லிங்கின் நாணய மாற்று விகிதம் 4·886. அமெரிக்கா டாலர்களாய் இருந்தது. தங்கமாக மாற்றப்படாத காலத்தில், யுத்தத்துக்குப் பிறகு இவ்விகிதம் 3·83 டாலர்களாகக் குறைந்தது. அதற்குப் பின் ஸ்டர்லிங்கின் நாணய மாற்று விகிதம் 3·47½ டாலர்களாகவும், அதற்குக் கொஞ்ச காலத்துக்குப் பிறகு 3·25 டாலர்களாகவும் குறைந்தது. பவுனின் மதிப்புக் குறையக் குறைய முன் கொடுத்ததைவிட அதிக ஸ்டர்லிங்குகள் கொடுக்கப்பட வேண்டும். உதாரணமாக 4886 டாலர்கள் பெறுமான சாமான்கள்,

இங்கிலாந்தில் ஸ்டர்லிங் தங்கத்துக்கு சமமாய் இருந்த சமயத்தில் 1000 பவுன்களுக்குக் கிடைக்கும். ஆனால் ஆங்கில ஸ்டர்லிங் 3·83 டாலர்களாக மதிப்பில் குறைந்தால், அதே 4886 டாலர்கள் பொறுமான சாமான்களுக்கு, $\frac{4886}{3 \cdot 83}$ = 1275 ஸ்டர்லிங்குகள் கொடுக்கப்பட வேண்டும். இம்மாதிரியே ஸ்டர்லிங்கின் மதிப்பு $3 \cdot 47\frac{1}{2}$ டாலர்களாகக் குறைந்தால் 1406 ஸ்டர்லிங்களும், 3·25 டாலர்களாகக் குறைந்தால் 1503·1 ஸ்டர்லிங்குகளுக்குக் கொடுக்கப்படவேண்டும்.

ஸ்டர்லிங் மதிப்பில் குறைந்ததை வேறு விதமாகவும் சொல்லலாம். முன் ஸ்டர்லிங் தங்கமாய் மாற்றப்பட்ட சமயம் ஒரு ஸ்டர்லிங் 4·886 டாலர்கள் மதிப்புடையதாக விருந்தது. ஸ்டர்லிங் மதிப்பில் குறைந்தால் முன் ஒரு ஸ்டர்லிங்குக்குக் கிடைத்துக்கொண்டிருந்த தங்கத்துக்கு அதிக ஸ்டர்லிங் கொடுக்கவேண்டும். ஸ்டர்லிங் மதிப்பு 3·83 டாலராகக் குறைந்தால், ஒரு பவுன் தங்கம் வாங்குவதற்கு $1 \times \frac{4 \cdot 886}{3 \cdot 83}$ = 1·275 ஸ்டர்லிங் கொடுக்கப்படவேண்டும்.

ரூபாயின் நாணய மாற்று விகிதம் 2 ஷி. தங்கமாக மாற்றப்பட்டதன் பயன்:—ஸ்டர்லிங் மதிப்பில் குறைந்தால் அது இந்திய நாணய முறையில் என்ன பயனை விளைவித்ததெனப் பார்ப்போம். ரூபாயின் நாணய மாற்று மதிப்பு 2 ஷி. தங்கம் என்று பேபிங்டன் ஸ்மித் கமிட்டியாரால் நிர்ணயிக்கப்பட்டது. அதாவது ஸ்டர்லிங் தங்கமாக மாற்றப்படக்கூடிய சமயத்தில், ஸ்டர்லிங் மதிப்பு 4·886 டாலர்களாக விருந்த சமயத்தில் ஒரு ரூபாயின் மதிப்பு 2 ஷி என்று பொருள். 1920-ம் வருஷம் பெப்ரவரி மாதம் 2-ம் தேதியன்று ரூபாயின் நாணய மாற்று விகிதம் 2 ஷி. தங்கம் என்று ஏற்படுத்தப்பட்டது. அத்தேதியில் ஸ்டர்

லிங்கின் மதிப்பு 3·47½ டாலராகக் குறைந்திருந்தது. ஆதலால் ஒரு ரூபாய்க்கு 2 ஷி விட அதிக ஸ்டார்லிங் கிடைக்க வேண்டியிருக்கும்; அதாவது 2 ஷி × $\frac{4.886}{3.475}$ = 2·81 ஷி அதாவது 2 ஷி 9½ பென்சுகள் கிடைக்க வேண்டியிருக்கும். அதற்கு இரண்டு தினங்களுக்குப் பிறகு ஸ்டார்லிங் மதிப்பு 3·25 டாலர்களாகக் குறைந்தபோது ஒரு ரூபாய்க்கு நாணய மாற்று மதிப்பு 2 ஷி × $\frac{4.886}{3.25}$ = 3·0 ஷி ஆகிறது. இவ்விதம் ரூபாயின் நாணய மாற்று விகிதம் மிகவும் உயர்ந்திருந்தது.

ரூபாயின் நாணய மாற்று விகிதம் ஏற ஏற ஒரு பவுனுக்கு முன்னை விடக் குறைந்த ரூபாய்கள் தான் கிடைக்கும். ஆகையால் பேபிங்டன் ஸ்மித் கமிட்டி ரூபாய்க்கு நாணய மாற்று விகிதம் 2 ஷி தங்கம் எனச் சிபார்சு செய்தவுடன், ஏற்றுமதி வியாபாரிகள், தங்கள் சாக்குகளின் விலைத் தொகையை உடனே ஏற்ற விரும்பினார்கள். எனவே கவுன்சில் பில்களுக்கு இங்கிலாந்தில் தேவையதிகம் ஏற்பட்டது; கவுன்சில் பில்களுக்கு ஏராளமாக ரூபாய் கொடுக்க வேண்டியிருந்தபடியால் ரூபாயின் மதிப்பும் அதிகமாயிற்று. 1920-ம் வருஷம் பெப்ரவரி மாதம் 11-ம் தேதி கவுன்சில் பில்கள் ஒரு ரூபாய்க்கு 2ஷி 10¼ பென்சுகள் விகிதத்தில் விற்கப்பட்டன. ஆனால் கொஞ்ச காலத்தில் கவுன்சில் பில்களின் தேவை குறைந்தது.

ரூபாயின் நாணய மாற்று விகிதம் உயர்ந்திருந்தால், இந்தியாவிலிருந்து பணம் அனுப்புவோர்கள் இங்கிலாந்தில் அதிக பவுன்கள் பெறுவார்கள். நாணயமாற்று ரூபாய்க்கு 16 பென்சுகளாக இருக்கும்போது, ரூ 1500 அனுப்பப்பட்டால், இங்கிலாந்தில் 100 பவுன்கள் தான் கிடைக்கும். ஆதலால் நாணயமாற்று விகிதம் அதிகமாயிருக்கும்போது

இங்கிலாந்துக்கு பணம் அனுப்புவதில் லாபம் உண்டு. இது காரணமாக, இந்தியாவில் வியாபாரம் செய்து கொண்டிருந்த ஆங்கிலக் கம்பெனிகளும், இந்தியாவில் சேவகம் செய்து வந்த ஆங்கில உத்தியோகஸ்தர்களும், இன்னும் இங்கிலாந்துக்குப் பணம் அனுப்பவேண்டிய மற்றவர்களும் இதே தருணமென பணம் அனுப்பத் தொடங்கினார்கள். இதன் மூலம் ரெவர்ஸ் கவுன்சில் பில்கள் இந்தியாவில் ஏராளமாக விற்கப்பட்டன.

உயர்ந்த நாணயமாற்று விகிதம் இறக்குமதியை அதிகப்படுத்திற்று. உயர்ந்த நாணயமாற்று விகிதத்தில் அன்னிய நாட்டுக்குச் சரக்குகள் குறைந்த விலைக்கு நம் நாட்டில் கிடைத்தன. உதாரணமாக 100 பவுன்களுக்கு இங்கிலாந்தில் விற்கப்பட்ட ஒரு சாமானுக்கு, நாணயமாற்று விகிதம் 16 பென்சுகளாக விருந்தால் இந்தியாவில் ரூ 1500 கொடுக்கப்படவேண்டும்; ஆனால் அதே 100 பவுன் சாமானுக்கு நாணயமாற்று விகிதம் 2ஷி ஆக விருந்தபோது ரூ 1000 கொடுத்தால் போதுமானது. எனவே நாணயமாற்று விகிதம் உயர்ந்தால் இறக்குமதிச் சரக்குகள் குறைந்த விலைக்கு விற்கப்பட்டு, அதிகமாக இறக்குமதி செய்யப்படும். இவைகளுக்குக் கிரயமாகப் பணம் அனுப்பவும் ரெவர்ஸ் கவுன்சில் பில்கள் செலவாயின. அக்காலத்தில், யுத்த காலத்தில், பஞ்சு மில்களுக்குக் கிடைத்த லாபத்தால் தூண்டப்பட்டு, பல பஞ்சு மில்கள் ஸ்தாபிப்பதற்கு வேண்டிய யந்திரங்களும் அதிகமாக அன்னியநாடுகளிலிருந்து வாங்கப்பட்டன.

சாதாரணமாக ஒவ்வொரு வருஷமும் நம் இறக்குமதியை விட ஏற்றுமதி அதிகமா யிருப்பது வழக்கம். நாம் இறக்குமதிகளுக்குக் கொடுக்க வேண்டிய தொகைகளையும் கொடுத்து, இந்தியா மந்திரி செலவுக்கும் மீதமாகிற அவ்

வளவு அதிக ஏற்றுமதி, சாதாரண வருஷங்களிலிருக்கும். ஆனால் உயர்ந்த நாணய மாற்று விகிதம் நம் ஏற்றுமதியைக் குறைத்தது. உதாரணமாக நாம் இந்தியாவில் ரூ. 1500 விற்கக்கூடிய பருத்திக்கு நாணய மாற்று விகிதம் 16 பென்சுகளாக விருந்தால் இங்கிலாந்தில் 100 பவுன்கள் தான் கொடுக்கவேண்டி யிருக்கும். ஆனால் நாணய மாற்று விகிதம் 2 ஷி. ஆக உயர்த்தப்பட்டால், அதே ரூ. 1500 நமக்குக் கிடைக்க வேண்டுமானால் அதற்கு இங்கிலாந்தில் 150 பவுன்கள் கிடைக்க வேண்டும். நாணய மாற்று உயர்த்தப்பட்டதால் நம் சரக்குகளின் விலையும் அன்னிய நாடுகளில் உயர்த்தப்படுகின்றன. எனவே, அவர்கள் நம்மிடத்தில் இச்சரக்குகளை வாங்குவதை விட்டு, வேறு நாடுகளிடத்தில் வாங்கிக் கொள்வார்கள். இதன்மூலம் நம் ஏற்றுமதி வியாபாரம் குறையும். நாணய மாற்று விகிதம் உயர்ந்ததன் காரணமாக 1920 ம் வருஷம் ஜனவரியிலிருந்து நம் இறக்குமதி வியாபாரம் குறைய ஆரம்பித்து, ஜூன் மாதத்தில் மிகவும் அதிகமாகக் குன்றிற்று.

கோடி ரூபாய்களில்

| வருஷம் | இறக்குமதி | ஏற்றுமதி | அதிக இறக்குமதி |
|---|---|---|---|
| 1920–21 | 347·56 | 267·76 | 79·80 |
| 1921–22 | 282·58 | 248·65 | 33·93 |

1920–21 லும் 1921–22 லும் ஏற்பட்ட அதிக இறக்குமதி மேலே காண்பிக்கப்பட்டிருக்கிறது. இங்ஙனம் எல்லா விதங்களிலும், உயர்ந்த நாணய மாற்று விகிதம் பணத்தை நாட்டை விட்டு வெளியே அனுப்புவதற்கு உதவி செய்தது. எனவே, ரெவர்ஸ் கவுன்சில்களுக்கு அதிகமான தேவை ஏற்பட்டது.

ரூபாயின் நாணய மாற்று விகிதம் குறைதல்:—ரொக்க ஓட்டம் நம் நாட்டைவிட்டு வெளியே போனால், நம் நாணய மாற்று விகிதம் குறையும். இதை அனுசரித்து ரூபாயின் நாணய மாற்று விகிதமும் குறைய ஆரம்பித்தது. நாணய மாற்று விகிதத்தை 2 ஷி ஸ்திரமாக வைத்திருக்க கவர்ன் மெண்டார் முயற்சி செய்தனர்; எனினும் அது குறையத் தொடங்கி, சிற்சில சமயங்களில் கவர்ன்மெண்டாரால் வைக் கப்பட்டிருந்த விகிதத்துக்கு 3 அல்லது 4 பென்சுகளுக்குக் குறைந்தும் மார்க்கெட்டில் ஸ்டர்லிங் உண்டியல்கள் விற்கப் பட்டன.

ஆனால் கவர்ன்மெண்டார் காலத்தின் போக்கை அனு சரிக்காமல் ரூபாயின் நாணய மாற்று விகிதத்தை 2 ஷி தங்கமாக வைத்து நடத்த வேண்டுமென்று பிடிவாதமான முயற்சி செய்தனர். 1920-ம் வருஷம் செப்டம்பர் மாதத் துக்குள், அதாவது 2 ஷி விகிதம் ஏற்படுத்தப்பட்ட எட்டு மாதங்களுக்குள், 55,382 ஆயிரம் பவுன்களுக்கு ரெவர்ஸ் கவுன்சில்கள் விற்கப்பட்டு, இங்கிலாந்தில் பவுன்கள் கொடுக் கப்பட்டன. இப்பவுன்கள் பவுன் ஒன்று ரூ. 15/-வீதம் கொடுத்து வாங்கப்பட்டவை. இப்பொழுது பவுன் ஒன்று ரூ. 7/-முதல் ரூ. 10/-வரை விலைக்கு விற்கப்பட்டது. இங் ஙனம் அதிக விலைக்கு வாங்கி, குறைந்த விலைக்கு விற்றதில் இந்திய மக்களுக்கு 35 கோடி ரூபாய் நஷ்டமுண்டாயிற்று.

இதைவிட வேறு அதிக கஷ்டங்களும் இந்திய வியா பாரிகள் அனுபவிக்க நேர்ந்தன. கவர்ன்மெண்டார் நாணய மாற்று விகிதத்தை 2 ஷி விகிதத்தில் நிலை நிறுத்துவார்கள் என்ற நம்பிக்கையின் பேரில், பல வியாபாரிகள் அன்னிய நாட்டுச் சரக்குகளுக்கு ஆர்டர் கொடுத்திருந்தார்கள். கவர்ன் மெண்டார் நாணய மாற்று விகிதத்தை 2 ஷி யில் நிலை

நிறுத்த முடியாமல், நாணய மாற்று விகிதத்தைக் கட்டுப் படுத்துவதைக் கைவிட்டனர். கவர்ன்மெண்டாரின் கட்டுப் பாடும் நீங்கவே, ரூபாயின் நாணய மாற்று விகிதம் திடீ ரென்று குறைந்து 15 பென்சுகள் வரை தாழ்ந்தது. இதன் காரணமாக அவ்வியாபாரிகள் இங்கிலாந்திலிருந்து வந்த சரக்குகளுக்கு தாங்கள் ஆர்டர் செய்த சமயத்தில் எதிர் பார்த்ததைவிட மிக அதிகமான ரூபாய்கள் கொடுக்க நேர்ந் தது. இதனால் இறக்குமதி வியாபாரிகளுக்கு பலத்த நஷ் டங்கள் உண்டாகி, பலர் முறிந்தும் போனார்கள்.

நாணய மாற்று விகிகத்தை உயர்த்துவதற்கு கவர்ன் மெண்டார் செய்த முயற்சிகள்:—1921-ம் வருஷத்தில் நம் அன்னிய நாட்டு வியாபாரம் தாழ்ந்த நிலைமையில் தான் இருந்தது. ஏற்றுமதியைவிட இறக்குமதி அதிகமா யிருந்து கொண்டிருந்தது. ரூபாயின் நாணய மாற்று விகிதம் மிகக் குறைந்து 1 ஷி, 3 பெ விகிதத்தில் இருந்தது. கவர்ன்மெண் டார் ரூபாயின் நாணய மாற்று விகிதத்தை ஸ்திரமாகக் செய் யும் முயற்சியைக் கைவிட்டனர். எனினும், ரூபாயின் மதிப்பை அதிகமாக்குவதற்கு வேண்டிய முயற்சிகளைச் செய்தனர்.

1. ரூபாய்கள் பழக்கத்திலிருந்து வாபீசு வாங்கப்பட் டன. சப்ளையை குறைத்து ரூபாயின் மதிப்பை அதிகமாக்கப் பிரயத்தனம் செய்யப்பட்டது. 1920–21 ம் வருஷத்தில் மாத்திரம் 31,58 லக்ஷம் ரூபாய்கள் வாபீசு வாங்கப்பட் டன. 1921–22, 1922–23-லும் ரூபாய்கள் வாபீசு வாங் கப்பட்டன.

2. 1920–21 முதல் 1922–23 வரை இங்கிலாந்தில் இந் தியா மந்திரியின் செலவுக்காக கவுன்சில் பில்கள் விற்கப் படவில்லை. கவுன்சில் பில்கள் இங்கிலாந்தில் விற்கப்பட் டால், அவைகளுக்காக இந்தியாவில் ரூபாய்கள் கொடுக்கப்

படவேண்டும். இதன்மூலம் ரூபாய்கள் அதிகமானால் ரூபாயின் மதிப்புக் குறையும். ஆதலால் கூடியவரை கவுன்சில் பில்களின் விற்பனையைக் குறைக்க வேண்டுமென்ற எண்ணத்தால், சாதாரணமாக இந்தியா மந்திரியின் செலவுகளுக்காக வேண்டிய பவுன்கள் கிடைக்கும்பொருட்டு விற்கப்படும் கவுன்சில் பில்களும் இவ்வருடங்களில் விற்கப்படவில்லை. கடன்கள் வாங்கியும், இன்னும் மற்ற வழிகளிலும், இந்தியா மந்திரியின் செலவுகள் சமாளிக்கப்பட்டன.

3. 1922–23 ல் இந்தியாவின் ஏற்றுமதி வியாபாரம் அதிகமாக ஆரம்பித்தது. இவ்வருஷத்தில் நம் நாட்டில் விளைவு நன்றாயிருந்தபடியாலும் ஐரோப்பிய நாடுகளில் வாங்கக்கூடிய சக்தியும் (Purchasing power) அதிகமானபடியாலும், சரக்குகள் அதிகமாக ஏற்றுமதி செய்யப்பட்டன. முன் வருஷங்களைப்போல் ஏற்றுமதி இறக்குமதியை விட அதிகமாயிற்று.

இக்காரணங்களெல்லாம் சேர்ந்து ரூபாயின் மதிப்பை அதிகமாக்கிற்று. 1923 ம் வருஷத்துக் கடைசியில் ரூபாயின் நாணய மாற்று விகிதம், இந்திய வியாபாரிகள் சங்கம் (The Indian Merchants' Chamber) கேட்டுக்கொண்ட மாதிரி, சுலபமாக 1 ஷி. 4 பென்சாக ஏற்படுத்தப் பட்டிருக்கலாம். ஆனால் கவர்ன்மெண்டார் 1 ஷி. 6. பென்சாக நாணய மாற்று விகிதம் ஏற்படுத்த வேண்டுமென அபிப்பிராயங் கொண்டிருந்தனர். 1924-ம் வருஷம் அக்டோபர் மாதத்தில், ரூபாயின் நாணய மாற்று விகிதம் 1 ஷி. 6 பெ ஆக உயர்ந்தது. இதற்குப் பின் நாணய மாற்று விகிதம் இன்னும் அதிகமாகாமலிருப்பதற்கு வேண்டிய முயற்சிகள் செய்யப்பட்டன. 1925-ம் வருஷத்திலும் 1 ஷி. 6 பெ விகிதத்திலேயே நின்றது. 1921-

வருஷத்திலேயே ரூபாய் அச்சிடுவதும் நிறுத்தப்பட்டது. 1921-ம் வருஷத்திற்குப் பிந்திய ரூபாயை இப்பொழுதும் பார்க்க இயலாது.

நாணய மாற்று விஷயங்களை ஆராய்வதற்கு ஒரு நிபுணர்கள் கமிட்டி ஏற்படுத்தப்படவேண்டுமென, பொது ஜனங்கள் பல வருடங்களாகக் கேட்டுக்கொண்டிருந்தனர். அதற்கிணங்க 1925 ம் வருஷம் ஆகஸ்டு மாதம் 25-ந் தேதி, இந்திய நாணய, நாணய மாற்று முறையைப்பற்றி விசாரணை செய்து ரிபோர்ட்டு செய்வதற்காக லெப்டினன்ட் கமாண்டர் ஹில்டன் யங் என்பவர் தலைமையின் கீழ் ஒரு கமிட்டி நியமிக்கப்பட்டது.



# பதினேழாவது அதிகாரம்



## இந்தியாவின் நாணய முறையும் நாணய மாற்றும்—ஹில்டன் யங் கமிஷன்

ஹில்டன் யங் கமிஷன்:—1925-ம் வருஷத்தில் ஹில்டன் யங் கமிஷன் ஏற்படுத்தப்பட்டு, உடனே அது நாணய முறையை விசாரணை செய்யத் தொடங்கியது. 1926-ம் வருஷம் ஜுலை மாதம் முதல் தேதி இக்கமிஷனுடைய ரிப்போர்ட்டு வெளியிடப்பட்டது. பேபிங்டன் ஸ்மித் கமிட்டியைப் போலில்லாமல், இக்கமிஷன் நம் நாணய முறையைத் தீர விசாரணை செய்து, அதிலுள்ள குறைகள் யாவையும் வெளிப்படுத்திற்று, நம் நாணய முறைக்குத் தங்க நாணய மாற்று முறை யென்று பெயர் கொடுக்கப்பட்டிருப்பது, நாணய முறையின் உண்மையை விளக்கிக் காட்டுவதில்லையென்றும், உண்மையில், இது ஸ்டர்லிங் மாற்று முறையே

யொழிய தங்க நாணய மாற்று முறையல்லவென்றும், அவர்கள் அபிப்பிராயப்பட்டனர். இம்முறையில் கீழ்க்கண்ட குறைகள் இருக்கின்றனவென எடுத்துக் காட்டப்பட்டது.

தங்க நாணய மாற்று முறையின் குறைகள்:—1. இம்முறையை மக்கள் எளிதில் தெரிந்துகொள்ளக்கூடியதாக வில்லை. நாணயங்கள் அவைகளின் மதிப்புக்கேற்ற உலோகம் இல்லாமல், அடையாள நாணயங்களாக (Token Coins) உலாவுகின்றன. நோட்டுகளும் அடையாள நாணயங்கள்; ரூபாய்களும் அடையாள நாணயங்கள். நோட்டுகள் ரூபாய்களாக மாற்றப்படும் சமயம் ஒருவகை அடையாள நாணயம் மற்றொரு வகை அடையாள நாணயமாக மாற்றப்படுகிறது. இதைத் தவிர, நாட்டில் பழக்கத்தில் இல்லாமல், அனாவசியமாக பவுன்களும் நம் நாணய முறையில் சேர்க்கப்பட்டிருக்கிறது. வெள்ளியின் விலை ஒரு அளவுக்கு அதிகமானால், நம் நாணய முறையே சீர் கெட்டுப்போகின்றது.

2. காப்பு நிதிகள் அனாவசியமாகப் பல வகைகளாகப் பிரிக்கப்பட்டிருக்கின்றன. தங்க நாணய முறை காப்புத் திரவியம், கரன்சி நோட்டுக் காப்புத் திரவியம், பேங்கிங் காப்புத் திரவியம் என்று மூன்றுவிதமாகப் பிரிக்கப்பட்டிருப்பதுடன், நாணய சம்பந்தமான விஷயங்களும், பேங்கிங் விவகாரங்களும் வெவ்வேறாக நிர்வகிக்கப்படுகின்றன. நாணய விஷயங்கள் கவர்ன்மெண்டாராலும், பேங்கிங் விஷயங்கள் இம்பீரியல் பாங்கு ஆப் இந்தியாவாலும் கவனிக்கப்பட்டு வருகின்றன.

3. இம்முறையில் இயற்கை விதிப்படி நாணயங்கள் அதிகப்படுத்தவும் குறைக்கவும் வேண்டிய வழிகள் இல்லை. நாணயங்களைக் குறைப்பதும் அதிகப்படுத்துவதும் கவர்ன்மெண்டார் கையில் இருந்தது. வியாபார வசதிகளைக் கருதி

இது நிர்வகிக்கப்படாமல் கவர்ன்மெண்டார் பல தடவைகளி லும் வேறு எண்ணங்களால் தூண்டப்பட்டு, நாணயங்களைக் குறைத்தும் அதிகப்படுத்தியும் செய்திருக்கின்றனர். இது மிகவும் கெட்ட பயன்களை விளைவிக்கக்கூடிய குறையென, ஹில்டன் யங் கமிஷனர்கள் கண்டித்திருக்கின்றனர்.

மேற்கண்ட குறைகளின் காரணமாக, தங்க நாணய மாற்று முறை மேற்படி கமிஷனர்களால் நிராகரிக்கரிக்கப் பட்டது.

ஹில்டன் யங் கமிஷனுடைய சிபார்சுகள் :—இக் கமிஷனுடைய சிபார்சுகளை மூன்றாகப் பிரிக்கலாம்.

1. இந்தியாவுக்கு ஏற்ற நாணய முறையை நிர்ணயிப் பது.

2. ரூபாயின் நாணய மாற்று விகிதத்தை நிர்ணயிப் பது.

3. இந்தியாவில் ஒரு தலைமை அல்லது ரிசர்வ் (Reserve) பாங்கு ஏற்படுத்துவது.

1. இந்தியாவுக்கு ஏற்ற நாணய முறை :— இந்திய பொக்கிஷ இலாகா, இந்தியாவில் தங்க நாணயமுறை ஏற் படுத்துவதற்காக ஒரு திட்டம் கொடுத்திருந்தனர். அத் திட்டத்தின்படி சுமார் பத்து வருஷங்களில் 200 கோடி வெள்ளி ரூபாய்கள் அதாவது 6870 லக்ஷம் அவுன்சுகள் வெள்ளி விற்கப்பட்டு, 1030 லக்ஷம் அவுன்சுகள் தங்கம் வாங்கப்பட வேண்டும். இத்திட்டத்தை அனுபவத்தில் கொண்டு வரவேண்டுமானால் முதல் 5 வருஷங்களுக்கு வருஷம் ஒன்றுக்கு $1\frac{2}{3}$ கோடி ரூபாய்களும், அதற்குப் பிறகு வருஷம் ஒன்றுக்கு $\frac{2}{3}$ கோடியிலிருந்து 1·12 கோடி ரூபாய்கள் வரையும் செலவு செய்யவேண்டும். இங்ஙனம் செய்யப்பட்டால், ரூபாய் அடையாள நாணயமாக,

ரூ. 50-க்கு மேல் வரவு செலவுகளில் ஏற்றுக்கொள்ளப்பட வேண்டியதில்லை யெனச் செய்யப்பட்டு, தங்க நாணய முறை இங்கிலாந்திலிருப்பதைப்போல் ஏற்படுத்தப்படலாம்.

கீழ்க்கண்ட காரணங்களுக்காக ஹில்டன் யங் கமிஷன் மேற்படி திட்டத்தை ஒப்புக்கொள்ளவில்லை.

1. இந்தியா 1030 லக்ஷம் அவுன்சுகள் தங்கம் வாங்க யத்தனித்தால், உலகத்தில் தங்கத்தின் தேவை யதிகமாகி, உலகின் பொருளாதார வாழ்க்கையில் பெருத்த குழப்பத்தை யுண்டாக்கும்.

2. இந்தியா இவ்வளவு வெள்ளியை விற்க முன் வந்தால் வெள்ளியின் விலை மிகக் குறையும். நம் நாட்டில் ஏழை மக்கள் எல்லோரும் வெள்ளி ஆபரணங்களில் தங்கள் வருவாயைச் சேகரித்து வைத்திருக்கிறார்கள். வெள்ளியின் விலை குறைந்தால் அவர்களுக்கு அதிகமான நஷ்டமுண் டாகும்.

3. இம்முறையை ஏற்படுத்த வேண்டுமானால் இதற் காக அமெரிக்கா அல்லது இங்கிலாந்தில் தான் பெருங் கடன் கள் வாங்க வேண்டி ஏற்படும். நாம் இவ்வளவு தங்கம் வாங்குவதில் அவர்களுக்குப் பாதகம் ஏற்படக்கூடுமாத லாலும், இதனால் வெள்ளி விலை குறைவதால் அமெரிக்கா வெள்ளிச் சுரங்கங்களின் மதிப்புக் குறையுமாதலாலும், அவர்கள் நமக்குக் கடன்கொடுத்து உதவிசெய்ய முன்வர மாட்டார்கள்.

4. இம்முறையை ஏற்படுத்துவதற்கு மிகவும் அதிக மான தொகை செலவு செய்ய வேண்டியிருக்கும்.

2. தங்க மாற்று நாணய முறை (Gold Bullion Standard ;— ஹில்டன் யங் கமிஷன் தங்க மாற்று நாணய முறை என்ற ஒரு புது மாதிரி நாணய முறையை,

இந்தியாவுக்கு ஏற்றதென சிபார்சு செய்திருந்தனர். இதன் படி தங்கம் நாணயமாக உள்நாட்டில் உலாவவேண்டிய அவசியமில்லை. யுத்தத்துக்குப் பிறகு இங்கிலாந்தில் 1925-ம் வருஷத்தில் சீர்திருத்தி அமைக்கப்பெற்ற நாணய முறையும், அமெரிக்க யுனைடெட் ஸ்டேட்ஸ் நாணய முறையும், இதை அனுபவத்தில் காட்டின. நோட்டுகளும் ரூபாய்களும் முன் போல உள்நாட்டில் உலாவிக்கொண்டிருக்கும். மக்கள் வேண்டும்போது 400 அவுன்சுகளுக்குக் குறையாத அளவு களில் ஒரு குறிப்பிட்ட விகிதத்துக்கு நோட்டுகளும் ரூபாய் களும் தங்கமாக மாற்றிக் கொடுக்கப்படும். இதன் மூலம் தங்கமே, சாமான்களின் மதிப்பை அளப்பதற்கு உண்மை யான அளவையாக யிருக்க, அது நாணயமாக உலாவ வேண்டிய அவசியமில்லாமலிருக்கும்.

இம்முறையை அனுஷ்டிப்பதில் அதிகமான தங்கம் அவசியமில்லாமலிருப்பதனுல் செலவு குறைவதைத் தவிர, உடனே அனுபவத்திலும் கொண்டுவருவது சாத்தியம் என்ற மற்றொரு விசேடமும் இருக்கிறது. எனவே இம் முறையை இந்தியாவில் ஏற்படுத்துவதே நல்லதென ஹில் டன் கமிஷனர்கள் சிபார்சு செய்திருந்தனர்.

காப்பு திரவியங்களைப் பற்றிய சிபார்சுகள்:—இதற் கேற்றபடி நாணய முறை பாதுகாப்பு நிதிகளைப்பற்றியும் சிபார்சுகள் செய்யப்பட்டன. நம் நாணய முறையில் இரண்டு பாதுகாப்பு நிதிகள் உண்டு; 1. கான்சி நோட்டுப் பாதுகாப்பு நிதி. 2. தங்க நாணயமுறை பாதுகாப்பு நிதி. இவ்விரு நிதிகளும் ஆரம்பத்தில் வெவ்வேறு காரியங்களுக்காக உண்டாக்கப்பட்டவை யானுலும், நாளாசரியில் ஒரு காரி யத்துக்காக உபயோகப்படுத்தப்பட்டன. எனினும் வெவ் வேருக வைக்கப்பட்டு வந்தன. அவசியமில்லாமல் பல

நிதிகள் வைக்கப்பட்டிருக்கும் முறையை நிறுத்தவும், புதிதாக சிபார்சு செய்யப்பட்டிருக்கும் தங்கமாற்று நாணய முறையில் தனித்தனிப் பாதுகாப்பு நிதிகள் அவசியமில்லையாதலாலும், இந்நிதிகள் ஒன்ருக்கப்பட வேண்டுமெனச் சிபார்சு செய்யப்பட்டது.

தவிர, இதுவரை இந்நிதிகளில் வெள்ளி அதிகமாக வைக்கப்பட்டிருந்தது. அவர்கள் சிபார்சு செய்த நாணய முறைக்கு ஏற்றவாறு, இனிமேல் தங்கம் அதிகமாக இந் நிதிகளில் வைக்கப்பட வேண்டுமெனச் சிபார்சு செய்யப் பட்டது. நிதியில் 100-க்கு 40 முதல் 60 வரை தங்கத்திலும் தங்க அடவுகளிலும் வைக்கப்படவேண்டும் என்றும், 100-க்கு 20 முதல் 25 வரை தங்கமாகவே வைக்கப்பட வேண்டுமென்றும், கூடுமான வரையில் நிதியில் தங்கமாக அதிகம் வைக்க ஏற்பாடு செய்யப்பட வேண்டுமென்றும் சிபார்சு செய்யப்பட்டது.

2. ரூபாயின் நாணயமாற்று விகிதம்:—ஹில்டன் யங் கமிஷனில் பெரும் பகுதியார் ரூபாயின் நாணயமாற்று விகிதம் 1 ஷி. 6 பென்சாக ஏற்படுத்தப்பட வேண்டுமெனச் சிபார்சு செய்தனர். அக்கமிஷனின் ஒரு அங்கத்தினரான சர். புருஷோத்மதாஸ் தாகூர்தாஸ் மாத்திரம் பெரும் பகுதியோர் அபிப்பிராயத்திற்கு மாருக, ரூபாயின் நாணயமாற்று விகிதம் 1 ஷி. 4 பென்சாக ஏற்படுத்துவதே இந்தியாவின் நன்மைக்குப் பொருத்தமென வாதம் செய்தார். இரு தாத்தாரும் தங்கள் அபிப்பிராயத்திற்கு ஆதாரமான காரணங்களை எடுத்துக்காட்டி யிருக்கின்றனர். அவைகளைக் கீழே காண்க.

1 ஷி, 6 பென்சாக இருக்க வேண்டுமென்பதற்குக் காரணங்கள்:—

1. விலை வாசிகளும், தொழிலாளர்களின் கூலி விகிதங்களும், அவ்வருஷத்து அனுபவத்திலிருந்த 1 ஷி. 6 பெ. விகிதத்தை யொட்டி ஸ்திரப்படுத்தப்பட் டிருக்கின்றன. மறுபடியும் நாணயமாற்று விகிதத்தை மாற்றினால் அவைகளிலும் மாறுதல்கள் உண்டாக நேரிடும்.

2. நாணயமாற்று விகிதத்தை உயர்த்தினால் இங்கிலாந்தில் செய்யப்படுவதற்காக இந்தியாவிலிருந்து அனுப்பப்படும் செலவில், கவர்ன்மெண்டாருக்கு மீதம் உண்டாகும்; அதாவது உயர்ந்த விகிதமிருந்தால், குறைந்த தொகை யனுப்பினால் போதுமானது. உதாரணமாக 100 பவுன்கள் இங்கிலாந்துக்கு அனுப்பவேண்டி யிருந்தால், 1 ஷி. 4 பெ. நாணயமாற்று விகிதமா யிருக்கும்போது, இந்தியாவில் ரூ. 1500/ கட்டவேண்டும். ஆனால் நாணயமாற்று விகிதம் 1 ஷி. 6 பெ. ஆக உயர்த்தப்பட்டால், அதே 100 பவுன்களை இங்கிலாந்துக்கு அனுப்பவதற்கு, இந்தியாவில் ரூ 1333-5-4. கொடுத்தால் போதுமானது. இங்கிலாந்துக்கு அனுப்ப வேண்டியிருக்கிற தொகைகளில் 1/8 பங்கு, நாணயமாற்று விகிதத்தை உயர்த்தியது காரணமாகக் குறைகிறது.

ஆனால் இக்காரணம் நாணயமாற்று விகிதத்தை உயர்த்துவதற்குப் போதுமான காரணம் ஆகாதென்று, 1 ஷி. 6 பெ. விகிதத்தைச் சிபார்சு செய்த ஹில்டன் யங் கமிஷனர்களே ஒப்புக்கொண் டிருக்கின்றனர்.

3. நாணயமாற்று 1 ஷி. 6 பென்சாக உயர்த்தப்பட்டால் அன்னிய நாட்டிலிருந்து இறக்குமதி செய்யப்படும் சாக்குகள் நம் நாட்டில் 100-க்கு $12\frac{1}{2}$ விலையில் குறைந்து கிடைக்கும். அச்சாக்குகளை வாங்கும் மக்கள் குறைந்த விலைக்கு அச்சாமான்களைப் பெற்றுப் பயனடைவார்கள்.

1 ஷி 4 பெ. க்குக் காரணங்கள் :—சர். புருஷோத்தம தாஸ் தாகூர்தாஸ், ரூபாயின் நாணயமாற்று விகிதம் 1 ஷி 4 பெ ஆகத்தான் நிர்ணயிக்க வேண்டுமென்று கீழ்க்கண்ட காரணங்கள் காட்டி வற்புறுத்திக் கூறினர்.

1. நாட்டில் விலை வாசிகளும் கூலிகளும் 1 ஷி 6 பெ விகிதத்தின்படி ஸ்திரப்படுத்தப்பட்டிருக்கிற தென்பது தப்பான அபிப்பிராயம். நாட்டின் பல பாகங்களிலும் கூலிகளும் விலை வாசிகளும் 1 ஷி. 4 பென்சுக்கு ஏற்றவாறு இருந்து வருகின்றன. 1 ஷி. 6 பெ. ஆக நாணயமாற்று ஏற்படுத்தப்பட்டால் விலைவாசிகளும், கூலி நில்வாங்களும் மாற வேண்டி ஏற்படும்.

2. நாணயமாற்று விகிதத்தை உயர்த்துவது, அன்னிய நாட்டுக் கைத்தொழில்களுக்கு, நம் கைத்தொழில்களுக்கு விரோதமாய் உதவி செய்ததாக ஏற்படுகிறது. நம் நாட்டில் கைத்தொழில்கள் போதுமான அளவு விருத்தியடையவில்லை யென்பதும், கைத்தொழில்களை விருத்தி செய்வதற்குப் பாதுகாப்புக்களும், பண உதவியும் அளிக்கப்படவேண்டுமென்றும் முன் அதிகாரங்களில் சொல்லப்பட்டிருக்கிறது. தற்காலத்தில் சில கைத்தொழில்கள் கொஞ்சம் விருத்தியடைந்து வருகின்றன. ஆனல் நாணயமாற்று விகிதத்தை உயர்த்தினல், நம் நாட்டுக் கைத்தொழில்கள் அழிக்கப்படலாம். எப்படியெனில், நாணயமாற்று விகிதம் 1 ஷி. 6 பெ. ஆக உயர்த்துவதில், அன்னியநாட்டுச் சாக்குகள் முன்னைவிட 100-க்கு $12\frac{1}{2}$ பங்கு விலை குறைத்து விற்க முடிகின்றது. ஆனல் நம் கைத்தொழில்கள் அவ்வளவு குறைந்த விலைக்கு சாமான்களை விற்கக்கூடிய சக்தியில்லாமையால், போட்டியைத் தாங்கமாட்டாமல் அழிக்கப்படலாம்.

உதாரணமாக நாணயமாற்று விகிதம் 1 ஷி. 4 பெ. இருக்கும்போது இங்கிலாந்தில் 100 பவுனுக்கு விற்கப்படும் பொருள், இந்தியாவில் ரூ. 1500/-க்கு விற்கப்படும். இந்தியக் கைத்தொழிற் சாலைகளில், இப்பொருட்களைச் செய்து ரூ 1500/க்கு விற்பதே கடினமாயிருக்கும். நாணய மாற்று விகிதம் 1 ஷி. 6 பெ. ஆக உயர்த்தப்பட்டால், இதே சாமான்களுக்கு இங்கிலாந்தில் 100 பவுன்கள் கொடுப்பதற்கு, இந்தியாவில் ரூ. 1333-5-4 கொடுத்தால் போதுமானது. அதாவது அச்சாமான் இந்தியாவில் இப்பொழுது ரூ. 1333-5-4-க்கு விற்கப்படும். இந்தியக் கைத்தொழிற்சாலைகள் இவ்வளவு குறைந்த விலைக்கு இச்சாமான்களைச் செய்து விற்கமுடியாமல் போனால், ஆங்கில இறக்குமதிச் சாமான்களின் போட்டியால் நஷ்டமடைந்து, அழிக்கப்படலாம்.

இது காரணம் பற்றியே அதாவது இங்கிலாந்தின் வியாபாரத்தைப் பெருக்கும் பொருட்டுத்தான், நாணய மாற்று விகிதம் உயர்த்தப்பட்டதாகப் பலரால் சொல்லப் படுகிறது.

3. நாணயமாற்று விகிதத்தை உயர்த்துவது மற்றொரு விதத்திலும் இந்தியாவின் வியாபாரத்துக்குக் கெடுதல் உண்டாக்குகிறது. நாணயமாற்று விகிதம் உயர்ந்தால், ஏற்றுமதி வியாபாரம் குறையும். இது முந்திய அதிகாரத்தில் விவரமாக விளக்கப்பட்டது. உதாரணமாக நாணய மாற்று விகிதம் 1 ஷி. 4 பெ. ஆக இருக்கும்போது நாம் இந்தியாவில் ரூ. 1500-க்கு விற்கும் சாமான்களுக்கு இங்கிலாந்தில் 100 பவுன்கள் கொடுத்தார்கள்; ஆனால், விகிதம் 1 ஷி 6 பெ ஆக மாற்றப்பட்டால் அதே ரூ. 1500

நமக்குக் கிடைப்பதற்கு இங்கிலாந்தில் $112\frac{1}{2}$ பவுன்கள் கொடுக்கப்படவேண்டும். 100 பவுன்களுக்குக் கிடைத்துக் கொண்டிருந்த சரக்கை அன்னியநாட்டு மக்கள் $112\frac{1}{2}$பவுன் களுக்கு வாங்கமாட்டார்கள். இதர நாட்டுச் சரக்குகள் இதற்குக் குறைந்த விலைக்குக் கிடைத்தால், அந்நாட்டுச் சரக்குகளைத் தான் வாங்குவார்கள். இதனால் நம் ஏற்றுமதி வியாபாரம் குறையும்.

4. மேற்கண்ட உதாரணத்தின்படி நம் சரக்கை அவர்கள் $112\frac{1}{2}$ பவுன்களுக்கு வாங்க அவர்கள் தயாரில்லாவிடில், நாம் 100 பவுனுக்குத்தான் விற்கவேண்டி ஏற்படும்; அதாவது நமக்கு முன் கிடைத்துக்கொண்டிருந்த ரூ. 1500-க்குப் பதிலாக, நாணய மாற்று விகிதம் உயர்ந்ததன் பயனாக, நமக்கு ரூ. 1333-5-4 தான் அதே சரக்குகளுக்குக் கிடைக்கும். இதனால் சரக்குகளின் விலை குறையும். இதனால் இச் சரக்குகளை விளைவிக்கும் குடியானவர்கள் நஷ்டமடைவார்கள்.

5. நம் நாட்டில் குடியானவர்கள் கடனில் மூழ்கியிருக்கிறார்கள் என்பது முன் பக்கங்களில் சொல்லப்பட்டிருக்கிறது. அவர்கள் கடனில் மிகப் பெரும்பகுதி ரூபாயின் நாணயமாற்று விகிதம் 1 ஷி 4 பெ ஆக யிருக்கும்போது வாங்கப்பட்டது. நாணயமாற்று விகிதத்தை உயர்த்தினால், அது அவர்கள் கடன் சுமையை அதிகப்படுத்தியதாகும்.

6. நாணய மாற்று விகிதம் உயருவதால் சரக்குகளின் விலை குறையுமென மேலே சொல்லப்பட்டது. இதனால் குறிப்பிட்ட தொகையைச் சம்பளமாகப் பெறுபவர்களும், ரொக்க வியாபாரம் செய்பவர்களும், லாபம் பெறக் கூடுமெனினும், நமது ஜனத் தொகையில் 100-க்கு 72 பேர்க

ளாக விளங்கும் விவசாயிகள் இதனால் மிகக் கஷ்டப்பட நேரிடும். விவசாயத்தில் கிடைக்கக்கூடிய லாபம் குன்றி, விவசாயமும் குறைய ஏதுவாகும்.

7. நாணய மாற்று விகிதத்தை அதிகப்படுத்துவதினால், இங்கிலாந்தில் செய்யவேண்டிய செலவுக்காகப் பணம் அனுப்புவதில் ஒரு பெரிய தொகை மீதமாவதாகவும், இது ஒரு பெரிய லாபமாகவும் சொல்லப்படுகிறது. ஆனால் இது உண்மையில் லாபமாகக் கருதப்படலாகாது. நாட்டின் கைத்தொழில்கள் விருத்தியடைந்து, குடியானவர்களும் க்ஷேமமான நிலைமையில் இருந்தால், இதைவிட அதிகத் தொகை வரிகள் மூலம் எளிதாக வசூல் செய்யலாம்.

இவ்விதம் ஏற்படுத்துவதைக் குறித்து நாடு முழுதும் ஒரு பெரிய கிளர்ச்சி உண்டாயிற்று. 1 ஷி. 4 பெ. ஆகவே ரூபாயின் நாணயமாற்று விகிதம் ஏற்படுத்தப்பட வேண்டுமெனப் பொது ஜனங்கள் அபிப்பிராயப்பட்டனர். ஆனால் கவர்ன்மெண்டார் 1 ஷி. 6 பெ. விகிதமே ஏற்படுத்தப்பட வேண்டுமெனப் பிடிவாதம் செய்தனர். நாணய மாற்று விகிதம் 1 ஷி. 6 பெ. ஆக ஏற்படுத்துவதற்கு இந்திய சட்ட சபையில் மசோதா கொண்டு வரப்பட்டது. அங்கும் இம் மசோதா பலமாக எதிர்க்கப்பட்டது. மக்களால் தேர்ந்தெடுக்கப்பட்ட பிரதிநிதிகளில் மிகப் பெரும்பான்மையோர் 1 ஷி. 4 பெ. ஆக யிருக்க வேண்டுமென அபிப்பிராயப் பட்டனர். ஆனால் கவர்ன்மெண்டாரால் நியமிக்கப்பட்ட மெம்பர்களின் உதவியைக்கொண்டு அம்மசோதா நிறைவேற்றப்பட்டு, 1927-ம் வருஷம் ஏப்ரல் 1-ம் தேதியிலிருந்து அமுலுக்கு வந்தது.

8. இந்திய நாணய முறையை நிர்வாகம் செய்வதற்கும், இந்திய பாங்குகளுக்குத் தலைமை பாங்காக விருந்து

அவைகளுக்கு வேண்டிய ரொக்க வசதிகளைச் செய்வதற்கும் ஒரு தலைமை அல்லது ரிசர்வ் (Reserve) பாங்கு ஸ்தாபிக்கப்பட வேண்டுமென்றும் ஹில்டன் யங் கமிஷனர்களால் சிபார்சு செய்யப்பட்டது. இதைப்பற்றி விவரமாக பின் வரும் அதிகாரங்களில் ஆராயப்படும்.



## பதினெட்டாவது அதிகாரம்



### இந்தியாவின் நாணய முறையும் நாணயமாற்றும்—கரன்சி நோட்டுகள் (Paper Currency)

பண்டம் மாற்றுதலுக்கு அளவையாய் இருப்பதற்காக நாணயங்கள் ஏற்பட்டன. தங்கம் வெள்ளி உலோகங்கள், முக்கியமாய்த் தங்க உலோகம் மக்களால் விரும்பப்பட்டன வாகவும், மற்ற விதங்களிலும் சௌகரியமானவையாகவும் இருந்தபடியால், இவ்வுலோகங்களில் நாணயங்கள் வழங்கப் பட்டன. நாணயங்கள் வழங்கப்படுவதற்கும், அவை எல்லா விடங்களிலும் ஒப்புக்கொள்ளப் படுவதற்கும், மக்களுக்கு அவைகளின் பேரிலுள்ள நம்பிக்கையே முக்கிய காரணமாகும். ஆகையால் எங்கு பூரண நம்பிக்கை யிருக்கின்றதோ அங்கு வேறு பொருள்களையும், நாணயங்களுக்குப் பதிலாக அளவையாக வழங்கலாம். ஒரு ஊரில் ஒரு பாங்கால் வெளியிடப்படும் நோட்டுகளில், அவ்வூர் மக்களுக்கு பூரண நம்பிக்கை யிருக்கும் பக்ஷத்தில், அந்த நோட்டுகள் வரவு செலவுகளில், அவர்களால் ஒப்புக்கொள்ளப்படும்.

**கரன்சி நோட்டுகளின் பிரயோஜனம்:**—நோட்டுகள் வழங்குவதில் நாட்டுக்குப் பல சௌகரியங்கள் ஏற்படுகின்றன. போக்கு வரத்துக்கும், நாட்டின் ஒரு பாகத்திலிருந்து மற்றொரு பாகத்துக்குக் கொண்டு போகப்படுவதற்கும் தபாலில் அனுப்புவதற்கும் அவை சௌகரியமாயிருக்கின்றன. அவைகளால் வேறொரு முக்கியமான பிரயோஜனமும் உண்டு. நோட்டுகள் எவ்வளவு வழங்கப்படுகின்றனவோ, அவ்வளவு தங்க நாணயங்கள் மீதமாக்கப்பட்டு, அத்தங்கம் அன்னிய நாட்டு வியாபாரத்திற்கு உதவுகின்றது.

**நோட்டுகளுக்கு நாணயங்களுடன் சம மதிப்பு இருக்க வேண்டும்:**—நோட்டுகள் எல்லோராலும் வரவு செலவுகளில் அவைகளில் குறிப்பிடப்பட்டிருக்கிற ரூபாய்க்கு சமமாக ஒப்புக்கொள்ளப்பட வேண்டுமானால், அவைகள் பேரில் எல்லோருக்கும் நம்பிக்கை யிருக்கவேண்டும். நோட்டுகளுக்கு பதிலாக எச்சமயத்திலும் அவைகளில் குறிப்பிடப்பட்ட தொகைகள் ரூபாயால் கிடைக்கக்கூடியதா யிருந்தால், நோட்டுகளின் பேரில் நம்பிக்கையுண்டாகும். இந்த நம்பிக்கையிருக்கும் வரை, நோட்டுகளும் தங்கம் வெள்ளி நாணயங்களும் சரி சமமாக உலாவும்; மக்களால் நோட்டுகள் தங்கம் வெள்ளி நாணயங்களுக்குப் பதிலாக ஒப்புக்கொள்ளப்படும். ஆனால் நோட்டுகளுக்கு நாணயங்கள் கிடைக்க முடியாமல் போனால், நோட்டை விட நாணயங்களின் மதிப்பு அதிகமாகும்; நோட்டுகளின் மதிப்புக் குறையும். நோட்டுகளுக்கும் நாணயங்களுக்கும் மதிப்பில் வித்தியாசம் ஏற்பட்டுவிடும். கிரஷம் தத்துவப்படி நாணயங்கள் பழக்கத்திலிருந்து மறைந்து, நோட்டுகள் மாத்திரம் உலாவிக்கொண்டிருக்கும்.

கரன்சி நோட்டுக் காப்பு நிதி:—ஆதலால் இக் குறை நேராமல் இருக்கும்பொருட்டு,நோட்டுகள் மாற்றப்படுவதற்கு ஏற்ற வசதிகள் செய்யப்படவேண்டும். நோட்டுகள் மாற்றப்படுவதற்கெனவே ஒரு நிதி ஏற்படுத்தப்பட வேண்டும். இதற்கு கரன்சி நோட்டுக் காப்பு நிதி (Paper Currency Reserve) என்று பெயர். இந்நிதி நோட்டுகள் வெளியிடுவதால் உண்டாகும் லாபத்திலிருந்து ஏற்படுத்தப் படுகிறது.

இந்தியாவில் கரன்சி நோட்டுச் சரித்திரம்:—இந்தியாவில் கவர்ன்மெண்டாரால் முதலில் 1861-ம் வருஷத்தில் கரன்சி நோட்டுகள் வழங்கப்பட்டன. அதற்கு முன் பல பாங்குகள் இவ்வுரிமையை கவர்ன்மெண்டாரிடத்தில் பெற்று நோட்டுகள் வழங்கிக்கொண்டிருந்தன. ஆனால் 1861-ம் வருஷத்தில் அந்தப் பாங்குகளுக்குக் கொடுக்கப்பட்டிருந்த உரிமைகள் ரத்து செய்யப்பட்டு, கவர்ன்மெண்டாரால் நோட்டுகள் வெளியிடப்பட்டன. இந்தியா முழுவதும் கல்கத்தா, கான்பூர், லாகூர், சென்னை, பம்பாய், காரச்சி ரங்கூன் என்ற ஏழுவட்டங்களாகப் பிரிக்கப்பட்டு, நோட்டுகள் வழங்கப்பட்டன. ஒரு வட்டத்தில் வெளியிடப்பட்ட நோட்டுகள் மற்றொரு வட்டத்தில் செல்லுபடி யுள்ளதல்லவென்று சட்டம் செய்யப்பட்டது. 5, 10, 50, 100, 500, 1000, 10,000, ரூபாய்களுக்கு நோட்டுகள் அச்சிட்டு வழங்கப்பட்டன. கரன்சி நோட்டு காப்பு நிதி யொன்றும் உண்டாக்கப்பட்டது.

நோட்டுகள் வெளியிடப்பட்ட வட்டங்களுக்குள்ளேயே உலாவவேண்டுமென்பது, பல அசௌகரியங்களை உண்டாக்கியது. எனவே நோட்டுகள் அவை வெளியிடப்பட்ட வட்டங்களுக்குள்ளேயே உலாவவேண்டுமென்ற கட்டுப்பாடு

கொஞ்சம் கொஞ்சமாக விலக்கப்பட்டது. 1903-ம் வருஷத்தில் 5 ரூ நோட்டுகளும், 1910ல் 10 ரூ 50 ரூ நோட்டுகளும், 1911ம் வருஷத்தில் 100 ரூ நோட்டுகளும், இந்தியா முழுதும் செல்லுபடியுள்ள தெனச்சட்டம் செய்யப்பட்டது.

கரன்சி நோட்டுக் காப்புநிதி—ஐரோப்பிய யுத்தத்துக்கு முன்—

1861ம் வருஷத்தில் கரன்சி நோட்டு காப்புநிதியில் ரொக்கமாக 4 கோடி ரூபாய்களுக்கு வைத்திருந்தால் போதுமானதென நினைக்கப்பட்டது; இது 1871ல் 6 கோடியாகவும், 1890 ல் 8 கோடியாகவும், 1897 ல் 10 கோடியாகவும், 1905 ல் 12 கோடியாகவும் உயர்த்தப்பட்டது. 1905 வரை இந் நிதியின் ரொக்கமாய் வைக்கப்படாத பாகம் இந்தியாவில் இந்திய அடவுகளில் உபயோகப்படுத்தப்பட்டிருந்தது. 1905 ல் இந்நிதியின் ஒருபாகம் இங்கிலாந்தில் பவுன் அடவுகளில் போட்டு வைக்கப்படவேண்டுமென்று இங்கிலாந்திலிருக்கும் இந்தியா மந்திரியால் உத்தாவு செய்யப்பட்டு, அத்தேதி முதல் இங்கிலாந்தில் இந்நிதியின் ஒரு பாகம் உபயோகப்படுத்தப்பட்டு வருகிறது.

1898 வரை கரன்சி நோட்டுக் காப்பு நிதியின் ரொக்கமான பாகம் இந்தியாவில் வெள்ளியாய் வைக்கப்பட்டிருந்தது. 1898 ல் இந்த ரொக்கம் தங்கமாயிருக்கலாமென்றும் 1900 ல் இத்தங்கம் லண்டனில் வைக்கப்படலாமென்றும், 1905ல் கவர்ன்மெண்டார் இந்நிதியின் ரொக்கத்தை, கவர்ன்மெண்டார் சௌகரியப்படி இந்தியாவில் அல்லது இங்கிலாந்தில், வெள்ளி அல்லது தங்கத்தில் வைக்கப்படலாமென்று சட்டம் செய்யப்பட்டது. ஐரோப்பிய யுத்தத்துக்குமுன் கரன்சி நோட்டுக் காப்புநிதி எப்படி வைக்கப்பட்டிருந்ததென்பது கீழே விவரமாகக் காண்பிக்கப்பட்டிருக்கிறது.

லக்ஷ ரூபாய்களில்

| † வருஷம் | | மொத்த கரன்ஸி நோட்டுகள் | நிதி எம்மாதிரி, எங்கு வைக்கப்பட்டிருந்தது — வெள்ளி | தங்கம் | | அடவுகள் (Investments) | | | அடவுகள் மொத்தத்திற்கு 100க்கு எவ்வளவு பங்கு |
|---|---|---|---|---|---|---|---|---|---|
| | | | இந்தியா | இந்தியா | இங்கிலாந்து | இந்தியா | இங்கிலாந்து | மொத்தம் | |
| 1862-71 | சராசரி | 7,63 | 4,80 | 3 | | 2,80 | | 2,80 | 37 |
| 1872-81 | ,, | 11,82 | 5,98 | | | 5,84 | | 5,84 | 49 |
| 1882-91 | ,, | 15,74 | 9,64 | | | 6,10 | | 6,10 | 39 |
| 1892-1901 | ,, | 27,29 | 15,74 | 2,32 | 23 | 9,00 | | 9,00 | 33 |
| 1902-4 | ,, | 43,82 | 19,45 | 9,15 | 4,02 | 10,00 | 1,20 | 11,20 | 26 |
| 1912 | ,, | 61,36 | 15,48 | 23,33 | 8,55 | 10,00 | 4,00 | 14,00 | 23 |
| 1913 | ,, | 68,98 | 16,45 | 29,38 | 9,15 | 10,00 | 4,00 | 14,00 | 20 |
| 1914 | ,, | 66,12 | 20,53 | 22,44 | 9,15 | 10,00 | 4,90 | 14,00 | 21 |

† Page 337—Tathar & Beri's Indian Economics Vol. II

மேற்கண்ட கணக்கிலிருந்து நமக்கு இரண்டு விஷயங்கள் புலப்படுகின்றன.

1. நிதியின் பெரும்பாகம் உலோகமாக வைக்கப்பட்டிருக்கிறது. அடவுகளில் (Investments or Security) உபயோகப்படுத்தப்பட்டிருக்கும் பாகம் மிகச் சிறியதாக இருக்கிறது.

2. நிதியின் ஒரு பாகம், ரொக்கத்திலும் அடவுகளிலும் இங்கிலாந்தில் வைக்கப்பட்டிருக்கிறது.

இந்தியாவில் வழங்கப்பட்டிருக்கும் நோட்டுகளுக்கு ஆதாரமாகவிருக்க ஏற்படுத்தப்பட்ட நிதி இந்தியாவிலன்றோ இருக்கவேண்டும்? இதை இங்கிலாந்தில் வைத்திருப்பதற்குக் காரணம் என்ன? இந்தியாவின் நாணய மாற்றுச் செளகரியங்களுக்காக இந்நிதி இங்கிலாந்தில் வைக்கப்பட்டிருப்பதாகச் சிலர் கூறுவதுண்டு. ஆனால் இது சரியான சமாதானமாகாது. இந்தியக் கான்சி நோட்டுக் காப்புநிதி, நாணய மாற்றுக்காக உண்டாக்கப்பட்டதல்ல. ஆதலால் இதை நாணய மாற்றுக்காக உபயோகப்படுத்துவது தவறு. எனவே இதை இங்கிலாந்தில் வைப்பதற்கு யாதொரு நியாயமான சமாதானமும் சொல்ல முடியாது.

தவிர இப் பெருந்தொகைகள் இந்தியாவில் உபயோகப்படுத்தப்பட்டிருந்தால், இதன் பயனை இந்திய மக்கள் அடைந்திருப்பார்கள். இந்தியாவில் ரொக்கம் உபயோகிக்கக் கூடிய துறைகளும், ரொக்கம் அவசியமான துறைகளும் பல இருக்கின்றன. அப்படியிருக்க இத் தொகைகள் இங்கிலாந்தில் உபயோகப்படுத்தப்படுவதற்கு, சரியான காரணங்கள் சொல்லப்படுவதில்லை.

ஆங்கில நாட்டு அடவுகளில் பணம்போட்டுவைப்பதில் சில சமயங்களில் நஷ்டமும் ஏற்படுகிறது. ஆங்கில நாணயம் மதிப்பில் குறைந்த சமயத்திலெல்லாம், அந்நாணயத்தில் கொடுக்கப்பட்டிருக்கிற அடவுகளின் மதிப்பும் குறையும்.

ஆங்கில அடவுகளில் அதிகமாகப் பணம் கொடுக்கப்பட்டிருக்கிறபடியால், அக்காலங்களில் இதனால் அதிகமான நஷ்டம் உண்டாகின்றது.

யுத்தத்தால் உண்டாக்கப்பட்ட மாறுதல்கள்:—யுத்த காலத்தில் அதிக ஏற்றுமதி, கவர்ன்மெண்டின் யுத்தச் செலவுகள் முதலிய காரணங்களினால், நாட்டில் அதிக ரொக்கம் வேண்டியிருந்தது. ஆனால் ரூபாய்கள் அச்சிட்டு வெளியிடுவதற்கு போதுமான வெள்ளி கிடைக்காததால் கஷ்டம் உண்டாயிற்று. அமெரிக்காவிலிருந்து 2000 லக்ஷம் அவுன்சு வெள்ளி வாங்கியது மிகவும் உதவியாயிருந்தது. பணத்திற்கு மிகவும் தேவை ஏற்படவே, கரன்சி நோட்டுகளும் ஏராளமாய் வழங்கப்பட்டன. யுத்தத்தின் காரணமாய் கரன்சி நோட்டு முறையில் உண்டான மாறுதல்கள் பின்வருமாறு:—

1. நோட்டுகள் ஏராளமாக வெளியிடப்பட்டன.

2. கரன்சி நோட்டுக் காப்பு நிதியில் குறிப்பாய் ஆங்கில அடவுகளில், போடப்பட்டிருந்த தொகைகள் மிகவும் அதிகமாக்கப்பட்டு, அவைகளுடைய ஆதாரத்தின் பேரில் நோட்டுகள் வெளியிடப்பட்டன.

3. கரன்சி நோட்டுக் காப்பு நிதியில் ரொக்கம் மிகவும் குறைந்தது. 1914-ம் வருஷத்தில் மேற்படி ரொக்கம் நிதியின் மொத்தத்தில் 100-க்கு 78·9 பங்கு இருந்தது. 1919-ல் 100-க்கு 35·8 ஆகக் குறைந்தது.

4. வெள்ளியை மீதப்படுத்துவதற்காக ஒரு ரூபாய்க்கும் $2\frac{1}{2}$ ரூபாய்களுக்குங்கூட நோட்டுகள் வழங்கப்பட்டன; முதலில் இவைகள் மக்களால் அதிகமாக ஒப்புக்கொள்ளப்படாவிடினும் மெள்ள மெள்ள இவையதிகமாய்ப் பரவின. 1919-ம் வருஷம் மார்ச்சு மாதம் 31-ந் தேதிக்குள் 1050/- லக்ஷ ரூபாய்களுக்கு ஒரு ரூபாய் நோட்டுகளும், 184/-லக்ஷ ரூபாய்க்கு $2\frac{1}{2}$ ரூபாய் நோட்டுகளும் பழக்கத்துக்கு வந்தன.

யுத்த காலத்தில் கரன்சி நோட்டுக் காப்புநிதி எம்மாதிரி வைக்கப்பட்டதென்பது கீழே காண்பிக்கப்பட்டிருக்கிறது.

லக்ஷ ரூபாய்களில்

| வருஷம் | மொத்த நோட்டுகள் வெளியீடு | நிதி எம்மாதிரி, எங்கு வைக்கப்பட்டிருக்கிறது. | | | | | | | அடவுகள் 100-க்கு எத்தனை பங்குகள் |
|---|---|---|---|---|---|---|---|---|---|
| | | வெள்ளி | தங்கம் | | | அடவுகள் | | | |
| | | இந்தியா | இந்தியா | இங்கிலாந்து | மொத்தம் | இந்தியா | இங்கிலாந்து | மொத்தம் | |
| 1914 | 66,12 | 20,53 | 22,44 | 9,15 | 31,59 | 10,00 | 4,00 | 14,00 | 21 |
| 1915 | 61,63 | 32,34 | 7,64 | 7,65 | 15,29 | 10,00 | 4,00 | 14,00 | 23 |
| 1916 | 67,73 | 23,57 | 12,24 | 11,92 | 24,16 | 10,00 | 10,00 | 20,00 | 29 |
| 1917 | 86,37 | 19,21 | 12,00 | 6,67 | 18,67 | 10,00 | 38,49 | 48,49 | 56 |
| 1918 | 99,79 | 10,79 | 26,85 | 67 | 27,52 | 10,00 | 51,48 | 61,48 | 62 |
| 1919 | 153,46 | 37,39 | 17,37 | 12 | 17,49 | 16,08 | 82,50 | 98,58 | 65 |

Page 341. Tathar & Beri's Indian Economics Vol. II.

கரன்சி நோட்டுக் காப்பு நிதியின் சீர்திருத்தம்:—யுத்த காலத்தில் நிதியின் ரொக்க பாகம் மிகவும் குறைந்துபோனது, முன் கொடுக்கப்பட்டிருக்கிற கணக்கிலிருந்து தெளிவாக விளங்கும். எனவே நிதியைச் சீர்திருத்தி அமைக்கவேண்டிய அவசியமுண்டாயிற்று. 1920-ம் வருஷம் அக்டோபர் மாதம் 1-ம் தேதி சட்டப்படி, கீழ்க்கண்ட விதங்களில் கரன்சி நோட்டுக் காப்பு நிதி வைக்கப்பட வேண்டுமென்று சொல்லப்பட்டது.

1. நிதியில் 100-க்கு 50-பங்கு தங்கம் வெள்ளி உலோகங்களிலும், நாணயங்களிலும், இருக்கவேண்டும்.

2. இந்திய அடவுகளில் 20 கோடி ரூபாய்வரை தான் போடப்படவேண்டும். மீதமான தொகைகள் 12 மாதத்துக்கு அதிகப்படாத குறுகிய காலத்து ஆங்கில அடவுகளில் உபயோகப்படுத்தப்பட வேண்டும்.

3. 5 கோடி ரூபாய்கள் 90 நாட்களுக்குள் பணம் வசூலாகக்கூடிய உண்டியல்கள் பேரில் கொடுக்கப்படுவதற்காக, இம்பீரியல் பாங்கு ஆப் இந்தியாவுக்குக் கடனாகக் கொடுக்கலாம். இதற்கு இம்பீரியல் பாங்கு ஆப் இந்தியா 100-க்கு 8 ரூபாய் வட்டி தரவேண்டும். 5 கோடி என்பது 12 கோடியாக பின் மாற்றப்பட்டது.

4. இந்தியா மந்திரி லண்டனில் 50 லக்ஷம் பவுன்களுக்கு அதிகமாகத் தங்கம் வைத்திருக்கக்கூடாது.

இதற்குப் பின் 1925-ல் ஹில்டன் யங் கமிஷன் ஏற்படுத்தப்பட்டது. இக்கமிஷனால் கரன்சி நோட்டுக் காப்பு நிதி சம்பந்தமாகவும், தங்க நாணய முறை நிதி சம்பந்தமாகவும் என்ன சிபார்சுகள் செய்யப்பட்டன வென்பது முன் அதிகாரத்தில் சொல்லப்பட்டிருக்கிறது.

**நோட்டுகள் வெளியீட்டின் முக்கியமும் தேசீய பாங்கின் அவசியமும்:**—நோட்டுகள் வெளியிடுவதிலும், நாணயங்கள் வழங்குவதிலும் பெரிய பொறுப்பிருக்கின்றது. சரியாக யோசனை செய்யாமல், நோட்டுகளும், நாணயங்களும், வியாபாரம் அல்லது கைத்தொழில்களின் தேவைக்கு அதிகமாக அல்லது குறைவாக வெளியிடப்பட்டாலும், அல்லது வாபீஸ் வாங்கப்பட்டாலும், இதனால் தேசத்துக்கு பெருங் கேடுகள் விளையலாம். தேவைக்கு அதிகமாக நாணயங்கள் வழங்கப்பட்டால், அதனால் ரூபாயின் மதிப்புக் குறைந்து, சாமான்களின் விலைகள் அதிகமாகும்; தேவைக்குக் குறைவாக நாணயங்களின் சப்ளை யிருந்தால், அவசியங்களுக்குப் போதுமான நாணயங்கள் இல்லாமல், ரூபாயின் மதிப்பு அதிகமாகி, சாமான்களின் விலை குறையும். ரூபாயின் மதிப்பு அதிகமாகிக்கொண்டும் குறைந்துகொண்டும் இருக்குமானால், இதன் மூலம் விலைவாசிகளும், குறைந்தும் அதிகமாகிக்கொண்டும் இருக்கும். ஒரு நாட்டின் கைத்தொழில்களுக்கு இதைவிட அதிகமாக கெடுதி விளைவிக்கக் கூடியது வேறொன்றில்லை. எனவே நாட்டின் வியாபாரத்தையும், கைத்தொழில்களையும், இன்னும் மற்ற பொருளாதாரக் குறிப்புகளையும் கவனித்து அப்போதைக்கப்போது நாணயங்களை வெளியிடுவது அல்லது குறுக்குவது மிகக் கடினமும் பொறுப்புமுள்ள காரியமாகும்.

நம் நாட்டில் இவ்வேலை கவர்ன்மெண்டாரால் செய்யப்பட்டு வருகிறது. நாட்டின் பொருளாதார அவசியங்களையும் முன்னேற்றத்தையும் கருதித்தான் இது நிர்வாகம் செய்யப் படவேண்டும். ஆனால், பல சமயங்களில் நம் கவர்ன்மெண்டார், தங்களுக்குத் தோன்றியபடி, பொருளாதார அவசியங்களையும் நாட்டின் முன்னேற்றத்தையும் கவனிக்

காது, நாணயங்களை குறுக்கி யிருக்கின்றனர் என்பது முன் பக்கங்களில் எடுத்துக் காட்டப்பட்டிருக்கிறது. ஆதலால் இப்பொறுப்பை ஏற்று, நாணய முறையை நடத்துவதற்கு வேறு ஒரு ஸ்தாபனம் அவசியம்.

மற்ற நாடுகளில் நாணய முறையின் நிர்வாகம் தேசீய பாங்குகளின் வசம் விடப்பட்டிருக்கின்றது. நம் நாட்டிலும் ஒரு தலைமை பாங்கு ஏற்படுத்தப்பட்டு, அதன் வசம் நாணய முறையின் நிர்வாகம் விடப்பட வேண்டுமென்றும், ஹில்டன் யங் கமிஷனால் சிபார்சு செய்யப்பட்டது. அதன் விவரங்கள் அடுத்த அதிகாரத்தில் சொல்லப்படும்.



## பத்தொன்பதாவது அதிகாரம்



### இந்திய நாணயமுறையும், நாணயமாற்றும் தற்காலம் வரை

**இங்கிலாந்து தங்க நாணய முறையிலிருந்து விலகியது:—** மகா யுத்தத்திற்குப் பிறகு இங்கிலாந்து மறுபடியும் தங்க நாணயமுறையை ஸ்தாபித்து நடத்திவந்தது. ஆனால் 1931-ம் வருஷம் செப்டெம்பர் மாதம் இங்கிலாந்து தங்க நாணய முறையிலிருந்து விலகிற்று என்ற விஷயம் பத்திரிகைகள் படிக்கும் எல்லோருக்கும் தெரிந்திருக்கும். அச்சமயம் அது பெரிய ஆச்சரியத்தையும் கலவரத்தையும் உண்டாக்கியது. உலக முழுதிலும் செல்வம் படைத்த நாடாக விளங்கின இங்கிலாந்து, தங்க நாணயமுறையை விட்டு விலகிற்று என்ற செய்தி பலரை பிரமிக்கச்செய்தது தவிர, தங்க நாணய முறையினின்று விலகிய பின், நம் ரூபாய் 1 ஷி 6 பெ

தங்கத்துக்கு மாற்றப்படாமல் 1ஷி 6பெ ஆங்கில ஸ்டர்லிங்க்குத்தான் மாற்றப்படுமென்பதும் பெரிய விவாதத்தைக் கிளப்பியது. இங்ஙனம் செய்தது இந்திய நாட்டுக்கும் இந்திய மக்களுக்கும் பெரிய நஷ்டத்தை யுண்டுபண்ணுமென்றும், இது ஆங்கில நாட்டின் நன்மையைக் கோரிச்செய்யப்பட்டதென்றும் பலரால் பலமாகக் கண்டிக்கப்பட்டது. இங்ஙனம் செய்தது சரியா அல்லது பிசகா? இது இந்திய மக்களுக்குத் தீமை செய்திருக்கிறதா? தீமை செய்திருந்தால் எப்படி? இங்கிலாந்திற்கு இதனால் என்ன அனுகூலமிருக்கிறது? என்ற விஷயங்களைப்பற்றிப் பின் ஆராய்வோம். இப்பொழுது இங்கிலாந்து தங்க நாணய முறையைவிட்டு என் விலகியதென்று பார்ப்போம்.

அதற்குக் காரணங்கள் :—யுத்தத்திற்குப் பின் பல நாடுகளின் நாணய முறைகள் சீர்கெட்டுப்போனதும், அன்னிய நாட்டு வியாபாரங்கள் மாறுபட்டதும், யுத்தத்தின் காரணமாக நாடுகள் மற்ற நாடுகளிலிருந்து வாங்கிய கடன்களும், யுத்தத்தில் தோல்வியடைந்த நாடுகளிட மிருந்து யுத்தச் செலவை வசூல் செய்த ஏற்பாடுகளுமே இதற்கு அடிப்படையான காரணங்களாயிருந்தன.

1. யுத்தத்திற்குப் பிறகு இங்கிலாந்தின் அன்னிய நாட்டு வியாபாரம் மிகவும் குறைந்தது. யுத்தத்தின்போது அமெரிக்கா யுனைடெட் ஸ்டேட்ஸும் ஜப்பானும் தங்களுடைய கைத்தொழிற்சாலைகளை மிகவும் விருத்தி செய்திருந்தன. ஆதலால் யுத்தத்திற்கு முன் அந்நாடுகள் எவ்வளவு சாமான்களை இங்கிலாந்திடத்திலிருந்து வாங்கினவோ அவ்வளவு யுத்தத்திற்குப் பின் வாங்கவில்லை. தவிர கானடாவிலும், ஆஸ்ட்ரேலியாவிலும், இந்தியாவிலும் முன்னைவிட அதிகமாக வியாபாரத்தை அவைகள் கைக்கொண்டன.

இதன் காரணமாக இந்நாடுகளில் இங்கிலாந்தின் வியாபாரம் முன்னேறவில்லை. ஜர்மனியும் ஆஸ்ட்ரியாவும் அவைகளின் பேரில் விதிக்கப்பட்ட அபராதங்களைக் கட்டவேண்டிய தேசங்களாயிருந்தபடியால், இங்கிலாந்தின் சாக்குகளை முன் போல் வாங்கவில்லை. தவிர ஜர்மனி தன் கைத்தொழில்களைச் சீர்திருத்தி அமைத்தும், மதிப்பு மிகவும் குறைந்திருந்த தன் நாணய முறையின் உதவியைக்கொண்டும், தன்னுடைய அன்னியநாட்டு வியாபாரத்தை அதிகப்படுத்திற்று. இக் காரணங்களுக்காக, இங்கிலாந்தின் அன்னியநாட்டு வியாபாரம் மிகவும் குறைந்தது. இந்தியாவில் நடந்த இராஜீயப் போரும் ஆங்கிலச் சாமான்களின் பகிஷ்காரமும், இதற்கு உதவிசெய்தன.

2. வெளிநாடுகளில் உபயோகப்படுத்தப்பட்டிருந்த தொகைகளிலிருந்தும் (Capital invested in other countries) தன்னுடைய கப்பல் வியாபாரத்தினின்னும் அதிகமான லாபம் இங்கிலாந்திற்கு வந்துகொண்டிருந்தது. 1914-ம் வருஷத்தில் இங்கிலாந்து மொத்தமாக சுமார் 350 கோடிபவுன்கள் வெளிநாடுகளில் கடன் கொடுத்திருப்பதாகச் சொல்லலாம். இதுவும் பல காரணங்களை முன்னிட்டு 200 கோடிப் பவுன்களாகக் குறைந்திருக்கிறது. ஆதலால் இதன்மூலம் வரும் வருமானமும் குறைந்திருக்கும். கப்பல் வியாபாரத்திலும், அமெரிக்கா, பிரான்ஸ், இதாலி, ஜப்பான் முதலியோர் போட்டியின் காரணமாக, சுமார் கால்பங்கு குறைந்து, அதனால் வரும் லாபமும் குறைந்தது.

3. இங்கிலாந்தின் ஏற்றுமதி குறைந்துகொண்டு வர, இறக்குமதி அதிகமாகிக் கொண்டுவந்தது. மாக்மில்லன் கமிட்டியார் (TheMac Millan Committee) கணக்குப் போட்டுப் பார்த்ததில் 1930 வரை இங்கிலாந்து தன்

அன்னியநாட்டு வியாபாரத்திய 10 கோடிப் பவுன்கள் நிகர நஷ்டம் அடைந்திருப்பதாகத் தெரிவித்தார்கள்.

4. யுத்தம் முடிந்த ஆரம்பத்தில் பிரான்சின் நாணய முறை சீர்கெட்டதால் பிரான்சு தேசத்தார்களில் பலர் தங்கள் ரொக்கத்தை இங்கிலாந்து பாங்கு ஆப் இங்கிலாந்தில் போட்டு வைத்திருந்தனர். ஆனால் நாணயமுறை நல்ல நிலைமையை அடைந்த பிறகு இந்த ரொக்கங்கள் வாப்சு வாங்கப்பட்டன. வேறு காரணங்களும் பிரான்சுக்குள் தங்கம் வருவதற்கு உதவி செய்தன. 1928 ஜுன் மாதத்திலிருந்து 1931 செப்டெம்பர் வரை 13·6 கோடிப் பவுன்கள் பிரான்சுக்குள் வந்தன. இதில் பெரும்பாகம் இங்கிலாந்திலிருந்து வந்தது. அமெரிக்காவின் அன்னியநாட்டு வியாபாரம் விருத்தியடைந்த தன் காரணமாகவும், இங்கிலாந்து அமெரிக்காவிலிருந்து வாங்கின கடனுக்கு வட்டியாகவும், ஏராளமான தொகைகள் அமெரிக்காவுக்கும் அனுப்பப்பட்டன.

தவிர அன்னியநாட்டு பாங்குகளும் தாங்கள் பாங்கு ஆப் இங்கிலாந்தில் போட்டிருந்த தொகைகளை வாப்சுவாங்கத்தலைப்பட்டன. இங்கிலாந்து கவர்ன்மெண்டின் வரவுசெலவு கணக்கு, அதாவது பட்ஜட் சரியாக இல்லாததும் வெளிநாடுகளில் கலவரத்தையுண்டாக்கியது. 1931-ம் வருஷம் ஜுலை மாதத்தில் 3·2 கோடிப் பவுன்கள் இங்கிலாந்திலிருந்து வெளியேறியது. இது காரணமாக பாங்கு ஆப் இங்கிலாந்தின் கையிருப்பு 13·2 கோடிப் பவுன்களாகக் குறைந்தது. 1932-ம் வருஷத்து ஆரம்பத்தில் 2·5 கோடிப் பவுன்கள் பிரான்சிடத்திலும் 2·5 கோடிப் பவுன்கள் யுனைடெட் ஸ்டேட்சிடத்திலும் பாங்கு ஆப் இங்கிலாந்து கடன் வாங்கிற்று. ஆனால் இங்கிலாந்து வெளிநாடுகளுக்கு ஏராளமாய்கொடுக்கவேண்டியிருந்ததால் இது போதவில்லை. ஆதலால் மறுபடியும் 80

கோடிப் பவுன்கள் பாதி பிரான்சிடத்திலும் பாதி யுனைடெட் ஸ்டேட்சிடத்திலும் வாங்கப்பட்டது. அதுவும் போதாமல் போகவே மறுபடியும் 3·2 கோடி பவுன்கள் கடன்வாங்க பிரயத்தனம் செய்யப்பட்டது. ஆனால் யுனைடெட் ஸ்டேட்ஸ் கவர்ன்மெண்டார் இதற்கு ஒப்பவில்லை. எனவே 1932-ம் வருஷம் செப்டெம்பர் மாதம் 20-ம் தேதி, இங்கிலாந்து தங்க நாணய முறையிலிருந்து விலகியதாகவும், இனி மேல் நோட்டுகளுக்குத் தங்கம் கொடுக்கப்படமாட்டாதெனவும் ஆங்கில கவர்ன்மெண்டார் அறிக்கை யிட்டனர்.

**ரூபாய் ஸ்டார்லிங் உடன் பிணைக்கப்படல்** :—ஆங்கில நாணயமுறை அதாவது ஸ்டார்லிங் தங்க நாணய முறையிலிருந்து விலகிய செய்தி இந்தியாவுக்கு எட்டியதும் உடனே இந்தியா கவர்ன்மெண்டார், ரூபாய் ஸ்டார்லிங் உடன் பிணைக்கப்படாதென விளம்பரம் செய்தனர். அது இந்தியாவின் நன்மையைக் கோரிச் செய்யப்பட்டது. ஆனால் மறுநாளே ரூபாய் ஆங்கில ஸ்டார்லிங்குடன் பிணைக்கப்படுமென இந்தியா மந்திரி இங்கிலாந்தில் வெளியிட்டார். இங்ஙனம் செய்யுமுன் இந்தியா கவர்ன்மெண்டு யோசிக்கப்படவில்லை. இந்தியாவிற்கு இதனால் விளைவிக்கக்கூடிய கெடுதல்களைப்பற்றியும் யோசிக்கப்படவில்லை. இது இங்கிலாந்தின் நன்மையைக் கோரியே செய்யப்பட்டதென்றும், இந்திய கவர்ன்மெண்டுடன் இதைப்பற்றி யோசியாமலும் செய்யப்பட்டதால், இந்தியாவில் வழங்கப்படுவதாகச் சொல்லப்படும் பொக்கிஷ சுயேச்சை (Financial autonomy) வெறும் வாய்மொழியே யொழிய உண்மை யல்லவென்றும் பத்திரிகைகளில் பலமாகக் கிளர்ச்சி செய்யப்பட்டது. இந்தியாவிற்கு உண்மையில் பொக்கிஷ சுயேச்சை யிருக்கின்றதா என்பதைப்பற்றி விவரிக்க இது இடமல்ல. ஆதலால் அதை இதோடு விட்டு,

ரூபாய் ஸ்டர்லிங்குடன் பிணைக்கப்பட்டதால் ஏற்பட்ட பயன்களை இங்கு ஆராய்வோம்.

அதன் பயன்கள்:—

1. இதன் முதல் பயன் ஏராளமான தங்கம் இந்தியாவிலிருந்து இங்கிலாந்திற்கு ஏற்றுமதி செய்யப்பட்டதே. இவ்விதம் இந்தியாவிலிருக்கும் தங்கத்தை இங்கிலாந்து பெறுவதற்காகவே ரூபாய் ஸ்டர்லிங்கோடு பிணைக்கப்பட்டதெனச் சொல்லப்படுகிறது. இது எப்படி நிகழ்கின்றதெனக் காண்போம்.

ஸ்டர்லிங் தங்கநாணய முறையிலிருந்தால் ஒரு ஸ்டர்லிங் நோட்டுக்கு தங்கமாக ஒரு பவுன் கிடைக்கும். ஸ்டர்லிங் தங்கநாணய முறையிலிருந்து விலகிய பிறகு ஒரு ஸ்டர்லிங் நோட்டுக்கு தங்கமாக ஒரு பவுன் கிடைக்காது. தங்கமாக ஒரு பவுன் பெறுவதற்கு இப்போது அதிகமான ஸ்டர்லிங் கொடுக்கவேண்டும். எவ்வளவு கொடுக்கவேண்டுமென்பது ஸ்டர்லிங்கின் மதிப்பையொட்டியிருக்கும். ஸ்டர்லிங் தங்க நாணயமுறையிலிருந்தபோது ஒரு ஸ்டர்லிங்கின் மதிப்பு 4·88 அமெரிக்கன் டாலர்கள்.* ஸ்டர்லிங்கின் மதிப்புக் குறைந்தால், அதற்காக முன்போல் 4·88 டாலர்கள் கொடுக்கப்படமாட்டாது; அதற்குக் குறைவாகத்தான் கொகப்படும். ஸ்டர்லிங்கின் மதிப்பு 3·25 டாலர்களாக குறைந்ததாக வைத்துக்கொள்வோம். ஒருபவுன் தங்கத்தின் மதிப்பு 4·88 டாலர்கள், ஸ்டர்லிங்கின் மதிப்பு இவ்வளவு குறைந்தபோது ஒரு பவுன் தங்கத்திற்கு இப்போது $\frac{4 \cdot 88}{3 \cdot 25}$ அதாவது 1·5 ஸ்டர்லிங் கொடுக்கவேண்டும்.

---

* அதாவது அப்போது அமெரிக்க டாலர் தங்கநாணய முறையிலிருந்தது. இப்பொழுது அமெரிக்க டாலரும் தங்க நாணய முறையிலிருந்து விலகியிருக்கிறது.

இந்த நிலைமையில் இந்திய ரூபாய் ஸ்டார்லிங்குடன் பிணைக்கப்பட்டால் என்னவாகிறதெனப் பார்ப்போம். இங்கிலாந்தின் ஒரு பவுன் தங்கத்திற்கு 1·5 ஸ்டார்லிங்கொடுக்க வேண்டியிருக்கிறது. ஆனால் இந்தியாவில் முன்போலவே ஒரு ஸ்டார்லிங்குக்கு 13-5-4 கிடைக்கும். ஸ்டார்லிங் தங்க நாணய முறையிலிருந்தபோது ஆங்கிலேயர்கள் 13-5-4க்கு அதிகமாகக்கொடுத்து தங்கம் வாங்கமாட்டார்கள். ஆனால் இப்போது 13-5-4 × $\frac{3}{2}$ ரூ அதாவது ரூ 20 வரை கொடுத்து வாங்க முன்வருவார்கள். ஸ்டார்லிங்கின் மதிப்பு இன்னும் அதிகமாகக் குறைந்தபோது இந்தியாவில் தங்கத்தின்விலை ரூபாயில் இன்னும் அதிகமாயிற்று. சில சமயங்களில் பவுன் 21 ரூபாய்களுக்கு விற்றதும் வாசகர்களுக்கு ஞாபகமிருக்கும். இவ்விதமாக தங்கத்திற்கு அதிக விலை கிடைக்கவே பலர் தங்களிடத்திலிருந்த தங்கத்தை யெல்லாம் விற்கத் தொடங்கினார்கள். நாட்டிலிருந்த தங்கத்தில் பெரும்பகுதி தங்கமாக உருக்கப்பட்டு வெளிநாடுகளுக்கு அனுப்பப்பட்டது. இது வரையில் சுமார் 130 கோடி ரூபாய் பொறுமான தங்கத்துக்குமேல் அன்னிய நாட்டிற்கு அனுப்பப்பட்டது. இதில் பெரும் பகுதி இங்கிலாந்து பெற்றது.

இங்ஙனம் தங்கம் நாட்டைவிட்டுச் சென்றது நம் நாட்டிற்கு பெரும் நஷ்டமாகும். கவர்ன்மெண்டார் இவ்விதம் செய்தது இந்திய மக்களுடைய நன்மைக்கு விரோதமாகச் செய்ததாகும். இங்ஙனம் தங்கம் செல்வதை கவர்ன்மெண்டார் சட்டமூலம் தடுத்திருக்கவேண்டும்; அங்ஙனமில்லாவிடில் இந்தியாவில் தங்க நாணய முறையை ஸ்தாபிப்பதற்காக இந்தத் தங்கம் முழுமையையும் தாங்களே வாங்கியிருக்க வேண்டும். இவ் விரண்டையும் செய்யாமல் இத் தங்கம் முழுமையும் நாட்டைவிட்டு வெளியே போகும்படி

விட்டனரென்பது மிகவும் வருந்தத்தக்கது.

2. ரூபாய் ஸ்டர்லிங்குடன் பிணைக்கப்பட்டதன் பயனாக இங்கிலாந்தின் வியாபாரம் இந்தியாவில் அதிகமாவதற்கு ஏதுவாயிற்று. ரூபாய் ஸ்டர்லிங்குடன் பிணைக்கப்பட்டதால் ஆங்கிலச்சாமான்களுக்கு இந்திய ரூபாயில் முன்போலவே விலையிருந்தது. ரூபாய் ஸ்டர்லிங்குடன் பிணைக்கப்பட்டதால் ஸ்டர்லிங்கின் மதிப்புக் குறைந்தபோது ரூபாயின் மதிப்புக் குறைந்தது. ஆதலால் நாம் அன்னிய நாட்டுச்சாமான்களுக்கு முன்னைவிட அதிகரூபாய்கொடுக்கவேண்டியிருந்தது. உதாரணமாக 4·88 டாலர்பொறுமான சாமானுக்கு, இங்கிலாந்து தங்கநாணய முறையிலிருந்தபோது ஒரு ஸ்டர்லிங் அதாவது ரூ 13-5-4 கொடுக்க வேண்டியிருந்தது. இப்பொழுது ஸ்டர்லிங்கின் மதிப்பு 3·25 டாலர்களாகக் குறைந்தபோது, அதேசாமானுக்கு 1·5ஸ்டிர்லிங்குகொடுக்கவேண்டும். ரூபாயில் 13-5-4 $\frac{3}{2}$ அதாவது ரூ 20.- கொடுக்கவேண்டும். இதன் காரணமாக இங்கிலாந்தின் சாக்குகள் முந்தியவிலைக்கே விற்க, மற்ற நாட்டுச் சாக்குகளுக்கு இந்தியாவில் அதிக விலை கொடுக்க வேண்டியிருந்தது. அமெரிக்கா நாட்டு மோட்டார்கள் முதலிய சாக்குகள் உடனே விலை ஏறியது நேயர்களுக்கு ஞாபகமிருக்கும். இதன் காரணமாக இங்கிலாந்தின் வியாபாரம் இந்தியாவில் அதிகமாயிற்று.



# இருபதாவது அதிகாரம்.



## இந்திய பாங்கு முறை

## (The Indian Banking System)

பாங்குகளின் அவசியம்:—பணத்தின் அவசியம் தெரிந்தவர்கள் எல்லோருக்கும் பாங்குகளின் அவசியமும் தெரிந்திருக்கும். எல்லா காரியங்களுக்கும் பணம் அவசியமாயிருக்கின்றது. செல்வம் உண்டாக்குவதற்கு இன்றியமையாத மூன்று வஸ்துக்களில், ரொக்கம் அல்லது முதல் என்பது ஒன்று என முதல் அதிகாரத்திலேயே சொல்லப்பட்டது. கைத்தொழில்களுக்கும் வியாபாரத்துக்கும் ரொக்கம் அவசியம். ரொக்கம் பாங்குகள் மூலம்தான் கிடைக்கின்றன. கைத்தொழில்களின் முன்னேற்றத்திற்கும், வியாபார விருத்திக்கும் ஏற்றபடி ரொக்கம் கொடுத்து உதவுவதே ஒரு பாங்கு முறையின் இலக்ஷியம் ஆகும்.

ஆதலால் நம் வியாபாரத்தையும் கைத்தொழிலையும் விருத்திசெய்யவேண்டுமானால், நம் பாங்கு முறையை அதற்கேற்றவாறு அமைக்க வேண்டும். எப்படியெனில் சுலபமாகவும், குறைந்த வட்டிக்கும் பணம் கிடைத்தால், அதுவே நம் வியாபாரத்துக்கும் கைத்தொழில்களுக்கும் கிடைக்கக்கூடிய பேருதவி. நம் கைத்தொழில்களையும் வியாபாரத்தையும், பாங்கு முறையை விருத்தி செய்வதன்மூலம், முன்னேற்றமடையச் செய்யலாம். ஆதலால் நம் தேசத்தில் பாங்குகள் தற்காலத்திலிருக்கும் நிலைமையையும், அவைகளைச் சீர்திருத்தி அமைக்கவேண்டிய முறைகளையும், தெரிந்து கொள்ளவேண்டியது மிகவும் அவசியம்.

இந்திய பாங்கு முறை:—இந்திய பாங்கு முறையின் முக்கியமான ஒரு பாகத்தைப்பற்றி முன் பக்கங்களில் எழுதப்பட்டிருக்கிறது. குடியானவர்களுடைய ரொக்க சம்பந்தமான தேவைகளைப்பற்றியும், எப்படி அவர்களுக்கு தேவையான ரொக்க வசதிகள் சப்ளை செய்யப்பட்டிருக்கின்றனவென்றும் அப்பொழுது சொல்லப்பட்டது. இங்கு கைத்தொழில் சம்பந்தமாகவும், வியாபார சம்பந்தமாகவும் அவசியமான ரொக்கவசதிகள் எப்படி நம் பாங்கு முறையால் செய்து கொடுக்கப்படுகிறதென்பதைப்பற்றிச் சொல்லப்படும்.

ஒவ்வொரு நாட்டிலும் பலவிதமான பாங்குகள் பலவிதமான அவசியங்களையும் சௌகரியங்களையும் முன்னிட்டு உண்டாக்கப்பட்டிருக்கின்றன. அவைகள் அனைத்தும் நாட்டின் முன்னேற்றத்திற்கு அவசியமானவைகளே. அவைகளை அந்நாட்டு பாங்கு முறையின் பல உறுப்புகளாகச் சொல்லலாம். நம் பாங்கு முறையின் முக்கிய உறுப்புகளும் கீழே சொல்லப்பட்டிருக்கிறது.

1. உள்நாட்டு பாங்கர்கள் (Indigenous Bankers).
2. ஜாயின்ட் ஸ்டாக் பாங்குகள் (Joint Stock Banks).
3. கோஆபரேடிவ் (ஐக்கிய நாணய ரொக்க) பாங்குகள்.
4. நாணயமாற்று அல்லது எக்ஸ்சேன்ஜ் (Exchange Banks) பாங்குகள்.
5. இன்சூரன்ஸ் கம்பெனிகள் (Insurance Companies).
6. இம்பீரியல் பாங்கு ஆப் இந்தியா (Imperial Bank of India).

## உள்நாட்டு பாங்கர்கள்.

சரித்திரம்:—இந்தியாவில் பாங்குகளும், பாங்கர்களும் (அதாவது பாங்கு வைத்து நடத்துபவர்களும்) சுமார் 3000 வருஷங்களுக்கு முன்னிருந்து இருந்துவந்திருக்கிறார்களென, அக்காலத்திய சரித்திரங்களிலிருந்து தெரியவருகின்றது. சாணக்கியர் எழுதிய அர்த்தசாஸ்திரத்திலிருந்து அந் நாட்களில் பல பெரிய பாங்கர்கள், பொது ஜனங்களிடத்திலிருந்து டிபாசிட்டுகள் வாங்கிக்கொண்டும், பெரிய கடன்கள் கொடுத்துக் கொண்டும், இன்னும் தற்கால பாங்குகள் செய்யும் பல தொழில்களையும் செய்துகொண்டும் இருந்து வந்ததாகத் தெரியவருகிறது. பல ஆயிர வருஷங்களுக்கு முன்னமே இந்திய பாங்கர்கள் ரொக்க வியாபாரத்தைப்பற்றிய ஞானத்தை யடைந்து, சரியான கணக்குப் புஸ்தகங்களை வைத்துக் கொண்டு, சில சமயங்களில் சாதாரண வட்டிக்கும், சில சமயங்களில் வட்டிக்கு வட்டிக்கும் (Compound Interest) கடன் கொடுத்து வந்தார்கள். அக்காலத்திலேயே உண்டியல்கள் மூலமும் வியாபாரம் செய்யப்பட்டது. தவிர பூமியில் இருக்கும் சாமான்கள் பேரிலும், கடல்களில் இருக்கும் கப்பல்கள் பேரிலும், இன்சூரன்ஸ் வியாபாரமும் செய்து வந்ததாகத் தெரிகிறது.

முகம்மதியர் இந்தியாவின்மீது படையெடுத்த காலத்தில் சமாதானம் குன்றி, மக்களின் பாதுகாப்புகளும் குறைந்தன. சமாதானமும், பாதுகாப்பும் குறைந்த காலத்தில் பாங்குகள் அதிகம் இருக்க முடியாது. எனினும் சில பெரிய பாங்கர்கள் இங்குமங்கும் காணப்பட்டு பல அரசர்களுக்கும் கூட கடன் கொடுத்து பாங்கு வியாபாரம் செய்து கொண்டிருந்தனர். ஈஸ்ட் இந்திய கப்பெனியார் இந்தியாவுக்கு வந்த ஆரம்ப காலத்தில், அவர்களும் நம் நாட்டு பாங்கர்களின்

உதவியைப் பெற்றுத் தங்கள் தொழிலை நடத்தி வந்தனர்.

உள்நாட்டு பாங்கர்களின் தற்கால நிலைமை:— தற்காலத்திலும்கூட உள்நாட்டு பாங்கர்கள் இந்தியாவின் பாங்கு உலகத்தில் முக்கியமான ஸ்தானத்தைப் பெற்றிருக்கின்றனர். அநேகமாய் எல்லா முக்கியமான ஊர்களிலும் இவர்கள் இருக்கின்றார்கள். மூல்தானிகள், மார்வாரிகள், நாட்டுக் கோட்டைச் செட்டியார்கள், கல்லிடைக்குறிச்சி பிராமணர்கள்—இந்த வகுப்பினரில் பெரும்பான்மையோர், பாங்குத் தொழிலையே கைப்பற்றி, வெகு திறமையுடன் நடத்தி வருகிறார்கள். முக்கியமாய் மூல்தானிகளும் மார்வாரிகளும் நாட்டுக்கோட்டைச் செட்டியார்களும், பல மாகாணங்களிலும் கிளை ஆபீசுகள் வைத்துக்கொண்டு, பெரிய தொகைகள் கடன் கொடுத்து வாங்குகிறார்கள்.

நாட்டிற்குள் அவசியமான ரொக்க வசதிகளில் ஒரு பெரிய பாகம் இவர்களால் அளிக்கப்பட்டு வருகிறது. உள்நாட்டு விவசாயிகளுக்கும், வியாபாரிகளுக்கும், கைத்தொழில்களுக்கும் இவர்களால் உதவியளிக்கப்பட்டு வருகிறது. பெரிய நகரங்களிலும் இவர்கள் தங்கள் வியாபாரத்தைச் செய்து வருகின்றனர். இந்தியாவில் சுமார் 2500 நகரங்கள் இருக்கின்றன. இவைகளில் சுமார் 400 நகரங்களில் தான் ஜாயின்ட் ஸ்டாக் பாங்குகள் இருக்கின்றன. மற்ற ஊர்கள் எல்லாவற்றிலும், அவசியமான ரொக்க வசதிகள் யாவும் உள்நாட்டு பாங்கர்களால்தான் செய்யப்படுகின்றன. ஜாயின்ட் ஸ்டாக் பாங்குகள் இருக்கும் பல இடங்களிலும் உள் நாட்டு பாங்கர்கள், தங்கள் தொழிலை நடத்தி வருகின்றனர்.

இவர்கள் சாதாரணமாக பாங்கு வியாபாரம் மாத்திரம் செய்வதில்லை. அத்துடன் மற்ற வியாபாரமும் செய்து

வருகிறார்கள். இவர்களில் பெரும்பான்மையோர் தங்கள் சொந்தமுதலையே கொண்டு வியாபாரம் செய்கின்றனர். சாதாரணமாக இவர்களால் அதிக வட்டி கொடுக்கப்படுவதால், இவர்களுக்கு அதிக டிபாசிட்டுகளும் கிடைக்கின்றன. டிபாசிட்டு வைத்திருப்பவர்களும், வாபீசு பெறும்போது ரொக்கமாகப் பெறுகிறார்களே யொழிய, ஜாயின்ட் ஸ்டாக் பாங்குகள் மாதிரி செக்குகள் (Cheques) மூலம் பெறுவதில்லை. இப்பாங்குகள் அநேகமாய் ஒரு தனி மனிதனுடைய வியாபாரமாகவோ அல்லது ஒரு சில நபர்களின் கூட்டு வியாபாரமாகவோ தானிருக்கும். இவர்கள் தாங்கள் கொடுக்கும் கடன்களின் பேரில் அதிக வட்டிகேட்பதாகச் சொல்லப்படுகிறது. பல இடங்களில் இவர்கள் ஜாயின்ட் ஸ்டாக் பாங்குகளுக்கும் போட்டியாக விளங்குகின்றனர்.

பாங்கிங் விசாரணைக் கமிட்டியின் சிபார்சுகள்:—இந்தியாவின் தற்கால பாங்கிங் முறையையும், தற்கால அவசியங்களுக்குத் தக்கபடி அதை எப்படி சீர்திருத்தி அமைக்க வேண்டும் என்பதையும் விசாரணை செய்து ரிபோர்ட்டு செய்வதற்காக சர். பி. என். சர்மா என்பவர் தலைமையின் கீழ் ஒரு கமிட்டி ஏற்படுத்தப்பட்டு, அக்கமிட்டியும் அதன் ரிபோர்ட்டை 1931ல் வெளியிட்டிருக்கிறது. அவர்கள் உள் நாட்டு பாங்கர்களின் தற்கால நிலைமையையும், அவர்களை எப்படி விருத்திசெய்வது என்ற விஷயங்களைப் பற்றியும் ஆராய்ந்து ரிபோர்ட்டு செய்திருக்கின்றனர். உள் நாட்டு பாங்கர்களுக்கு இன்னும் அதிக வசதிகள் கொடுக்கப்பட்டு, அவர்கள் மூலம் இன்னும் அதிகப்பயனை யடையவேண்டுமென்றும், இந்திய பாங்கு முறையில் அவர்களையும் ஒரு முக்கியமான பாகமாகக் கருதி அத்துடன் இணைக்க வேண்டும் என்றும் அபிப்பிராயப்பட்டிருக்கின்றனர். இதற்காக அவர்

கள் கீழ்க்கண்ட சிபார்சுகளைச் செய்திருக்கின்றனர்.

1. இந்தியாவின் தலைமை அல்லது ரிசர்வ் (Reserve) ஏற்படுத்தப்பட்டு, அதில் பாங்கிங் மாத்திரம் செய்து வரும் உள்நாட்டு பாங்கர்களை அங்கத்தினர்களாகச் சேர்த்துக் கொள்ளவேண்டும்.

2. தலைமை பாங்கில் அங்கத்தினராய் இருக்கும் பாங்குகள், வட்டியின் ஒரு தொகை அதில் டிபாசிட்டு செய்ய வேண்டும். உள்நாட்டு பாங்கர்களுக்கு இப்படி டிபாசிட்டு செய்வது கடினமாக விருக்கும். ஆதலால் முதல் 5 வருடங்களுக்காவது, இவர்கள் இவ்விதியிலிருந்து விலக்காக்கப்பட வேண்டும்.

3. பாங்கிங் மாத்திரம் நடத்தாத மற்ற பாங்குகள் அநேகமிருக்கலாம். இந்த பாங்குகளுக்கு இம்பீரியல் பாங்கு ஆப் இந்தியா மூலமும் மற்ற ஜாயின்ட் ஸ்டாக் பாங்குகள் மூலமும் உதவியளிக்கப்படவேண்டும்.

4. அகில இந்திய பாங்கர்கள் சங்கம் ஒன்று உண்டாக்கப்படவேண்டும்.

ஜாயின்ட் ஸ்டாக் பாங்குகள்(Joint Stock Banks) பலர் சேர்ந்து உண்டானது; பொறுப்பு வரையறுக்கப்பட்டது (Limited liability). ஜாயின்ட் ஸ்டாக் பாங்குகளைத் தற்காலத்திய சிருஷ்டி எனச் சொல்லலாம். உள்நாட்டு பாங்கர்களுக்கும் ஜாயின்ட் ஸ்டாக் பாங்குகளுக்கும் சில வித்தியாசங்கள் உண்டு. ஜாயின்ட் ஸ்டாக் பாங்குகள் உள்நாட்டு பாங்கர்களைப்போல ஒருவர் அல்லது ஒரு சிலர் சேர்ந்த கூட்டு வியாபாரம் அல்ல. இவை ஜாயின்ட் ஸ்டாக் தத்துவத்தின் பேரில் உண்டாக்கப்பட்டவை. இவைகளுடைய மூலதிரவியம், பலபேர்கள் எடுத்துக்கொள்ளும் பங்குகள் மூலம் சேர்க்கப் படுகிறது. பல பேர்களுடைய முதலும் சேர்ந்து இவை

யுண்டாக்கப் படுகின்றனவாதலால் இவை ஜாயின்ட் ஸ்டாக் (சேர்ந்து உண்டாக்கப்பட்டன) பாங்குகள் என்று சொல்லப் படுகின்றன. இவை வரை யறுக்கப்பட்ட பொறுப்பு என்ற தத்துவத்தின் பேரில் உண்டாக்கப்படுகின்றன. அதாவது இந்த பாங்குகளுக்கு நஷ்டம் உண்டானால், இந்த நஷ்டத்தை பாங்கின் பங்குக்காரர்கள் தாங்க வேண்டிய பொறுப்பின் அளவு சட்டமூலம் வரையறுக்கப்பட்டிருக்கிறது. சாதாரண மாக இந்த பாங்குகளுக்கு நஷ்டம் உண்டானால் பங்குக்காரர் களின் பங்குகளின் மூலமும் பாங்கின் மற்ற சொத்துக்கள் மூலமும்தான் இவை வசூலிக்கப்படவேண்டுமே யொழிய, பங்குக்காரர்களுடைய மற்ற சொத்துக்களைத் தொடர்ந் தாவது அல்லது பங்குக்காரர்களைத் தொடர்ந்தாவது வசூலி க்க முடியாது. ஜாயின்ட் ஸ்டாக் முறையில் ஏற்படுத்தப்படும் பாங்குகள் இந்திய கம்பெனிகள் சட்டத்தின் கீழ் (Indian Companies Act) ரிஜிஸ்டர் செய்யப்படுகின்றன.

டிபாசிட்டுகள் (Deposits):—இப் பாங்குகள் தங் கள் வியாபாரத்துக்கு வேண்டிய ரொக்கத்தை, பங்குகள் மூலம் சேர்க்கப் படும் மூல திரவியத்தைத் தவிர வேறு விதங்களிலும் பெறுகின்றனர். பொது ஜனங்களிடத்தில் அதிக நம்பிக்கை யுண்டாக்கிய பாங்குகள் டிபாசிட்டுகளின் மூலமாகவே அதிகமான பணம் பெறுகின்றன. ஒரு பாங் கின் மேலுள்ள நம்பிக்கை அதிகமானால், அதற்கு அதிக மான டிபாசிட்டுகள் கிடைக்கும்; குறைந்த வட்டிக்கும் இப்பாங்குகளில் டிபாசிட் செய்ய பொது ஜனங்கள் முன் வருவார்கள். ஏனெனில் அதிக வட்டிக்கு ஆசைப்பட்டு பத்திரமில்லாத முதலுக்கே நஷ்டம் வரக்கூடிய இடங்களில் தங்கள் பணத்தைக்கொடுத்து வைப்பதைவிட, மிகவும் நம் பிக்கையான இடத்தில் குறைந்த வட்டிக்காவது பணத்தைக்

கொடுத்து வைப்பதையே யாவரும் விரும்புவார்கள்.

ஒரு குறித்த காலத்துக்கு ஒரு குறித்த வட்டிக்குப் பாங்குகளில் போடப்படும் டிபாசிட்டுகளுக்கு பிக்சட் டிபாசிட்டுகள் (Fixed Deposits) என்று பெயர். இத்தொகைகளை பாங்குகள் குறைந்த வட்டிக்குப் பெற்று, உயர்ந்த வட்டிக்குப் பிறர்களுக்குக் கொடுத்து லாபம் பெறுகின்றனர். பிக்சட் டிபாசிட்டுகள் எந்தக் காலத்துக்குப் போடப்பட்டிருக்கின்றனவோ அந்தக் காலத்துக்குப் பின் தான் திருப்பிக் கொடுக்கப்படும். கேட்ட போது பணம் கொடுக்கவேண்டும் என்ற நிபந்தனையின்பேரிலும், பாங்குகளில் பணம் போடப்படலாம்; அப்பொழுது கரன்ட் அக்கவுண்டில் (Current Account) பணம் போட்டு வைப்பதாகச் சொல்லப்படும். இம்மாதிரி போட்டுவைத்தால், போட்டு வைத்தவர் வேண்டும்போது ஒரு குறிப்பிட்ட சிறு தொகை தவிர மீதத் தொகை முழுவதும் வாபீசு கேட்டாலும், பாங்குகள் உடனே வாபீசு கொடுப்பதற்குத் தயாராயிருக்க வேண்டும். இம்மாதிரி டிபாசிட்டுகளுக்கு வட்டி மிகவும் குறைவாகத்தான் கொடுக்கப்படும். பணம் போட்டு வைத்திருப்பவர்கள் அத்தனை பேர்களுக்கும் ஒரே சமயத்தில் பணம் தேவையிருப்பதில்லை. ஆதலால் இங்ஙனம் போடப்பட்டிருக்கும் பணத்தின் ஒரு பகுதியை டிபாசிட்டுதாரர்களின் தேவைக்காக வைத்துக் கொண்டு, மற்றொரு பகுதியை பாங்குகள் மற்றவர்களுக்குக் கடன் கொடுக்க உபயோகப்படுத்துகின்றன.

## செக்குகள் (Cheques)

கரண்ட் அக்கவுண்டிலிருந்து பணம் வாபீசு பெறுவது சாதாரணமாக ரொக்கமாகப் பெறப்படுவதில்லை; செக்குகள்

(Cheques) மூலமே பெறப்படுகின்றன. செக்குகளின் உபயோகத்தைப் பற்றிக் கொஞ்சம் தெரிந்து கொள்ள வேண்டியது அவசியம். கான்சி நோட்டுகளின் உபயோகத்தைப் பற்றி முந்திய அதிகாரத்தில் சொல்லப்பட்டது. செக்குகளும் கான்சி நோட்டுகள் மாதிரி உபயோகப்படுத்தப்படலாம்; ஆனால் இவ்விரண்டிற்கும் ஒரு வித்தியாசமுண்டு. கான்சி நோட்டுகளை ரூபாயாக மாற்றலாம் என்ற நம்பிக்கையிருப்பதால், அது எல்லோராலும் ஒப்புக்கொள்ளப்படும். ஆனால் ஒரு செக் மதிக்கப்படுவது, அதை எழுதுபவனையும் (The Writer of the Cheque or the Drawer) எந்தப்பாங்கிலிருந்து பணத்தை பெற விரும்புகிறானோ அதையும் (Drawees) ஒட்டியது. அதாவது அந்த பாங்கு நல்ல நிலைமையிலிருந்து அப்பணத்தைக் கொடுக்கத் தயாராயிருக்கவேண்டும்; செக் எழுதுபவன் கணக்கில் அவன் செக்கை மதிக்கக்கூடிய அவ்வளவு பணம் இருக்கவேண்டும். செக் எழுதுபவன் மிகுந்த நாணயமும் பொறுப்பும் உடையவனாகவும், பாங்கும் மிகவும் நம்பிக்கையானதாயும் இருக்கும் பக்ஷத்தில், அந்தச் செக் யாவராலும் மதிக்கப்படும். ஆகையால் இச்செக்குகள் கான்சி நோட்டுகள் மாதிரி வழங்கப்பட்டு, பொதுஜனங்களும் அவைகளை வரவு செலவுகளில் ஏற்றுக் கொள்ளலாம்.

செக்குகளின் உபயோகத்தால் நாணயங்களின் அவசியமும், அவைகள் கைக்குக் கை மாறவேண்டிய தேவையும் குறையும். உதாரணமாக, சென்னையிலிருக்கிற இந்தியன் பாங்கில் ஒரு இராமசாமி செட்டியாரும் ஒரு கிருஷ்ணசாமி செட்டியாரும் பணம் போட்டு வைத்திருக்கிறார்கள். இராமசாமி செட்டியாரிடம் வாங்கின சரக்குகளுக்கு விலையாக ரூ. 5000/-க்கு இந்தியன் பாங்கு செக் ஒன்று, கிருஷ்ண

சாமி செட்டியார் இராமசாமி செட்டியாருக்குக் கொடுக்கிறார். இராமசாமி செட்டியார் அதற்கு உடனே பணம் பெறுவதில்லை. அவர் அதை இந்தியன் பாங்குக்கு அனுப்பி அச்செக்கில் கண்ட தொகையைத் தன் கணக்கில் வரவு வைத்துக் கொள்ளும்படி சொல்லுகிறார். இந்தியன் பாங்குக்காரர்கள் அச்செக்கைப் பெற்றுக் கொண்டு, கிருஷ்ணசாமி செட்டியார் கணக்கில் ரூ. 5000/- பற்று எழுதி இராமசாமி செட்டியார் கணக்கில் ரூ. 5000/- வரவு வைக்கிறார்கள். இம்மாதிரி ரொக்கம் கைமாறாமலே, செக்குகள் மூலம் பங்குகளின் கணக்குப் புஸ்தகங்களில் பற்று வரவு செய்யப்பட்டு, வியாபாரம் செய்யப்படுகின்றது.

லாபம் பிரித்தல், காப்புத்திரவியம், பாலன்ஸ் ஷீட்:— மூல திரவியத்தைக் கொண்டும், டிபாசிட்டுகள் மூலம் கிடைக்கும் தொகைகளைக் கொண்டும் ஜாயிண்டாக பாங்குகள் வேண்டியவர்களுக்குக் கடன் கொடுத்து, ரொக்க வியாபாரம் செய்கின்றன. வியாபாரத்துக்காகவும் கைத்தொழில்களுக்காகவும் ரொக்கம் வேண்டியவர்களுக்கு அவரவர்கள் பொறுப்புக்கேற்றபடி கடன் கொடுக்கிறார்கள். சில சமயங்களில் நபர்களின் ஜாமீன் பேரிலும் உண்டியல்கள் பேரிலும், சொத்துக்கள் அல்லது சரக்குகள் அடவுகளின் பேரிலும் பணம் கொடுக்கிறார்கள். இப்பாங்குகளால் லாபத்தொகைகள் ஒவ்வொரு வருஷமும் பாங்குக்காரர்களுக்குப் பிரித்துக் கொடுக்கப்படும். லாபத்தொகை பங்குக்காரர்களுக்குப் பிரித்துக்கொடுப்பதற்கு முன், பாங்கின் எதிர்கால க்ஷேமத்தை உத்தேசித்து, க்ஷேமநிதி அல்லது காப்புத்திரவியம் என்ற நிதி யுண்டாக்குவதற்காக லாபத்தின் ஒரு பாகம் ஒதுக்கி வைக்கப்படும்; மீதமான லாபம்தான் பிரித்துக் கொடுக்கப்படும். ஒவ்வொரு பாங்கும் ஒவ்வொரு

வருஷமும் ஒரு பாலன்ஸ் ஷீட் (Balance Sheet) அதாவது லாப நஷ்டக் கணக்கு பிரசுரம் செய்ய வேண்டும்.

சரித்திரம்:—1860-ம் வருஷத்துக்கு முன்னும் பாங்குகள் ஜாயிண்ட் ஸ்டாக் முறையில் நடத்தப்பட்டன. ஆனால் அவைகளில் பொறுப்பு வரையறுக்கப்படவில்லை (Unlimited Liability). வரையறுக்கப்பட்ட பொறுப்பு என்பது 1860-ம் வருஷத்திலிருந்துதான் ஆரம்பிக்கப்பட்டது. எனவே தற்காலத்திய பாங்குகளின் வளர்ச்சியில் 1860-ம் வருஷம் மிகவும் முக்கியமான வருஷமாகும். அவ்வருஷத்திலிருந்து அவை மெதுவாக வளர்ந்துகொண்டு வந்தன. 1913-ம் வருஷத்தில் பாங்குகள் பல முறிந்துபோய், பலர் தங்கள் டிபாசிட்டுத் தொகைகளையும், பங்குத் தொகைகளையும் இழக்க நேர்ந்தது. ஆதலால் இப்பாங்குகளின் வளர்ச்சியும் கொஞ்ச காலத்துக்குக் குறைந்திருந்தது.

பாங்குகள் திடீரென்று முறிந்ததற்குப் பல காரணங்கள் சொல்லப்படுகின்றன. டிபாசிட்டுதாரர்களுடைய தேவைக்குத் தகுந்தபடி கையிருப்பு வைத்துக்கொள்ளாததால், டிபாசிட்டுதாரர்கள் தங்கள் பணத்தை வாபீசு கேட்ட சமயம் பாங்குகளால், வாபீசு கொடுக்க முடியவில்லை. இது மக்களுக்குள் அவநம்பிக்கையை உண்டாக்கி, எல்லா டிபாசிட்டுதாரர்களும் தங்கள் டிபாசிட்டுகளை வாபீசு பெற விரும்பினார்கள். அதனால் டிபாசிட்டுகளுக்குப் பணம் வாபீசு செய்யமுடியாமல் பல பாங்குகள் முறிந்துபோயின. அதிக டிபாசிட்டுகளைச் சேர்ப்பதற்காக சில பாங்குகளால் மிகவும் அதிகமான வட்டி கொடுக்கப்பட்டது. நிர்வாகஸ்தர்கள் திறமையற்றவர்களாயும், பாங்கிங் முறையின் இரகசியங்களை அறியாதவர்களாயும் இருந்தனர். சில பாங்குகளில் நிர்வாகஸ்தர்களே பாங்குப் பணத்தைக் கையாடி மோசம்

செய்தனர். இக்குறைகளின் காரணமாய்ப் பாங்குகள் விழுந்த சமயத்தில், பாங்குகளுக்கு உதவி புரிவதற்கு கவர்ன்மெண்டோ அல்லது மற்றெவருமோ முன் வரவில்லை. எனவே பல பாங்குகள் விழுந்துபட்டன. ஆனால் இக் கேடு இந்திய ஜாயிண்ட் ஸ்டாக் பாங்குகளின் குறைகளை நன்றாக வெளிப்படுத்திற்று. அக்குறைகளும் நிவாரணம் செய்யப்பட்டன. போதுமான அளவு கையிருப்பு வைத்திருக்க வேண்டுமென்ற முக்கியத்தை அவர்கள் உணர்ந்தனர்.

தற்கால நிலைமை:—1928-ம் வருஷத்தில் 5 லக்ஷம் ரூபாய்களுக்கு அதிகமாக மூல திரவியமும் காப்புத் திரவியமும் உள்ள பாங்குகள் 28 இருக்கின்றன. இவை மொத்தத்தில் 674 லக்ஷம் ரூபாய்கள் மூலதிரவியம் உடையனவாகவும், 434 லக்ஷம் ரூபாய்கள் காப்புத் திரவியம் உடையனவாகவும், 6285 லக்ஷம் ரூபாய்கள் டிபாசிட்டுகள் உடையனவாகவும் இருக்கின்றன. அதே வருஷத்தில் மூலதிரவியமும் காப்புத் திரவியமும் 5 லக்ஷத்துக்குக் குறைந்தும், ஆனால் ஒரு லக்ஷத்துக்கு அதிகமாகவும் உடைய பாங்குகள் 46 இருக்கின்றன. இவைகள் 81 லக்ஷம் ரூபாய்கள் மூலதிரவியமும், 38 லக்ஷம் ரூபாய்கள் காப்புத் திரவியமும், 349 லக்ஷம் ரூபாய்கள் டிபாசிட்டுகளும் பெற்றிருக்கின்றன. † இவைகளில் 6 பாங்குகளே முக்கியமான பாங்குகளாயும், எல்லா பாங்குகளின் மொத்த டிபாசிட்டில் பெரும்பான்மையை உடையனவாகவும் விளங்குகின்றன. இவ்வாறில் இரண்டு, மைசூர் பாங்கும், பரோடா பாங்கும், அந்தந்த அரசாங்கங்களின் உதவியைப்பெற்று வளர்ந்தவை. எனவே பொது மக்களுடைய முயற்சியால் உண்டாக்கப்

† Page 435 Jathar & Beri's Indian Economics vol. II.

பட்ட முக்கிய பாங்குகள் நான்குதான். இவை பாங்கு ஆப் இந்தியா (Bank of India), சென்ட்ரல் பாங்கு ஆப் இந்தியா (The Central Bank of India), பஞ்சாப் நேஷனல் பாங்கு (The Punjab National Bank), அலாஹாபாத் பாங்கு, கல்கத்தா, (The Allahabad Bank, Calcutta), என்பன. இவைகளில், இரண்டாவதும் மூன்றாவதும் தான் இந்திய மக்களால் நிர்வகிக்கப் பட்டு வருகின்றன.

ஜாயின்ட் ஸ்டாக் முறையில் சிறிய அளவில், சாதாரணமாக லக்ஷம் ரூபாய்கள் மூல திரவியத்துடன், நிதிகள் என்ற பெயருடன், நம் மாகாணத்தில் சில ஜில்லாக்களில் முக்கியமாக கோயமுத்தூர் ஜில்லாவில் ஏற்படுத்தப்பட்டு, வியாபாரம் செய்து வருகின்றன. இவைகளும் இந்திய கம்பெனிகள் ஆக்டின் கீழ் ரிஜிஸ்டர் செய்யப்படுகின்றன. 1929-ம் வருஷம் மார்ச்சு மாதம் 31-ம் தேதியில் 228 நிதிகள் நம் மாகாணத்தில் இருந்தன. இவைகளுடைய மொத்த மூலதனம் $2\frac{1}{2}$ கோடி ரூபாயாகவும், மொத்த டிபாசிட்டும் காப்புத் திரவியமும் $1\frac{1}{2}$ கோடி ரூபாயாகவும் இருந்தன.†

ஜாயின்ட் ஸ்டாக் பாங்குகளின் வியாபாரம்:—இவைகள் பணம் வேண்டியவர்களுக்குப் பணம் கொடுக்கின்றன. சொத்துப் பொறுப்புகளின்பேரிலும் தானியங்கள் பருத்தி முதலியவைகளின் பொறுப்பின்பேரிலும், சில சமயங்களில் பூமி முதலிய சொத்துக்களின் அடவுகளின் பேரிலும் கடன் கொடுத்து வரவு செலவு செய்கின்றன. உள்நாட்டு உண்டியல்களிலும் வியாபாரம் செய்கின்றன. மில்களுக்கும், பேக்டரிகளுக்கும் அவசியமான குறுகிய காலத்துக் கடன்

† Page 34 The Report of the Indian Central Banking Enquiry Committee.

கள் அல்லது பருவகாலத்துக் கடன்களும், தகுந்த சாக்கு களின் அடவின் பேரில் இவைகளால் பணம் கொடுக்கப் படுகின்றன. இவைகளுடைய வியாபாரம் முழுதும் பெரிய நகரங்களில் தான் செய்யப்படுகின்றன.

இவைகளுடைய அபிவிருத்திக்கு நம் நாட்டில் இன் னும் அதிக இடம் இருக்கின்றது. சட்டத்தினுல் சௌகரி யம் செய்து கொடுத்து மாத்திரம், பெரிய பாங்குகளை உண்டாக்க முடியாது. இதற்கு பாங்கிங்கில் அனுபவமும் ஞானமும் வாய்ந்த பாங்கர்களே அவசியம். எனவே பாங்கிங் கல்வியும் விருத்தி செய்யப்பட்டு, முதிர்ந்த கல்வி யும் அனுபவமும் பெற்ற பாங்கர்களால் ஜாயின்ட் ஸ்டாக் பாங்குகள் விருத்தி செய்யப்பட வேண்டும்.

கோ ஆபரேடிவ் பாங்குகள் :— (Co-operative Banks) இவைகளை ஐக்கிய நாணய சங்க பாங்குகள் என் றும் சொல்வதுண்டு. இவை கோ ஆபரேடிவ் சொஸைடி ஆக்டின்கீழ் (Co-operative Societies'.Act) ரிஜிஸ்டர் செய்யப்படுகின்றன. தற்காலத்தில் கோ ஆபரேடிவ் இயக் கம் அதிகமாகப் பரவி வருகிறது. சுதேச மன்னர்களுடைய இராஜ்ஜியங்கள் உள்பட இந்தியாவில் சுமார் 1,00,000 சொசைடிகள் இருக்கின்றன. இவைகள் சுமார் 15,000 சுதேச மன்னர்களின் இராஜ்ஜியங்களிலும், மீதம் பிரிட்டிஷ் இந்தியாவிலும் இருக்கின்றன. இவைகளில் கோஆபரேடிவ் கிரெடிட் சொசைடிகள் (Co-operative Credit Societies), அதாவது கடன் கொடுக்கும் சொசைடிகள் மாத்திரம் இந்தியாவில் 30-6-30-ம் தேதியில் 78,000 இருக்கின்றன. இவைகளில் சுமார் 30 லக்ஷம் மெம்பர்கள் இருக்கின்றனர்; சுமார் 40 கோடி ரூபாய்கள் புழங்கப்படுகின்றன. கடன் கொடுப்பதற்கல்லாமல் மற்ற காரியங்களுக்காக ஏற்படுத்தப்

பட்டிருக்கும் சொசைடிகள் அல்லது சங்கங்கள் அதே தேதியில் சுமார் 16,000 இருக்கின்றன. இவைகள் சுமார் 650,000 மெம்பர்களைக் கொண்டனவாய், 6 கோடி ரூபாய்கள் புழங்கிக்கொண் டிருக்கின்றன.

பிரைமரி சொசைடிகள்:—கோ ஆபரேடிவ் இயக்கத்துக்கு அடிப்படையாக விருப்பவை பிரைமரி சொசைடிகள் (Primary Societies) என்பவை. இவைகளில் சில வரையறுக்கப்பட்ட பொறுப்பின் (Limited Liability) பேரில் உண்டாக்கப்பட்டவை; இவை தொகையில் குறைந்து, பெரிய ஊர்களில்தான் காணப்பட்டு, அர்பன் சொசைடிகள் (Urban Societies) என்று வழங்கப்படுகின்றன.

பெரும்பான்மையான பிரைமரி சொசைட்டிகள் வரையறுக்கப்படாத பொறுப்பு (Unlimited Liability) என்ற தத்துவத்தின் பேரில் உண்டாக்கப்பட்டவை. இவை பெரும்பான்மையாக கிராமங்களில் இருக்கின்றன. (Agricultural Societies) வரையறுக்கப்படாத பொறுப்பு சொசைட்டியால் வாங்கப்படும் கடன்களுக்கு, என்பது, சொசைடியின் பங்குகளும் இதர சொத்துக்களும் தவிர, அதன் மெம்பர்கள் யாவரும் ஜவாப்தாரியாக இருப்பார்கள் என்பது. இச்சங்கங்களில் நம்பிக்கையுள்ளவர்களையும், பொறுப்புள்ளவர்களையும், நாணயமுள்ளவர்களையும் மாத்திரம் தான் சேர்த்துக் கொள்ளப்படும். இவைகளில் மெம்பர்களுடைய பங்குத்தொகை, மிகவும் குறைவாகவும், எளியவர்களும் கொடுக்கக்கூடிய மாதிரியிருக்கும். பங்குகள் எத்தனையிருந்தாலும் ஒவ்வொரு மெம்பருக்கும் ஒரு ஓட் தான் உண்டு. லாபத்தைப் பிரித்துக் கொடுப்பதிலும், 100-க்கு ஒரு அளவுக்கு மேல் லாபம் பிரித்துக்

கொடுக்கப்படக் கூடாதெனவும், இச்சங்கங்களில் சட்டம் செய்து கொள்வதும் உண்டு.

பணமில்லாத எளியவர்கள் சேர்ந்து ஒன்ருக முயற்சி செய்து தங்கள் காரியங்களை நிர்வாகம் செய்வதற்காகவும் ஒருவருக்கொருவர் பரஸ்பர உதவி செய்து கொள்ளுவதற்காகவும், லேவா தேவிக்காரர்கள் கையில் அகப்படாமல் இருப்பதற்காகவும், இச் சங்கங்கள் ஏற்படுத்தப்பட்டிருக்கின்றன. இவைகளினுல் நம்பிக்கையும், நாணயமும், நற்பழக்கமும் வளர ஏதுவாகும். ஒருவருக்கொருவர் உதவி செய்து கொள்ள வேண்டுமென்கிற உணர்ச்சியும் பரவும். ஒருவரால் தனியே செய்ய முடியாத, ஆனுல் மிகவும் பயன் தரக் கூடிய விஷயங்களை, கோ ஆபரேடிவ் சங்கங்கள் மூலம் சுலபமாகச் செய்து முடிக்கலாம். சில இடங்களில் சொஸைடிகளின் காரியதரிசிகள் தங்கள் பொறுப்பையறியாதவர்களாயும், யோக்கியதை யில்லாதவர்களாயும் இருப்பதால், அச் சொஸைடிகள் கஷ்டப்படுகின்றன. ஆனுல் கல்விப் பரவப் பரவ இம் மாசு மறையும் என எதிர்பார்க்கப்படுகிறது.

கிராம கோ ஆபரேடிவ் பாங்குகள் (Agricultural Co-operative Credit Societies):—இவை வரையறுக்கப்படாத பொறுப்பு என்ற தத்துவத்தின் பேரில், மெம்பர்களுடைய அவசியங்களுக்கு வேண்டிய சமயம் கடன் கொடுப்பதற்காக உண்டாக்கப்பட்டவை. 30-6-1930-ல் இவைகள் ஒவ்வொரு மாகாணத்திலும் எவ்வளவு இருக்கின்றன வென்பதும், அவைகளைப் பற்றிய மற்ற விபரங்களும் கீழே காண்பிக்கப்பட்டிருக்கின்றன:



| † மாகாணங்கள் | சொசைடிகள் | மெம்பர்கள் | ஆயிரம் ரூபாய்களில் | | | |
|---|---|---|---|---|---|---|
| | | | பங்குத் தொகையும் காப்புத் திரவியமும் | டிபாசிட்டுகள் | கடன்கள் | மொத்தம் புழங்கின தொகை |
| ஆஜ்மீர் மேர்வாரா | 513 | 11,203 | 7,83 | 41 | 8,64 | 16,88 |
| அஸ்ஸாம் | 1,282 | 52,579 | 7,57 | 5,02 | 16,57 | 29,16 |
| வங்காளம் | 19,156 | 456,139 | 1,27,39 | 34,38 | 3,28,55 | 4,90,32 |
| பீகார் ஒரிஸ்ஸா | 8,624 | 211,778 | 42,04 | 8,19 | 1,88,40 | 2,38,63 |
| பம்பாய் | 4,526 | 265,325 | 77,37 | 1,16,65 | 1,93,28 | 3,87,30 |
| பர்மா | 2,282 | 52,945 | 86,78 | 9,61 | 61,17 | 1,57,56 |
| மத்தியமாகாணங்கள் | 3,950 | 59,308 | 31,79 | 7,66 | 1,32,11 | 1,71,56 |
| டில்லி | 217 | 5,173 | 2,12 | 32 | 5,92 | 8,36 |
| சென்னை | 12,540 | 674,590 | 1,27,55 | 9,72 | 5,26,89 | 6,64,16 |
| வடமேற்குஎல்லைப்புற மாகாணம் | 152 | 4,122 | 57 | 3 | 2,80 | 3,40 |
| பஞ்சாப் | 16,125 | 483,423 | 2,57,40 | 70,20 | 4,51,30 | 7,78,90 |
| ஐக்கிய மாகாணங்கள் | 5,043 | 117,661 | 46,14 | 2,61 | 51,28 | 1,00,03 |
| | 74,410 | 2,394,246 | 8,14,55 | 2,64,80 | 19,66,91 | 30,46,26 |

கோ ஆபரேடிவ் அர்பன் பாங்குகள் (Co-operative-Non Agricultural Credit Societies) இவைகள் பெரிய நகரங்களில் வரையறுக்கப்பட்ட பொறுப்பு என்ற தத்துவத்தின்பேரில் உண்டாக்கப்பட்டவை. இவை ஒவ்வொரு மாகாணத்திலும் எவ்வளவு இருக்கின்றனவென்பதும், அவர்களுடைய மற்ற விபரங்களும் கீழே காட்டியுள்ளன.

† Page 114 The Indian Central Banking Enquiry Committee Report of 1931.

| † மாகாணங்கள் | சொஸைட்டிகள் | மெம்பர்கள் | ஆயிரம் ரூபாய்களில் | | | |
|---|---|---|---|---|---|---|
| | | | பங்குத் தொகையும் காப்புத் திரவியமும் | டிபாசிட்டுகள் | கடன்கள் | மொத்தம் புழங்கின தொகை |
| ஆஜ்மீர் மேர்வாரா | 67 | 2,176 | 1,00 | 3,26 | 42 | 4,68 |
| அஸ்ஸாம் | 11 | 186 | 5 | | 3 | 8 |
| வங்காளம் | 456 | 147,573 | 74,81 | 1,75,21 | 6,48 | 2,56,50 |
| பீஹார் ஒரிஸ்ஸா | 56 | 1,247 | 96 | 10 | 2,36 | 3,42 |
| பம்பாய் | 580 | 194,421 | 91,82 | 2,29,31 | 10,94 | 3,32,07 |
| பர்மா | 77 | 17,458 | 33,17 | 26 | 7 | 33,50 |
| மத்திய மாகாணங்கள் | 70 | 16,097 | 6,47 | 6,25 | 91 | 13,63 |
| டில்லி | 38 | 1,582 | 39 | 1,09 | 38 | 1,86 |
| சென்னை | 1,151 | 221,475 | 88,52 | 65,53 | 1,11,68 | 2,65,73 |
| வட மேற்கு எல்லைப் புற மாகாணம் | 3 | 714 | 59 | 85 | | 1,44 |
| பஞ்சாப் | 1,092 | 50,366 | 25,04 | 44,45 | 26,66 | 96,15 |
| ஐக்கிய மாகாணங்கள் | 156 | 3,138 | 1,24 | 8 | 1,54 | 2,86 |
| | 3,757 | 656,433 | 3,24,06 | 5,26,39 | 1,61,47 | 10,11,92 |

† Page 114. The Indian Central Banking Enquiry Committee Report of 1931.

கடன் கொடுப்பதைத் தவிர மற்ற காரியங்களுக்காக ஏற்படுத்தப்பட்டவை (Non-credit Societies):—கடன் கொடுப்பதற்காக ஏற்படுத்தப்பட்ட சொசைடிகளின் கணக்கு முன் காண்பிக்கப்பட்டது. இதைத் தவிர மற்றெல்லாக் காரியங்களை நடத்துவதற்காகவும், கோ ஆபரேடிவ் சொசைடிகள் ஏற்படுத்தப்பட்டு நடந்து வருகின்றன. சாமான்களை ஒருமித்து எளிய விலைக்கு வாங்குவதற்காகவும் (Purchase Societies), சரக்குகளை விற்பதற்காகவும் (Sales Societies) விவசாயத்திற்கு வேண்டிய விலை பெற்ற சில கருவிகளை வாங்கி, மெம்பர்கள் யாவரும் உபயோகப் படுத்துவதற்காகவும், வீடுகள் கட்டுவதற்காகவும் (House Building Societies), கைத் தொழில்களை விருத்தி செய்வதற்காகவும், இன்னும் மற்றெல்லா விதமான காரியங்களைச் செய்வதற்காகவும், கோ ஆபரேடிவ் சொசைடிகள் உண்டாக்கப்படுகின்றன. மேல் நாடுகளில் பல்லாயிரக் கணக்கான மக்கள் இவ்வியக்கத்தை அனுசரித்து மேன்மை யடைந்திருக்கின்றனர். எளிய குடியானவர்களும் சேர்ந்து, பலவித சௌகரியங்களை யடைவதற்கு இவை உதவியாய் இருக்கின்றன.

ஆனல் நம் நாட்டில் கோ ஆபரேடிவ் சொசைடிகளில் பெரும்பான்மை கடன் கொடுப்பதற்காக ஏற்படுத்தப்பட்ட சொசைடிகளாகத்தான் இருக்கின்றன. கோ ஆபரேடிவ் இயக்கத்தில் உபயோகத்திலிருக்கிற மொத்தத் தொகை தற்காலத்தில் சுமார் 50 கோடி ரூபாய். இதில் சுமார் 45 கோடி ரூபாய் கடன் கொடுக்கும் சொசைடிகளில் உபயோகப்படுத்தப்பட்டு, மிகச் சிறிய தொகையாகிய சுமார் 6 கோடி ரூபாய்தான் வேறுவிதமான சொசைடிகளால்பிரயோஜனப் படுத்தப் படுகிறது. எல்லாத் துறைகளிலும் கோ ஆபரேடிவ் இயக்கத்தின்மூலம் நம்முடைய தேவையை சப்ளை செய்வதற்காக, நாம் முயற்சி செய்ய வேண்டுவது அவசியம்.

கடன் கொடுப்பதைத் தவிர மற்ற காரியங்களுக்காக ஏற்படுத்தப்பட்டிருக்கும் சொசைடிகளின் விவரங்கள் கீழே கொடுக்கப்பட் டிருக்கின்றன.

| † மாகாணங்கள் | சொசைடிகள் | மெம்பர்கள் | ஆயிரம் ரூபாய்களில் பங்குத் தொகையும் காப்புத் திரவியமும் | டிபாஸிட்டுகள் | கடன்கள் | மொத்தம் புழங்கப்பட்ட தொகை |
|---|---|---|---|---|---|---|
| ஆஜ்மீர் மேர்வாரா | 51 | 5,126 | 1,67 | 29 | 1,40 | 3,36 |
| அஸ்ஸாம் | 26 | 3,034 | 68 | 42 | 7 | 1,17 |
| வங்காளம் | 2,736 | 1,22,424 | 23,36 | 7,48 | 51,67 | 82,51 |
| பீகார் ஒரிஸ்ஸா | 8,949 | 2,58,947 | 58,47 | 21,93 | 1,95,81 | 2,76,21 |
| பம்பாய் | 504 | 1,02,994 | 34,87 | 36,67 | 56,05 | 1,27,59 |
| பர்மா | 15 | 1,411 | 71 | 5 | 2 | 78 |
| மத்திய மாகாணங்கள் | 55 | 3,732 | 1,78 | 1,84 | 80 | 4,42 |
| டில்லி | 15 | 442 | 14 | 8 | 2 | 24 |
| சென்னை | 437 | 40,147 | 8,37 | 2,54 | 7,36 | 18,27 |
| வடமேற்கு எல்லைப் புற மாகாணம் | 10 | 839 | 49 | 15 | | 64 |
| பஞ்சாப் | 2,959 | 1,05,141 | 41,67 | 9,32 | 4,72 | 55,71 |
| ஐக்கிய மாகாணங்கள் | 163 | 5,562 | 55 | 22 | 43 | 1,20 |
| | 15,920 | 6,49,796 | 1,72,76 | 80,99 | 3,18,35 | 5,72,10 |

† Page 115 The Indian Central Banking Enquiry Committee Report of 1931.

பாங்கிங் யூனியன்கள் அல்லது சென்ட்ரல் பாங்குகளும், மாகாண பாங்குகளும்:—கோஆபரேடிவ் சொசைடிகள் தங்களுக்குத் தேவையான பணத்தில் ஒரு சிறிய அளவே பங்குத் தொகைகளின் மூலமும் டிபாசிட்டுகளின் மூலமும் பெறுகிறார்கள் என்பது மேல்கண்ட கணக்குகளிலிருந்து தெரியும். அவைகளுக்கு வேண்டிய தொகைகளின் பெரும்பகுதி சென்ட்ரல் பாங்குகள் மூலம் கிடைக்கின்றது. இவைகளின் மெம்பர்களில் பிரைமரி சொசைடிகளும், தனி மனிதர்களும் சேர்ந்திருந்தால் இவைகளுக்கு சென்டரல் பாங்குகள் (Central Banks) என்று பெயர். ஆனால் இவைகளின் மெம்பர்கள் எல்லோரும் பிரைமரி சொசைடிகளாய் இருந்தால், அவைகளுக்கு பாங்கிங் யூனியன் (Banking Unions) என்று பெயர். சென்ட்ரல் பாங்குகளை டிஸ்ட்ரிக்ட் அர்பன் பாங்குகள் (District Urban Banks) என்று சொல்லுவதும் உண்டு.

இவைகள் அநேகமாய் பெரிய ஊர்களில் இருப்பதாலும், நம்பிக்கையுள்ளவர்களால் நிர்வாகம் செய்யப்பட்டு வருவதாலும், இவைகளில் பலர் டிபாசிட்டுகள் போடுகிறார்கள். இந்த டிபாசிட்டுகளையும், அவைகளுடைய பங்குத் தொகைகளையும் காப்புத் திரவியங்களையும் தவிர, இவைகளுக்கு இம்பீரியல் பாங்கு ஆப் இந்தியா முதலிய பாங்குகளில் வேண்டும்போது வாங்கிக்கொள்ளும்படியாகக் கடனும் (Over drafts) கொடுக்கிறார்கள். தவிர, பிரைமரி சொசைடிகளிடத்தில் தங்கள் அவசியத்துக்கு மேற்பட்ட தொகைகள் கையிருப்பு யிருக்கும் சமயத்தில், அவை சென்டரல் பாங்குகளிடத்தில் தான் போட்டு வைக்கப்பட வேண்டும். பிரைமரி சொசைடிகளின் காப்புத் திரவியத்தையும், சென்ட்ரல் பாங்கில்தான் வைக்கப்படுகிறது. சில சென்ட்ரல் பாங்குகள் மிகவும் நம்பிக்கையுள்ளவைகளாகி, முனிசிபாலிடி, ஜில்லா போர்டு முதலிய பொது ஸ்தாபனங்களும் தங்கள் பணத்தை இவைகளில் போட்டுவைக்கின்றன. இவை ஒவ்வொரு மாகாணத்திலும் எவ்வளவு இருக்கின்றனவென்று கீழே காண்பிக்கப்பட்டிருக்கிறது.

| † மாகாணங்கள் | எண் | மெம்பர்கள் | | ஆயிரம் ரூபாய்களில் | | | |
|---|---|---|---|---|---|---|---|
| | | தனி நபர்கள் | சொசைடிகள் | பங்குத் தொகையும் காப்புத் திரவியமும் | டிபாசிட்டுகள் | கடன்கள் | மொத்தம் புழங்கப்படும் தொகை |
| ஆஜ்மீர் மேர்வாரா | 7 | 800 | 780 | 4,17 | 15,53 | 4 | 19,74 |
| அஸ்ஸாம் | 15 | 462 | 1,118 | 2,63 | 13,58 | 2,75 | 18,96 |
| வங்காளம் | 116 | 4,652 | 19,071 | 78,03 | 2,64,91 | 1,12,76 | 4,55,70 |
| பீகார் ஒரிஸ்ஸா | 67 | 2,742 | 9,077 | 36,31 | 1,52,99 | 39,48 | 2,28,78 |
| பம்பாய் | 19 | 6,535 | 4,001 | 36,24 | 1,93,54 | 54,83 | 2,84,61 |
| பர்மா | 12 | 1,072 | 992 | 18,43 | 28,05 | 4,75 | 51,23 |
| மத்திய மாகாணங்கள் | 34 | 48,848 | 3,955 | 48,00 | 1,77,53 | 15,02 | 2,40,55 |
| டில்லி | 1 | 66 | 426 | 1,50 | 12,20 | 1 | 13,71 |
| சென்னை | 31 | 3,484 | 12,923 | 76,60 | 3,53,01 | 1,97,57 | 6,27,18 |
| வடமேற்கு எல்லைப்புற மாகாணம் | 1 | 36 | 114 | 21 | 2,29 | 92 | 3,42 |
| பஞ்சாப் | 118 | 3,472 | 18,928 | 63,23 | 5,75,37 | 66,88 | 7,05,48 |
| ஐக்கிய மாகாணங்கள் | 69 | 5,498 | 5,168 | 35,25 | 53,76 | 4,04 | 93 05 |
| ஆகமொத்தம்... | 400 | 77,667 | 76,553 | 400,60 | 18,42,76 | 4,99,05 | 27,42,41 |

† Page 115 The Indian Central Banking Enquiry Committee Report of 1931.

சென்டரல் பாங்குகளுக்கு வேண்டிய பண உதவி மாகாண (Provincial) கோஆபரேடிவ் பாங்குகளிடமிருந்தும் கிடைக்கின்றன. இம்மாகாண பாங்குகளுக்கு டிபாசிட்டுகள் மூலம் அதிகத் தொகைகள் கிடைக்கின்றன. அன்றியும் இம்பீரியல் பாங்கு ஆப் இந்தியாவிடத்திலிருந்தும் மற்ற பாங்குகளிடத்திலிருந்தும் கடனும் கிடைக்கின்றது.

கவர்ன்மேண்ட்டார் உதவி:—கீழ்க்கண்ட விதங்களில் கவர்ன்மெண்ட்டார் ஐக்கிய நாணயச் சங்கங்கள், அதாவது கோஆபரேடிவ் இயக்கத்துக்கு உதவி செய்கின்றனர்.

1. சில சமயங்களில் சில சொசைடிகளுக்கு அல்லது பாங்குகளுக்கு, கடனாகவாவது அல்லது உதவியாகவாவது (Grants) பணம் கொடுக்கிறார்கள்.

2. கோஆபரேடிவ் சொசைடிகளின் கணக்குகளை தணிக்கை செய்வதற்காக ஏற்படுத்தப்பட்டிருக்கும் சங்கத்துக்கு (Cooperative Federation) பண உதவி கொடுக்கிறார்கள்.

3. கோஆபரேடிவ் சொசைடிகளின் வேலைகளை மேல் பார்ப்பதற்கும், அவர்கள் கணக்கைத் தணிக்கை செய்வதற்கும், அவ்வியக்கத்தைப் பரப்புவதற்காக உழைப்பதற்கும் உத்தியோகஸ்தர்களை ஏற்படுத்தியிருக்கிறார்கள்.

4. சில கோஆபரேடிவ் பாங்குகள் வெளியிட்டிருக்கும் நீண்ட காலக்கடன் சீட்டுகளுக்கு (Debentures) வட்டியை உத்தரவாதம் செய்திருக்கிறார்கள்.

5. தவிர கீழ்க்கண்ட சகாயங்களும் கோஆபரேடிவ் சங்கங்களுக்குக் கொடுக்கப்பட்டிருக்கின்றன.

1. வருமான வரி, ஸ்டாம்பு வரி, ரிஜிஸ்ட்ரேஷன் கட்டணம், இவை கோஆபரேடிவ் சொசைடிகளுக்குக் கிடையாது.

2. ஒரு சொசைடி அல்லது பாங்கிலிருந்து மற்ெறாரு சொசைடி அல்லது பாங்குக்கு பணம் அனுப்பவேண்டியிருந்தால், அப்பணம் செலவில்லாமல் மாற்றித் தரப்படுகிறது.

3. கோஆபரேடிவ் பாங்குகளில் போடப்பட்டிருக்கும் பங்குத்தொகை வகையறுக்களை ஜப்தி செய்ய முடியாது.

4. கோஆபரேடிவ் பாங்கு கொடுத்த கடன் வசூல் செய்யப்பட்ட பிறகுதான், மற்றவர்களுடைய கடன் வசூல் செய்யப்பட வேண்டும்.

எதிர்காலத்தில் கோஆபரேடிவ் இயக்கம் :— எதிர்காலத்தில் கோஆபரேடிவ் இயக்கத்தின் வளர்ச்சிக்கு மிகவும் அதிக இடம் இருக்கின்றது. இதுவரை ஏற்படுத்தப்பட்ட சொசைடிகள் பெரும்பாலும் கடன்கொடுக்கும் சொசைடிகளாகவே யிருக்கின்றன. இவைகளும் குடியானவர்களுக்குப் போதுமான ரொக்க வசதிகளைக் கொடுக்கக்கூடியனவாய் இல்லை. இவ்வியக்கத்தினால் குடியானவர்களுடைய கடனைத் தீர்ப்பதற்கு முடியும் என முதலில் நினைக்கப்பட்டது. இதுவரை இத்துறையில் கோஆபரேடிவ் இயக்கம் அதிகப் பயன்படவில்லை ஏனெனில், குடியானவர்கள் கடனைத் தீர்ப்பதற்கு அவர்களுக்கு உதவிசெய்ய வேண்டுமானால், அவர்களுக்கு நீண்டகாலக் கடன்கள் கொடுத்து, பல வருடத் தவணைகளில் சிறுகச் சிறுக வாபீசு பெற வேண்டும். ஆனால் கோஆபரேடிவ் சொசைடிகளுக்குக் கிடைக்கும் டிபாசிட்டுகள் யாவும் குறுகிய காலத்து டிபாசிட்டுகளா யிருப்பதால், அவைகளை நீண்ட காலக்கடன்களுக்காக உபயோகப்படுத்துவது அசாத்தியமா யிருக்கின்றது. இவ்வியக்கம் குடியானவர்களுடைய கடனைப்போக்க அதிகப் பயன்படாவிட்டாலும், கடன்கள்பேரிலுள்ள வட்டியைக் குறைக்க மிகவும் உதவி செய்திருக்கின்றது.

எதிர்காலத்தில் நீண்டகாலக் கடன் கொடுக்கக்கூடிய பாங்குகள் ஏற்படுத்தப்படுவதுடன், கோஆபரேடிவ் தத்துவப்படி மற்றெல்லாக் காரியங்களைச் செய்வதற்கும் சொசைடிகள் ஏற்படுத்தப்பட வேண்டும். இவ்வியக்கமே குடியானவர்கள் முன்னேற்றத்திற்கும், ஏழைத் தொழிலாளர் முன்னேற்றத்திற்கும், குடிசைக் கைத்தொழில்களின் வளர்ச்சிக்கும் சிறந்த வழி யெனத் தெரிந்து கையாளப்பட வேண்டும்.

தபாலாபீசு சேவிங்ஸ் பாங்குகள்:—(Post offiice Savings Banks) நடுத்தரமான வரும்படி வரக்கூடியவர்கள் தங்கள் வருமானத்திலிருந்து சேமிக்கும் பொருளைப் போட்டு வைப்பதற்கு வேண்டிய வசதிகள் தபாலாபீசு சேவிங்ஸ் பாங்குகள் கொடுத்து உதவுகின்றன. இவைகளில் போடப்படும் டிபாசிட்டுகள் வருஷத்துக்கு வருஷம் வளருவதைக் கீழே காண்க. பொதுஜனங்கள் பணம் சேமித்து வைப்பதற்கு தபாலாபீசு சேவிங்ஸ் பாங்குகள் இன்னுமொரு விதமான வசதியும் அளித்திருக்கின்றன. அவைகளுக்கு காஷ் சர்டிபிகெட்கள் (Cash Certificates) என்று பெயர். வருஷத்துக்கு வருஷம் அவைகளும் வளர்ந்து கொண்டு வருவதையும் காண்க.

கோடி ரூபாய்களில்

| † வருஷம் | தபாலாபீசு சேவிங்ஸ் பாங்கு டிபாசிட்டுகள் | காஷ் சர்டிபிகேட்கள் |
|---|---|---|
| 1926 | 27·23 | 20·96 |
| 1927 | 29·51 | 26·68 |
| 1928 | 32·67 | 30·70 |
| 1929 | 34·49 | 32·30 |
| 1930 | 37·13 | 35·00 |
| 1931 | 37·08 | 38·44 |

† Page 807 The Indian Year Book 1932 Published by the Times of India Press, Bombay.

இந்த டிபாசிட்டுகளின் பேரில் கொஞ்சம் அதிக வட்டியும், செக்குகள் மூலம் பணம் வாபீசு வாங்கும் உரிமையும் இன்னும் சில சௌகரியங்களும் கொடுக்கப்பட்டால், எதிர் காலத்தில் இன்னும் மிக அதிகமான டிபாசிட்டுகள் கிடைக்குமெனத் தோற்றுகிறது.

இன்சூரன்ஸ் கம்பெனிகள் :—பணம் சேமித்து வைப்பதற்கு இன்சூரன்ஸ் கம்பெனிகளும் உதவியாய் இருக்கின்றன. இவைகளில், மக்கள் தங்கள் வருமானத்துக்குத் தக்கவாறு கொஞ்சம் கொஞ்சமாக பல தடவைகளில் கட்டிபின் ஒருமிக்கப் பெறுகின்றனர். நம் தேசத்தில் 1930-ம் வருஷத்தில் 257 இன்சூரன்ஸ் கம்பெனிகள் இருந்தன. அவைகளில் 108 இந்திய கம்பெனிகள். மற்ற 149 அன்னியநாட்டுக் கம்பெனிகளில் 72 ஆங்கிலக் கம்பெனிகள். இந்திய இன்சூரன்ஸ் கம்பெனிகளில் பெரும்பான்மையானவை, அதாவது 71 கம்பெனிகள் ஜீவித (Life) இன்சூரன்ஸில் மாத்திரம் வேலை செய்கின்றன; 18 கம்பெனிகள் ஜீவித இன்சூரன்ஸிலும் மற்ற இன்சூரன்ஸிலும் வியாபாரம் செய்கின்றன. 19 கம்பெனிகள் ஜீவித இன்சூரன்ஸ் இல்லாமல் மற்றவைகளை இன்சூர் செய்யும் வியாபாரம் செய்கின்றன. அன்னியநாட்டுக் கம்பெனிகளில் பெரும்பான்மையானவை, அதாவது 125 ஜீவிதம் தவிர, மற்ற இன்சூரன்சுகளில் வியாபாரம் செய்கின்றன. †

1929-ம் வருஷத்தில் மொத்தமாக 656 ஆயிரம் ஜீவித இன்சூரன்ஸ்கள் செய்யப்பட்டு, அவைகளின் மொத்தம் 142 கோடி ரூபாயும், அவைகளின் லாபம் $7\frac{1}{3}$ கோடி ரூபாயும் ஆயின. இவைகளில் 472 ஆயிரம் இந்திய கம்

† Page 760 The Indian Year Book 1932, Published bv the Times of India Press, Bombay.

பெனிகளால் செய்யப்பட்டு, அவைகளின் மொத்தம் 78 கோடி ரூபாயும் அவைகளின் லாபம் 4 கோடி ரூபாயும் எனக் கணக்குப் போடப்பட்டிருக்கிறது.

ஜீவித இன்சூரன்ஸ் தவிர இந்தியாவில் நடந்த கப்பல் இன்சூரன்ஸ், நெருப்பு இன்சூரன்ஸ் முதலிய இன்சூரன்ஸ் வியாபாரங்களில் 1929-ம் வருஷத்தில் 3 கோடி ரூபாய் கள். இதில் ½ கோடி ரூபாய்தான் இந்திய கம்பெனிகளுக் குக் கிடைத்திருக்கும். மற்ற 2½ கோடி ரூபாய் அன்னிய நாட்டுக் கம்பெனிகளுக்குக் கிடைத்தன.

இந்திய இன்சூரன்ஸ் கம்பெனிகள் தங்கள் பணத்தை இந்தியாவிலேயே உபயோகப் படுத்தினார்கள். அவர்கள் பணம் இந்தியாவின் முன்னேற்றத்திற்குப் பிரயோஜனப் படுகிறது. அது சொத்துக்கள் பேரிலும், கோ ஆபரேடிவ் பாங்குகள் வெளியிடும் டிபென்சர்கள் (debentures) அதா வது கடன் சீட்டுகள் பேரிலும், கைத் தொழில் விருத்திக் காக ஏற்படுத்தப்பட்டிருக்கும் பாங்குகளில் (Industrial Banks) டிபாசிட்டுகளாகவும், உபயோகப்படுத்தப்படுகின் றது. ஆனால் அன்னிய நாட்டு இன்சூரன்ஸ் கம்பெனிகள், தங்களிடம் சேரும் தொகையில் ஒரு சிறு பகுதி தவிர, மீதமான பெரும்பகுதியை அன்னிய நாடுகளில் உபயோகப் படுத்துகின்றன. இவர்களிடத்திலிருக்கும் தொகைகள் நம் நாட்டு மக்களுக்குச் சேர்ந்தனவாக விருந்தும், நம் நாட்டிற் குப் பயன்படாமல் போய்விடுகின்றன. ஆதலால் அன்னிய நாட்டு இன்சூரன்ஸ் கம்பெனிகள் நம் நாட்டில் வியாபாரம் செய்ய வேண்டுமானால், அவர்களிடத்தில் ஒப்படைக்கப் பட்டிருக்கும் பணத்தில் பெரும் பகுதி நம் நாட்டிலேயே உபயோகப்படுத்தப்பட வேண்டுமென்ற நிபந்தனைக்கு அவர் கள் சட்ட மூலம் உட்படுத்தப்பட வேண்டுமென, பாங்கிங்

விசாரணைக் கமிட்டியார் தங்கள் அபிப்பிராயத்தை வெளியிட்டிருக்கின்றனர். †

நாணய மாற்று பாங்குகள் (Exchange Banks):— இந்தியாவில் தற்சமயம் 18 நாணய மாற்று பாங்குகள் இருக்கின்றன. இவை நம் அன்னிய நாட்டு வியாபாரத்துக்கு அவசியமான நாணய மாற்று வேலைகளையும், இன்னும் அன்னிய நாட்டு வியாபாரத்துக்குச் சம்மந்தமான இதா காரியங்களையும் செய்கின்றன. இவை குறிப்பிட்ட காலத்து டிபாசிட்டுகளும் (Fixed deposits), கேட்ட போது கொடுக்கும் டிபாசிட்டுகளையும் (Deposits in Current Account) ஏற்றுக் கொள்ளுகின்றன; அன்னிய நாட்டு உண்டியல்களில் வியாபாரம் செய்கிறார்கள்; கப்பல்களில் ஏற்றப்பட்டிருக்கும் சரக்குகளின் பேரில் பணம் கொடுக்கிறார்கள்; சில சமயங்களில் அன்னிய நாட்டு வியாபாரத்துக்குச் சாதகமான உள் நாட்டு வியாபாரத்துக்கும், அதாவது ஏற்றுமதிச் சரக்குகளை உள் நாட்டிலிருந்து துறைமுகம் கொண்டு போய்ச் சேர்ப்பதற்கும், இறக்குமதிச் சரக்குகளை துறைமுகத்திலிருந்து உள் நாடு கொண்டு போய்ச் சேர்ப்பதற்கும் வேண்டிய பண உதவி செய்கின்றன.

நம் நாட்டிலிருக்கும் 18 நாணய மாற்று பாங்குகளும் அன்னிய நாட்டு மக்களுக்குச் சேர்ந்தவையே. அவைகளில் ஒன்று கூட இந்திய மக்களுக்குச் சேர்ந்ததல்ல. இந்திய மக்களால் இதுவரை நாணய மாற்று பாங்குகள் ஏற்படுத்தப் படாததற்குக் காரணங்கள் பல உள. அவை

† Page 445, The Indian Central Banking Enquiry Committee Report of 1931.

களில் முக்கியமான காரணங்கள் கீழே சொல்லப்பட்டிருக்கின்றன.

1. அன்னிய நாட்டு பாங்குகள் அனைத்தும் அதிகமான மூல திரவியங்களை யுடையனவாகவும், நிறைந்த காப்புத் திரவியத்தைப் பெற்றவைகளாயும் இருக்கின்றன. குறைந்த மூல தனத்துடன் புதிதாக ஆரம்பிக்கப்படும் இந்திய பாங்குகள் இவைகளுடன் போட்டி போட்டு முன் வருவது மிகவும் கடினம்.

2. நாணய மாற்று வியாபாரம் செய்வதற்கு, இங்கிலாந்திலும் ஒரு கிளை ஆபீசு அவசியம் இருக்க வேண்டும். இதற்கு ஆரம்பத்தில் சுமார் 3 வருஷங்களுக்கு மாதம் ஒன்றுக்கு சுமார் ரூ. 5000/-செலவு செய்யவேண்டி ஏற்படும். இவ்வளவு அதிகம் செலவு செய்வது, குறைந்த மூலதனத்தையுடைய இந்திய பாங்குகளுக்குச் சாத்தியமாய் இருப்பதில்லை.

3. இந்திய பாங்குகளுக்கு, இந்திய உள்நாட்டு வியாபாரத்துக்கும் கைத் தொழிலுக்கும் வேண்டிய சேவை செய்வதே போதுமான வேலையாகவும், லாபகரமாகவும் இருக்கிறது.

நாணயமாற்று பாங்குகளின் தற்கால நிலைமை:— நாணயமாற்று பாங்குகள் இந்தியாவில் ஸ்தாபிக்கப்பட்ட ஆரம்ப காலத்தில், அவர்கள் வியாபாரத்துக்குப் போதுமான டிபாசிட்டுகள் இந்தியாவில் கிடைக்கவில்லை. ஆதலால் அதிக வட்டி கொடுத்து இங்கிலாந்தில் அவர்கள் கடன் வாங்கவேண்டி யிருந்தது. ஆனால், தற்காலத்தில் அவர்கள் அவசியத்துக்கு அதிகமான டிபாசிட்டுகள் குறைந்த வட்டிக்கு இந்தியாவிலேயே கிடைக்கின்றன. 1924, 1925, 1926, 1928-ம் வருஷங்களில் இவைகளில் வைக்கப்பட்

டிருந்த மொத்த இந்திய டிபாசிட்டுகள் 70 கோடி ரூபாய் களுக்கு அதிகமாயிருந்தன. அவர்களுக்கு இந்திய டிபாசிட்டுகள் மூலம் கிடைக்கும் பணம், அவர்கள் இந்திய வியாபாரத்துக்காக உபயோகப்படுத்தும் தொகையை விட அதிகமாயிருக்கின்றது. டிபாசிட்டுகள் சேர்ப்பதில் இந்திய ஜாயிண்ட் ஸ்டாக் பாங்குகளுக்கு இவை போட்டியாய் இருக்கின்றன.

அவைகளை சில நிபந்தனைகளுக்கு உட்படுத்த வேண்டும்:—கோஆபரேடிவ் பாங்குகளும், ஜாயிண்ட் ஸ்டாக் பாங்குகளும் கோஆபரேடிவ் சொசைட்டியின் ஆக்ட் (Cooperative Societies Act)டின் கீழும் இந்தியன் கம்பெனீஸ் ஆக்ட்டிங் (The Indian Companies Act) கீழும் ரிஜிஸ்டர் செய்யப்பட்டு, அந்தந்தச் சட்டங்களை அனுசரித்து நடக்கின்றன. ஆனால், நாணயமாற்று பாங்குகள் இந்திய சட்டசபையில் செய்யப்பட்ட யாதொரு சட்டத்தையும் அனுசரித்து நடப்பதில்லை. அவைகளின் தலைமை ஆபீசுகள் வெளிநாட்டிலேயே இருக்கின்றன. அவர்கள் வரவு செலவு விவரம் காட்டும் ஐந்தொகைக் கணக்கிலும் அதாவது பாலன்ஸ் ஷீட்டிலும், இந்திய வியாபாரம் பிரித்துக் காண்பிக்கப்படுவதில்லை. இந்திய பாங்கிங் விசாரணைக் கமிட்டியின் முன்பாகவும், அவைகள் கேட்ட கேள்விக்குச் சரியான பதில்களும் கணக்குகளும் கொடுக்கவில்லை என்றும் புகார் செய்யப்பட்டது. தவிர இவைகளில் இந்திய மக்களுடைய டிபாசிட்டுத் தொகைகள் ஏராளமாயிருந்த போதிலும், இந்திய டிபாசிட்டர்களுக்குச் சட்டபூர்வமாக யாதொரு பாதுகாப்பும் அளிக்கப்படவில்லை.

தேசத்தின் முன்னேற்றத்திற்காகவும் இவைகளைச் சில நிபந்தனைகளுக்கு உட்படுத்த வேண்டியது அவசியமெனத்

தோற்றுகிறது. அவைகள் அனைத்தும் அன்னிய நாட்டுக் கம்பெனிகளாயிருப்பதால், அவர்கள் தங்கள் லாபத்தைக் கருதுவதுடன், நம் நாட்டுக் கைத்தொழில்களுக்கு விரோதமாய் அன்னிய நாட்டுக் கைத்தொழில்களுக்கே ஆதாவு அளிக்கின்றனர். உதாரணமாக அவர்கள் செய்யும் இன்ஷூரன்ஸ் முழுதும் இந்தியக் கம்பெனிகளில் செய்யப்படுவதில்லை; அன்னிய நாட்டுக் கம்பெனிகளில் தான் செய்யப்படுகிறது. சில நாணய மாற்று பாங்குகள் இந்திய வியாபாரத்தைக் கெடுப்பதற்கேற்ற முட்டுக் கட்டைகள் போடுவதாகவும் சிலர் அபிப்பிராயப் படுகின்றனர். இங்ஙனம் அவைகள் இந்திய மக்களுடைய முன்னேற்றத்திற்கு விரோதமான விஷயங்களில் ஈடுபடாமலிருக்கவும், போதுமான பாதுகாப்புகள் சட்டத்தின் மூலம் செய்யப்படவேண்டும்.

இந்திய பாங்கிங் விசாரணைக் கம்மிட்டியார்† இவ்விஷயத்தைப்பற்றி கீழ்க்கண்ட அபிப்பிராயத்தை வெளியிட்டிருக்கின்றனர்.

இந்தியாவில் வியாபாரம் செய்யும் அன்னிய நாட்டு நாணயமாற்று பாங்குகள் அனைத்தும், இந்தியா கவர்ன்மெண்டாரிடத்தில் லைசென்ஸ் பெற்ற பிறகு தான், இந்தியாவில் வியாபாரம் செய்ய அனுமதி கொடுக்கப்படவேண்டும். கீழ்க்கண்ட நிபந்தனைகளுக்கு உட்பட்டு நடக்க ஒப்புக்கொண்ட பாங்குகளுக்குத்தான் லைசென்ஸ் கொடுக்கப்படவேண்டும்.

1. மூலதனமும் காப்புத் திரவியமும் 10லக்ஷம் பவுன்களுக்குக் குறைவாயிருக்கக் கூடாது.

† Page 329 The Indian Central Banking Enquiry Committee Report of 1931.

2. அன்னிய நாட்டு பாங்குகள் தங்கள் மொத்த மூல தனம் காப்புத் திரவியத்தில் 100-க்கு 25-க்கு அதிகமாக இந்தியாவில் கடன் வாங்கக் கூடாது. எச்சமயத்திலும் அவர்களால் இந்திய வியாபாரத்தில் உபயோகப்படுத்தப் பட்டிருக்கும் தொகைக்கு அதிகமாக, இந்தியாவில் கடன்கள் அதாவது டிபாசிட்டுகள் முதலியன வாங்கக் கூடாது.

3. தேர்ந்த இந்திய இன்சூரன்ஸ் கம்பெனிகளில் தங்கள் வியாபாரத்தைச் செய்ய அவர்கள் ஒப்புக்கொள்ள வேண்டும்.

4. இந்த நாணயமாற்று பாங்குகள் முறிந்துபோனால் அவைகளுடைய இந்திய ஆபீசுகளிலுள்ள பணம் இந்தியாவில் அவர்கள் வாங்கின கடனுக்காக ஒதுக்கி வைக்கப்பட வேண்டும்; இவை போதாத சமயத்தில் பாங்குகளின் மற்ற சொத்துக்களிலிருந்தும் இந்திய கடனுக்காக வசூல் செய்யும் உரிமையும் பெறவேண்டும்.

5. அன்னிய நாட்டு பாங்குகள் ஒரு குறிப்பிட்ட அளவு இந்திய மக்களுக்கு உயர்தர உத்தியோகங்கள் கொடுப்பதுமல்லாமல் அவைகளை நாணயமாற்று வியாபாரத்தில் பழக்கவும் வேண்டும்.

**இந்திய பாங்கு முறையின் இரண்டு குறைகள்:**—நம் நாட்டு பாங்கு முறையில் இரு பெருங்குறைகள் இருக்கின்றன. அவைகள் 1. ஒரு தலைமை பாங்கு இல்லாமை. 2. கைத்தொழில் பாங்குகள் இல்லாமை. தற்காலத்தில் இம்பீரியல் பாங்கு ஆப் இந்தியா தலைமை பாங்கு ஸ்தானத்தில் இருந்து வருகிறது. ஆனால் எக்காரணங்களால் அது உண்மையான தலைமை பாங்காக இல்லையென்பதும், ஒரு தலைமை பாங்காக இருக்க முடியாதென்பதும் பின்வரும் பக்கங்களில் விபரமாக எடுத்துரைக்கப்படும். இப்பொழுது

கைத்தொழில் பாங்குகளின் அவசியத்தைப் பற்றியும், அவைகளைப்பற்றிய மற்ற விபரங்களைப் பற்றியும் ஆராய்வோம்.

**கைத்தொழில் பாங்குகள்:—**(Industrial Banks) இவைகள் கைத்தொழில்களை விருத்திசெய்வதற்காகவே ஏற்படுத்தப்படுவன வாகையால் இவைகளுக்கு கைத்தொழில் பாங்குகள் என்று பெயர். கைத்தொழில் அபிவிருத்திக்குப் போதுமான ரொக்க வசதிகளும் ரொக்க உதவியும் இருந்தாலொழிய, நம்நாட்டுக் கைத்தொழில்கள் முன்னேற்றமடைவது அசாத்தியமென முன் பக்கங்களில் சொல்லப்பட்டது. நம் நாட்டுக் கைத் தொழில்களின் அபிவிருத்திக் கேற்ற ரொக்க வசதிகள் தற்காலத்தில் இல்லை யென்பதும் வெளிப்படை. ஜர்மனி முதலிய நாடுகளில் இம்மாதிரி பாங்குகள் ஏற்படுத்தப்பட்டு, கைத்தொழில்கள் விருத்தியடைந்திருக்கின்றன. அந்நாட்டு கவர்ன்மெண்டுகளும் இப்பாங்குகளுக்குப் பலவிதமான உதவி செய்திருக்கின்றன. ஜப்பான் தேசத்துக்கவர்ன்மெண்டார் இப்பாங்குகளுக்கு அதிக உதவி புரிகின்றனர். நம் நாட்டிலும் கைத்தொழில் பாங்குகள் ஏற்படுத்த வேண்டியது மிக அவசியம்.

**கைத்தொழில் கமிஷனுடைய சிபார்சுகள்:—**இந்தியக் கைத்தொழில்களை அபிவிருத்தி செய்வதற்கு வேண்டிய விஷயங்களைப்பற்றி விசாரணை செய்ய ஏற்படுத்தப்பட்டிருந்த கைத்தொழில் கமிஷனுடைய (The Industrial Commission) அபிப்பிராயப்படி ஒரு நல்ல கைத்தொழில் பாங்கு கீழ்க்கண்டவாறு இருக்கவேண்டும்.

1. பங்குத் தொகையும், டிபென்சர் (Debentures) கள், அதாவது பாங்குகளால் வெளியிடப்பட்ட கடன் சீட்டுகள் மூலம் கிடைக்கும் தொகையும் அதிகமாயிருக்க

வேண்டும். வெளி டிபாசிட்டுகளின் பேரில் அதிகம் நம்பி யிருக்கலாகாது.

2. பல கைத்தொழில்களை ஆதரிப்பதில் பாங்கு தன் ரொக்கத்தை உபயோகப்படுத்த வேண்டும்; ஒரு தனிக் கைத்தொழிலுக்கு மாத்திரம் உதவுவதை விட, பல கைத் தொழில்களுக்கு உதவுவது நல்ல பயனைத் தரும்.

3. உதவி கேட்கும் கைத்தொழில்களின் யந்திரங் கள், இடம், முதலியவை நன்கு பரிசீலனை செய்யப்பட வேண்டும்; கைத்தொழிலை நடத்துவதற்கு அத்தியாவசிய மான தொகைகள் தான் கொடுத்துதவப்பட வேண்டும்.

4. பாங்கின் ஆரம்ப காலத்தில் கைத்தொழில்களை ஆரம்பிப்பதற்கு வேண்டிய தொகை கொடுக்க அதிகம் முன் வரக் கூடாது.

5. பாங்குகள், மற்றவர்கள் கைத்தொழில்கள் ஆரம் பிப்பதற்கு உதவி செய்ய வேண்டுமே யொழிய தாங்களே ஆரம்பிக்கக் கூடாது.

கைத்தொழில்களுக்கு உதவி செய்யும் வழிகள் :— மேல் கண்ட நிபந்தனைகளுக்கு உட்பட்டு, கைத்தொழில் பாங்குகள் கீழ்கண்ட வழிகளில் கைத்தொழில் அபிவிருத் திக்கு உதவி செய்யலாம்.

1. அதிக கால, அதாவது 5 வருஷத்திற்குக் குறை யாத டிபாசிட்டுகள் பொது ஜனங்களிடத்திலிருந்து பெற லாம். கைத்தொழில் கம்பெனிகளுடைய சொத்துக்களின் அடவுகளின் பேரில் நீண்ட காலக் கடன்கள் கொடுத்துதவ லாம்.

2. கைத்தொழில்களில் ஈடுபட்டிருக்கும் கம்பெனி கள் வெளியிட்டிருக்கும் டிபென்சர்கள் (Debentures) அல்லது கடன் சீட்டுகளை உத்தரவாதம் (Guarantee)

செய்யலாம். இம்மாதிரி உத்தரவாதம் செய்யப்படும் கம்பெனிகளின் நிர்வாக சபையில், பாங்குக்கு சரியான பிரதிநிதித்துவம் இருக்க வேண்டும். அதன்மூலம் பாங்கின் அக்கரையைப் பாதுகாத்துக் கொள்ளத் தக்கதா யிருக்க வேண்டும்.

3. புதிய கைத்தொழில்களை ஆரம்பிப்பதற்கு அவைகளுக்கு வேண்டிய பங்குத் தொகையின் ஒரு பாகமோ அல்லது முழுதுமோ கொடுத்தல், அல்லது பங்குகளை விற்பனைக்கு மார்கெட்டுக்குக் கொண்டு வருதல்.

4. அவசியமான சமயங்களில், கைத்தொழிலில் ஈடுபட்டிருக்கும் கம்பெனிகளுக்கு அவசியமான ரொக்க உதவி, சரக்குகளின் அடவுகளின்பேரில் கொடுத்தல்.

5. தேவையானால் நம் நாட்டுக் கைத்தொழில்களை விருத்தி செய்வதற்கு அன்னிய நாடுகளில் கடன் வாங்குதல்.



# இருபத்தோராவது அதிகாரம்



## இந்திய பாங்கு முறை (தொடர்ச்சி)

இம்பீரியல் பாங்கு ஆப் இந்தியாவும் ஒரு தலைமை பாங்கின் அவசியமும். இம்பீரியல் பாங்கு ஆப் இந்தியா—இதுவே தற்சமயம் இந்தியாவுக்கு தலைமை பாங்குபோல் இருப்பது. மற்ற தேசங்களில் தலைமை பாங்குகள் (Central Banks) செய்கின்ற சேவைகள் பலவற்றையும் இம்பீரியல் பாங்கு ஆப் இந்தியா செய்வதில்லை. ஆதலால் நம் நாட்டில் ஒரு தலைமை பாங்கு ஏற்படுத்த வேண்டிய அவசியத்

தைப்பற்றியும், இப் பாங்கு, இந்திய பாங்கு முறையில் எவ்வித ஸ்தானத்தை வகித்து, எம்மாதிரி சேவைகளைச் செய்து வருகின்றதெனவும், இன்னும் அதன் மற்ற விபரங்களைப் பற்றியும் இவ்வத்தியாயத்தில் சொல்லப்படும்.

தற்காலத்தில் இம்பீரியல் பாங்கு ஆப் இந்தியா என்று வழங்கப்படுவது, முன் மதராஸ் பாங்கு (Bank of Madras), வங்காள பாங்கு (Bank of Bengal), பம்பாய் பாங்கு (Bank of Bombay) என்று வழங்கி வந்த மூன்று பாங்குகளையும் ஒன்றாகச் சேர்த்து, 1921 ம் வருஷத்தில் உண்டாக்கப்பட்டது. இவை பல பங்குக்காரர்களால் பங்குகள் எடுத்துக்கொள்ளப்பட்டு, சாதாரணமாக கடன் கொடுத்து லாபம் சம்பாதிப்பதற்கு ஏற்படுத்தப்பட்ட மற்ற பாங்குகள்போல் ஏற்படுத்தப்பட்டவை. இவைகள் ஒன்றாக சேர்க்கப்பட்டு இம்பீரியல் பாங்கு ஆப் இந்தியாவாகச் செய்யப்பட்ட பிறகும், அது ஒரு பாங்குக்காரர்கள் பாங்காகவே யிருக்கிறது. மற்ற பாங்குகளுடன் இன்னும் வியாபாரத்தில் போட்டி போடுகின்றது. கவர்ன்மெண்டாருடைய பணமும் இப்பாங்கில் போடப்பட்டு, அது கவர்ன்மெண்டாருக்கு வேண்டிய பாங்கிங் வேலையையும் செய்து வருகிறது.

இம்பீரியல் பாங்கு ஆப் இந்தியா செய்யும் சேவை:— இப்பாங்கு கீழ்க்கண்ட வேலைகளைச் செய்கிறது.

1. அது கவர்ன்மெண்டாரின் டிரசரி (Treasury) அல்லது கஜானா வேலையைச் செய்து வருகிறது. கவர்ன்மெண்டின் சார்பில் வசூல் செய்யப்படும் தொகைகள் இம்பீரியல் பாங்கு ஆப் இந்தியாவில் கட்டப்படுகிறது. கவர்ன்மெண்டார் வேண்டும்போது, வேண்டிய இடத்தில் அவர்களுக்கு அத்தொகைகள் கொடுக்கப்படுகின்றன.

2. அது கவர்ன்மெண்டாரின் கடன் (Public debt) சம்பந்தமான விஷயங்களைச் செய்து வருகிறது. இதற்காக ஒரு குறிப்பிட்ட லாபம் பாங்குக்குக் கொடுக்கப்படுகிறது.

3. இது மற்ற பாங்குகளுக்கு ஒரு தலைமை பாங்கு போலிருக்கிறது. பிரதான பாங்குகளில் பல, இம்பீரியல் பாங்கு ஆப் இந்தியாவில் பணம் போட்டு வைத்திருக்கின்றன. இந்த டிபாசிட்டுகளின் மொத்தம் காலத்தை அனுசரித்து மாறிக்கொண்டிருக்கும். 1925-ம் வருஷத்திலேயே இந்தத் தொகை ஒரு சமயத்தில் $13\frac{1}{2}$ கோடி ரூபாயாகவும், மற்றொரு சமயத்தில் 2 கோடி ரூபாயாகவும் இருந்தது.

4. இது கிளியரிங் ஹவுஸ்களை (Clearing Houses) நிர்வாகம் செய்கிறது.

கிளியரிங் ஹவுஸ்கள் (Clearing Houses) :— செக் (Cheques) களின் உபயோகத்தால், நாணயங்களுடைய புழக்கத்தைக் குறைக்க முடியுமென முன் சொல்லப்பட்டது; செக்குகள் ஒவ்வொன்றுக்கும் பணம் கொடுப்பதற்குப் பதிலாக, அவைகளைக் கணக்குகள் மூலம் வரவு செலவு செய்துகொள்ள முடியும். உதாரணமாக ஒரு ராமசாமி செட்டியார் ஒரு கிருஷ்ணசாமி செட்டியாருக்கு ரூ. 1000-க்கு இந்தியன் பாங்குச் செக் ஒன்று கொடுப்பதாக வைத்துக் கொள்வோம். கிருஷ்ணசாமி செட்டியாருக்கு இந்தியன் பாங்கில் கணக்கில்லை; ஆனால், நெடுங்காடி பாங்கில் இருக்கிறது. ஆதலால், நெடுங்காடி பாங்குக்கு இச் செக்கை அனுப்பி, அதை வசூலித்துத் தன் கணக்கில் வரவு வைத்துக்கொள்ளும்படி தெரிவிக்கிறார். இந்தச் செக்குக்காக இந்தியன் பாங்கு நெடுங்காடி பாங்குக்கு ரூ. 1000/- கொடுக்க வேண்டி ஏற்படுகிறது. இம்மாதிரியே ஒரு சாம்பசிவம் பிள்ளை ஒரு தீர்த்தகிரி முதலியா

ருக்கு நெடுங்காடி பாங்கு செக் ஒன்று கொடுத்தது; தீர்த்த கிரி முதலியாருக்கு நெடுங்காடி பாங்கில் கணக்கில்லாததால், அதை அவர் இந்தியன் பாங்குக்கு அனுப்பினால், இதன் மூலம் நெடுங்காடி பாங்கு இந்தியன் பாங்குக்கு ரூ. 1000/- கொடுக்கவேண்டி யிருக்கும். பாங்குகளும் ஒன்றுக்கொன்று வரவு செலவுகளில் பணமாகவே கொடுப்பதைவிட, கணக்கு கள் மூலம் வரவு செலவு செய்துகொள்வது சௌகரியமா யிருக்கும்.

ஒரு பெரிய ஊரில் இரண்டு பாங்குகள் மாத்திர மல்ல, அநேக பாங்குகள் இருக்கும். ஒரு பாங்கிலிருந்து மற்ற பாங்குக்கு வரவேண்டிய தொகைகளும் முன் உதாரணத்தில் காட்டிய மாதிரி ஒன்றுக்கொன்று சரியாக யில்லாமல் ஏறத் தாழ இருக்கும். ஒவ்வொரு பாங்குக்கும் சில பாங்கு களினிடத்தில் செக்குகளுக்காக பணம் வசூலிக்க வேண்டி யிருக்கும். சில பாங்குகளுக்குக் கொடுக்கவேண்டி யிருக்கும். பாங்குகளின் பிரதிநிதிகள் அனைவரும், ஒவ்வொருவரும் தாங்கள் வசூலிக்க வேண்டிய செக்குகளைக் கொண்டுவந்து ஒரு பொது இடத்தில் சந்தித்தால், அங்கு இச் செக்களின் கணக்கு எடுக்கப்பட்டு, எந்தெந்த பாங்குகள் எந்தெந்த பாங்குகளுக்கு எவ்வளவு தொகைகள் கொடுக்க வேண்டு மெனப் புலப்படும். இப்படிப் பாங்குகள் பிரதிநிதிகள் கூடி இக் கணக்குகளைப் பார்க்கு மிடத்துக்கு கிளியரிங் ஹவுஸ் கள் (Clearing Houses) என்று பெயர்.

இப்படிச் செக்குகளின் கணக்கைப் பார்ப்பதில், ஒரு பாங்கு மற்றொரு பாங்குக்குப் பணம் கொடுக்க நேரிட்டால் இதைப் பணமாகக் கொடுப்பதற்குப் பதிலாக மற்றொரு விதமாகவும் கொடுக்கலாம். பாங்குகள் எல்லாம் ஒரு தலைமை பாங்கில் கணக்குவைத்துக் கொண்டிருந்தால், ஒரு

பாங்கு மற்றொரு பாங்குக்குக் கொடுக்கவேண்டிய தொகை களை, தலைமை பாங்கின் கணக்குப் புஸ்தகங்களில் வரவு செலவு செய்துகொள்ளலாம். இதுவே தலைமை பாங்கு ஒன்று அவசியமென்று சொல்லுவதற்கு ஒரு காரணமாகும். இம்பீரியல் பாங்கு ஆப் இந்தியா தற்காலத்தில் அம்மாதிரி பாங்காக விருந்து கிளியரிங் ஹவுஸ்களையும் நிர்வாகம்செய்து வருகிறது. கல்கத்தா, பம்பாய், மதராஸ், ரங்கூன், காராச்சி இவ்வூர்களிலிருக்கும் கிளியரிங்ஹவுஸ்கள் பிரதானமானவை.

5. நாட்டில் லேவாதேவி, அதாவது பாங்கிங் சௌகரி யங்களை யதிகப்படுத்துவதற்காக, 1926-ம் வருஷம் மார்ச்சு மாதம் 16-ம் தேதிக்குள் புதிதாக 100 கிளை ஆபீசுகள் இம் பீரியல் பாங்கு ஆப் இந்தியாவால் திறக்கப்பட வேண்டு மென சட்டப்படி நிபந்தனை போடப்பட்டு அதன்படியே அந்தத் தேதிக்குள் 102 கிளை ஆபீசுகள் திறக்கப்பட்டன. இவ்விடங்களிலெல்லாம் அந்தந்த இடங்களுக்கேற்ற ரொக்க வசதிகள் இப்பாங்கால் செய்து கொடுக்கப்படுகிறது.

6. பணம் அதிகத் தேவையாயிருக்கிற காலங்களில் கரன்சி நோட்டு காப்புத் திரவியத்திலிருந்து, 12 - கோடி ரூபாய்க்கு அதிகப்படாமல் தொகைகள் கடனாகப் பெற்று, உள்நாட்டு உண்டியல்களில் வியாபாரம் செய்கின்றது. 1920-ம் வருஷத்தில், கரன்சி நோட்டுக் காப்புத் திரவியத் தின் நிர்வாகத்திற்காக, 1920-ம் வருஷம் செய்த சட்டத் தில், இவ்விஷயம் குறிப்பிடப்பட்டிருந்தது.

7. ரொக்கம் ஒரு இடத்திலிருந்து மற்றொரு இடத் துக்கு மாற்றுவதற்கு வேண்டிய சௌகரியங்கள் செய் கின்றது.

**அதன் நிபந்தனைகள்:**—இம்பீரியல் பாங்கு ஆப் இந்தி யாவில் கவர்ன்மெண்டார் தங்கள் ஏராளமான ரொக்கத்

தைப் போட்டு வைப்பதாலும், இன்னும் பொது ஜனங்களும் ஏராளமாக டிபாசிட்டு செய்திருக்கிறபடியாலும், தவிர இப்பாங்கை இந்தியாவின் தலைமை பாங்காகச் செய்ய வேண்டு மென்ற எண்ணத்தைக் கொண்டும், மூன்று மாகாண பாங்குகளையும் சேர்த்து இப் பாங்கு உண்டாக்கப் பட்ட சமயத்தில், சட்டபூர்வமாக கீழ்க்கண்ட நிபந்தனைகளுக்கு அது உட்படுத்தப்பட்டது.

1. ஆறு மாதங்களுக்கு அதிகமான காலத்துக்குக் கடன் கொடுக்கக் கூடாது.

2. பாங்கின் பங்குகள் பேரில் கடன் கொடுக்கக் கூடாது.

3. ஸ்தாவர சொத்துக்கள் பேரில் கடன் கொடுக்கக் கூடாது.

4. கவர்ன்மெண்டு பத்திரங்கள் (Government Bonds) அல்லது சட்டத்தில் அனுமதிக்கப்பட்ட சொத்துக்களின் (Trustee Securities) பேரில் தவிர, எந்த தனி மனிதர் அல்லது கூட்டுக் கம்பெனிக்கும் 20 லக்ஷம் ரூபாய்க்கு அதிகமாகக் கடன் கொடுக்கக் கூடாது.

5. இரண்டு அல்லது அதற்கு மேற்பட்ட நபர்கள் கையொப்பமிட்ட புரோ நோட்டு வகையறுக்களின் பேரில் தான் கடன் கொடுக்கப்பட வேண்டும்.

6. பொறுப்புக் கடன் (Cash Credits) ஒரு லக்ஷம் ரூபாய்க்கு அதிகமாகக் கொடுக்கக் கூடாது.

7. பாங்கில் லண்டன் கிளை ஆபீசில் பாங்கின் வரவு செலவு ஆசாமிகளுக்குத் தவிர, வேறு எவருக்கும் கணக்கு ஏற்படுத்தக்கூடாது.

8. அன்னிய நாட்டு நாணய மாற்று வியாபாரம் செய்யக் கூடாது.

பாங்கின் நிர்வாகமும், அதில் கவர்ன்மேண்டின் அதிகாரமும்:—பாங்கின் நிர்வாகம் ஒரு மத்திய நிர்வாக சபையால் (Central Board of Governors) செய்யப்படுகின்றது. கல்கத்தா, பம்பாய், சென்னை—இவ்விடங்களிலுள்ள பாங்குகளின் நிர்வாகத்தைக் கவனிப்பதற்கு, தன் நிர்வாக சபைகளும், அதாவது லோகல் போர்டுகளும் (Local Boards) உண்டு. மற்ற ஊர்களிலுள்ள பாங்குகளுக்கும் இம்மாதிரி நிர்வாக சபைகள் ஏற்படுத்த வேண்டுமானால், மத்திய நிர்வாக சபையார், கவர்னர்-ஜெனரல்-இன் கவுன்சிலின் அனுமதியைப் பெற்றுச் செய்யலாம்.

மத்திய நிர்வாக சபையில் கீழ்க்கண்ட நபர்கள் அங்கத்தினரா யிருப்பார்கள்.

1. மானேஜிங் கவர்னர்கள் (இம்பீரியல் பாங்கு ஆப் இந்தியாவின் டைரக்டர்களுக்கு கவர்னர்கள் என்று பெயர்.) இரண்டு பேர்கள். இவர்கள் மத்திய நிர்வாக சபையின் சிபார்சின்பேரில் கவர்னர்—ஜெனரலால், நியமிக்கப் படுவார்கள்; இவர்கள் உத்தியோகத்துக்குக் கால வரம்பு இல்லை; அவர்கள் கவர்னர் ஜெனரலால் நீக்கப்படும் வரை இவ்வுத்தியோகத்தை வகிப்பார்கள்.

2. பங்குக்காரர்களின் பிரதிநிதிகளாக, லோகல் போர்டுகளின் அக்கிராசனாதிபதியும் (President) உப அக்கிராசனாதிபதிகளும் (Vice Presidents) காரியதரிசிகளும் (Secretaries) மத்திய நிர்வாக சபையின் மெம்பர்களாக விருப்பார்கள்.

3. கன்ட்ரோலர் ஆப் கான்சி அதாவது நாணய முறையை நிர்வகிக்கும் கவர்ன்மெண்டு உத்தியோகஸ்தர், அல்லது கவர்ன்மெண்டு நியமிக்கும் ஒரு உத்தியோகஸ்தர்.

4. பொது ஜனங்களுடைய அக்கரையும் வரி கொடுப்போரின் அதிகாரத்தையும் பாதுகாப்பதற்காக, இவர்களுடைய பிரதிநிதிகளாக கவர்ன்மெண்டார் மத்திய நிர்வாக சபைக்கு நான்கு பேர்களுக்கு அதிகப்படாமல் நியமிக்கலாம்.

புதிதாக உண்டாக்கப்படும் லோகல் போர்டுகளின் பிரதிநிதிகளும், மத்திய நிர்வாக சபையார் யுக்தப்படி, சேர்த்துக்கொள்ளப்படலாம். கன்ட்ரோலர் ஆப் கான்சிக்கும், லோகல் போர்டின் காரியதரிசிகளுக்கும் ஓட் செய்யும் உரிமையில்லை.

மத்திய நிர்வாக சபை, பொது பாங்கு முறையையும், லோகல் போர்டுகள் பேரில் மேல் பார்வையையும் ஒவ்வொரு இடத்திற்கும் எவ்வளவு ரொக்கம் அனுப்பவேண்டுமென்பதையும், பாங்கு ரேட் அல்லது பாங்கின் வட்டி விகிதத்தையும் தீர்மானிப்பதுடன், பாங்கின் வாரக் கணக்கை வெளியிடும் பொறுப்பையும் வகித்திருக்கிறது. லோகல் போர்டுகள் தங்கள் எல்லைக்குட்பட்ட காரியங்களை கவனிக்கின்றன. பாங்கின் தினசரி விஷயங்களைக் கவனிப்பதற்கு ஒரு சிறிய கமிட்டி, இரண்டு நிர்வாக உத்தியோகஸ்தர்களையும் கன்ட்ரோலர் ஆப் கான்சியையும் சேர்த்து ஏற்படுத்தப்பட்டிருக்கிறது.

மேல்கண்டபடி பாங்கின் நிர்வாக உத்தியோகஸ்தர்களையும், பாங்கின் மத்திய நிர்வாகசபைக்கு அங்கத்தினர்களையும் ஏற்படுத்துவதையும் தவிர, பாங்கின் நிர்வாகத்தில் கவர்ன்மெண்டுக்கு வேறுவிதமாகவும், அதிகாரம் உண்டு.

1. கவர்ன்மெண்டின் டிபாசிட்டுகளை, அல்லது கவர்ன்மெண்டின் நாணயம் அல்லது ரொக்க திட்டங்களைப்பற்றிய அல்லது அவைகளுக்குச் சம்பந்தமான விவகாரங்களின் நிர்

வாகத்தில் எப்படிச் செய்யவேண்டுமென்று சொல்ல, கவர்ன் மெண்டாருக்கு அதிகாரம் உண்டு.

2. பாங்கின் நிர்வாகத்தைப்பற்றித் தெரிவிக்கும்படிக் கும், பாங்கின் வரவு செலவு நிலைமையைப்பற்றியும் மற்ற விவகாரங்களைப்பற்றியும் அறிக்கையிடும்படி கவர்ன்மெண் டார் கேட்கலாம்.

3. பாங்கின் கணக்குகளைத் தணிக்கை செய்ய கவர்ன் மெண்டார் கணக்குப் பரிசோதகர்கள், அதாவது ஆடிட்டர் களை (Auditors) ஏற்படுத்தலாம்.

பாங்கின் டிபாசிட்டுகள்:—இப்பாங்கு கவர்ன்மெண் டாருக்கு வேண்டிய பாங்கிங் சம்மந்தமான வேலைகளைச் செய்வதாகச் சொல்லப்பட்டது. அதற்காக கவர்ன்மெண் டாருடைய ரொக்க முழுதும் இப்பாங்கில் வட்டியின்றிப் போட்டு வைக்கப்படுகிறது. கவர்ன்மெண்டுக்குச் செல்ல வேண்டிய வரிகள் முதலிய அனைத்தும் இப்பாங்கு மூலமா கவே கவர்ன்மெண்டுக்குக் கொடுக்கப்படுகிறது. அதாவது கவர்ன்மெண்டார் வரி முதலியவைகள் மூலம் வருஷம் ஒன் றுக்கு வசூலிக்கும் சுமார் 225 கோடி ரூபாய்களும் இப்பாங் குகள் மூலம் பெற்று இப்பாங்குகள் மூலம் செலவு செய் யப் படுகிறது. கவர்ன்மெண்டார் இப்பாங்கில் சம்பந்தம் வைத்துக் கொண்டிருக்கும் காரணத்தால், பொதுஜனங் களுக்கும் இதன் பேரில் நம்பிக்கை ஏற்பட்டு, ஏராளமான டிபாசிட்டுகள் வைத்திருக்கின்றனர். இந்த டிபாசிட்டுகளின் மூலம், இப்பாங்கு ஏராளமான லாபத்தை யடைகிறது.

1922-ம் வருஷத்திலிருந்து 1928-ம் வருஷம் வரை கவர்ன்மெண்டு டிபாசிட்டுகளும், பொது ஜனங்களுடைய டிபாசிட்டுகளும் கீழே காண்பிக்கப்பட்டிருப்பதுடன், பாங் கின் மூலதிரவியமும், காப்புத் திரவியமும், கையிருப்பும்,

மொத்த டிபாசிட்டில் கவர்ன்மெண்டு டிபாசிட்டின் விகிதம், மொத்தத் தொகையில் கவர்ன்மெண்டு டிபாசிட்டின் விகிதம் முதலியன காண்பிக்கப்பட்டிருக்கின்றன.

லக்ஷ ரூபாய்களில்

| † டிசம்பர் 31 | மூலதிரவியம் | காப்புத்திரவியம் | கவர்மெண்டு டிபாசிட்டுகள் | மற்ற டிபாசிட்டுகள் | மொத்த டிபாசிட்டில் கவர்மெண்டு டிபாசிட்டு 100-க்கு எவ்வளவு பங்கு | பாங்கின் மொத்தத்தொகையில் கவர்மெண்டு டிபாசிட்டுகள் 100-க்கு எவ்வளவு பங்கு | கையிருப்பு |
|---|---|---|---|---|---|---|---|
| 1922 | 5,62 | 4,33 | 14,16 | 57,00 | 24·8 | 17·4 | 15,07 |
| 1923 | 5,62 | 4,55 | 8,57 | 74,19 | 11·5 | 9·2 | 15,01 |
| 1924 | 5,62 | 4,80 | 7,50 | 76,71 | 9·9 | 7·9 | 15,60 |
| 1925 | 5,62 | 4,93 | 5,46 | 77,83 | 7·0 | 5·8 | 17,47 |
| 1926 | 5,62 | 5,09 | 6,45 | 73,90 | 8·7 | 7·1 | 20,90 |
| 1927 | 5,62 | 5,24 | 7,20 | 72,07 | 10·0 | 8·0 | 10,89 |
| 1928 | 5,62 | 5,39 | 7,95 | 71,30 | 11·1 | 8·9 | 10,57 |

மேற்கண்ட கணக்கிலிருந்து, கவர்ன்மெண்டாருடைய டிபாசிட்டுகள் எவ்வளவு அதிகமாக இம்பீரியல் பாங்கு ஆப் இந்தியாவில் வைக்கப்பட்டு, அவைகளின் மூலம் அப்பாங்கு பயன் பெறுகின்றது என்பதை நேயர்கள் கவனித்திருப்பார்கள். கவர்ன்மெண்டின் டிபாசிட்டால், அதன் மூலம் நேரில் கிடைக்கக்கூடிய லாபத்தைத் தவிர, இதன் காரண

† Page 26 The Indian Central Banking Enquiry Committee Report of 1931.

மாகவே பொது ஜனங்களுக்கு இப்பாங்கில் நம்பிக்கை யதிகமாகி, பெருவாரியாக டிபாசிட் செய்திருப்பதும் குறிப்பிடத் தக்கது.

பாங்கின் தற்கால நிலைமை:—இப்பாங்கில் போடப்படும் ஏராளமான டிபாசிட்டுகள் எப்படி உபயோகப்படுத்தப்படுகின்றன வென்பதையும், பாங்கின் ரொக்க வியாபாரம் எம்மாதிரி செய்யப்படுகிற தென்பதையும், பாங்காரால் 30-6-31-ந்தேதியில் பிரசுரிக்கப்பட்ட கீழ்க்கண்ட பாலன்ஸ் ஷீட் (Balance sheet)டில், அதாவது வரவு செலவு கணக்கிலிருந்து தெளிவாகக் காணலாம்.

| வரவுகள் (Liabilites) | | பற்றுகள் (Assets) | |
|---|---|---|---|
| வாக்களித்த மூலதனம் (Subscribed Capital) | 11,25,00,000-0-0 | 1. கவர்ன்மெண்ட்டு கடன் பத்திரங்கள் (Govt. Securities) | 28,18,53,192-2-1 |
| 1. மூலதனம் (Paid up Capital) | 5,62,50,000-0-0 | 2. மற்ற சட்டத்தில் ஒப்புக் கொள்ளப்பட்ட அடவுகள் பேரில் கொடுக்கப் பட்ட கடன்கள் | 2,59,38,568-14-4 |
| 2. காப்புத் திரவியம் | 5,42,50,000-0-0 | | |
| 3. பொது டிபாசிட்டுகள் | 15,86,88,876-14-2 | | |
| 4. மற்ற டிபாசிட்டுகள் | 66,15,34,490-12-2 | | |

| | | | |
|---|---|---|---|
| 5. கவர்ன்மெண்டாரிடத்தில் கரன்சி நோட்டுக் காப்புத் திரவியத்திலிருந்து, உள்நாட்டு உண்டியல்களின் பேரில் கொடுப்பதற்காக வாங்கப் பட்ட கடன் | ... ... ... | 3. சாக்குகள் பேரில் கடன் (Loans) | 9,08,91,176-3-5 |
| | | 4. பொறுப்புக் கடன் (Cash credits) | 30,19,11,766-0-10 |
| | | 5. உள் நாட்டு உண்டியல்கள் பேரில் கொடுக்கப் பட்டது. | 3,36,92,533-4-5 |
| | | 6. அன்னிய நாட்டு உண்டியல்கள் பேரில் கொடுக்கப்பட்டது. | 2,27,226-13-9 |
| | | 7. தங்கம் | ... ... ... |
| 6. மற்ற வகைகள் | 94,48,731-8-5 | 8. ஸ்தாவர சொத்துக்கள் | 2,71,99,349-3-6 |
| | | 9. மற்ற வகைகள் | 67,50,750-9-6 |
| | | 10. மற்ற பாங்குகளில் இருப்பு | 9,22,450-1-0 |
| | | | 76,93,87,013-4-10 |
| | | 11. கையிருப்பு | 17,17,85,085-13-11 |
| | 94,11,72,099-2-9 | | 94,11,72,099-2-9 |

† Page 667. The Indian Year Book 1932 published by the Times of India Press, Bombay.

மேலே காண்பிக்கப்பட்ட கணக்கில் வரவுகளைப்பற்றி விவரித்துச் சொல்லவேண்டிய அவசியமில்லை. அவைகளைப் பற்றி முன்னமேயே சொல்லப்பட்டிருக்கிறது. பற்றுகளில் முதல் புள்ளி கவர்ன்மெண்டு கடன் பத்திரங்கள் என்பது. இவை கவர்ன்மெண்டுக்கு இம்பீரியல் பாங்கால் கொடுக்கப்பட்ட கடன்கள். இரண்டாவது புள்ளி சட்டத்தில் ஒப்புக்கொள்ளப்பட்ட அடவுகளின் பேரில் கொடுக்கப்பட்ட கடன்கள். 3, 4, 5 அயிட்டங்கள் வியாபாரிகளுக்கு, ஆறு மாதங்களுக்கு அதிகப்படாமல் கொடுக்கப்பட்ட ரொக்க வசதிகள். அன்னிய நாட்டு உண்டியல்களில் வியாபாரம், பாங்கின் கூலிக்காரர்களுக்கு மாத்திரமே செய்யப்படும் என்பது முன்னமேயேசொல்லப்பட்டது. கடைசி அயிட்டம் கையிருப்பு என்பதைக் கவனிக்கவேண்டும். டிபாசிட்டர்களுடைய தேவைக்கு உடனே பணம் கொடுப்பதற்காகவே அவ்வளவு அதிகமான கையிருப்பு வைத்துக்கொள்ளப்படுகிறது. அது பாங்கின் பலத்தைக் காட்டும் அறிகுறியாகும்.

இப்பாங்கின் குறைகள்:—இப்பாங்கு மேற்கண்ட சேவைகளைச் செய்து வந்தபோதிலும், இதன்பேரில் தகுந்த காரணத்துடன் பல குறைகள் சொல்லப்படுகின்றன. இக்குறைகளுக்கு முக்கிய காரணம், அது பிரதானமாக அன்னிய நாட்டார் ஆளுகைக்கு உட்பட்டிருப்பதே. கீழ்க்கண்ட குறைகள் இப்பாங்கின்பேரில் சொல்லப்படுகின்றன.

1. இதில் பெரும்பான்மையான பங்குக்காரர்கள் ஆங்கிலேயர்களாகவே இருக்கின்றனர். ஆதலால் இப்பாங்கில் ஆங்கிலேயர்களுக்கு அதிக செல்வாக்கிருக்கின்றது. ஆங்கிலேய வியாபாரிகளுக்கும், ஐரோப்பிய வியாபாரிகளுக்குமே, இந்திய வியாபாரிகளுக்குக் கொடுக்கப்படுவதை விட அதிக உதவி கொடுக்கப்படுவதாகச் சொல்லப்படுகிறது. பல சமயங்களில் இந்திய வர்த்தகர்களுக்குப் போதுமான உதவியளிக்கப்படுவதில்லை. குறிப்பாக ஆங்கில வர்த்தகர்களுக்குப் போட்டியாக விருக்கும் இந்திய வர்த்தகர்களுக்குச் சரியான ரொக்க உதவி செய்யப்படுவதில்லை என்று இந்திய வியாபாரிகள் புகார் செய்கின்றனர்.

2. பாங்கை நிர்வாகம் செய்யும் நிர்வாக சபையில் போதுமான அளவு இந்தியர்களுக்குப் பிரதிநிதித்துவம் கொடுக்கப்படவில்லை.

3. இப்பாங்கின் உயர்தர உத்தியோகஸ்தர்களும் அநேகமாய் ஆங்கிலேயரா யிருக்கின்றனர். போதுமான அளவு இந்திய மக்களுக்கு உயர்தர உத்தியோகம் கொடுக்கப்படுவதில்லை. தவிர நம் மக்களுக்கு பாங்கிங் வியாபாரத்தில் யாதொரு பயிற்சியும் இப் பாங்காரால் கொடுக்கப்படுவதில்லை. 1925 முதல் 1930வரை அதில் எவ்வளவு இந்திய உயர்தர உத்தியோகஸ்தர்கள் இருந்தனர் என்பது கீழே காண்பிக்கப் பட்டிருக்கிறது:

| * | இங்கிலாந்தில் தேர்ந்தெடுக்கப் பட்டவர்கள். | | இந்தியாவில் பாங்கின் உத்தியோகஸ்தர்களி லிருந்து தேர்ந்தெடுக்கப் பட்டவர்கள் |
|---|---|---|---|
| வருஷம் | ஆங்கிலேயர் | இந்தியர்கள் | இந்தியர்கள் |
| 1925 | 32 | 1 | 13 |
| 1926 | 6 | 1 | |
| 1927 | 3 | 1 | 1 |
| 1928 | 8 | 1 | 4 |
| 1929 | 6 | | 7 |
| 1930 | | | 1 |

*Page 372. The Indian Central Banking Enquiry Committee Report of 1931.

4. பாங்கின் நிர்வாகத்தில் கவர்ன்மெண்டின் மேல் பார்வை போதுமான அளவு இல்லை.

5. இப்பாங்கு கவர்ன்மெண்டு டிபாசிட்டுகளாலும், மற்ற டிபாசிட்டுகளாலும் பெருத்த லாபத்தை யடைகிறது. இதன் பங்குக் காரர்களில் பெரும் பான்மையோர் ஆங்கிலேயரா யிருப்பதால், இந்த லாபத்தின் பெரும்பகுதி அன்னிய நாட்டுக்கே அனுப்பப்படுகிறது. அன்னியநாட்டுக்குப் பிரதி வருஷமும் அனுப்பப்படும் இத் தொகைகள் நம் நாட்டுக்கு நஷ்டமானவையாகும்.

ஒரு தலைமை பாங்கின் அவசியம்:—நம் பாங்கு முறைக்குத் தலைமை வகித்து, நம் பொருளாதார முன்னேற்றத்திற்காக உழைக்க நம் நாட்டில் ஒரு தலைமை பாங்கு இல்லாமலிருப்பது ஒரு பெருங்குறையென முன்னமேயே சொல்லப்பட்டது. சுயேச்சை பெற்ற எல்லா நாடுகளிலும், அந்நாட்டார் முன்னேற்றத்திற்கு ஏற்றவாறு உதவிசெய்ய தலைமை பாங்குகள் ஏற்படுத்தப்பட் டிருக்கின்றன. நம் நாட்டிலும் ஒரு தலைமை பாங்கு (Central Bank), அல்லது ரிசர்வ் பாங்கு (Reserve Bank) ஏற்படுத்தப்பட வேண்டுமென ஹில்டன் யங் கமிஷனர்களும் சிபார்சு செய்திருக்கின்றனர்.

கீழ்க்கண்ட காரியங்களை நிர்வகிப்பதற்காக ஒரு தலைமை பாங்கு அவசியம் உண்டாக்கப்பட வேண்டும்.

1. நம் தேசத்து நாணய சம்பந்தமான விஷயங்களையும் (Currency), நாணயமாற்று விஷயங்களையும் தற்காலத்தில் கவர்ன்மெண்டார் நிர்வாகம் செய்துவருவதில் பல கெடுதல்கள் ஏற்பட்டிருக்கின்றன வென்பது முன் பக்கங்களிலிருந்து தெளிவாகப் புலப்படும். தவிர நம் கவர்ன்மெண்டும் அன்னியர்களுக்கு உட்பட்டிருப்பதால், நாண

யங்கள் நாணயமாற்று விஷயங்களில், பல சமயங்களில், நம் அக்கரைக்கு விரோதமாகவும், அன்னிய நாட்டாருடைய நன்மையை உத்தேசித்தும், கவர்ன்மெண்டாரால் அவை நிர்வாகம்செய்யப்படுகின்றன. நம் நாணயமுறையும், நாணய மாற்று முறையும் இயற்கை விதப்படி நடக்காததாய், கவர்ன் மெண்டார் அவைகளில் பிரவேசிப்பதற்கு ஏதுவா யிருக்கின் றது. எனவே இவைகளைச் சரியான முறைகளில் நிர்வகிக்க வும், நம்நாட்டின் நன்மைக்கேற்றவாறு இவைகளைநடத்தவும், ஒரு தலைமை பாங்கு மிகவும் அவசியம். மற்ற நாடுகளிலும், தலைமை பாங்குகளே இக்காரியங்களைச் செய்துவருகின்றன. நாணயங்களையும் கரன்சி நோட்டுகளையும், வியாபாரத்தின் அவசியத்திற் கேற்றவாறு வெளியிடுதல், பாங்குகளுக்கே ஏற்ற வேலையாகும்.

2. கவர்ன்மெண்டாருடைய டிபாசிட்டுகளை வைத்துக் கொள்வதற்கும், அவர்களுக்கு வேண்டிய பாங்கிங் வேலை களைச் செய்வதற்கும், ஒரு தலைமை பாங்கு அவசியம்.

3. நாணயங்கள் கைக்குக் கை மாறுவதைக் குறைப் பதற்கும், செக் பழக்கத்தை அதிகப்படுத்துவதற்கும், பாங்குகளும், ரொக்கம் கைமாறுமல் வரவு செலவு செய்து கொள்வதற்கும், எல்லா பாங்குகளும் ஒரு தலைமை பாங்கில் கணக்கு வைத்துக்கொள்வது உசிதம் என முன் சொல்லப் பட்டது.

4. ஒரு தேசத்திலிருந்து தங்கமும் ரொக்கமும் வெளியே போவதையும், அல்லது நாட்டிற்குள் வருவதை யும், அத்தேசத்துத் தலைமை பாங்கு, டிஸ்கவுன்ட் ரேட் (Discount rate) அதாவது வட்ட விகிதத்தை உயர்த்தி யும் குறைத்தும் கட்டுப்படுத்துகிறது என்று முன்னமேயே சொல்லப்பட்டது. நம் நாட்டிலிருந்து தங்கம் வெளிப்

போவதையும், அல்லது உள் வருவதையும் கட்டுப்படுத்த நம் தேசத்திலும் ஒரு தலைமை பாங்கு ஏற்படுத்தப்பட வேண்டும்.

5. நம் நாட்டின் உள் நாட்டு வியாபாரத்துக்கும், அன்னிய நாட்டு வியாபாரத்துக்கும் அவசியமான வசதிகள் செய்து கொடுப்பதற்கும், நம் கைத்தொழில்களின் விருத்திகேற்ப ரொக்க முறையை நடத்துவதற்கும், மற்ற பாங்குகளுக்கு அவசியமான ரொக்க வசதிகள் கொடுப்பதற்கும் ஒரு தலைமை பாங்கு வேண்டும்.

ஹில்டன் யங் கமிஷனுடைய சிபார்சுகள்:—உலகிலுள்ள பெரிய தேசங்களில் இந்தியாவில் மாத்திரம் தான் பாங்கிங்கும், நாணய முறையும் வேறாகச் செய்யப்படுகின்றன வென்றும், மற்றெல்லா தேசங்களிலும், அத்தேசங்களின் தலைமை பாங்குகளே நாணயங்களின் வெளியீடு, கரன்சி நோட்டுகளின் வெளியீடு முதலிய காரியங்களையும் செய்து வருகின்றன வென்றும், பாங்கிங்கும் நாணய முறையும் தலைமை பாங்கால் நிர்வகிக்கப்படுவதே தேசத்தின் நன்மைக்கேற்ற தென்றும் ஹில்டன் யங் கமிஷனால் தெளிவாக எடுத்துச்சொல்லப்பட்டது. கரன்சி நோட்டுகளை வெளியிடுதலைப் பற்றியும், கரன்சி நோட்டுக் காப்புத்திரவியம் எங்கு, எப்படி வைக்கப்படவேண்டு மென்பதைப் பற்றியும் மேற்படி கமிஷனர்கள் விபரமான சிபார்சுகள் செய்திருக்கின்றனர். தவிர மற்ற எல்லா பாங்குகளும் இப்பாங்கில் கணக்கு வைத்துக்கொள்ளும்படி செய்யப்பட வேண்டுமென்றும் சொல்லியிருக்கின்றனர்.

இத் தலைமை பாங்கு ரிசர்வ் பாங்கு என்றும் சொல்லப்படும். இப்பாங்கை எப்படி உண்டாக்குவது என்பதைப் பற்றியும் சிபார்சுகள் செய்யப்பட்டிருக்கின்றன. இது பங்

குக்காரர்கள் பாங்காக இருக்கவேண்டு மென்றும், கவர்ன் மெண்டாரின் அக்கரையையும், பொது ஜனங்களுடைய அக் கரையையும் பாதுகாப்பதற்காக, கவர்ன்மெண்டார் சிலநபர் களை அதன் நிர்வாக சபையில் நியமிக்கவேண்டு மென்றும், கவர்னர் ஜெனாலுடைய கவுன்சில், கவுன்சில் ஆப் ஸ்டேட், இந்தியா சட்டசபை முதலிய அரசியல் ஸ்தாபனங்களில் இருப்பவர்கள், பாங்கின் நிர்வாக சபையில் இருக்கக்கூடா தென்றும், ஹில்டன் யங் கமிஷனர்கள் சிபார்சு செய்தனர்.

ரிசர்வ் பாங்கு மசோதா (The Reserve Bank Bill) 1927:—மேற்கண்ட சிபார்சுகளுக்கேற்றபடி, ரிசர்வ் பாங்கு ஏற்படுத்துவதற்காக ஒரு மசோதா தயார் செய்யப் பட்டு, 1927-ம் வருஷம் ஜனவரி மாதத்தில், அது கவர்ன் மெண்டாரால் இந்தியா சட்டசபையில் பிரேரேபிக்கப்பட் டது. ரிசர்வ் பாங்கு ஒன்று ஏற்படுத்துவதன் அவசியத் தைப்பற்றி, யாவருக்கும் ஒரேவிதமான அபிப்பிராயம் இருந் தபோதிலும், அதை எப்படி ஏற்படுத்தவேண்டுமென்பதைப் பற்றி பலத்த விவாதங்கள் ஏற்பட்டன. விவாதங்கள் ஏற்பட்ட விஷயங்கள், இரண்டெனக் கூறலாம்.

1. கவர்ன்மெண்டார் பிரேரேபித்த மசோதாவில் ரிசர்வ் பாங்கு ஆனது பங்குக்காரர்கள் பாங்காக இருக்க வேண்டுமெனக் கண்டிருந்தது. ஆனல், இந்தியா சட்டசபை யில் பெரும்பான்மையான அங்கத்தினர், தேசத்தின் நாணய முறையையும், பாங்கு முறையையும் நிர்வாகம் செய்வதா யிருப்பதால், இது பங்குக்காரர்கள் பாங்காக (Share Holders Bank) இருக்கக்கூடாதென்றும், ஆனல் ஸ்டேட் பாங்கு (State Bank) அதாவது மூல திரவியம் முழுதும் அரசாங்கத்தால் கொடுக்கப்படவேண்டுமென்றும் வாதித்த

னர். கவர்ன்மெண்டார், இது பங்குக்காரர்கள் பாங்காகவே யிருக்கவேண்டுமென்று பிடிவாதம் செய்தனர். இரு தாத்தாரும் சமரசமாகப் போவதற்குத் தயாரா யிருக்கவில்லை.

2. கவர்ன்மெண்டார் பிரேரேபித்த மசோதாவில், இந்தியா சட்டசபைகளின் மெம்பர்கள் ரிசர்வ் பாங்கின் நிர்வாக சபையின் அங்கத்தினர்களா யிருக்கக்கூடாதெனக் கண்டிருந்தது. இந்தியா சட்டசபை அங்கத்தினர்கள், ரிசர்வ் பாங்கின் நிர்வாக சபையில் வர நேரிட்டால், பாங்கின் நிர்வாகத்திலும் இராஜிய விவாதங்களும், அபிப்பிராய பேதங்களும் வர நேரிடுமென்றும், அதன் காரணமாய் பாங்கின் நிர்வாகம் பழுதாகுமென்றும் கவர்ன்மெண்டார் சொன்னார்கள். இவ்விஷயத்திலும் இந்தியா சட்டசபையின் பெரும்பான்மையான அங்கத்தினர்கள் வேறுவிதமாக அபிப்பிராயப்பட்டனர். இப்பாங்கு நாணய முறை போன்ற, நாட்டின் க்ஷேமத்துக்கு அடிப்படையான முக்கியமான விஷயங்களை நிர்வாகம் செய்வதால், இப்பாங்கின் நிர்வாகத்தைச் சரிவரச் செய்வதற்கு, நம்மக்களால் தேர்ந்தெடுக்கப்பட்ட பிரதிநிதிகளே ஏற்றவர்கள். ஆதலால் அவர்கள் பாங்கின் நிர்வாக சபைக்கு சில அங்கத்தினரைத் தேர்ந்தெடுப்பது மிக அவசியமென வாதித்தனர்.

இவ்விஷயத்திலும் கவர்ன்மெண்டார் இந்தியா சட்டசபையின் பெரும்பான்மையோரின் அபிப்பிராயத்திற்கு இணங்குவதற்குத் தயாராயிருக்கவில்லை. தாங்கள் பிரேரேபித்த மாதிரி இம்மசோதாவை நிறைவேற்றுவதற்கு முடியாமல் போகவே, கவர்ன்மெண்டார், இம்மசோதாவைச் சட்டமாகச் செய்வதற்கு மேல்நடவடிக்கைகள் எடுத்துக்கொள்ளவில்லை.

இரண்டாவது ரிசர்வ் பாங்கு மசோதா (1928)—1928-ம் வருஷம் ஜனவரி மாதத்தில், சில மாறுதல்களுடன் இரண்டாம் தடவை ஒரு ரிசர்வ் பாங்கு மசோதா, இந்தியா சட்டசபையில் பிரேரேபிக்கப்பட்டது; எனினும்விவாதமான விஷயங்களில் மாறுபாடு ஒன்றுமிருக்கவில்லை. ஆனால் வேறு காரணங்களை முன்னிட்டு, அச்சமயம் இந்தியா சட்ட சபையின் அக்கிராசனராயிருந்த திரு. படேல் அவர்கள் இம்மசோதாவைப் பிரேரேபிக்க அனுமதி கொடுக்க மறுத்துவிட்டார்.

ஆதலால் பழைய ரிசர்வ் பாங்கு மசோவைப்பற்றி மறுபடியும் பேசப்பட்டது. அது முன்போலவே பலமாக எதிர்க்கப்பட்டது. எனவே ரிசர்வ் பாங்கு ஏற்படுத்தும் விஷயம், தடைப்பட்டு நின்றது.

பாங்கிங் விசாரணைக் கமிட்டி:—அதற்குப் பின் நம் நாட்டு பாங்கிங் முறையை நன்குய் விசாரணை செய்து, நம் பாங்குகளின் முன்னேற்றத்திற்கும், நம் நாட்டுக் கைத்தொழில்கள், வியாபாரம் முதலியனவற்றின் முன்னேற்றத்திற்காகவும் தகுந்த சிபார்சுகள் செய்வதற்காக சர். பி. என். மித்ரா என்பவர் தலைமையின் கீழ் 1929 - 30-ல் ஒரு பாங்கிங் விசாரணைக் கமிட்டி (The Banking Enquiry Committee) ஏற்படுத்தப்பட்டது. அக் கமிட்டியின் வேலையில் உதவி செய்வதற்காகவும், ஒவ்வொரு மாகாணத்தினுடைய நிலைமையையும் தெளிவாக அறிந்து வேண்டுவன செய்வதற்காகவும், மாகாணங்களிலும் மாகாணக் கமிட்டிகள் ஏற்படுத்தப்பட்டன. மத்திய பாங்கிங் விசாரணைக் கமிட்டிக்கு (Central Banking Enquiry Committee) உதவி செய்வதற்காக, பாங்கிங்கில் பெயர்பெற்ற சில அன்னியநாட்டு நிபுணர்களும் வருவிக்கப்பட்டு, அவர்களும் ஒரு ரிபோர்ட்டு எழுதியிருக்கின்றனர்.

மாகாணக் கமிட்டிகள் தங்கள் ரிபோர்ட்டுகளை வெளியிட்டிருக்கின்றன. மத்திய பாங்கிங் விசாரணைக்கமிட்டியும் 1931-ல் தன்னுடைய ரிபோர்ட்டையும் சிபார்சுகளையும் வெளியிட்டிருக்கின்றது.

ரிசர்வ் பாங்கு சம்மந்தமாக பாங்கிங் விசாரணைக் கமிட்டியார் கீழ்க்கண்ட சிபார்சுகளைச் செய்திருக்கின்றனர். †

1. இந்தியா சட்ட சபையில் ஒரு ஆக்ட் பாஸ் செய்யப்பட்டு, அதன்படி ஒரு ரிசர்வ் பாங்கு ஏற்படுத்தப்படவேண்டும்.

2. அதற்கு வேண்டிய மூலதனம் அரசாங்கத்தால் போடப்படவேண்டும்.

3. அது இந்தியர்களால் நிர்வாகம் செய்யப்படவேண்டும்.

4. அதன் தினசரி வேலையில் ஆங்கில அல்லது இந்திய கவர்ன்மெண்டார் அல்லது சட்ட சபை பிரவேசிக்கக்கூடாது.



† Page 419. The Indian Central Banking Enquiry Committee Report of 1931.

# இருபத்திரண்டாவது அதிகாரம்

## தொழிலாளர்கள்

செல்வம் உண்டாக்குவதற்கு மூன்று சாதனங்கள் தேவை என்று சொல்லப்பட்டது. அவை இயற்கை வளம் முதல் அல்லது ரொக்கம், உழைப்பு என்பன. நாம் நாட்டின் இயற்கை வளத்தைப்பற்றியும், ரொக்க சம்பந்தமான விஷயங்களைப்பற்றியும் முன் பக்கங்களில் கண்டோம். செல்வத்தையுண்டாக்குவதற்கு இன்றியமையாத உழைப்பைப் பற்றி இவ்வதிகாரத்தில் ஆராயப்படும். உழைப்பு என்பது உழைப்பைத் தரும் உழைப்பாளர்கள் அல்லது தொழிலாளர்களைக் குறிக்கும். விவசாயத்தில் ஈடுபட்டிருப்பவர்களைப் பற்றி முன் பக்கங்களில் சொல்லப்பட்டிருக்கிறபடியால், கைத்தொழில்களில் ஈடுபட்டிருக்கும் தொழிலாளர்களைப்பற்றியே இங்கு ஆராயப்படும். கைத்தொழில்களிலும், குடிசைக் கைத்தொழில்களைப் பற்றியும், அவைகளைச் செய்து வருபவர்களின் நிலைமையைப்பற்றியும் முன்னமே எடுத்துக்காட்டி யிருக்கிறபடியால், பெரிய ஆலைகளிலும், தொழிற்சாலைகளிலும் உழைக்கும் தொழிலாளர்களைப்பற்றியே குறிப்பாக இவ்வதிகாரத்தில் சொல்லப்படும்.

வருட முழுதும் வேலை செய்யும் தொழிற்சாலைத் தொழிலாளர்கள்:—தொழிலாளர்கள் ஒருங்கே திரட்டப்பெற்று வேலை செய்யுமிடங்கள், மில்கள், (Mills) பாக்டரிகள் (Factories) தொழிற்சாலைகள் என்று பலவாறாகச் சொல்லுவதுண்டு. இவை வருட முழுதும் வேலை செய்பவையென்றும் (Perennial) ஒரு பருவத்தில் மாத்திரம்

(Seasonal) வேலை செய்பவை யென்றும் இரு வகைப் படும். வருட முழுதும் வேலை செய்யும் தொழிற்சாலைகளில் வேலை செய்யும் தொழிலாளர்களின் கணக்குக் கீழே கொடுக்கப்பட்டிருக்கிறது.

| † | கைத்தொழிற் சாலைகள் | சராசரி தினம் வேலைசெய்யும் தொழிலாளர்கள் |
|---|---|---|
| பஞ்சு நூற்கும், நெய்யும் மில்கள் | 295 | 338,000 |
| சணல் நூற்கும், நெய்யும் மில்கள் | 95 | 347,000 |
| மற்ற நெசவு மில்கள் | 68 | 11,000 |
| மொத்தம் நூற்கும், நெய்யும் மில்கள் | 458 | 696,000 |
| உலோக ஆலைகள் | 871 | 315,000 |
| மற்றவை | 1122 | 155,000 |
| ஆகமொத்தம் | 2451 | 1,166,000 |

நூற்கும் நெய்யும் மில்கள்:— பஞ்சு நூற்கும், நெய்யும் மில்கள் அதிகமாகப் பம்பாயில் ஸ்தாபிக்கப்பட்டிருக்கின்றன. பம்பாய் மில்களில் 118,000 தொழிலாளர்கள் வேலை செய்கின்றனர். பம்பாய்க்கு அடுத்தபடி ஆமதாபாத்தில் 70,000 தொழிலாளர்கள் வேலை செய்கின்றனர். பம்பாய் மாகாணத்திலேயே, ஷோலாபூர், சூரத், புரோச், ஜல்கான் முதலிய இடங்களிலும் பஞ்சு நூற்கும் நெய்யும் தொழிற்சாலைகள் ஏற்படுத்தப்பட்டிருக்கின்றன. இந்தியாவிலிருக்கும் மொத்த 295 மில்களில் 203 மில்கள் பம்பாய் மாகா

† Page 6, The Report of the Royal Commission on Labour in India 1931.

ணத்தில் இருக்கின்றன. அவைகளில் 232,000 தொழிலாளர்கள் வேலை செய்கின்றனர். மற்ற 92 மில்கள் பல மாகாணங்களில், பல ஊர்களில் ஸ்தாபிக்கப் பட்டிருக்கின்றன. அவைகளில் முக்கியமானவை சென்னை, மதுரை, கோயமுத்தூர், நாகப்பூர், கான்பூர், கல்கத்தா முதலியன.

சணல் மில்கள், பருத்தி மில்கள் மாதிரி பல விடங்களில் இல்லை. ஐந்து மில்களைத் தவிர மற்றவையெல்லாம் கல்கத்தாவுக்கு இரு புறத்திலும், ஹூக்ளி நதிக்கரையில் சுமார் 60 மைல் நீளத்தில் ஸ்தாபிக்கப்பட்டிருக்கின்றன. பருத்தி மில்களில் பல இந்திய மக்களால் நிர்வாகம் செய்யப்பட்டு வருகின்றன. ஆனால் சணல் மில்கள் அனைத்தும் ஐரோப்பியர்களால் நிர்வாகம் செய்யப்படுகின்றன. சணல் மில்களின் தொகை குறைவாயிருந்த போதிலும், அவைகளில் 3,47,000 தொழிலாளர்கள் வேலை செய்கின்றனர்.

உலோக ஆலைகள் (Engineering and metal works):—உலோக ஆலைகளில் பலவகையுண்டு. அவைகளில் முக்கியமானவை ரயில் பாதைக் கம்பெனிகளால் ஏற்படுத்தப் பட்டு இருக்கும் தொழிற்சாலைகள். ரயில் பாதை கம்பெனிகளில் 145 தொழிற்சாலைகள் ஏற்படுத்தப்பட்டு, அவைகளில் 136,000 பேர்கள் வேலை செய்கின்றனர். மின்சார வண்டிகள் (Tram Cars) தந்தி, மோட்டார்கார்கள்,—இவைகள் சம்பந்தமாகவும் பல தொழிற்சாலைகள் ஏற்படுத்தப்பட்டிருக்கின்றன. இந்தியாவிலுள்ள உலோகத் தொழிற்சாலைகளில் பிரதானமானது ஜாம்ஷட் பூரிலிருக்கும் டாடா இரும்பு எஃகு தொழிற்சாலையே (The Tata Iron and Steel Works at Jamshedpur). அதில் சுமார் 28,000 தொழிலாளர்கள் வேலை செய்கின்றனர்.

மற்ற தொழிற்சாலைகள்:—மேற் சொன்னவைகளைத்

தவிர பல்வேறு விதமான சாமான்களைச் செய்வதற்கும், வேறு காரியங்களுக்காகவும் தொழிற்சாலைகள் ஏற்படுத்தப் பட்டிருக்கின்றன. அவைகள் முக்கியமானவை. வங்காளத்திலும் பம்பாயிலும் ஏற்படுத்தப்பட்டிருக்கும் காகித மில்கள் (Paper mills), பீகாரிலும், பெங்களூரிலுமிருக்கும் சிகரெட் பாக்டரிகள், பர்மாவிலிருக்கும் பெட்ரோல் சுத்தம் செய்யும் தொழிற்சாலைகள், பஞ்சாப், பம்பாய், கான்பூரிலிருக்கும் கம்பளி மில்கள், சென்னை, கான்பூரிலிருக்கும் தோல் தொழிற்சாலைகள், அச்சு ஆபீசுகள் முதலியன. சிறு அச்சாபீசுகளைக்கணக்கில் சேர்க்காமல்,பெரிய அச்சாபீசுகள 360 ல் 38,000 பேர்கள் வேலை செய்கின்றனர். தீப்பெட்டி பாக்டெரிகளில் 16,000 பேர்கள் வேலை செய்கின்றனர்.

தொழிலாளர்கள் கிராமத்தைச் சேர்ந்தவர்கள்:—இத் தொழிற்சாலைகளில் வேலைசெய்யும் தொழிலாளர்கள் பெரும் பாலும், தொழிற்சாலைகள் ஏற்படுத்தப்பட்டிருக்கும் ஊர்களின் சுற்றுப்பக்கத்திலிருக்கும் கிராமங்களிலிருந்து வருகின்றனர். சில சமயங்களில் பக்கத்து கிராமங்களில் போதுமான தொழில் கிடைக்காவிடில், தூரமான இடங்களிலிருந்தும் வருகின்றனர். குறைந்து தொழிலாளர்கள் போதுமான கைத் தொழில்களுக்கு, அவசியமானவர்கள் சுற்றுப் பக்கத்துக் கிராமங்களிலிருந்தே கிடைக்கின்றனர். ஜனத்தொகை அதிகமாயிருக்கும் இடங்களில், அதிகமான தொழிலாளர்களுக்குத் தேவை ஏற்பட்டாலும், சுற்றுப் பக்கத்துக் கிராமங்களிலிருந்தே அவ்வளவு பேர்களுங் கிடைக்கின்றனர். ஆமதாபாத்திலும் கான்பூரிலும் சுற்றுப் பக்கத்துக் கிராமங்களிலிருந்தே தேவையான தொழிலாளர்கள் கிடைக்கின்றனர். ஆனால் பம்பாயிலும், ஹூக்ளிப் பிரதேசத்திலும், ரங்கூனிலும், ஜாம்ஷெட்பூரிலும் போதுமான

தொழிலாளர்கள் கிடைப்பதில்லை. ரங்கூன் கைத்தொழில்களுக்கு இந்தியத் தொழிலாளர்களை, பிரதானமாகத் தெலுங்குத் தொழிலாளரை எதிர்பார்க்கின்றார்கள். ஜாம்ஷெட்பூரில் வங்காளம், பீகார், ஒரிஸ்ஸா, மத்திய மாகாணங்கள், ஐக்கிய மாகாணங்கள், சென்னை முதலிய எல்லா மாகாணங்களிலிருந்தும் தொழிலாளர்கள் வந்து வேலை செய்கின்றனர்.

கிராமங்களிலிருந்து வந்து, தொழிற்சாலைகளில் வேலை செய்யும் தொழிலாளர்கள், பல சமயங்களில் நீண்ட காலம் வேலை செய்தபோதிலும், மனதில் கிராமத்தாராகவே இருக்கின்றனர். கிராமங்களில் அவர்களுக்கு நெருங்கிய பந்துக்களும், பூமியும் இருப்பதுண்டு. கிராமத்தில் ஜனத்தொகை அதிகமாகி, வருவாய் குறைந்ததாலும், கிராமக் கைத்தொழில்கள் நசுக்கப்பட்டதாலும், சில சமயங்களில் சமூகக் கொடுமையின் காரணமாகவும், அவர்கள் கிராமங்களை விட்டு நகரங்களுக்குச் சென்று, தொழிற்சாலைகளில் வேலை பெற்று ஜீவனம் செய்கின்றனர். ஆனால், அவர்கள் கிராமத்துடன் எப்பொழுதும் சம்பந்தம் வைத்துக்கொண்டேயிருக்கின்றனர். தாங்கள் சேர்த்து வைக்கும் பொருளை கிராமத்துக்கே அனுப்புகின்றனர்; தங்களுக்கு விடுமுறை நாட்கள் கிடைத்தபோதும் கிராமத்துக்குச் செல்கின்றனர்.

தொழிலாளர்கள் கிராமத்துடன் சம்பந்தம் வைத்துக் கொண்டிருப்பதன் காரணமாக, அவர்கள் அடிக்கடி கிராமங்களுக்குச் சென்றுவிடுகிறபடியால், நம் நாட்டில் கைத்தொழிற்சாலைகளில் நிலைத்து உழைக்கும் ஜனத்தொகை மேல்நாடுகளில் போல இல்லையென்றும், ஆதலால் மேல்நாடுகள்போல நம் நாட்டில் தொழிலாளர்கள் கைத்தொழிலில் தேர்ந்தவர்களா யிருப்பதில்லை யென்றும் சிலர் குறை கூறுகின்றனர். இக் குறை உண்மையா யிருப்பினும், கிராமச்

சம்மதத்தால் ஒரு பெரிய நன்மையும் உண்டு. ஜனத் தொகை மிக அதிகமாயிருக்கும் நகரங்களில், அசுத்தங் களுக்கு மத்தியில் வாழும் தொழிலாளர்களின் தேகநிலைமை மிகக் கேவலமாயிருப்பது, யாவரும் தெரிந்ததே. கிராமங் களுக்கு அடிக்கடி போய்க்கொண் டிருப்பதால் அங்கு நல்ல காற்றை சுவாசித்து, சுகாதாரமான இடங்களில் வசித்து, அவர்கள் தேகத்தை நலமாய் வைத்திருக்க ஏது வாக யிருக்கிறது.

தொழிலாளர்களின் குறைவு:—நம் கைத்தொழிற்சாலை களின் தேவைக்குப் போதுமான தொழிலாளர்கள் கிடைப்ப தில்லை என்ற புகார் நம் நாட்டின் பல பாகங்களிலும் சொல்லப்பட்டது. நம் நாட்டின் ஜனத்தொகை அதிக மாகிக்கொண்டுவர, விவசாயத்தில் ஈடுபடும் மக்களும் அதிகமாகிக் கொண்டுவருகிறார்க ளென்பதும், இதனால் விவசாயத்தால் ஒவ்வொரு குடியானவனுக்கும் கிடைக்கக் கூடிய வருமானமும் குறைந்துகொண்டே வருகிறதெனவும் ஆரம்பத்தில் விளக்கிக் காட்டப்பட்டிருக்கிறது. அப்படி யிருந்தும் கைத்தொழில்களுக்குப் போதுமான தொழி லாளர்கள் இல்லை யென்பது ஆச்சரியத்தை விளைவிக்கக் கூடியதாயிருக்கிறது.

ஆனால் இதற்குத் தக்க காரணங்கள் உள. நம் மக்கள் தங்கள் கிராமங்களைவிட்டு வெளிக் கிளம்ப விரும்புவதில்லை. வெளி ஊர்களுக்குப் போய் அதிக ஊதியம் பெறுவதைவிட கொஞ்சமான ஊதியம் அல்லது வருமானம் பெற்று, தங்கள் கிராமங்களிலேயே யிருக்க விரும்புகின்றனர். நகரங்களில் கைத் தொழிற்சாலைகளில் கொடுக்கப்படும் கூலியும் கைத்தொழிற்சாலைகள் ஸ்தாபிக்கப்பட் டிருக்கும் நகரங்களில் தொழிலாளர்கள் குடியிருக்க வேண்டிய இட

மும் கிராமத்தி லிருப்பவர்களுக்கு அவ்வளவு வசீகரமா யிருப்பதில்லை. கிராமத்தை விட்டுவரச் சில தொழிலாளர்கள் தயாராயிருந்த போதிலும், அவர்களைத் தெரிந்து கைத் தொழிற்சாலைகளில் அவர்களைச் சேர்க்கத் தக்க சங்கங்களும் நம் நாட்டில் இல்லை. தவிர, சென்ற சில வருடங்களில் கைத் தொழில்களும் ஏராளமாக விருத்தியடைந் திருக்கின்றன; இதன் காரணமாகத் தொழிலாளர்களின் தேவையும் அதிக மாகிக் கொண்டு வந்திருக்கின்றது. எனவே, தொழிலா ளர்கள் போதுமான அளவு கிடைப்பதில்லை யென்று சொல்லப்பட்டது.

தொழிலின்மை (Unemployment):—ஆனால் சென்ற சில வருஷங்களில் பம்பாயிலும், மற்ற முக்கியமான கைத் தொழில் நகரங்களிலும் தொழிலாளர்களுக்குள் தொழி லின்மை பரவி வருவதாகச் சொல்லப்படுகிறது. பல்லாயிரக் கணக்கான தொழிலாளர்கள் அவர்கள் வேலை செய்து கொண்டிருந்த தொழிற்சாலைகளி லிருந்து அனுப்பப்பட்டு, வேலையின்றிக் கஷ்டப்படுகின்றனர். உதாரணமாக 1926-ம் வருஷத்தில் பம்பாய் பஞ்சு நெசவு மில்களில் 148,254 தொழிலாளர்கள் வேலை செய்துகொண்டிருந்தனர். ஆனால், 1929-ம் வருஷத்தில் 118,368 பேர்களுக்குத்தான் வேலை கிடைத்தது. மற்றவர்கள் வேலையினின்று நீக்கப்பட்டதால் தொழிலின்றிக் கஷ்டப்படுகின்றனர். இதற்கு முக்கிய காரணம், சென்ற சில வருடங்களாகச் சாமான்களின் விலை குறைந்ததால், வியாபாரிகளுக்கு லாபமில்லாமல் போயிற்று. எனவே, மில்களை லாபகரமாக நடத்துவதற்காக, வேலைக் காரர்களையும் சுருக்கவேண்டி யிருந்தது.

இம் மாதிரியே ஜாம்ஷெட்பூரிலும் ஏற்பட்டது. அவ் வூரில் ஸ்தாபிக்கப்பட் டிருக்கும் டாடா இரும்பு எஃகு

தொழிற்சாலையில் 1927-ம் ஆண்டில் 32,521 தொழிலாளர்கள் வேலைசெய்து கொண்டிருந்தனர். போதுமான லாபம் கிடைக்காததால், அங்கும் பல தொழிலாளர்கள் தொழிற்சாலையினின்று வெளியே அனுப்பவேண்டியிருந்தது. 1930-ம் வருஷத்தில் 28,660 பேர்கள்தான் வேலை செய்துகொண்டிருந்தனர். இம்மாதிரியே இரயில் பாதைத் தொழிற்சாலைகளிலும் ஏற்பட்டது. இவைகளில் 1926-ம் வருஷத்தில் 152,270 பேர்களுக்கு வேலை கொடுக்கப்பட்டது; ஆனால் 1929-ல் 135,982 பேர்களுக்குத்தான் தொழில் கொடுக்கப்பட்டு, மற்றவர்கள் தொழிற்சாலைகளிலிருந்து நீக்கப்பட்டனர்.

இங்ஙனம் பலதுறைகளிலும் வேலையின்றி தற்சமயம் தொழிலாளர்கள் கஷ்டப்படுகின்றனர். இத் தொழிலின்மையை நீக்க வேண்டுவன செய்வது கவர்ன்மெண்டாரின் கடமையாகும். கைத்தொழில்களை அபிவிருத்தி செய்வதே இத் தொழிலின்மையைப் போக்குவதற்குச் சரியான மருந்தாகும்.

எத்தனை மணிநேரம் வேலை :— நம் நாட்டில் தொழிலாளர்கள் தொழிற்சாலைகளில் எத்தனை மணிநேரம் வேலை செய்கின்றனர் என்பதைக் கவனிப்போம். இவ் விஷயத்தைப்பற்றி 1881-ம் வருஷத்திலிருந்து பல சட்டங்கள் செய்யப்பட்டிருக்கின்றன. 1922-ம் வருஷத்து பாக்டரி ஆக்ட்படி (Factory Act of 1922) சாதாரண மக்கள் ஒரு நாளுக்கு 11-மணி நேரத்துக்கும், ஒரு வாரத்துக்கு 60 மணி நேரத்துக்கும் அதிகப்படாமல், தொழிற்சாலைகளில் வேலை செய்ய அனுமதிக்கப்பட்டிருக்கிறது.

பருத்தி நூற்கும் நெய்யும் மில்களில் சாதாரணமாக வாரத்துக்கு 60 மணிநேரம், நாளுக்கு 10 மணிநேரமாக 6 நாட்கள் வேலை செய்கின்றனர். உலோகத் தொழிற்

சாலைகளில் வாரத்துக்கு 48 மணிநேரம், நாளுக்கு 8 மணி நேரமாக 6 நாட்கள் வேலைசெய்கின்றனர். இடைவிடாது வேலை செய்ய வேண்டிய தொழிற்சாலைகளில், 15 நாட்களில் ஒருநாள் விடுமுறை நாளாகவும், மற்ற 14 நாட்களில் நாள் ஒன்றுக்கு 8 மணி நேரமும் வேலைசெய்கின்றனர். தொழிலாளர்களின் நிலைமையைப்பற்றி விசாரணை செய்ய நியமிக்கப்பட்ட கமிஷனர்களில் (The Report of the Royal Commission on Labour 1931) பெரும்பான்மையோர், வாரத்துக்கு 54 மணி நேரத்துக்கு அதிகமாகத் தொழிலாளர்கள் தொழிற்சாலைகளில் வேலை செய்யப்படக் கூடாதெனச் சிபார்சு செய்திருக்கின்றனர்.

பெண்களும் குழந்தைகளும்:—1922-ம் வருஷ பாக்டரி ஆக்ட்படி பெண்களுக்கும் வாரம் 60 மணி நேரம் வேலை கொடுக்கப்படலாம். பெண்களும் குழந்தைகளும் தொழிற்சாலைகளில் அதிகநேரம் வேலை செய்வதால் பல கெடுதல்கள் உண்டாகின்றன. தொழிலாளர்களாக வந்து வேலை செய்யும் பெண்களே, அவர்கள் வீட்டிலும் சமையல் முதலிய பல வேலைகளும் செய்யவேண்டி யிருக்கின்றது. தொழிற்சாலைகளிலும், வீட்டிலும்—இவ் விரண்டிடங்களிலும் அதிகமான சிரமத்துக்கு ஆளாகவேண்டி யிருக்கிறபடியால் அவர்கள் உடல்நலம் கெட்டு, நரம்புகளின் வலிமையும் குன்றுகிறது. தங்கள் குழந்தைகளைக் கவனிப்பதற்கும் அவர்களுக்கு அவகாசம் இருப்பதில்லை. குழந்தைகளைக் காப்பாற்றுவதற்கு வேண்டிய சௌகரியங்களும் பல தொழிற்சாலைகளில் செய்யப்படுவதில்லை. கர்ப்ப ஸ்திரீகள் குழந்தைபெறும் நாள்வரைகூட தொழிற்சாலைகளில் உழைக்க நேரிடுகிறது. இதனால் அவர்கள் உடல் நலனும் மிகவும் பாதிக்கப்படுகிறது.

1922-ம் வருஷத்திய பாக்டரி சட்டம் நிறைவேற்றப்

படுவதற்கு முன், 9 வயதுக்கு அதிகமான குழந்தைகள் தொழிற்சாலைகளில் வேலை செய்யலாம் எனச் சட்டத்தில் கண்டிருந்தது. பல குழந்தைகள் 9 வயதுக்குக் குறைவாயிருந்தபோதிலும், 9 வயதெனச் சொல்லி தொழிற்சாலைகளில் வேலை செய்து வந்தனர். 1922-ம் வருஷத்தில் 12-வயதுக்குட்பட்ட குழந்தைகள் தொழிற்சாலைகளில் வேலைக்கு ஏற்றுக்கொள்ளப்படக் கூடாதெனச் சட்டம் செய்யப்பட்டது. அவர்களுக்கு நாள் 1-க்கு 6 மணி நேரத்துக்கு அதிகமாக வேலை கொடுக்கப்படலாகாது.

தொழிற்சாலைகளில் சுகாதாரம்:—பல தொழிற்சாலைகளின் சுகாதார நிலைமை கவலைக்கிடமாகவே யிருக்கின்றது. தொழிற்சாலைகளில், யந்திரங்கள் வேலை செய்வதன் காரணமாக ஏராளமாகப்புகையும் தூசும் கிளப்பப்படுகிறது. தொழிலாளர்கள் இதை சுவாசிப்பதால் பலவியாதிகள் உண்டாகின்றன. தொழிலாளர்களுக்காகக் கட்டபட்டிருக்கும் கக்கூசுகள் சுத்தமானவையாக விருப்பதில்லை. தொழிற்சாலைகள் முக்கியமாக வெயில் காலங்களில் மிகவும் உஷ்ணமடைகின்றன. உஷ்ணத்தின் காரணமாக தொழிலாளர்கள் மிகவும் பலஹீன மடைகின்றனர். இன்னும் பலவிதங்களில் தொழிற்சாலைகளின் சுகாதாரம் மிகக் கேவலமாயிருப்பதால், அவைகளில் வேலை செய்யும் தொழிலாளர்கள் பல அல்லல்களுக்கு உட்பட நேரிடுகிறது.

சுகாதாரத்தைப் பற்றிய இக்குறைகள் யாவும் எளிதில் விலக்கத்தக்கவை. தொழிற்சாலைகளுக்குள் நல்ல காற்று வரக்கூடிய வசதிகள் செய்வதாலும், மின்சார விசிறிகள் முதயன ஏற்படுத்துவதாலும், அடிக்கடி வெள்ளையடித்துத் தொழிற்சாலைகளைச் சுத்தம் செய்வதாலும், புகையையும், தூசுகளையும் மட்டுப்படுத்தலாம். இவைகளை மட்டுப்படுத்தக்கூடிய யந்திர வகைகள் யாவும் கையாளப்படவேண்டும். போதுமான ஜல வசதிகள் செய்து கொடுப்பதுடன், சுலபமாக சுத்தம் செய்யக்கூடிய மாதிரி, போதுமான அளவில் கக்கூசுகள் கட்டப்படவேண்டும். உஷ்ணத்தைக் குறைப்

பதற்கு வேண்டிய முயற்சிகளும் செய்யப்படவேண்டும். நல்ல காற்று தொழிற்சாலைகளுக்குள் வருவதால் உஷ்ணமும் குறையுமாதலால், கட்டடங்களும் உஷ்ணம் அதிகம் உண்டாகாத முறையிலும், காற்று நன்றாக உலாவக்கூடிய முறையிலும் கட்டப்படவேண்டும்.

எதிர்பாராத ஆபத்துகள்:—தொழிலாளர்கள் தொழிற்சாலைகளில் வேலை செய்யும் சமயம், பல எதிர்பாராத ஆபத்துக்களுக்கு ஆளாகின்றனர். பல தடவைகளில் யந்திரங்களுக்குள் அகப்பட்டும், இன்னும் மற்ற விதங்களிலும், உயிரையோ அல்லது உடலில் ஒரு பாகத்தையோ இழக்க நேரிடுகிறது. இவ்விபத்து அவ்வளவு பெரியதல்லாத சமயங்களில் சில வேறு விதமான துன்பத்தை அனுபவிக்கின்றனர். கீழ்க்கண்ட கணக்கில் இவைகளின் விபரம் கொடுக்கப்பட்டிருக்கிறது.

| * வருஷம் | ஆபத்துக்கு உட்பட்டவர்களின் கணக்கு | | | | 100,000 தொழிலாளர்களில் எத்தனை பேருக்கு ஆபத்து நேரிட்டது | | | |
|---|---|---|---|---|---|---|---|---|
| | மரணம் | அபாயமானவை | சாதாரணம் | மொத்தம் | மரணம் | அபாயமரணம் | சாதாரணம் | மொத்தம் |
| 1922 | 191 | 1,207 | 5,562 | 6,960 | 14 | 89 | 409 | 512 |
| 1923 | 197 | 1,333 | 5,507 | 7,037 | 17 | 91 | 391 | 499 |
| 1924 | 284 | 1,690 | 8,055 | 10,029 | 20 | 118 | 565 | 703 |
| 1925 | 263 | 2,181 | 9,901 | 12,645 | 18 | 166 | 662 | 846 |
| 1926 | 270 | 3,155 | 11,441 | 14,866 | 18 | 208 | 753 | 979 |
| 1927 | 242 | 3,403 | 12,066 | 15,711 | 16 | 222 | 787 | 1025 |
| 1928 | 264 | 3,494 | 12,590 | 16,348 | 17 | 230 | 828 | 1075 |
| 1929 | 240 | 4,389 | 15,579 | 20,208 | 15 | 283 | 1003 | 1301 |

* Page 59, Report of the Royal Commission on **Indian Labour 1931.**

இவ்விபத்துகள் வருஷா வருஷம் அதிகமாகிக்கொண்டு போனலும் உண்மையில் அதிகமான விபத்துகள் ஏற்பட்டதாக நினைக்கக்கூடாது. முன்னைவிட இவை யதிகமாக ரிபோர்ட்டு செய்யப்படுகின்றன வென்பதே அதன் உண்மைப் பொருள்.

இவை அநேகமாய் யந்திரங்களின் மூலமே ஏற்படுகின்றன. தொழிலாளர்களுக்குத் தக்க கல்வியும், யந்திரங்களை ஓட்டுவதற்கும் அவைகளின் மத்தியில் பழகுவதற்கும் தக்க அறிவும் புகட்டப்பட்டால் இவ்விபத்துகள் குறையுமென்பதில் யாதொரு ஐயமும் இல்லை. சில சமயங்களில் தொழிற்சாலைக் கட்டடங்கள் திடீரென்று விழுவதாலும் பலருக்கு எதிர்பாராத ஆபத்துகள் நேரிடுவதும் உண்டு. ஆதலால் தொழிற்சாலைக் கட்டடங்களும் பலமாகக் கட்டப்படவேண்டும்.

தொழிலாளர்களுக்கு நன்மை பயக்கும் ஏற்பாடுகள்:— தொழிற்சாலைகளின் சுகாதாரத்தைப் பற்றி முன் பக்கத்தில் சொல்லப்பட்டது. இவை மட்டும் தொழிலாளர்களுக்குப் போதுமான சௌகரியங்களைக் கொடுப்பதில்லை. அவர்களுடைய நன்மையைக் கருதியும், அவர்களுடைய சௌகரியத்துக்காகவும் முயற்சிகள் செய்யப்பட வேண்டும். தற்காலத்தில் பல தொழிற்சாலைகள் இவ்விதமான முயற்சிகளைச் செய்து வருகின்றன. முக்கியமாக சுத்தமான ஜலம் வேண்டிய அளவு தொழிலாளர்களுக்குக் கிடைக்கும்படி செய்யவேண்டும். அவை அசுத்தமாக்கப்படாத இடத்தில் குளிர்ச்சியாயிருக்கக் கூடிய முறையில் வைக்கப்பட வேண்டும்.

தவிர, எதிர்பாராத விபத்துகள் நேர்ந்த சமயத்தில் உதவத்தக்க முதற் சிகிச்சை (First aid) க்கு அவசியமான சாமான்களும் ஒவ்வொரு தொழிற்சாலையிலும் வைத்திருக்கப்பட வேண்டும். தொழிலாளர்கள் வேலை செய்யும் சமயம், அவர்கள் குழந்தைகளைப் பாதுகாப்பதற்காக, தகுந்த ஸ்தாபனங்கள் (creches) செய்யப்பட வேண்டும். குழந்தைகளுக்குப் பால் முதலியன கொடுத்து உதவுவதுடன் அவர்களைப் பார்த்துக் கொள்வதற்கு தாதிகளும் ஏற்படுத்தவேண்டும். தொழிலாளர்கள் சாப்பிடுவதற்கும் சுத்தமான இடங்கள் அமைக்கப்பட வேண்டும். தற்சமயம் அவர்கள் பல அசுத்தமான இடங்களிலும், மரத்தடிகளிலும் சாப்பிட நேரிடுகிறது. ஆதலால் அவர்கள் உணவருந்துவதற்கு ஏற்ற வசதிகள் செய்து தரப்பட வேண்டும்.

பருவத் தொழிற்சாலைகள் (Seasonal Factories):—வருடமுழுதும் வேலைசெய்யும் தொழிற்சாலைகளைப் பற்றியும், அவைகளில் உழைக்கும் தொழிலாளர்களைப் பற்றியும், முன் சொல்லப்பட்டது. ஆனால், வருட முழுதும் வேலை செய்யாமல் ஒரு பருவத்தில் மாத்திரம் வேலை செய்யும் தொழிற்சாலைகள் பல இருக்கின்றன. இவைகளில் ஜின்னிங் பாக்டரிகள் (Ginning Factories) அதாவது பருத்தியைப் பஞ்சும் கொட்டையுமாய்ப் பிரிப்பவை, பஞ்சு பிரஸ்கள் அதாவது பஞ்சை பேல்களாக இறுக்கிக் கட்டுபவை, தேயிலை பாக்டரிகள், சணல்கள் கட்டும் பிரஸ்கள், புகையிலைத் தொழிற்சாலைகள், அரிசி மில்கள் முதலியன முக்கியமானவை. இவைகளின் மொத்தமும், இவைகளில் எத்தனை தொழிலாளர்கள் வேலை செய்கிறார்கள் என்பதும் அடுத்த பக்கம் காண்பிக்கப்பட்டிருக்கிறது.

| † கைத் தொழில் | தொழிற்சாலைகளின் எண்ணம் | | | தொழிலாளர்களின் எண்ணம் | | |
|---|---|---|---|---|---|---|
| | இந்தியா | பர்மா | மொத்தம் | இந்தியா | பர்மா | மொத்தம் |
| பருத்தி ஜின்னிங் பாக்டரிகள் | 2,149 | 27 | 2,176 | 136,616 | 3,321 | 199,987 |
| தேயிலை பாக்டரிகள் | 934 | | 934 | 63,064 | | 63,064 |
| சணல் பிரஸ்ஸிங் பாக்டரிகள் | 115 | | 115 | 37,300 | | 37,300 |
| அரிசி மில்கள் | 998 | 608 | 1,606 | 36,529 | 39,685 | 76,214 |
| எண்ணெய் மில்கள் | 219 | 25 | 244 | 10,258 | 1,237 | 11,495 |
| சர்க்கரை பேக்டரிகள் | 44 | 1 | 45 | 14,726 | 350 | 15,076 |
| புகையிலை பேக்டரிகள் | 16 | | 16 | 9,922 | | 9,922 |
| மற்றவை | 158 | 24 | 542 | 33,106 | 1202 | 34,308 |
| | 4,993 | 685 | 5,678 | 341,571 | 45,795 | 387,366 |

இவைகள் குறிப்பிட்ட பருவங்களில் மாத்திரம் வேலை செய்வதால், இவைகளில் வேலை செய்யும் தொழிலாளர்கள் அனைவரும் அக்கம் பக்கத்துக் கிராமங்களில் வதியும் குடியானவர்களாகவே யிருக்கின்றனர். அவர்கள் தொழிற்சாலைகளில் வேலை செய்யும்போதும் கிராமங்களிலேயே குடியிருக்கின்றனர். இத் தொழிற் சாலைகளில் வேலை செய்யும் தொழிலாளர்களின் கை வன்மையும் மிகக் குறைவா யிருக்

† Page, 75 The Report of the Royal Commission on Labour in India 1931.

கும்; இவைகளில் பெண்களும் அதிகமாக வேலை செய்து வருகின்றனர். இத் தொழிலாளர்களின் கூலியும் மிகக் குறைவாகவே யிருக்கும்.

வருட முழுதும் வேலை செய்யும் தொழிற் சாலைகளின் சம்பந்தத்தில் சொல்லப்பட்ட சுகாதாரம் முதலியவை, இப் பருவத் தொழிற் சாலைகள் பலவுக்கும் பொருந்தும். இவை களிலும் சுகாதார சம்பந்தமாகவும், மற்றத் தொழிலாளர் க்ஷேம சம்பந்தமாகவும் சீர்திருத்த வேண்டியவை பலவுள.

சுரங்கங்கள் :—இத் தேசத்தில் முக்கியமாக மூன்று விதச் சுரங்கங்கள் இருக்கின்றன. அவை நிலக்கரி, மாங்கனீஸ் (Manganese ore), அப்பிரகம் (Mica) என்பன. அப் பிரகம் என்பது காக்காப் பொன் என்று சாதாரணமாக வழங்கப்படுகிறது. ஒவ்வொரு மாகாணத்தில் எவ்வளவு சுரங்கங்கள் இருக்கின்றன வென்பதையும், அவைகளில் எவ்வளவு தொழிலாளர்கள் சராசரி ஒவ்வொரு தினமும் வேலை செய்கின்றனர் என்பதையும் கீழே காண்பிக்கப்பட் டிருக்கிறது. பர்மாவைத் தவிர பிரிட்டிஷ் இந்தியாவில் நிலக்கரிச் சுரங்கங்களே பிரதானமாய் விளங்குகின்றன. எல்லாச் சுரங்கங்களிலும் வேலை செய்யும் தொழிலாளர்களில் நிலக்கரிச் சுரங்க்ங்களில் வேலை செய்பவர்கள் 2/3 பங்கு இருக்கின்றனர்; பூமிக்குள் போய் வேலை செய்பவர்களில் 100-க்கு 88 பங்கு நிலக்கரிச் சுரங்கங்களில் வேலை செய் கின்றனர். நிலக்கரிக்கு அடுத்த படியில், மாங்கனீஸ் சுரங்கங் களும், அப்பிரகச் சுரங்கங்களும் முக்கியமாக இருக்கின்றன

| *மாகாணம் | நிலக்கரி | | | மாங்கனீஸ் | | |
|---|---|---|---|---|---|---|
| | | தொழிலாளர்கள் | | | தொழிலாளர்கள் | |
| | சுரங்கங்கள் | பூமியின் கீழ்வேலை செய்பவர் | மொத்தத் தொழிலாளர்கள் | சுரங்கங்கள் | பூமிகீழ் வேலையாளர் | மொத்தம் தொழிலாளர்கள் |
| சென்னை | | | | 8 | | 1,516 |
| பம்பாய் | | | | 11 | 35 | 3,680 |
| வங்காளம் | 208 | 29,497 | 44,303 | | | |
| ஐக்கிய மாகாணங்கள் | | | | | | |
| பஞ்சாப் | 16 | 389 | 843 | | | |
| பீகார் ஒரிஸ்ஸா | 273 | 59,321 | 108,606 | 12 | 260 | 1,673 |
| மத்திய மாகாணங்கள் | 29 | 5,376 | 7,656 | 94 | 906 | 20,384 |
| அஸ்ஸாம் | 9 | 2,159 | 4,128 | | | |
| மற்றவை | 13 | 160 | 212 | | | |
| பர்மா | | | | | | |
| மொத்தம் | 548 | 96,902 | 164,658 | 125 | 12,11 | 27,243 |

* Page 106, The Report of the Royal

| அப்பிரகம | | | மற்றவை | | | மொத்த சுரங்கங்கள் | | |
|---|---|---|---|---|---|---|---|---|
| சுரங்கங்கள் | தொழிலாளர்கள்: பூமிகீழ் வேலையாளர் | தொழிலாளர்கள்: மொத்தம் தொழிலாளர் | சுரங்கங்கள் | தொழிலாளர்கள்: பூமிகீழ் வேலையாளர் | தொழிலாளர்கள்: மொத்தம் தொழிலாளர்கள் | சுரங்கங்கள் | தொழிலாளர்கள்: பூமிகீழ் வேலையாளர் | தொழிலாளர்கள்: மொத்த தொழிலாளர்கள் |
| 77 | 1,868 | 4176 | 19 | 113 | 1,786 | 104 | 1,981 | 7,478 |
| | | | 27 | | 5,068 | 38 | 35 | 8,748 |
| | | | 8 | | 874 | 216 | 29,497 | 45,177 |
| | | | 51 | 301 | 5,330 | 51 | 301 | 5,330 |
| | | | 29 | 1,132 | 4,875 | 45 | 1,521 | 5,618 |
| 397 | 8,002 | 12,044 | 124 | 291 | 16,523 | 806 | 67,874 | 138,856 |
| | | | 39 | 38 | 5,995 | 162 | 6,330 | 34,025 |
| | | | | | | 9 | 2,159 | 4,128 |
| 24 | 129 | 335 | 35 | 124 | 365 | 72 | 413 | 912 |
| | | | 229 | 6,834 | 19,429 | 229 | 6,834 | 19,429 |
| 498 | 9,999 | 16,855 | 561 | 8,833 | 60,248 | 1,732 | 114,945 | 269,701 |

Commission on Labour in India, 1931.

நிலக்கரிச் சுரங்கங்கள் :—அஸ்ஸாம், பெலுஜிஸ்தானம், வங்காளம், பீகார் ஒரிஸ்ஸா, மத்திய மாகாணங்கள், பஞ்சாப் இம் மாகாணங்களில் நிலக்கரிச் சுரங்கங்கள் காணப்படுகின்றன. ஆனால், இந்தியாவில் கிடைக்கும் நிலக்கரியில் 100-க்கு 90 பங்கு வங்காளத்தி லிருக்கும் ராணிகன்ஜ் (Raniganj) ஜாரிய (Jharia) பொகாரா (Bokara) சுரங்கங்களிலிருந்து எடுக்கப்படுகிறது. இந் நூற்றாண்டின் ஆரம்பத்திலிருந்து நிலக்கரி வெளியீடு அதிகமாகிக்கொண்டு வந்திருக்கிறது. தற்காலத்தில் நம் நாட்டுக்கு அவசியமான நிலக்கரி நம் நாட்டுச் சுரங்கங்களிலிருந்தே கிடைக்கிறது. 1929-ம் வருஷத்தில் இந்தியாவில் 548 சுரங்கங்களில் 165,658 தொழிலாளர்கள் வேலை செய்தனர். இவைகளின் மொத்த வெளியீடு 22,308,174 டன்கள்.

இவைகளிலும் ஈடுபட்டிருக்கும் மக்களே தொழிலாளர்களாக வந்து வேலை செய்கின்றனர். எனவே, விவசாயத்தில் வேலையில்லாத சமயங்களில் இச் சுரங்க வேலைகளுக்கு அதிக தொழிலாளர்கள் கிடைக்கின்றனர். ஆதலால் இவ்வேலை தொடர்ச்சியாகச் சரியாய் நடப்பதில்லை. சுரங்கங்களும் சுகாதார விஷயத்தில் அதிகமாகச் சீர்திருத்துவதற்கு இடமிருக்கின்றது. பூமிக்குள் போய் வேலை செய்யும் தொழிலாளர்களில் பெரும்பான்மையோர் நிலக்கரிச் சுரங்கங்களில் தான் வேலை செய்கின்றனர். இவைகள் போதுமான நல்ல காற்று இல்லாமலிருப்பதுடன் பலவிதமான வியாதிகளுக்கும் இருப்பிடமாக விருக்கின்றன. இம்முறையில் இவைகள் சீர்திருத்தப்பட வேண்டும். சுரங்கங்களில் வேலை செய்யும் தொழிலாளர்களுக்குக் கல்வி கொடுப்பதுடன், அவர்களுடைய நிலைமையை உயர்த்துவதற்கு அவசியமான மற்ற முயற்சிகளும் செய்யப்பட வேண்டும்.

தொழிலாளர்களின் வருமானம் :—தொழிலாளர்களின் வருமானம் கைத்தொழில்களுக்குத் தகுந்தவாறு வேறாக யிருக்கும். அவர்கள் வருமானத்தைச் சரியாக நிர்ணயிக்கத் தக்க புள்ளி விவரங்கள் நமக்குக் கிடைக்காதது வருந்தத் தக்கது. இது சம்பந்தமாக சரியான கணக்குகள் பல மாகாணங்களிலும் வைக்கப்படுவதில்லை. பம்பாய் தொழிலாளர் ஆபீசாரால் (The Bombay Labour Office) இந்தியத் தொழிலாளர் விசாரணைக் கமிஷனர்கள் (The Royal Commission on Labour in India) முன்பாகக் கொடுக்கப்பட்ட கணக்குகளிலிருந்து கீழ்க்கண்ட குறிப்புகள் எடுக்கப்பட்டிருக்கின்றன.

பஞ்சு நூற்கும் நெய்யும் மில்களில், பம்பாய், ஆமதாபாத், ஷோலாபூர் ஆகிய நகரங்களில் தொழிலாளர்களுக்குக் கிடைக்கும் சராசரி மாத வருமானம் கீழே காண்பிக்கப்பட்டிருக்கிறது.

| † | ஊர். | சராசரி மாத வருமானம் | | |
|---|---|---|---|---|
| | | ரூ. | அ. | பை. |
| ஆண்கள் | பம்பாய் | 44 | 3 | 6 |
| | ஆமதாபாத் | 38 | 4 | 0 |
| | ஷோலாப்பூர் | 26 | 10 | 2 |
| பெண்கள் | பம்பாய் | 20 | 4 | 6 |
| | ஆமதாபாத் | 21 | 1 | 6 |
| | ஷோலாப்பூர் | 11 | 6 | 7 |
| சிறு பையன்கள் | ஆமதாபாத் | 9 | 4 | 6 |
| | ஷோலாப்பூர் | 6 | 13 | 10 |

† Page 19, The Report of the Royal Commission on Labour in India 1931.

சணல் மில்களில் பலவிதமான நெசவுகளுக்குப் பலவிதமான கூலிகள் கொடுக்கப்படுகின்றன. ஒரு வாரத்துக்கு ரூ. 2-12-9 யிலிருந்து ரூ. 9-8-0 வரை தொழிலாளர்கள் சம்பாதிக்கின்றனர்.

உலோகத் தொழிற்சாலைகளிலும், கட்டடம் கட்டும் தொழிற்சாலைகளிலும், தொழிலுக்குத் தக்கவாறு வருமானம் கிடைக்கின்றது. மாகாணத்துக்கு மாகாணம் இது வேறுபடும்; பம்பாயில் சாதாரணமாக மற்ற மாகாணங்களை விட உயர்ந்திருக்கும். பம்பாயில் கொத்தர்களுக்கு மாதம் 1-க்கு ரூ. 50 முதல் 70 ரூபாயும், தச்சர்களுக்கும் கொல்லர்களுக்கும் ரூ. 60 முதல் ரூ. 75 வரையும், பிட்டர்கள் (Fitters), டர்னர்கள் (Turners) அதாவது யந்திரங்களில் வேலை செய்வோருக்கு ரூ. 65 முதல் ரூ. 80-வரையும் கிடைப்பதாகச் சொல்லப்படுகிறது. சென்னையில் இத்தொழிலாளர்களுக்கு மற்றெல்லா மாகாணங்களையும்விடக் குறைவான கூலி கொடுக்கப்படுகிறது.

பருவத் தொழிற்சாலைகளில், பருத்தி ஜின்னிங் பாக்டரிகளில் தொழிலாளர்களுக்குக் கிடைக்கும் தினசரி வருமானம் கீழே கொடுக்கப்பட்டிருக்கிறது:—

| † | கோயம்புத்தூர் ஜில்லா பாக்டரிகளில் | சென்னை மாகாணத்திலுள்ள மற்ற பாக்டரிகளில் |
|---|---|---|
| | ரூ. அ. பை. | ரூ. அ. பை. |
| பருத்தியைப் பஞ்சாக்கும் ஜின்னிங் பாக்டரிகளில் | | |
| ஆண்களுக்கு | 0 7 3 | 0 8 0 |
| பெண்களுக்கு | 0 5 7 | 0 5 1 |
| பஞ்சை பேல்களாகக் கட்டும் பாக்டரிகளில் | | |
| ஆண்கள் | 0 11 9 | 0 9 6 |
| பெண்கள் | 0 6 2 | 0 5 10 |

தொழிலாளர்களின் செலவுகள்:—தொழிலாளர்களின் சராசரி வருமானம் முன் பக்கங்களில் குறிப்பிடப்பட்டது. அது எப்படிச் செலவு செய்யப்படுகிறதெனக் கவனிப்போம். இக்கணக்குகள் எல்லா மாகாணங்களிலும் சரியாகத் தயார் செய்யப்படவில்லை என்பது வருந்தத்தக்கது. பம்பாய்த் தொழிலாளர் ஆபீசார் இத்துறையிலும் அருமையான வேலை செய்திருக்கின்றனர். ஆமதாபாதிலும், ஷோலாப்பூரிலும் தொழிலாளர்களுடைய குடும்பச் செலவுகளின் விபரங்கள் கீழே கொடுக்கப்பட்டிருக்கின்றன. ஷோலாப்பூரில் ஒரு குடும்பத்தில் சராசரி 4·68 பேர்கள் இருந்தனர்; ஆமதாபாத்தில் 4·00 பேர்கள் இருந்தனர்.

*Page 200. The Report of the Royal Commission on Labour in India 1931.

| † விவரங்கள் | சாசரி மாதச் செலவு | | |
|---|---|---|---|
| | ரூ. | அ. | பை. |
| உணவுப் பொருள்கள் | | | |
| தானியங்கள் | 9 | 7 | 6 |
| பருப்பு வகைகள் | 1 | 5 | 2 |
| சர்க்கரை வகையரா | 1 | 1 | 0 |
| மாமிசம் | 1 | 10 | 1 |
| பால் நெய் | 1 | 4 | 8 |
| காய்கறி பழங்கள் | 0 | 15 | 2 |
| எண்ணெய்கள் | 1 | 0 | 1 |
| உப்பு | 0 | 3 | 8 |
| வாசனைத்திரவியங்கள் | 1 | 4 | 9 |
| தேயிலை | 0 | 0 | 11 |
| மற்ற உணவுப் பொருள்கள் | 0 | 5 | 5 |
| மொத்த உணவுப் பொருள்கள் | 18 | 10 | 5 |
| விறகு, விளக்கு வகையரா | 3 | 10 | 2 |
| துணிகள் | 4 | 7 | 10 |
| தட்டு முட்டுச் சாமான்கள் | 0 | 6 | 1 |
| வீட்டு வாடகை | 2 | 6 | 0 |
| நாவிதன், வண்ணான் வகையரா | 0 | 12 | 10 |
| புகையிலை | 0 | 9 | 8 |
| மதுபானம் | 0 | 13 | 9 |
| ஊருக்குப் போய்வருதல் | 0 | 10 | 6 |
| கடன்கள் பேரில் வட்டி | 2 | 8 | 4 |
| மற்றவை | 2 | 14 | 4 |
| ஆகமொத்தம் | 37 | 13 | 11 |

† Page 206 The Report of the Royal

| ஷோலாப்பூர் | ஆமதாபாத் | |
|---|---|---|
| மொத்தச் செலவில் 100-க்கு எவ்வளவு பங்கு | சராசரி மாதச் செலவு | மொத்தச் செலவில் 100-க்கு எவ்வளவு பங்கு |
| | ரூ. அ. பை. | |
| 25·10 | 11 11 11 | 29·84 |
| 3·50 | 1 7 6 | 3·73 |
| 2·80 | 0 15 7 | 2·47 |
| 4·31 | 0 14 1 | 2·24 |
| 3·41 | 3 6 1 | 8·59 |
| 2·50 | 1 11 1 | 4·30 |
| 2·65 | 0 11 10 | 1·88 |
| 0·61 | 0 1 7 | 0·25 |
| 3·43 | 0 11 9 | 1·87 |
| 0·15 | 0 2 4 | 1·37 |
| 0·89 | 0 14 10 | 3·36 |
| 49·25 | 22 12 7 | 57·90 |
| 9·60 | 2 12 4 | 7·04 |
| 11·86 | 3 11 6 | 9·45 |
| 1·00 | 0 7 4 | 1·16 |
| 6·27 | 4 9 11 | 11·74 |
| 2·13 | 0 15 9 | 2·50 |
| 1·60 | 1 2 9 | 2·97 |
| 2'27 | 0 8 9 | 1·39 |
| 1·73 | 0 9 5 | 1·50 |
| 6·65 | | |
| 7·65 | 1 11 4 | 4.35 |
| 100·00 | 39 5 9 | 100·00 |

*Commission on Labour in India 1931.

இக் கணக்குகள் முழுதும் நம்பத் தக்கதல்ல. ஏனெனில் மது பானத்தில் எவ்வளவு தொகை செலவு செய்கிறார்கள் என்று வெளிப்படையாகத் தொழிலாளர்கள் சொல்வதில்லை. எனினும் மேற்கண்ட குறிப்புகளிலிருந்து சில விஷயங்கள் புலப்படுகின்றன. அவர்கள் வருமானம் மிகக் குறைவாக விருக்கின்றது. இவ் வருமானம் முழுதும் சரியாக உபயோகப்படுத்தப்படவில்லை யென்பதும், அதில் ஒரு பகுதி கள்ளுக்கும், கடனுக்கும் செல்கின்றது என்பதும் வருந்தத் தக்கது. அவர்களிடமிருந்து குடியை அகற்றுவதற்கு முயற்சி செய்யப்படவேண்டும். அவர்கள் வாங்கும் கடன்களுக்குத் தற்சமயம் ஏராளமான வட்டி கொடுக்க வேண்டியிருக்கிறது. சில இடங்களில் 100-க்கு 325 வட்டி அவர்களால் கொடுக்கப்படுகிறது.

தொழிலாளர்களுடைய அவசியங்களுக்குக் குறைந்த வட்டிக்கு ரொக்கம் கிடைக்கக்கூடிய சௌகரியங்கள், கோஆபரேடிவ் இயக்கத்தின் மூலமாகவோ, அல்லது வேறு மூலமாகவோ செய்யப்பட வேண்டும். தவிர, அவர்கள் வருமானத்தையும் அதிகப்படுத்துவதற்குப் பிரயத்தனம் செய்யவேண்டும்.

நம் தொழிலாளர்களின் ஆற்றல்:--மேல்நாட்டுத் தொழிலாளர்களுடன் ஒப்பிட்டுப் பார்த்தால், நம்நாட்டுத் தொழிலாளர்கள மிகக் குறைந்த ஆற்றல் உள்ளவர்களாக இருக்கின்றார்கள் என்ற வருந்தத்தக்க உண்மை புலப்படுகின்றது. இதற்குக் காரணங்கள் பல வுள. மேல்நாட்டின் சீதோஷ்ண ஸ்திதி, அதிக உஷ்ணமில்லாமல், அதிக முயற்சி செய்வதற்கு உதவியாக விருக்கிறது. இவ் வியற்கை உதவி நம் நாட்டில் இல்லை. நம் நாட்டின் கொடிய உஷ்ணத்தில்

அதிகமாக வேலை செய்வது அசாத்தியமாக விருக்கிறது; உடம்பு சீக்கிரத்தில் அயர்ச்சியடைகிறது.

ஆனல் நாம் சுலபமாய் அகற்றக்கூடிய பல குறைகள் நம் தொழிலாளர்களுடைய ஆற்றலைக் குறைக்கின்றன. அவர்களுக்குப் போதுமான உணவு கிடைப்பதில்லை; இருப்பதற்குச் சுகாதாரமான இடமும் கிடைப்பதில்லை. அசுத்தங்களிலே இருக்கவேண்டி யிருப்பதால் பல பிணிகளுக்கு ஆளாகின்றனர்; ஆதலால் வேலை செய்யும் ஆற்றலையும் இழக்கின்றனர், அவர்களுடைய வறுமையே அவர்களுடைய ஆற்றல் குறைவுக்கு முக்கிய காரணமாகும்; இதைத் தவிர கடனும் அவர்களுக்குப் பெருஞ் சுமையா யிருந்து வருகின்றது. வறுமையை யொழித்து, அவர்கள் வருமானத்தை அதிகம் செய்தாலொழிய, அவர்கள் அதிக ஆற்றல் அடைவது அசாத்தியம். அவர்கள் ஆற்றல் அதிகமானல் கைத் தொழில்கள் விருத்தியடையும். எனவே, தொழிலாளர்களுடைய ஆற்றல் விருத்தியும், கைத்தொழில்களின் விருத்தியும் ஒன்றுக்கொன்று நெருங்கிய சம்பந்தமுள்ளனவா யிருக்கின்றன.



# இருபத்தி மூன்றாவது அதிகாரம்

## நம் சராசரி வருமானம்

ஒவ்வொரு வருஷமும் நம் நாட்டில் நம் மக்களால் எத்தனை செல்வம் உண்டாக்கப்படுகிற தென்பதையும், நம்முடைய சராசரி வருமானம் என்ன வென்பதையும், நாம் தெரிந்து கொண்டாலன்றி, நம் பொருளாதார நிலைமையைப் பற்றித் தெரிந்துகொள்ள முடியாது. ஆனால் ஒரு தேசத்தின் மொத்த வருமானத்தைச் சரிவரத் தெரிவது மிகவும் கடுமையான காரியமாகும். தவிர, நம் தேசத்தில் போதுமான புள்ளி விவரங்கள் சேகரித்து வைக்கப்படுவதில்லை. எனவே, நம் நாட்டின் மொத்த வருமானத்தைச் சரியாகக் கணக்கெடுப்பது அசாத்தியமெனக் கூறலாம். கீழே கொடுக்கப்பட்டிருக்கும் கணக்குகள் ஏக தேசக் கணக்குகள் என்று உணரத் தக்கது.

ஒரு தேசத்து வருமானத்தைத் தெரியும் வழிகள் :— சாதாரணமாக ஒரு தேசத்தின் வருமானம் மூன்று வழிகளில் கணக்கிடப்படுகிறது. 1. வருமான வரிக் கணக்குகள் மூலம் இது ஒருவாறு கணிக்கப்படலாம். ஒரு தேசத்தின் பெரும் பகுதியான மக்கள் வருமான வரிக்கு உட்பட்டிருந்தால், அக் கணக்குகளிலிருந்து அந்நாட்டு மக்களுடைய வருமானம் தெளிவாக விளங்கும். ஆனால் நம் நாட்டில் வருமான வரியைக்கொண்டு நம் மக்களுடைய வருமானத்தை தெரிய முடியாது; ஏனெனில் நம் மக்களில் பெரும்பான்மையோர்க்கு வருமான வரி கொடுக்கத் தக்க ஆற்றல் இல்லை. இரண்டு வருஷங்களுக்குமுன் ரூ. 2000/-க்கு மேல்பட்ட வருமானம் உள்ளவர்களுக்கும், தற்சமயம் ரூ. 1000/-க்கு அதிகமான வருமானம் உள்ளவர்களுக்கும்

தான் வருமான வரி விதிக்கப்படுகிறது. நம் நாட்டில் மிகக் குறைந்த பேர்களுக்குத்தான் வருமான வரி கொடுக்கத் தக்க வருமானம் வருகின்றது. வருமான வரி வியாபார லாபத்துக்குத்தான் போடப்படுகிறதே யொழிய விவசாய லாபத்துக்குப் போடப்படுகிறதில்லை. எனவே, இக் கணக்கு களில் விவசாயத்தில் கிடைக்கும் லாபம் தென்படாது. ஆதலால், இம் முறை மூலம் நம் நாட்டு வரும்படியைக் கணக் கிடலாகாது.

2. தொழில்கள் ஒவ்வொன்றிலும் எவ்வளவு வரு மானம் வருமென்று கணக்கிட்டு, ஒவ்வொரு தொழிலிலும் எத்தனை பேர்கள் இருக்கிறார்கள் என்பதையும் அறிவதனால் நம் நாட்டு வருமானத்தைத் தெரியலாம். ஆனால் இம் முறையும் நம் நாட்டுக் கேற்றதா யில்லை. நம் நாட்டுத் தொழில்களில் கிடைக்கும் வருமானங்கள் சரிவரக் கணக் கிடப்படவில்லை. சில கைத் தொழில்களைப்பற்றிய கணக்கு கள் ஒருவாறு தெரிந்தாலும், சிறிய கைத் தொழில்களில் கிடைக்கக்கூடிய வருமானத்தைப் பற்றியும், குடிசைக் கைத் தொழில்களில் கிடைக்கக்கூடிய வருமானத்தைப் பற்றியும், நம்மிடத்தில் யாதொரு சரியான கணக்குகளும் இல்லை.

3. நம் நாட்டில் உண்டாக்கப்படும் மொத்த பொருட் களின் கணக்கு எடுப்பதன் மூலமும், நம் மொத்த வரு மானத்தை யுணரலாம். விவசாயத்தில் கிடைக்கக் கூடிய வருமானத்தையும், சுரங்கங்கள் மூலம் வரும் வருமானத்தை யும் தெரிவிக்கத் தக்க கணக்குகள் நம்மிடத்தில் இருக்கின் றன. ஆகையால், இம் முறையே நம் நாட்டின் வருமானத் தைக் கணக்கிடுவதற்கு ஏற்ற முறை யென்று சொல்லப் படுகிறது. ஆனால் மீன் பிடிப்பதன் மூலமும், குடிசைக் கைத் தொழில்கள் முதலியன மூலமும் என்ன வருமானம்

வருகின்றதென்பதைத் தெரிவதற்கு நம்மிடத்தில் போது மான கணக்குகள் இல்லே. விவசாய சம்பந்தமாக வைக்கப் பட்டிருக்கும் கணக்குகளும், அவ்வளவு திட்டமாக விருக்கு மென்று சொல்வதற்கும் இடமில்லே. எனவே, கைக்குக் கிடைக்கும் புள்ளி விவரங்களே வைத்துக்கொண்டு கீழ்க் கண்ட கணக்குகள் போடப்பட்டிருக்கின்றன.

இந்திய வருமானக் கணக்குகள் :—இந்திய தேசீய இயக்கத்துக்கு அடிகோலின பெரியார் தாதாபாய் நவரோஜி முதன்முதல் இம் முறையை அனுஷ்டித்துக் கணக்குப் போட்டு, பிரிட்டிஷ் இந்தியாவில் வசிக்கும் ஒரு நபரின் சராசரி வருமானம் ரூ. 20/-தான் என நிரூபித்தார். அவ ருக்குப் பின் மேஜர் ஈவ்லின் பாரிங் (பின் லார்ட் குரோமர் ஆனவர்), டிக்பீ, லார்ட் கர்சன், வாடியா, ஜோஷி முதலிய வர்களும் இந்தியாவின் வருமானத்தைக் கணக்கிட முயற்சி செய்தனர். வாடியாவும், ஜோஷியும் போட்ட கணக்கின் விவரங்கள் கீழே சொல்லப்படும்.

வாடியாவும், ஜோஷியும் போட்ட கணக்கு:—வாடியா வும், ஜோஷியும் 1913-14-ம் வருஷத்தில் இந்தியாவுக்கு எவ்வளவு வருமானம் கிடைத்திருக்கிறதெனக் கணக்குப் போட்டார்கள். விவசாயத்தில் வந்த லாபம் ரூ. 1,072,99,93,282/–எனக் கணக்கிடப்பட்டது. இதில் விதை, உரம் முதலியவைகளில் செலவு செய்தது 100-க்கு 20 பங்கு என வைத்துக்கொண்டு, அதை மொத்த வரு மானத்தில் கழித்தால், விவசாயத்தின் நிகர வருமானம் ரூ. 858,39,94,626/-என ஏற்படுகிறது. சுரங்கங்களிலிருந்து வந்த மொத்த வருமானம் ரூ. 14,40,95,000/-. இதிலும் 100-க்கு 20 பங்கு செலவுகளுக்காகக் கழிக்கப்பட்டால், சுரங்கங்களின் நிகர வருமானம் ரூ. 11,52,76,000/- ஆகி

றது. இவைகளுடன் தோல், எருக்கள், கம்பளி, பட்டு முதலியவைகளில் வரக்கூடிய வருமானமும், 865,000 மீன் பிடிப்பவர்களுக்கு நாள் ஒன்றுக்கு 0-4-0 வீதம் 275 நாட்களுக்கு வரக்கூடிய வருமானமும் கணக்குப் போடப் பட்டது. வியாபாரம் முதலிய தொழில்களில் ஈடுபட்டிருக் கும் தொழிலாளர்கள் 18,000,000 பேர்களுக்கு நாள் ஒன் றுக்கு 0-4-0 வீதம் 310 நாட்களுக்கு வரக்கூடிய வரு மானமும் கணக்குப் போடப்பட்டது. கால் நடைகளி லிருந்து ஒரு வருஷத்துக்கு வரத் தக்க வருமானம் அத் துடன் சேர்த்துக் கொள்ளப்பட்டது. கைத் தொழில்களி லிருந்து ரூ. 40,95,33,000/-லாபம் கிடைத்ததாக கணக் கிடப்பட்டது.

இந்தியாவின் வருமானங்கள் அவைகள் கிடைக்கும் துறைகள் வாரியாகக் கீழே காண்பிக்கப்பட்டிருக்கிறது.

| † விவரங்கள் | வருமானம் ரூபாயில் |
|---|---|
| விவசாயம் | 858,39,94,626 |
| உலோக சுரங்கங்கள் | 11,52,76,000 |
| கால் நடைகள் | 145,10,34,634 |
| கைத்தொழில்கள் | 40,95,33,000 |
| நானுவகை | 154,29,58,750 |
| மொத்த வருமானம் | 1,210,27,37,010 |

ஆனால் இதிலிருந்து ஒவ்வொரு வருடமும் நம் நாட் டுக்கு வெளியே அனுப்பப்படும் தொகைகள் கழிக்கப்பட வேண்டும். இந்தியா கவர்ன்மெண்டின் சார்பாக இங்கி லாந்தில் இந்தியா மந்திரியால், இந்திய வரிகளிலிருந்து

† Page 161, Jather & Beri's Indian Economics Vol. II

தொகைகள் செலவு செய்யப்படுவதாக முன் சொல்லப் பட்டது. அன்னிய நாட்டார்கள், நமது நாட்டுக் கைத் தொழில்களிலும், வியாபாரத்திலும் தங்கள் ரொக்கத்தை உபயோகப்படுத்திக்கொண் டிருக்கின்றனர். இவைகளில் வரும் லாபமும் அவர்களால் அன்னியநாட்டுக்கு அனுப்பப் படுகின்றது. நம் நாட்டில் சேவை செய்யும் ஆங்கில உத்தி யோகஸ்தர்களும் தங்கள் வருமானத்தைச் சேகரித்து அவர்கள் நாட்டுக்கு அனுப்புகின்றனர். இங்ஙனம் நம் நாட்டைவிட்டு வெளியே அனுப்பப்படும் தொகை ரூ. 82,000,000 பவுன்கள், அதாவது ரூ. 123,00,00,000 எனக் கணக்குப் போடப்பட்டது. நம் மொத்த வரு மானத்திலிருந்து இத்தொகை கழிக்கப்பட்டு, மீதமிருக்கும் தொகைதான் நமது நாட்டின் நிகர வருமானமாகும். இப்படிக் கழித்தால் நமது நிகர வருமானம் ரூ. 1,087,27,97,010/ ஆகிறது.

நம் சராசரி வருமானம் என்னவென்று இனிமேல் கணக்கிட்டுப் பார்ப்போம். 1911-ம் வருஷத்திய ஜன சங்கைக் கணக்குப்படி பிரிட்டிஷ் இந்தியாவின் மொத்த ஜனத்தொகை 244, 189, 716. 1913-14-ல் ஜனத்தொகை யில் 1,000,000 பேர்கள் அதிகமாயிருக்குமென வைத்துக் கொண்டால், மொத்த ஜனத்தொகை 245, 189, 716 ஆகிறது. மொத்த வருமானத்தை ஜனத்தொகையால் வகுத்தால், பிரிட்டிஷ் இந்தியனுடைய சராசரி வருமானம் கிடைக்கும். வகுத்துப் பார்த்ததில் பிரிட்டிஷ் இந்தியாவி லிருக்கும் ஒருவனுடைய சராசரி வருமானம் வருஷம் ஒன்றுக்கு ரூ. 44-5-0 கிடைப்பதாகத் தெரியவருகிறது.

இதே வருஷத்தில் மற்ற நாட்டு மக்களின் சராசரி வருஷ வருமானத்தைக் கீழே காண்க.

| † தேசத்தின் பெயர் | ஒருவன் சராசரி வருமானம் |
|---|---|
| யுனைடெட்ஸ்டேட்ஸ் ஆப் அமெரிக்கா | 72 பவுன்கள் |
| இங்கிலாந்து | 50 ,, |
| ஆஸ்ட்ரேலியா | 54 ,, |
| கனடா | 40 ,, |
| பிரான்சு | 38 ,, |
| ஜர்மனி | 30 ,, |
| இதாலி | 23 ,, |
| ஸ்பெயின் | 11 ,, |
| ஜப்பான் | 6 ,, |
| இந்தியா | 3 ,, |

நம் நாட்டின் சம்பாத்தியம் உலகத்திலுள்ள எல்லா நாடுகளிலும் கடைசியாக இருப்பது மிக வருந்தத்தக்கது. நம் நாட்டு மக்கள் தரித்திரத்தில் மூழ்கி இருக்கின்றனர் என்பது இதிலிருந்து நன்கு புலப்படும். ஆனால், நம் மக்களுடைய வறுமை இதைவிட மிகவும் கொடியதாய் அனுபவத்தில் காணப்படுகிறது. நம் தேச வருமானத்தில் 100க்கு 35 பங்கு நம் மக்களில் 100-க்கு 5-பேர்கள் அனுபவிக்கிறார்கள்; இன்னுமொரு மூன்றில் ஒரு பகுதியை 100-க்கு 35-மக்கள் அனுபவிக்கின்றனர். தேசத்தின் மொத்த வருமானத்தில் மீதமிருக்கிற 100-ல் 30-பங்குகள், மற்ற மக்கள் 100-க்கு 60-பேர்களால் பல்வேறு மாதிரிகளில் பிரிக்கப்பட்டு அனுபவிக்கப் படுகிறது. அதாவது நம் மக்களில் பெரும் பகுதியோர், 100-க்கு 60-பேர்கள், வருஷத்துக்கு

† Page 469 Jather & Beri's Indian Economics Vol. I.

சராசரி ரூ. 22-0-0 வருமானத்தைக்கொண்டு ஜீவிக்கின்றனர்; வருஷத்துக்கு ரூ. 22-0-0 என்றால், ஒரு நாளுக்கு சுமார் ஒரு அணு ஆகின்றது. நம் நாட்டு மக்களில் பெரும் பகுதியோர் சராசரி ஒரு தினத்துக்கு ஒரு அணு வருமானத்தில் காலங்கழிக்கவேண்டி யிருக்கிறதென்றால், நம் மக்களின் வறுமையைப் பற்றிச் சொல்லவும் வேண்டுமோ?



# இருபத்தி நான்காவது அதிகாரம்

## அரசாங்க வரவு செலவுகள் (Public Finance)

அரசாங்கத்தின் கடமைகள் :— சமூகத்தின் நன்மைக்காக அரசியல் அமைப்புகள் ஏற்படுத்தப்பட்டன. மக்கள் ஒன்றாகச் சேர்ந்து, ஒரு ஸ்திரமான இடத்தில் இருக்க ஆரம்பித்தபோது சமூக வாழ்வு ஆரம்பித்தது. அத்துடன் இதர நாட்டார் படையெடுப்புகளினின்று காப்பாற்றிக் கொள்ள வேண்டிய அவசியம் ஏற்பட்டது. நாட்டிற்குள்ளும் சண்டை சச்சரவுகள் உண்டாகாமல் பார்த்துக்கொள்ள வேண்டியிருந்தது. மக்கள் ஒருவருக்கொருவர் சண்டை செய்து கொண்டபோது அவைகளைத் தீர்க்கவும், அவர்களுடைய பாத்தியங்கள் சம்பந்தமாய் வழக்குகள் ஏற்பட்டபோது அவைகளில் நியாயம் வழங்குவதற்கும் ஒரு அமைப்பு அமைக்கவேண்டி யிருந்தது. இவ் வமைப்புக்குத்தான் அரசியல் அமைப்பு அல்லது அரசாங்கம் என்ற பெயர் கொடுக்கப்பட்டது. முதலில் அமைக்கப்பட்ட அரசியல் அமைப்பு அரசனுடைய ஆளுகையாதலால் அதற்கு அரசாங்கம் என்ற பெயர் வந்தது. ஆனால் தற்காலத்தில் பலவிதமான அரசியல் அமைப்புகளும் அரசாங்கம் என்ற

பொதுப்பெயரால், கவர்ன்மெண்டு என்ற அர்த்தத்தில் வழங்கப்படுகின்றன.

அன்னிய நாட்டுப் படையெடுப்புகளி னின்று காப் பாற்றுவதும், உள்நாட்டில் சச்சரவுகள் இல்லாமல் பார்த்துக் கொள்வதும், வழக்குகளில் நீதி வழங்குவதுமே அரசாங்கம் அல்லது கவர்ன்மெண்டின் பிரதம கடமையாகும். அன்னிய நாட்டுப் படையெடுப்புகளிலிருந்து நம்மைக் காப்பாற்றிக் கொள்வதற்கு, ஒரு சேனை அவசியம். உள்நாட்டில் சண்டை கள் அல்லது கலகங்கள் இல்லாமல் காப்பதற்கு போலீஸ் படை ஒன்று அவசியம். ஜனங்களுக்குள் ஏற்படும் சச்சரவு களையும், பாத்திய வழக்குகளையும் நீதியுடன் தீர்ப்பதற்கு நீதி மன்றங்கள் அவசியம். முற்காலத்தில் அரசாங் கங்கள் இம்மூன்று பிரதம கடமைகளை மாத்திரம் செய்து வந்தன.

ஆனால் பிற்காலத்தில் அரசாங்கத்தின் கடமைகள் வளர்ந்து கொண்டே வந்தன. வேறு சில கடமைகளும் முக்கியமாகக் கருதப்பட்டு அரசாங்கத்தாரால் செய்யப்பட்டு வந்தன. இக்காலத்தில் அரசாங்கத்தின் கடமைகள் ஒவ் வொன்றாக வளர்ந்துகொண்டு வருவதைக் காணலாம். தற்காலத்தில் பெரும்பான்மையான மக்களுடைய க்ஷேமத் தையொட்டிய விஷயங்கள் யாவும் அரசாங்கத்தாரால் செய்யப்பட வேண்டுமெனக் கருதப்படுகின்றன. மக்கள் யாவருக்கும் எழுதப்படிக்கக் கற்றுக்கொடுக்கப்பட வேண்டு மென்பதும், தொழிலாளர்களுக்கும், மற்ற ஏழை மக்களுக் கும் சுகாதார சௌகரியங்கள் செய்து கொடுக்கப்பட வேண்டு மென்பதும், நம்நாட்டுக் கைத்தொழில்களை அபி விருத்தி செய்யவேண்டுமென்பதும், இன்னும் தேசத்தின் அபிவிருத்தியை யொட்டிய எல்லா விஷயங்களும் அரசாங்

கத்தின் கடமைகள் எனக் கருதப்பட்டு, அங்ஙனமே அரசாங்கத்தால் செய்யப்பட்டும் வருகின்றன.

வரிகள் அல்லது வரவுகள்:—மேற்கண்ட கடமைகளைச் செய்வதற்கு ஏராளமான பணம் அவசியம். இச் சேவைகள் செய்யப்படுவதற்காக மக்கள் தங்கள் வருமானத்தில் ஒரு பகுதியை அரசாங்கத்துக்குக்கொடுக்க வேண்டும். மக்களால் அரசாங்கத்துக்குக் கொடுக்கப்படும் தொகைகள் தான் சாதாரணமாக வரியென்று சொல்லப் படுகிறது. இவைகளே அரசாங்கம் அல்லது கவர்மெண்டின் வரவுகளாகும். தங்கள் கடமையைச் செய்வதில் செலவிடும் தொகைகளே கவர்ன்மெண்டின் செலவுகளாகும். முற்காலத்தில் வரிகள் மூலம் தான் அரசாங்கங்கள் தங்கள் வருமானத்தில் பெரும் பகுதியைப் பெற்றன. ஆனால் தற்காலத்தில் வேறுவழிகள் மூலமாகவும் அரசாங்கத்துக்கு வருமானங்கள் கிடைக்கின்றன.

ஐந்துவகை வரவுகள்:—நம் அரசாங்கத்துக்கு ஐந்து வகை வரவுகள் யிருக்கின்றன. நம் தேசத்து அரசாட்சி முறைப்படி மாகாணங்கள் யாவும் மாகாண கவர்ன்மெண்டாலும், நம் தேசத்துக்குப் பொதுவாயிருக்கிற அன்னிய நாட்டுப் படையெடுப்புகளிலிருந்து காப்பாற்றிக் கொள்வதற்கு ராணுவப்படை முதலியவை மத்திய கவர்ன்மெண்டாலும் (Central Government) பரிபாலனம் செய்யப்பட்டு வருகின்றன. இவைகளின் செலவுக்காக மத்திய கவர்ன்மெண்டு, அதாவது இந்தியா கவர்ன்மெண்டுக்கு வேண்டிய தொகைகளைப் பெறுவதற்கும், மாகாண கவர்ன்மெண்டுகளுக்கு வேண்டிய தொகைகளைப் பெறுவதற்கும், துறைகள் தனித்தனியாகப் பிரிக்கப்பட்டிருக்கின்றன. இவைகளைத்தவிர, இவைகளுக்குக் கீழ் ஜில்லாபோர்டுகள்

தாலூக்காபோர்டுகள் முனிசிபாலிடிகள் முதலிய ஸ்தல ஸ்தாபனங்களும், தங்கள் காரியங்களுக்கு வேண்டிய தொகைகளை வசூல் செய்கின்றன. இவ் வரவுகளின் பிரிவினையைப்பற்றிப் பின் ஆராயப்படும். இங்கு நம் அரசாட்சி முறையில் கவர்ன்மெண்டுக்குக் கிடைக்கும் வரவுகளின் விதங்கள் மாத்திரம் சொல்லப்படும்.

1. வரிகள் மூலம் கவர்ன்மெண்டார் மக்களிடமிருந்து பணம் வசூல் செய்கின்றனர். இவையே நம் கவர்ன்மெண்டின் முக்கிய வருமானத்துக்குக் காரணமா யிருக்கின்றன. வரிகளில் இரு விதங்கள் உண்டு. (1) நேராக வசூல் செய்யப்படும் வரிகள் (Direct Taxes). யாரால் இவ்வரிகள் கொடுக்கப்படுகிறதோ அவர்களிட மிருந்தே இவை வசூல் செய்யப்படுவன. வருமான வரி, நில வரி முதலியவைகளை இதற்கு உதாரணமாகச் சொல்லலாம். இது யாரிடத்திலிருந்து வசூல் செய்யப்படுகிறதோ, அவர்கள் இவ்வரியின் பாரத்தைத் தாங்குபவர்களாய் இருக்கின்றனர். (2) மறைமுகமாக வசூல் செய்யப்படும் வரிகள் (Indirect Taxes). இவை யாரிடத்திலிருந்து வசூல் செய்யப் படுகின்றனவோ அவர்களால் கொடுக்கப்படுவதில்லை. இவைகள் யாரிடத்தில் வசூல் செய்யப்படுகின்றனவோ அவர்களும், இவைகளின் பாரத்தை உண்மையாகத் தாங்குபவர்களும் வேறானவர்கள். இவைகளைக் கொடுப்பவர்களிடமிருந்து மறைமுகமாக வசூல் செய்யப்படும் வரிகள் என்று பெயர். இவ்வரிகள் சாமான்களின் பேரில் போடப்படுகின்றன. ஆதலால் இச் சாமான்களை வாங்குபவர்கள், இவ்வரியைத் தாங்கள் கொடுப்பதையும் அறியாமல், அதிக விலை கொடுத்துச் சாமான்களை வாங்கிச் செல்கின்றனர். இவ்வரியின் காரணமாக, சாமான்களுக்கு

அவர்கள் அதிக விலை கொடுத்து, அதன்மூலம் அவ்வரியை யும் கொடுக்கிறார்கள். உப்பு வரி, மதுபான வரி, இறக்கு மதி வரிகள் முதலியன மறைமுகமாய் வசூல் செய்யப்படும் வரிகளுக்கு உதாரண மாகும். உப்பின்மேல் போடப்பட் டிருக்கும் வரி, உப்பு உண்டாக்குபவர்களிடத்தில் வசூல் செய்யப்பட்டாலும், அது உண்மையில் உப்பு வாங்குபவர் களால் தான் கொடுக்கப்படுகிறது. இவை மறைமுகமாய் வசூல் செய்யப்படுவதால், இவ் வரியைக் கொடுப்பவர் களுக்கு இவ்வுண்மை விளங்குவதில்லை.

2. ஒரு பொருளை கவர்ன்மெண்டார் மாத்திரம் உண் டாக்கினால், அதை வேறொருவரும் உண்டாக்கிப் போட் டிப் போடாததால், கவர்ன்மெண்டுக்கு அவைகளின் விற்பனை மூலம் லாபம் கிடைக்கின்றது. (Public Monopolies) காடுகளின் உற்பத்தியும், அபினியும் இதற்கு உதாரணமாகச் சொல்லலாம்.

3. மக்களுக்கு அவசியமான சில சேவைகள் செய் தும், கவர்ன்மெண்டார் வருமானம் பெறுகின்றனர். ரயில் பாதைகள், நீர்ப் பாய்ச்சல் திட்டங்கள், தபால் தந்தி, இவைகள் மூலம் மக்களுக்கு மிக அவசியமான சில சௌகரி யங்களைச் செய்வதுடன், கவர்ன்மெண்டார் லாபமும் பெறு கின்றனர்:

4. ஸ்தல ஸ்தாபனங்கள், மாகாண கவர்ன்மெண்டுகள், சுதேச மன்னர்களின் அரசாங்கங்கள் முதலியவைகளுக்குக் கடனாகக் கொடுக்கப்படும் தொகைகளின் பேரில் வட்டி கிடைக்கின்றது.

5. மற்றவகைகள்.

இந்திய அரசாங்கத்தின் வரவு கணக்கு 1927—28:— மேற்கண்ட முறைகளில் 1927—28-ம் வருஷத்தில் வசூல்

செய்யப்பட்ட வரவுகளின் கணக்கு கீழே கொடுக்கப்பட்டிருக்கின்றது. வரவுகளின் விபரங்கள் கொடுக்கப்பட்டிருப்பதுடன், எவை மத்திய அதாவது இந்திய கவர்மெண்டார் செலவுகளுக்காக எடுத்துக் கொள்ளப்பட்டவை, எவை மாகாண கவர்மெண்டுகளின் செலவுகளுக்காக வசூலிக்கப்பட்டவை என்பதும் விளக்கமாகப் பிரித்துக் காண்பிக்கப்பட்டிருக்கிறது. ஆயிரம் ரூபாய்களில்

| வரவு வகைகள் | இந்திய கவர் மெண்டார் | மாகாண கவர் மெண்டுகள் |
|---|---|---|
| கடல் சுங்கவரி (customs) | 48,21,42 | |
| வருமான வரி | 15,06,39 | 36,25 |
| உப்பு வரி | 6,63,18 | |
| அபினி | 3,94,52 | |
| நிலவரி | 40,92 | 35,27,82 |
| மதுபான வரி (excise) | 52,15 | 19,30,01 |
| ஸ்டாம்பு வரி (stamps) | 28,80 | 13,31,10 |
| காடுகள் | 24,59 | 5,83,21 |
| ரிஜிஸ்ட்ரேஷன் (Registration) | 1,56 | 1,45,77 |
| சுதேச மன்னர்களின் கப்பங்கள் | 83,97 | |
| மற்ற வரிகள் | | 40,66 |
| ஆகமொத்தம் | 76,15,50 | 75,94,82 |
| ரயில்பாதைகள் (நிகர வரவு) | 38,67,48 | 4,80 |
| நீர்ப்பாய்ச்சல் (நிகர வரவு) | 9,06 | 6,86,34 |
| தபால் தந்தி (நிகர வரவு) | 31,46 | |
| வட்டி வரவுகள் | | |
| வட்டி | 3,61,91 | 2,35,77 |
| இராஜ்யபரிபாலனம் (Civil administration) | 9869 | 3,89,61 |

| † வரவு வகைகள் | இந்திய கவர்மெண்டார் | மாகாண கவர்மெண்டுகள் |
|---|---|---|
| நாணயங்களும் தங்கச்சாலையும் | 3,77,46 | |
| பொதுக் கட்டடங்கள் (Civil works) | 16,07 | 1,02,60 |
| | | 1,91,82 |
| நாணுவிதம் | 52,46 | |
| ராணுவத்திலிருந்து வரவு(Military Receipts) | 1,54,49 | |
| இந்தியா கவர்மெண்டுக்கும் மாகாண கவர்மெண்டுகளுக்கும் நாணுவித கணக்கு தாக்கல்கள் | 2,60 | 2,60 |
| அசாதாரண வகைகள் | | |
| அசாதாரண வரவுகள் | 14,12 | 1,26,38 |
| ரெவன்யு ரிசர்வ் பண்டிலிருந்து | 2,21,48 | |
| ஆகமொத்த வரவு | 1,27,22,78 | 93,29,54 |

மேற்கண்ட கணக்கிலிருந்து, கடல் சுங்கவரி, வருமான வரி, உப்புவரி, அபினிவரி இவைகள் மூலமே இந்தியா கவர்மெண்டு அதன் பெரும் பகுதியான வரிகளைப் பெறுகிற தென்று தெரியவரும். தவிர ரயில் பாதைகள் முதலியன மூலமாகவும், இந்தியா கவர்ன்மெண்டுக்கு வருமானம் கிடைக்கின்றது. மாகாண கவர்ன்மெண்டுகள், நிலவரி மதுபானவரி, ஸ்டாம்புகள், கார்டுகள், ரிஜிஸ்ட்ரேஷன் இவைகள் மூலம்தான் தங்கள் பெரும்பகுதியான வருமானத்தை பெறுகின்றன என்பதும் விளங்கும். இவைகளில் முக்கிய மானவைகளைத் தனித்தனியாகக் கீழே கவனிப்போம்:

† Jathar & Beri's Indian Economics Page 479 Vol. II

கடல் சுங்கவரி (Customs):—இவைகள் இறக்குமதி ஏற்றுமதி என இருவகைப்படும். இறக்குமதி வரிகள் நம் தேசத்துக்குள் இறக்குமதி செய்யப்படும் சாக்குகள் பேரில் போடப்படுபவை. இவை அச்சாமான்களை வாங்கும் நம் நாட்டு மக்களால் கொடுக்கப்படுகின்றன. ஏற்றுமதி வரிகள் நம் நாட்டிலிருந்து ஏற்றுமதி செய்யப்படும் சாக்குகள்பேரில் போடப்படுபவை. அவை அச்சாக்குகளை வாங்கும் அன்னிய நாட்டாரால் கொடுக்கப்படுகின்றன. ஆனால், ஏற்றுமதி வரிகள் போடுவதால் சாக்குகளின் விலை யதிகமாவதால், நம் ஏற்றுமதிகள் அன்னிய நாடுகளில் வாங்கப்படாமல் போகலாம். ஆதலால், ஏற்றுமதி வரிகள் நம் அன்னிய நாட்டு வியாபாரத்தை பாதிக்கலாம். இதன் காரணமாக, ஏற்றுமதிவரிகள் விதிப்பதில், மிகவும் யோசனை செய்து, அதனால் வரத்தக்க பயனை ஆராய்ந்து, விதிக்கவேண்டும்.

இறக்குமதி வரிகளால், கவர்ன்மெண்ட்டுக்கு வருமானம் கிடைப்பதுடன் நம் நாட்டுக் கைத்தொழில்களுக்குப் பாது காப்புகளும் அவைகள் மூலம் அளிக்கலாம். ஆதலால் சாதாரணமாக அரசாங்கச் செலவுகளுக்காக வரிப் போட வேண்டியிருப்பதால், இறக்குமதி வரிகளே சாதாரணமாகப் போடப்படுகின்றன.

இறக்குமதி வரிகள்:—சிப்பாய் கலகத்துக்குமுன், ஒரு சிறு இறக்குமதிவரிப் போடப்பட்டிருந்தது. சிப்பாய் கலகத்துக்குப் பிறகு, கவர்ன்மெண்ட்டுக்குப் பணம் வேண்டியிருந்ததால், இது சாமான்களின் மதிப்பின்பேரில் 100-க்கு 10-ஆக உயர்த்தப்பட்டது. 1880-ல் மான்சஸ்டர் வியாபாரிகளின் வேண்டுகோளின் பேரில் இவ்வரிகள் எடுக்கப்பட்டன. 1894-ம் வருஷத்தில் இவ்வரி மறுபடியும் 100-க்கு 5-ஆகப் போடப்பட்டது. ஆங்கிலத்துணி இறக்குமதிகள்

பேரிலும் இவ்வரிகள் போடப்படவே, இந்திய மில்களின் உற்பத்தி பேரிலும் இவ்வரி போடப்படவேண்டுமென ஆங்கில லங்காஷயர் வியாபாரிகள் கூக்குரலிட்டனர். அவர்கள் இச்சைக்கு இணங்கி இந்தியமில் துணிகள் பேரிலும் இவ்வரி போடப்பட்டது.

1896-ல் இவ்வரி 100-க்கு $3\frac{1}{2}$ ஆகக் குறைக்கப்பட்டு, இந்திய மில் துணிகள் பேரில் போடப்பட்டிருந்த உள்நாட்டு வரியும் 100-க்கு $3\frac{1}{2}$ ஆகக் குறைக்கப்பட்டது. இந்திய மில்களில் நெய்யப்படும் துணிகள் ஆங்கிலத்துணிகளுக்குப் போட்டியாகவில்லை யென்பதைப் பலதரம் ரூபித்துக் காட்டியும், இந்திய மில்துணிகள் பேரில் போடப்பட்டிருந்த வரி எடுக்கப்படவில்லை. நம் இராஜீய அடிமைத் தனத்துக்கு ஒரு சின்னமாயிருந்த இவ்வரி 1925-ல், இந்தியா சட்டசபையில், இது எடுக்கப்படவேண்டுமென்று தீர்மானம் நிறைவேறியபின்பு, எடுக்கப்பட்டது.

ஆங்கிலத் துணிகள் பேரில் போடப்பட்டிருந்த இறக்குமதி வரி 1917—18-ல் 100-க்கு $7\frac{1}{2}$ ஆகவும், 1921—22-ல் 100-க்கு 11-ஆகவும், 1922—23-ல் 100-க்கு 15-ஆகவும் உயர்த்தப்பட்டது. ரயில்பாதைச் சாமான்கள் பேரில் 1916—17-ல் 100-க்கு $2\frac{1}{2}$ வரி போடப்பட்டு, 1922—23-ல் 100-க்கு 10-ஆக உயர்த்தப்பட்டது. இரும்பு எஃகு சாமான்கள்பேரில் போடப்பட்டிருந்த இறக்குமதி வரி 1916—17-ல் 100-க்கு $2\frac{1}{2}$ ஆகவும், 1922—23-ல் 100-க்கு 10-ஆகவும் உயர்த்தப் பட்டது. சர்க்கரையின் பேரில் 1922—23-ல் 100-க்கு 25-வரை வரிப்போடப்பட்டது. தீப்பெட்டிகள் பேரில் 1921—22-ல் 144 பெட்டிகளுக்கு 12-அணா வரிப் போடப்பட்டு, 1922-23-ல் இவ்வரி இரட்டிக்கப் பட்டது. மோட்டார்கார்கள், சினிமாப்படங்கள், கடிகாரங்கள் முதலியவைகள் பேரில் போடப்பட்டிருந்த வரி 1921—22-ல்

100-க்கு 20-ஆக உயர்த்தப்பட்டு 1922—23-ல் 100-க்கு 30-ஆக அதிகமாக்கப்பட்டது. மோட்டார்கார்கள் பேரில் போடப்பட்ட வரி 1927—28-ல் 100-க்கு 20-ஆகக் குறைக்கப்பட்டது. மண் எண்ணெய், பெட்ரோல், மதுபானம் முதலியவைகள் பேரிலும் இறக்குமதி வரிகள் போடப்பட்டிருக்கின்றன.

ஏற்றுமதி வரிகள்:—1860-ம் வருஷம் வரை 100-க்கு 3 ஏற்றுமதி வரிகள் அநேகமாய் எல்லா ஏற்றுமதிச் சாக்குகள் பேரிலும் போடப்பட்டன. ஆனால், இவ்வரிகள் நம் நாட்டின் அன்னிய நாட்டு வியாபாரத்தைப் பாதிக்கின்றனவாகத் தெரிந்தபடியால், இவை பெரும்பாலும் எடுக்கப்பட்டன. 1916—17-ல் தேயிலையின் பேரிலும், சணலின் பேரிலும் ஏற்றுமதி வரிகள் போடப்பட்டன. ஆனால், தேயிலை பேரில் போடப்பட்ட வரி 1927—28-ல் எடுக்கப்பட்டது. 1917-18-ல் சணலின் பேரில் போடப்பட்ட வரி அதிகமாக்கப்பட்டது. 1919-ல் பதனிடப் படாத தோல் ஏற்றுமதிகளின்பேரில் 100-க்கு 15 ஏற்றுமதி வரி போடப்பட்டது.

சென்ற சில வருஷங்களில் கடல் சுங்க வரியிலிருந்து வந்துகொண்டிருந்த வருமானம் அதிகமாகிக்கொண்டு வருகிறதைக் கீழே காண்க:—

| * வருஷம் | கோடி ரூபாய்களில் | வருஷம் | கோடி ரூபாய்களில் |
|---|---|---|---|
| 1913-14 | 11·13 | 1925-26 | 47·78 |
| 1918-19 | 18·18 | 1926-27 | 47·38 |
| 1921-22 | 34·41 | 1927-28 | 48·21 |
| 1922-23 | 41·35 | 1928-29 | 49·28 |
| 1923-24 | 59·70 | 1929-30 | 49·72 |
| 1924-25 | 45·75 | | |

* Page 484, Jathar and Beri's Indian Economics Vol. II.

வருமான வரி:—இது முதலில் சிப்பாய்க் கலகத்துக்குப் பிறகு ஏற்பட்ட பண நெருக்கடிக்காகப் போடப்பட்டு, சில வருடங்களுக்குப் பின் எடுக்கப்பட்டது. மறுபடியும் அது 1886-ல் போடப்பட்டு, இன்றுவரை இருந்து வருகிறது. இப்பொழுது அது இந்தியா கவர்ன்மெண்ட்டுக்கு முக்கியமான ஆதாரவாக இருக்கிறது.

1931-ல் இந்தியா சட்ட சபையில் நிறைவேற்றப்பட்ட சட்டப்படி, கீழ்க் கண்ட வருமானங்களுக்கு அவைகளுக்கு நேராகக் குறிக்கப் பட்டிருக்கும் வரி போடப்பட்டிருக்கிறது.

மொத்த வருமானம்

| | | | |
|---|---|---|---|
| ரூ. 1000-க்கு மேல்பட்டு | ரூ. 1999-க்கு உட்பட்டால் | வரி ரூ. 1-க்கு | 2 பை. |
| ரூ. 2000/- | ரூ. 5000/- | ,, | 6 பை. |
| ரூ. 5000/- | ரூ. 10,000/- | ,, | 9 பை. |
| ரூ. 10,000/- | ரூ. 15,000/- | ,, | 1 அ. |
| ரூ. 15,000/- | ரூ. 20,000/- | ,, | 1 அ. 4 பை. |
| ரூ. 20,000/- | ரூ. 30,000/- | ,, | 1 அ. 7 பை. |
| ரூ. 30,000/- | ரூ. 40,000/- | ,, | 1 அ. 11 பை. |
| ரூ. 40,000/- | ரூ. 1,00,000/- | ,, | 2 அ. 1 பை. |
| ரூ. 1,00,000/- | மேற்பட்டபோது | ,, | 2 அ. 2 பை. |
| கம்பெனிகளுக்கு வருமானம் எவ்வளவு இருந்தபோதிலும் | | ,, | 2 அ. 2 பை. |

அதிக வரி (Super Tax) அல்லது சூபர் டேக்ஸ்

ரூ. 30,000-க்கு மேற்பட்ட வருமானங்களுக்கு:—

1. கம்பெனிகளுக்கு அதற்குமேல் ரூ. 25,000-க்கு இல்லை. மேற்படிக்கு மேற்பட்ட ஒவ்வொரு ரூபாய்க்கும் ரூபாய்க்கு 1 அணா.

2. இந்து பாகமாகாத குடும்பங்களுக்கு:—
ரூ. 30,000/-க்கு மேற்பட்ட ரூ. 45,000/-க்கு ரூபாய்க்கு 1 அணு 3 பைசா.

3. தனி நபர்கள் அல்லது ரிஜிஸ்டர் செய்யப்படாத கூட்டு விலாசங்களுக்கு. ரூ. 30,000/-க்கு மேல் பட்ட முதல் ரூ. 25,000/-க்கு ரூபாய்க்கு 9பைசா. அடுத்த ரூ. 50,000/-க்கு ரூபாய்க்கு 1 அணு 3 பைசா.

4. தனி மனிதர்கள், இந்து பாகமாகாத குடும்பங்கள் ரிஜிஸ்டர் செய்யப்படாத கூட்டுவிலாசங்கள் முதலியனவுக்கு. மேற்கண்ட தொகைக்கு

| | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|
| மேல்பட்ட | ரூ. | 50,000/-க்கு ரூபாய் 1க்கு | | 1 | அணு | 9 | பை |
| அதற்குமேல் | ரூ. | 50,000/- | ,, | 2 | அணு | 3 | ,, |
| ,, | ,, | 50,000/- | ,, | 2 | ,, | 9 | ,, |
| ,, | ,, | 50,000/- | ,, | 3 | ,, | 3 | ,, |
| ,, | ,, | 50,000/- | ,, | 3 | ,, | 9 | ,, |
| ,, | ,, | 50,000/- | ,, | 4 | ,, | 3 | ,, |
| ,, | ,, | 50,000/- | ,, | 4 | ,, | 9 | ,, |
| ,, | ,, | 50,000/- | ,, | 5 | ,, | 3 | ,, |
| ,, | ,, | 50,000/- | ,, | 5 | ,, | 9 | ,, |
| ,, | ,, | 50,000/- | ,, | 6 | ,, | 3 | ,, |

1929-30-ல் வருமான வரியில் ரூ. 16,59,60,000/- வருமென எதிர்பார்க்கப்பட்டது.

உப்பு வரி :— இது வெகு காலமாகப் போடப்பட்டு வருகிறது. எனினும் மக்களுக்கு இது திருப்தியில்லாத வரியாகவே யிருக்கிறது. ஏனெனின், இதற்கு வரிப்போடுவதில் மிகத்தாழ்ந்த ஏழைகள் பேரிலும் வரிப்போடப் படுகிறது. மிக ஏழைகளும், உப்பின்றி உணவருந்த முடி

யாது; ஆதலால் அவர்கள் இவ்வரியின் பாரத்தை ஏற்றுக் கொள்ள வேண்டியிருக்கிறது. இவ்வரிப் போடுவதால் அவர்களுக்குக் கிடைக்கக்கூடிய உணவும் குறைய நேரிடுகின்றது. இக் காரணத்திற்காகவே கோகலே முதலிய தேசீயத் தலைவர்கள் அனைவரும், உப்புவரி கொஞ்சம் கொஞ்சமாகக் குறைக்கப்பட்டு கடைசியில் எடுக்கப்பட வேண்டுமென முறையிட்டனர்.

ஏழை மக்களுக்கு மிக அவசியமாக விருக்கிற இப் பொருளின் பேரில் வரிப்போடுவது தப்பு எனவும், இவ்வரி எடுக்கப்பட வேண்டும் என்ற எண்ணத்தின் பேரிலேயே. மகாத்மா காந்தியவர்களும், தான் 1930-31-ல் ஆரம்பித்த சட்டமறுப்பு இயக்கத்தில் உப்புச்சட்டத்தை மீறலாமென அனுமதித்து, வழிகாட்டினார். அதற்குப்பின் 1931-ம் வருஷத்தில் காங்கிரசுக்கும் இந்தியா கவர்ன்மெண்டுக்கும் நடந்த உடன்படிக்கைப்படி, கடற்கரையிலும், உப்பு இயற்கையாய்க் கிடைக்கூடிய இடங்களிலும், மக்கள் வரியின்றி உப்பு எடுத்துக்கொள்ளும் சுதந்தாம் ஏற்பட்டது. ஆனல் அவர்கள் சொந்த உபயோகத்துக்குப் போதுமான உப்பு எடுத்துக்கொள்ளலாமே யொழிய, உள் நாட்டில் கொண்டு போய் விற்பதற்காக எடுக்கக்கூடாது.

இவ்வரி ஏழைகளை வருத்துவதால் கூடிய சீக்கிரத்தில் எடுக்கப்படவேண்டும்.

**மாகாண வரவுகள்:**—இனி முக்கியமான மாகாண வரவுகளைப்பற்றிக் கவனிப்போம். நிலவரியும், மதுபான வரியும்தான் மாகாணங்களுக்கு அதிக வருமானத்தைக் கொடுக்கத் தக்கனவாயிருக்கின்றன. காடுகள் ரிஜிஸ்ட்ரேஷன், ஸ்டாம்புகள் முதலியனவும் இவைகளுக்கு அடுத்த படியில், கொஞ்ச வருமானத்தைக் கொடுக்கின்றன.

நிலவரி:—நிலவரியில் சாஸ்வத வரி (Permanent settlement) என்னும், குறிப்பிட்ட ஒரு காலத்துக்கு ஒரு தடவை மாற்றப்படக் கூடிய வரி (Temporary settlement) யென்றும் இரு விதங்கள் உண்டு. சாஸ்வத வரி முறை முக்கியமாய் வங்காளத்திலும், சென்னை மாகாணத்தில் சிற்சில பாகங்களிலும் வழங்கி வருகிறது, குறிப்பிட்ட காலத்துக் கொரு முறை வரி மாற்றப்படும் முறையில் மூன்று விதங்கள் உண்டு. 1. ஜமீன்கள். 2. மஹல்வாரி முறை. 3. ரயட்வாரி முறை. ஜமீன்களில் ஜமீன்தாரர்கள் மூலமும், மஹல்வாரிகளில் கிராமத் தலைவர்கள் மூலமாகவும், ரயட்வாரியில் தனித்தனி ஒவ்வொரு பூமிக்காரனிடத்திலும் நில வரி வசூல் செய்யப்படுகிறது. நம் மாகாணத்திலும் மற்ற சில மாகாணங்களிலும், ரயட்வாரி (Ryotwari) முறையே அதிகம் அனுஷ்டிக்கப்படுவதால், அம் முறையைக் கொஞ்சம் ஆராய்வோம்.

ரயட்வாரி முறை:—ரயட்வாரியைப்பற்றிய விதிகள் ஒரு சட்டத்திலும் செய்யப்படவில்லை; எந்த மசோதாவாலும் சட்ட சபையாலும் உண்டாக்கப்படவில்லை. சர்க்கார் தங்கள் உத்தியோகஸ்தர்களுக்காக அப்போதைக்கப்போது போட்ட உத்தரவுகளில் தான் அவை காணப்படுகின்றன. ரயட்வாரி முறையில் எப்படி ஒரு பூமிக்கு வரிப் போடப்படுகிறது என்பதைக் கவனிப்போம்.

கிராம வாரியாக, எல்லா பூமிகளுக்கும் தெளிவாகக் கணக்கு வைக்கப்பட்டிருக்கிறது. பூமிகள் அவைகளுடைய விளைவுக்குத்தக்கவாறு பிரிக்கப்படுகின்றன. முந்திய 20 வருஷத்திய கணக்குப்படி விளைவுகளுக்கு சாரசரி விலை கண்டு பிடிக்கப்படுகிறது. வியாபாரிகளுடைய லாபத்துக்காகவும் விளை பொருட்களை விற்குமிடங்களுக்குக் கொண்டு போவதற்

காகவும், கொஞ்சம் தொகை கழிக்கப்படுகின்றது. பூமிகள் விளைவுக்குத் தகுந்தபடி தரம்தரமாகப் பிரிக்கப்பட்டு அப் பூமி யின் வருமானத்தை அனுசரித்து வரி விதிக்கப்படுகிறது. 30 வருஷங்களுக்கு ஒரு முறை வரி புதிதாய்ப் போடப் படுகிறது.

வரிகள் விதிக்கும்போது (Resettlement) சில சமயங் களில் பூமிகளின் குத்தகைகளை, அவைகளுடைய வருமா னத்தைக் காட்டும் ஆதாரமாக வைத்துக்கொண்டு கணக் கிடப் படுகிறது. குத்தகைகளிலிருந்து பூமியின் வருமா னங்களைக் கணக்கிடுவது தப்பான முறையென்று, சமீப காலத்தில் பம்பாய் மாகாணத்தில் பார்டோலி தாலூக்காவில் நேர்ந்த நிலவரி சம்பந்தமான விவாதத்திலும் காண்பிக்கப் பட்டது. பலவித காரணங்களால் பூமியின் வருமானத்தை அதற்காகக் கிடைக்கும் குத்தகைகளைக் கொண்டு கணக் கிடுவது அசாத்தியமென வரி விசாரணைக் கமிட்டியாரும் (The Taxation Enquiry Committee) சொல்லி யிருக்கின்றனர்.

வரிவிசாரணைக் கமிட்டியின் சிபார்சுகள் :—தவிர நில வரியை அதிகப்படுத்துவதைப்பற்றி வரி விசாரணைக் கமிட்டி யார் கீழ்க்கண்ட சிபார்சுகளைச் செய்திருக்கின்றனர். பூமி யின் வருஷ வருமானத்திலிருந்துதான் அப்பூமியின் வரி தீர்மானிக்கப்பட வேண்டும். வருஷ வருமானம் என்பது மொத்த விளைவிலிருந்து சாகுபடிச் செலவுகளும் உழைப் பிற்குக் கூலியும் கழித்து, மீதமிருக்கும் தொகை இப்படிக் கணக்கிடப்பட்ட வருஷ வருமானத்துக்கு, நிலவரி கால் பங்கு, அதாவது வருஷ வருமானத்தில் 100-க்கு 25 பங்கு கள்தானிருக்கவேண்டும். வரி உயர்த்தப்பட வேண்டு மானால், ஒரு தடவையில் முன்னிருந்த வரிக்கு 100-க்கு 25-க்கு அதிகமாக உயர்த்தக்கூடாது. நிலவரியும், வருமான

வரியைப்போல் மிகத் தாழ்ந்த வருமானம் உள்ளவர்களுக்குக் குறைந்த விகித வரியும் அதிக வருமான முள்ளவர்கள் பேரில் அதிக விகித் வரியும் விதிக்கப்படவேண்டும்.

வரியா அல்லது வாடகையா?—நிலவரி, வாடகையா (Rent) அல்லது வரியா (Tax) என்ற ஒரு விவாதம் ஏற்பட்டிருக்கிறது. வாடகை என்றால் பூமி முழுதும் கவர்ன்மெண்டாருக்குச் சொந்தமென்றும், நாம் நில வரியாகக் கொடுக்கும் பணம் கவர்ன்மெண்டாருக்கு வாடகையாகக் கொடுக்கப்படுவதென்றும், ஏற்படும். இது வாடகையாகயிருந்தால், கவர்ன்மென்டாருக்குக் கூடியவரை அதிக வாடகை பெற அதிகாரம் இருப்பதாக ஒத்துக் கொண்டதாகும். ஆனல், இது வரியென்று ஏற்பட்டால் பூமி, பூமியின் சொந்தக்காரர்களுக்கே சொந்தம் என்றும், கவர்ன்மெண்டார் தமக்குச் செய்யும் சேவைகளுக்காக நாம் வரி கொடுக்க வேண்டும் என்ற தத்துவத்தின் பேரில் இது வரியாகக் கொடுக்கப்படுவதென்றும், மற்றவகைகளைவிட நிலங்களின் பேரில் அதிக வரி போட கவர்ன்மெண்டாருக்கு அதிகாரம் இல்லை யென்றும் ஏற்படும். நில வரி வாடகையா? அல்லது வரியா? என்ற வாதம் பலர்களால் பலவாராக விவாதிக்கப்படுகிறது. அதை வரி யென்று நிர்ணயிப்பதற்கே அதிக காரணங்கள் இருக்கின்றன.

மதுபான வரி:—இது கள், சாராயம் முதலிய மதுபானங்களின் மேல் போடப்பட்டிருக்கும் வரி. மதுபானங்கள் மக்களை நாசப்படுத்தும் கொடிய வஸ்துக்கள் என்றும், இவைகளின் வியாபாரத்தால் வருமானம் சம்பாதிப்பது கவர்ன்மெண்டாருக்கு ஏற்ற முறையல்ல வென்றும், அது குடிகளின் நன்மையைக் கருதியதாகா தென்றும், மதுபானத்தை அடியோடு நாட்டை விட்டு அகற்றுவதே சிறந்த முறையென்றும் பொது மக்கள் அபிப்பிராயப்படுகின்றனர். எனினும் இவ்வரியால் அதிக வருமானம் கிடைப்பதால், இதை விலக்குவதற்குக் கவர்ன்மெண்டார்

முன் வரவில்லை. இவ்வியாபாரத்தை நிறுத்தி, இவ்வரியை யும் எடுக்கவேண்டியது மிக அவசியம்.

**மொத்த வரவில் வரிகளின் விகிதம்:**—இந்தியா கவர்ன் மெண்டின் முக்கியமான வரிகளும், மாகாண கவர்ன் மெண்டுகளின் முக்கியமான வரிகளும் முன் குறிப்பிடப் பட்டன. இந்தியாவின் மொத்த வருமானத்தில் இவ் வரிகள் ஒவ்வொன்றும், என்ன விகிதத்தைத் தருகின்றன வென்பது கீழே காண்பிக்கப்பட்டிருக்கிறது. கீழ்க்கண்ட வருஷங்களில், இந்தியா கவர்ன்மெண்டு, மாகாண கவர்ன் மெண்டுகள், இவைகளுடைய மொத்த வருமானத்துக்கு, சில வரிகளின் விகிதம் ஏறிக்கொண்டு போவதும், சில குறைவதும், சில ஸ்திரமாக விருப்பதும் கவனிக்கத் தக்கது.

இந்தியாவின் மொத்த (மத்திய, மாகாண கவர்ன்மெண்டு வருமானங்கள் சேர்த்து) வருமானத்தில்

| வருமான விபரங்கள் | 1921-22 | 1923-24 | 1925-26 | 1927-28 |
|---|---|---|---|---|
| | 100-க்கு எவ்வளவு பங்குகள் | | | |
| நிலவரி | 19 | 16 | 16 | 16 |
| கடல் சுங்கவரி | 19 | 19 | 21 | 22 |
| மதுபான வரி | 9 | 9 | 9 | 9 |
| இரயில் பாதைகள் | 8 | 15 | 15 | 17 |
| காடுகள் | 3 | | 3 | 3 |
| நீர்ப்பாய்ச்சல் | 3 | 3 | 4 | 3 |
| வருமான வரி | 12 | 9 | 7 | 7 |
| ஸ்டாம்புகள் | 6 | 6 | 6 | 6 |
| உப்பு | 3 | 5 | 3 | 3 |
| வட்டிகள் மூலம் | 1 | | 3 | 3 |
| மற்றவை | 17 | 18 | 13 | 11 |
| மொத்தம் | 100 | 100 | 100 | 100 |

† Page 480. Jathar and Beri's Indian Economics Vol. II.

அரசாங்கச் செலவுகள்:—அரசாங்கச் செலவுகளுக்கு அவசியமான தொகைகளை எப்படி அரசாங்கத்தார் பெறுகின்றனர் என்பதைப்பற்றி இதுவரை சொல்லப்பட்டது. இங்ஙனம் வசூலிக்கப்பட்ட தொகைகள் எம்மாதிரி செலவு செய்யப்படுகின்றன வென்பதை, இனிக் கவனிக்கவேண்டும். இராஜாங்கங்கள் அல்லது கவர்ன்மெண்டுகளுக்கு, வரி வசூலிப்பதைவிட, அதைச்சரியாகச் செலவு செய்வதே மிகக் கஷ்டமான காரியமாகும். அவர்களுக்கு வேண்டிய தொகைகளை முன் சொல்லியபடி பலவிதமான வரிகள்மூலம் இலகுவாகவே வசூல் செய்கின்றனர். ஆனால் இங்ஙனம் மக்களிடத்தில் வசூல் செய்யப்பட்ட பொருளைக் கூடுமானவரை அதிகப்பிரயோஜனம் தரத்தக்க துறையிலும், கூடுமானவரை நாட்டு மக்களுக்கு அதிக நன்மை பயக்கத்தக்க துறையிலும், உபயோகிக்கவேண்டிய பொறுப்பு கவர்ன்மெண்டாரிடத்தில் இருக்கின்றது. ஆதலால் வரியாக வசூல் செய்வதைவிட, அதைச் சரியாகச் செலவு செய்வதே கடினமான வேலையாகும்.

அரசாங்கம் வரிகளைச் செலவு செய்வதில் இரண்டு மூன்று விஷயங்களை எப்பொழுதும் ஞாபகத்தில் வைத்துக் கொள்ள வேண்டியது மிக அவசியம். அவைகள் நம்நாட்டு ஜன சமூகத்துக்குக் கூடியவரை அதிக பயன்தரத்தக்க முறைகளில் உபயோகப்படுத்த வேண்டும். எத்துறையில் செலவுசெய்தால் அதிகப்பயன் அடையலாம் என்பதைத்தீர ஆராய்ந்த பிறகே, அத்துறையில் இறங்கவேண்டும். ஒரு ஜாதியார் அல்லது ஒரு சமூகத்தாருக்கு மாத்திரம் லாபம் கிடைக்கத்தக்க வழிகளில் நாட்டின் பொதுப்பணம் செலவழிக்கப்படலாகாது. சில அசாதாரண சந்தர்ப்பங்களில்தான்

இப்பேர்ப்பட்ட செலவுகள் அனுமதிக்கப்பட வேண்டும். செலவுகள் யாவும் சிக்கனமாகச் செலவு செய்யப்படுவதுடன், எத்துறையிலும் வீண் செலவுகள் செய்யப்படாமல் பாது காக்க வேண்டும். சிக்கனம் என்றால் பணத்தை மீதமாக்கத் தக்க சிக்கனமல்ல; செலவு செய்த தொகைக்குக் கூடுமான வரை அதிகப்பலன் கிடைக்கும்படி செலவு செய்வதே உண்மைச் சிக்கனமாகும். ஆதலால் பணத்தை மீதம் செய்ய வேண்டுமென்ற கவலையை யொழித்து, காரியத்தைச் சரியாகச் செய்வதே முக்கிய கருத்தாகக்கொண்டு செலவு செய்யப்படும் ஒவ்வொரு ரூபாய்க்கும் அதன் முழுமதிப்புக் கிடைக்கின்ற மாதிரி, வரிகள் உபயோகப் படுத்தப்பட வேண்டும். செலவு செய்யப்படும் தொகைள் ஜனப் பிரதி நிதிகளால் அனுமதிக்கப்பட வேண்டும். இங்ஙனம் அனுமதிக்கப்படாமல் செலவு செய்தல் தவறாகும். இவைகளே கவர்ன்மெண்டு செலவுகளை ஆளத்தக்க முக்கியத் தத்துவங்களாகும்.

இந்தியா கவர்ன்மெண்டாருடைய செலவுகள் இத்தத்துவங்களால் சீர்தூக்கிப் பார்க்கப்பட்டால், எவ்வளவு குறைகளை உடையனவாக விருக்கின்றன வென்பதைப் பின் காண்போம். இக்குறைகளுக்குக் காரணம் நம் இராஜீய அடிமைத்தனமே என்பதும் விளங்கும்.

**1927-28 ம் வருஷத்திய செலவு கணக்கு:—** 1927-28 ம் வருஷத்திய இந்தியா கவர்ன்மெண்டு, மாகாண கவர்ன்மெண்டுகளுடைய செலவு கணக்கு கீழே காண்பிக்கப் பட்டிருக்கிறது.

ஆயிரம் ரூபாய்களில்

| † செலவு விபரங்கள் | | இந்தியா கவர்ன் மெண்டு | மாகாண கவர்ன்மெண்டுகள் |
|---|---|---|---|
| வரி வசூல் செலவுகள் | ... | 4,18,88 | 10,32,80 |
| உப்பு காடுகள் முதலியவற்றில் செலவு செய்யப்பட்டவை | ... | 12,58 | 29,84 |
| இரயில் பாதைகளுக்காக வாங்கின கடன்களுக்கு வட்டி வகையரா | ... | 32,39,65 | 70 |
| இரயில்பாதைகளுக்காக முதல் அல்லது ரொக்கம் போட்டது | ... | | —3 |
| நீர்ப்பாய்ச்சல் வகையரா | ... | 17,39 | 6,84,40 |
| தபால் தந்தி | ... | 78,74 | |
| கடனுக்காக இந்திய கவர்ன்மெண்டாரால் செலுத்தப்படும் மொத்த வட்டி 47,37,34 ஆயிரம் ரூபாய் இதில் இரயில் பாதை, தபால் தந்தி முதலிய கணக்குகளில் செலுத்தியது போக, அக்கணக்குகளில் சேராமல் வட்டிக்கு செலுத்தியது | ... | 15,61,14 | |
| கடனுக்காக மாகாணகவர்ன்மெண்டாரால் செலுத்தப்பட்ட தொகை 7,49,81 ஆயிரம் ரூ. இதில் நீர்ப்பாய்ச்சல் முதலியவை கணக்கில் தாக்கல் ஆனது போக மற்றவகைகளில் வட்டிகொடுத்தது | ... | | 2,88,66 |
| தேச பரிபாலனச் செலவுகள் (civil administration) பொதுப்பரிபாலனம் (general administration) | ... | 1,72,18 | 11,17,70 |
| ஆடிட் (audit) அல்லது கணக்குப் பரிசீலனை | ... | 88,69 | |
| நீதிமன்றங்கள் | ... | 13,90 | 5,68,07 |
| ஜெயில்கள் வகையரா | ... | 34,96 | 2,32,57 |

† Page 497 Jathar and Beri's Indian Economics Vol. II.

| செலவு விபரங்கள் | இந்தியா கவர்ன்மெண்டு | மாகாண கவர்ன்மெண்டுகள் |
|---|---|---|
| போலீஸ் ... | 69,00 | 11,5500 |
| துறைமுகங்கள் ... | 33,04 | 20,95 |
| ஆங்கில கிறிஸ்துமதக் கோயில்கள் (Ecclesiastical) ... | 32,29 | |
| இராஜீய சம்மந்தமாக (political) ... | 1,57,74 | |
| வடமேற்கு எல்லைப்புற மாகாணம் சமாதான முறைச் செலவுகள் (watch and ward) | 2,49,68 | |
| சாஸ்திர (scientific) இலாகா ... | 90,93 | 7,94 |
| கல்வி ... | 48,66 | 12,19,29 |
| வைத்திய இலாகா ... | 29,97 | 3,60,04 |
| பொதுச் சுகாதாரம் ... | 16,70 | 1,74,40 |
| விவசாயம் ... | 28,97 | 2,31.86 |
| கைத்தொழில்கள் ... | 15,08 | 73,22 |
| ஆகாயக் கப்பல்கள் (aviation) ... | 10,17 | |
| நாஞவித இலாகாக்கள் ... | 11,86 | 37,40 |
| இந்திய ஸ்டோர் அல்லது சாமான்கள் வாங்கும் இலாகா (Indian Stores Department) ... | 16,96 | |
| நாணயமும் நாணயச் சாலையும் ... | 87,67 | |
| பொதுக் கட்டடங்கள் வகையரா (civil works) ... | 1,58,48 | 12,28,24 |
| ராணுவச் செலவுகள் ... | 56,33,95 | |
| மற்ற செலவுகள் ... | 3,93,52 | 687,38 |
| ஆக மொத்தச் செலவு ... | 1,27,22 78 | 91,50,43 |

சேலவுகளின் ஆராய்ச்சி:—மேல்கண்ட செலவு விபரங்களை, முன்சொல்லப்பட்ட கருத்துக்களுடன் ஆராய்ந்து பார்த்தால், இந்தியாவில் இராஜாங்கத்தார் செலவு செய்யும்

முறையில் பல பெரிய குறைகளும் குற்றங்களும் தென்படும். இக்குறைகளை அகற்றுவதற்கு இராஜாங்கத்தாராலும், மக்களாலும் முயற்சிகள் செய்யப்பட வேண்டும். நம் வரிப்பணம் அனைத்தும் நம் தேசத்து நன்மைக்கு ஏற்றவாறு செலவு செய்யப்பட வேண்டுமென்பதும், செலவு செய்யப்படும் ஒவ்வொரு ரூபாய்க்கும் கூடுமானவரை அதிகப்பயன் (Maximum benefit) கிடைக்குமாறு செய்யப்பட வேண்டுமென்றும், அங்ஙனம் செலவு செய்வதே உண்மைச் சிக்கனமென்றும் முன் சொல்லப்பட்டது. இக்கருத்துகளைக் கொண்டு, நம் அரசாங்கத்தாரின் செலவுகளை ஆராய்ந்து பார்ப்போம்.

1. ராணுவச் செலவு:—நம் செலவுகள் யாவற்றிலும் அதிகமா யிருப்பது ராணுவச்செலவென்று மேலே கொடுக்கப்பட்டிருக்கிற கணக்கிலிருந்து எளிதில் விளங்கும். ராணுவத்துக்காக 56 கோடி ரூபாய்களுக்கு அதிகமாகச் செலவு செய்யப்படுகிறது. இந்தியா கவர்ன்மெண்டார் செலவு செய்யும் மொத்தத்தொகையில் ராணுவச் செலவு மாத்திரம் 100 க்கு 45 பங்கு ஆகிறது. ஆதலால் இராணுவத்தில் அளவுக்கு மீறிச் செலவு செய்யப்படுகிறது, என்று எடுத்துக்காட்ட வேண்டிய அவசியமில்லை. இன்ச்கேப் சிக்கனக் கமிட்டியாருங் (Inchcape Retrenchment Committee) கூட, ராணுவச் செலவில் பல கோடிகள் குறைக்கப்பட வேண்டுமென்றும், இதனால் நம் சேனையின் பலம் குன்றாதென்றும் சொல்லியிருக்கிறார்கள்; எனினும் போதுமான அளவு இன்னும் குறைக்கப்படவில்லை. ராணுவம் தேசத்தின் பாதுகாப்புக்கு அவசியமா யிருந்தாலும், அதன்மேல் அளவுக்கு அதிகமாகச் செலவு செய்வது, இந்திய மக்களுடைய வரியை வீண் செய்வதாகும்.

இந்தியாவில் வைக்கப்பட்டிருக்கும் சேனை இந்தியாவின் நன்மையைக்கருதி வைக்கப்பட்டிருந்தால், அதன்பேரிலாகும் செலவுகளை இந்திய வரிகளிலிருந்து செலவு செய்வதற்கு நியாயம் உண்டு. ஆனால் இச்சேனை இந்தியாவின் நன்மையைக் கருதி வைக்கப்பட்டதல்ல வென்றும், இவ்வளவு பெரிய சேனை இந்தியாவின் பாதுகாப்புக்கு அவசியமில்லையென்றும், பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்திற்காகவே இது இவ்வளவு பெரியதாக செய்யப்பட்டிருக்கின்ற தென்றும், உண்மை சொல்லும் பல ஆங்கில நிபுணர்கள் எடுத்துரைத்திருக்கின்றனர். பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்தின் சார்பாக யுத்தம் செய்வதற்காக, இந்திய சேனை இந்தியாவுக்கு வெளியிலும் பல தடவைகள் அனுப்பப்பட்டிருக்கிறது. இங்ஙனம் பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்தின் பிரயோஜனத்திற்காக வைக்கப்பட்டிருக்கும் சேனையின் செலவுகளுக்காக இந்திய மக்களுடைய வரிப்பணத்திலிருந்து செலவு செய்வது நியாயமன்று. இவ்விதமாக யோசித்தால், ராணுவத்தில் செலவு செய்யப்படும் பெரும்பகுதியான பணம் வீண் செய்யப்பட்டதாகவே கருதப்படவேண்டும்.

தவிர, இராணுவத்தில் உயர்ந்த உத்தியோகங்கள் யாவும் ஆங்கிலேயர்களுக்கே ஒதுக்கி வைக்கப்படுகின்றன; இந்திய மக்களுக்கு அவைகள் கொடுப்பதில்லை. ஆதலால் அவர்களுக்குச் சம்பளமாகக் கொடுக்கப்படும் பொருளில் பெரும்பகுதி அன்னிய நாடுகளுக்கு அனுப்புப்படுகிறது. எனவே ராணுவத்தில் செலவு செய்யப்படும் பணம் மக்களுக்கு யாதொரு பயனும் இல்லாமல் வீணாகச் செலவு செய்யப்படுவதைத் தவிர, அவை அன்னிய நாட்டுக்கு அனுப்பப்படுவதால், தேசத்துக்கும் நஷ்டத்தை உண்டாக்குகின்றது. எம்மாதிரி யோசித்துப் பார்த்தாலும் ராணுவச்

செலவால், இந்திய மக்களுடைய வரிப்பணம் வீணுக்கப் படுகின்றதென்ற முடிவுக்கே வர வேண்டியிருக்கிறது.

2. தேசபரிபாலனச் செலவும் மிக அதிகமாயிருக்கின்றது. 1913-14-ல் இதற்காக 31·5 கோடி ரூபாய் செலவு செய்யப்பட்டது; ஆனால் 1927-28-ல் இது 56·7 கோடி ரூபாயாக அதிகமாயிருக்கிறது. அதாவது 100-க்கு 80 பங்கு அதிகமாயிருக்கிறது. விலைவாசிகளும் அதிகமாயிருக்கின்றன வென்றும், ஆதலால் சம்பளமும் அதிகப்படுத்த வேண்டியதாயிற்றென்றும் பலர் சொல்லுவதுண்டு. ஆனால் இதேமாதிரி விலைவாசிகள் அதிகமான மற்ற நாடுகளில், இவ்வளவு அதிகச் செலவு செய்யப்படவில்லை. உதாரணமாக, இங்கிலாந்தில் விலைவாசி நம் நாட்டைப் போலவே உயர்ந்திருக்க, தேசபரிபாலனச் செலவுகள் 100-க்கு 55 பங்குகள் தான் அதிகமாயின. எனவே நம் நாட்டில் இச்செலவு அளவுக்கு அதிகமாகச் செய்யப்படுகின்றதென்று ஏற்படுகிறது.

இதற்கு முக்கிய காரணம், அன்னிய நாட்டார்களுக்கு நமது உயர்ந்த உத்தியோகங்கள் யாவும் கொடுபட்டிருப்பதே. இதுவும் நமது அடிமை வாழ்வின் ஒரு அறிகுறியாகும். அதேமாதிரி உயர்ந்த அறிவும் ஆற்றலும் வாய்ந்த நம் மக்கள் பலர் இவ்வுத்தியோகங்களை ஏற்றுத் திறமையுடன் வேலைசெய்ய காத்துக்கொண்டிருக்க, அவர்களுக்கு கொடுக்கப்படாமல், அன்னியர்களுக்கு இவை அதிக சம்பளத்துடன் கொடுக்கப்படுகிறது. இதன்மூலம் தேசத்தின் வரிப்பணம் அனுவசியமாக வீண் செலவு செய்யப்படுவதுடன், நம் நாடும் அன்னியநாட்டு உத்தியோகஸ்தர்களுக்குக் கொடுத்த பணத்தை இழக்க நேரிடுகின்றது. இச்செலவுகளைக் குறைப்பதற்கு, நம் நாட்டு மக்களுக்கு இவ்

வுத்தியோகங்களைக் கொடுப்பதே சிறந்த வழியாகும்.

3. கல்வி, சுகாதாரம் முதலிய மக்களுடைய நன்மைக்கேற்ற துறைகளில் மிகக் குறைந்த செலவு செய்வது, தற்கால நம் நாட்டு அரசாங்கச் செலவுகளின் மற்றொரு முக்கியமான குறையாகும். நம் நாட்டில் எழுதப்படிக்கக் கற்றவர்கள் மிகக் குறைவாக யிருக்கின்றனர். கல்வியைப் பரப்புவதால், மக்களுக்கு அறிவு விருத்தியாக, திறத்துடன் உழைக்கக் கற்றுக்கொள்வதுடன், அவர்கள் தொழிலையும் நன்றாக நடத்தக் கற்றுக்கொள்ளுகின்றனர். ஆதலால் கல்வியை பரப்புவதில் நம் நாட்டில் இன்னும் அதிகமாகச் செலவு செய்யவேண்டும். மக்களுக்கு அதிகப் பயன்தரத் தக்க துறைகளில் இன்னும் அதிகமாகச் செலவு செய்ய வேண்டும்.

இந்திய அரசாங்கத்தின் கடன்:—இந்திய அரசாங்கத்தின் கடன் சரித்திரத்தைப்பற்றி விபரமாய் எழுத இங்கு இடமில்லை. எனினும் சில வார்த்தைகள் மாத்திரம் அதைப் பற்றி சொல்லப்படும். இந்தியா, இந்திய வரிப்பணத்தைக் கொண்டுதான் ஆங்கிலேயரால் கைப்பற்றப்பட்டது. இந்திய யுத்தச் செலவுகளெல்லாம், இந்திய வரிப்பணத்திலிருந்து தான் எடுக்கப்பட்டன. இவ் யுத்தங்களுக்கு வரிப் பணங்கள் போதாத சமயங்களில் கடன்களும் வாங்கப்பட்டன. ஆங்கில கிழக்கு இந்திய கம்பெனியாரால் (East India Company) வாங்கப்பட்ட கடன்கள் யுத்தச் செலவுகளுக்காகவே வாங்கப்பட்டன. சிப்பாய் கலகத்துக்கு முன் கம்பெனியாருக்கு 5·95 கோடிப் பவுன்கள் கடனிருந்தது. 1858-ல் ஏற்பட்ட சிப்பாய் கலகத்தை அடக்குவதற்கு 4 கோடி பவுன்கள் செலவாயிற்று. இதுவும் கடன் வாங்கிச் செலவு செய்யப்பட்டது; எனவே 1858-ல் கடன்

சுமார் 10 கோடிப் பவுன்கள் இருந்தன. தவிர இந்திய ஆட்சியை கம்பெனியாரிடத்திலிருந்து, பிரிட்டிஷ் அரசாங்கத்தார் ஏற்றுக்கொண்டபோது, கம்பெனியின் பங்குக்காரர்களுக்கு பங்குத் தொகைகளை வாபீசு கொடுக்க வேண்டியிருந்தது. இதற்காக 1·2 கோடி ரூபாய் கடன் வாங்கப்பட்டது. எனவே நம் நாடு பிரிட்டிஷ் அரசாட்சியின்கீழ் வந்தபோது, 11·15 கோடி பவுன்கள் கடன் இருந்தது.

1867-ம் வருஷத்திலிருந்து, மக்களுக்கு பயன் படக்கூடிய பொது நீர்ப் பாய்ச்சல்கள், இரயில் பாதை முதலியவைகளுக்காகவும் கடன் வாங்கப்பட்டது. இவைகள் பயன் தரத்தக்க கடன் (Productive debt) என்று சொல்லப்பட்டன. யாதொரு பயனும் தராமலிருந்த கடன்கள் பயன் தராத கடன்கள் (Unproductive debt) என்று சொல்லப்பட்டன. அரசாங்கச் செலவுகள் போக, மீதமிருக்கும் பணத்தைக் கொண்டு, பயன் தராத கடன்கள் தீர்க்கப்பட்டு, பயன் தரத்தக்க விஷயங்களுக்கு அதிகமாகக் கடன்களும் வாங்கப்பட்டன. எனவே பயன் தரத்தக்க கடன்கள் அதிகமாகிக் கொண்டும், பயன் தராத கடன்கள் குறைந்துகொண்டும் வந்தன. 1917-ம் வருஷத்தில் பயன் தராத கடன்கள் முழுதும் தீர்ந்துபோயிருக்கும்; ஆனால் ஐரோப்பிய மகாயுத்தத்துக்காக புதிதாகக் கடன்கள் வாங்கப் பட்டன. இக்கடன் பயன் தராத கடனை அதிகப்படுத்தியது. யுத்தச் செலவுக்காக இங்கிலாந்துக்கு 150 கோடி ரூபாய் இந்திய கவர்ன்மெண்டாரால் பரிசாக அளிக்கப்பட்டது. இன்னும் யுத்தத்துக்காக வேறு விதங்களிலும் செலவு செய்ய நேரிட்டது.

யுத்தத்துக்குப் பிறகு பல வருஷங்கள் இந்திய கவர்ன்

மெண்டாராலும், மாகாண கவர்ன்மெண்டாராலும் வரவுக்கு அதிகமாக செலவு செய்யப் பட்டது. இவ் வதிகச் செல வுக்காகக் கடன்கள் வாங்கப்பட்டன. தவிர புது டில்லி கட்டுவதற்காகவும், மற்ற செலவுகளுக்காகவும், வாங்கப் பட்ட தொகைகள் இந்தியாவின் கடனை அதிகப்படுத்தின. தற்காலத்தில் அதாவது 1931-ம் வருஷம் மார்ச்சு மாதம் 31-ம் தேதியில் இந்தியாவின் கடன் 1176·96 கோடி ரூபா யாகிறது.

ரூபாய் கடன்களும் ஸ்டார்லிங் கடன்களும்:—(Rupee and Sterling Loans) இங்ஙனம் வாங்கப் பட்ட கடன்களில் ரூபாய் கடன்கள், ஸ்டார்லிங் கடன்கள் என இருவிதங்கள் உண்டு. இந்தியா கவர்ன்மெண்டுக்கு அவசியமான கடன்கள் இங்கிலாந்திலும், இந்தியாவிலும் இவ்விரண்டு இடங்களிலும் வாங்கப்படுகின்றன. இந்தியா வில் வாங்கப்படும் கடன்கள் ரூபாயாக வாங்கப்பட்டு, வட்டி ரூபாயில் கொடுக்கப்படுகிறது; அசலும் ரூபாயில் திருப் பிக் கொடுக்கப்படும். இவை ரூபாய் கடன்களென்று சொல்லப்படும். இங்கிலாந்தில் வாங்கப்படும் கடன்கள் ஸ்டார்லிங்குகளாக வாங்கப்பட்டு, வட்டி ஸ்டார்லிங்கில் கொடுக்கப்படுகிறது; அசலும் ஸ்டார்லிங்கில் திருப்பிக் கொடுக்கப்படும். இவைகளுக்கு ஸ்டார்லிங் கடன்கள் என்று பெயர்.

ஐரோப்பிய யுத்தத்துக்கு முன் இந்திய கவர்ன்மெண் டாருடைய கடனில் பெரும்பகுதி இங்கிலாந்தில் வாங்கப்

பட்ட ஸ்டர்லிங் கடனுக விருந்தது. இந்தியாவில் குறைந்த வட்டிக்கு அதிகத் தொகைகள் கிடைக்காதெனக் கவர்ன் மெண்டார் நினைத்தனர். ஆனால் யுத்த காலத்து அனுபவம் இதைப் பொய்யாக்கியது.

இந்தியாவில் வாங்கப்பட்ட ரூபாய்க் கடன் என்ற மாத்திரத்திலேயே, இவ் ரூபாய்க் கடன்கள் அனைத்தும் நம் நாட்டு மக்களால் கொடுக்கப்பட்டன என்ற அபிப்பிராயத் திற்கு வரக்கூடாது. பல ஆங்கிலேயர்கள் ரூபாயாக கவர்ன் மெண்டுக்குக் கடன் கொடுத்திருக்கின்றனர். உண்மையில் ரூபாய்க் கடனில் ஒரு பெரும் பகுதி அன்னிய நாட்டாரால் கொடுக்கப்பட் டிருக்கிறது. இந்திய கவர்ன்மெண்டாரால் வாங்கப்பட்ட ரூபாய்க் கடன்களையும் ஸ்டர்லிங் கடன் களையும் சேர்த்துக் கணக்கிட்டுப் பார்த்தால், அன்னிய நாட்டார்களே இக்கடனில் பெரும் பகுதியைக் கொடுத்திருப் பதாகத் தெரியவரும்.

இந்திய அரசாங்கத்துக்கு 1914-ம் வருஷத்திலிருந்த கடனும் 1930, 1931 வருஷத்திலிருந்த கடனும் கீழே காண் பிக்கப்பட்டிருக்கிறது. இங்கிலாந்தில் வாங்கப்பட்ட கடன் களும் இந்தியாவில் வாங்கப்பட்ட கடன்களும் தனித் தனியாகக் காண்பிக்கப்பட் டிருப்பதுடன், கடன் வாங்கப் பட்ட மாதிரியின் விபரங்களும் காண்பிக்கப்பட்டிருக்கிறது.

கோடி ரூபாய்களில்

| விபரங்கள் † | 1914 | 1930 | 1931 |
|---|---|---|---|
| இந்தியாவில் வாங்கப்பட்டவை | | | |
| ரூபாய் கடன்கள் (Rupee loans) ... | 145·69 | 405·31 | 417·85 |
| பொது ஜனங்களிடத்தில் வாங்கிய குறுகிய காலக்கடன்கள் (Treasury bills) ... | | 36·04 | 55·38 |
| கரன்சி நோட்டுக் காப்புத் திரவியத்திலிருந்து வாங்கிய குறுகிய காலக் கடன்கள் ... | | 29·22 | 5·89 |
| தபாலாபீசு சேவிங்ஸ் பாங்கு டிபாசிட்டுகள் ... | 23·17 | 37·48 | 37 08 |
| தபாலாபீசு காஷ் சர்டிபிகேட்டுகள் (Cash certificates) ... | | 35·00 | 38·44 |
| ஆபத்து சகாய நிதிகள் (Provident funds) ... | 10·93 | 65·65 | 70·33 |
| காப்புத் திரவியங்கள் வகையரா (Depreciation and Reserve funds) ... | | 31·77 | 23·87 |
| மாகாண மீதங்கள் (Provincial Balances) ... | | 10·17 | 6·11 |
| ஆகமொத்தம் ... | 179·79 | 650·64 | 654·95 |

† Page 518 Jathars & Beri's Indian Economics Vol. II.

பத்து லக்ஷம் பவுன்களில்

| விபரங்கள் ‡ | 1914 | 1930 | 1931 |
|---|---|---|---|
| இங்கிலாந்தில் வாங்கப்பட்டவை | | | |
| ஸ்டர்லிங் கடன்கள் (Sterling loans) | 177·06 | 289·04 | 315 67 |
| யுத்தச் செலவுக்காக இங்கிலாந்துக்கு உதவி செய்வதாகச் சொன்னதில் இன்னும் செல்லாக வேண்டியது (Unpaid balance of India's war contribution) ... | | 16·13 | 16·72 |
| இரயில் பாதைகளை வாங்குவதற்காகக் கொடுக்க வேண்டியவை Capital value of liabilities under going redemption by way of terminable Railway annuities) ... | 70·60 | 51·86 | 50·32 |
| இந்தியா பில்கள் ( India Bills) ... | | 6·00 | 40·05 |
| ஆபத்து சகாய நிதிகள் (Provident funds) ... | | 2·66 | ·70 |
| ஆகமொத்த ஸ்டர்லிங் கடன் ... | 247·66 | 365·69 | 383·76 |
| | சோம. ரூபாய்களில் | | |
| இவைகளில் 1914 ம் வருஷத்தியது ரூபாய்க்கு 1 ஷி. 4 பெ. விகிதத்திலும், 1930 வருஷத்தியது 18 ஷி. 6 பெ. விகிதத்திலும் மாற்றப்பட்டால், இவை ரூபாயில் ... | 371·50 | 478·59 | 517·01 |
| இந்தியாவில் வாங்கப்பட்ட கடன் ... | 179·79 | 650·24 | 654·95 |
| இந்திய கவர்ன்மெண்டின் மொத்தக் கடன் ... | 5 51·29 | 1138·23 | 1171·96 |

‡ Page 807 The Indian Year Book 1932 published by the Times of India Press.

பயன்தரும் கடன்களும் பயன்தராக் கடன்களும்:— இந்தியா கவர்ன்மெண்டின் கடனில் ஒரு பாகம் பொதுஜனங்களுக்குப் பயன் தரத்தக்க வழிகளில் உபயோகப்படுத்தப்பட்டதால், அவ்வழிகள் மூலம் லாபம் கிடைத்து, அந்த லாபத்திலிருந்து அக்கடன்களின் பேரில் வட்டி கொடுக்கப்பட்டு, சில சமயங்களில் அதற்குமேல் மீதமும் ஆகின்றது. இவைகளைத் தான் பயன் தரும் கடன்கள் என்று சொல்லப்பட்டது. நீர்ப்பாய்ச்சல் திட்டங்கள், ரயில் பாதைகள் முதலியவைகளை இவைகளுக்கு உதாரணமாகச் சொல்லலாம். நீர்ப் பாய்ச்சல் திட்டங்கள் ஆரம்பத்திலிருந்தே லாபம் கொடுத்துக்கொண் டிருந்தன என முன் சொல்லப்பட் டிருக்கிறது. ரயில் பாதைகளால் ஆரம்ப காலத்தில் அதிக நஷ்டமேற்பட்டபோதிலும், பிற்காலத்தில் அவை லாபம் கொடுத்து வருகின்றன.

ஆனல் சில கடன்கள் மக்களுக்கு யாதொரு விதத்திலும் பயன்படாமல் செலவு செய்யப்படுகின்றன. இவைகளால் மக்களுக்கு யாதொரு பிரதிப் பிரயோஜனமும் அல்லது லாபமும் கிடைப்பதில்லை. இவைகளை பயன்தராக் கடன்கள என்று சொல்லப்பட்டது. யுத்தச் செலவுகளுக்காக வாங்கப்பட்ட கடன்களும், புது டில்லி கட்டுவதற்காக வாங்கப்பட்ட கடன்களும் பயன் தராக் கடன்களுக்கு உதாரணமாகச் சொல்லலாம். இவைகளினல் யாதொரு லாபமும் கிடைப்பதில்லை ; இவைகளை மக்களிடமிருந்து வரி வசூல் செய்துதான் கட்டவேண்டும். யுத்தத்துக்கு முன் இக்கடன் மிகக் குறைவாக விருந்தது. யுத்த காலத்தில் மிகவும் அதிகமாயிற்று. இங்கிலாந்துக்கு யுத்தத்துக்கு உதவியாக 150 கோடி ரூபாய்கள் பரிசாக அளிக்கப்பட்டது என்பது ஞாபகத்தில் வைக்கத் தக்கது. யுத்தத்துக்குப் பின் இந்தியா கவர்ன்மெண்டாராலும், மாகாண கவர்ன்மெண்டாராலும் பல வருடங்கள் வரவுக்கு அதிகமான செலவு

செய்யப்பட்டதும், இக்கடனை அதிகப்படுத்துவதற்கு ஒரு காரணமாயிருந்தது.

இந்தியா கவர்ன்மெண்டார் கடனின் பயன்தரத்தக்க கடனின் விபரமும் அளவும் கீழே காண்பிக்கப்பட்டிருக்கிறது. *

கோடி ரூபாய்களில்

| விபரங்கள் | 1914 | 1930 | 1931 |
|---|---|---|---|
| இரயில் பாதைகளில் உபயோகப் படுத்தியிருப்பவை | 438·64 | 731·90 | 745·29 |
| வியாபார இலாகாக்களில் உபயோகப்படுத்தியிருப்பவை | 14·08 | 23·05 | 23·41 |
| மாகாணங்களுக்கு கொடுக்கப்பட்டிருப்பவை | 71·99 | 142·45 | 149·14 |
| சுதேச மன்னர் இராஜ்யங்களுக்கு கொடுக்கப்பட்டிருப்பவை | † | 17·57 | 19·60 |
| | 524·71 | 914·97 | 937·44 |

இக்கடனைப் பரிசோதனை செய்ய ஒரு பக்ஷபாதமற்ற சபை:— இந்திய அரசாங்கத்தின் கடனைப்பற்றி ஒரு பெரிய விவாதம் நடந்து வருகிறது. இக்கடனில் ஒரு பெரும் பகுதி, நியாயமாய் யோசித்துப் பார்த்தால், இந்திய மக்களைக் கட்டுப்படுத்தாதென்று பல இராஜீயவாதிகளால் சொல்லப் படுகிறது. இந்திய மக்களுடைய நன்மைக்காக வாங்கப்

* Figures for 1914 &1930 from Page 519 Jathar & Beri's Indian Economics Vol. II.

Figures for 1931 from the Indian year Book 1932 Published by the Times of the India Press, Bombay.

† Figures not available.

பட்ட கடன்கள்தான் இந்திய மக்களைக் கட்டுப்படுத்தும். இந்திய அரசாங்கத்தால் வாங்கப்பட்ட கடன்களில் பல இந்திய மக்களுடைய நன்மையைக் கருதி வாங்கப்பட்டன வல்லவென்றும், அவை பிரிட்டிஷ் ஏகாதிபத்யத்தின் சார்பாக ஏற்பட்ட செலவுகளுக்காக வாங்கப்பட்டன வென்றும், ஆதலால் அக்கடன்கள் இந்திய மக்களைக் கட்டுப்படுத்தக் கூடியவல்ல வென்று வாதிக்கப்படுகிறது. இவ்வாதத்தில் உண்மை யிருக்கின்றதென்று எவரும் ஒப்புக்கொள்ள வேண்டும்.

ஆதலால் இந்திய அரசாங்கத்தார் வாங்கி யிருக்கும் கடன்களில் எவை இந்திய மக்களைக் கட்டுப்படுத்தக் கூடியவை, எவை இந்திய மக்களைக் கட்டுப்படுத்தக் கூடாதவை என்று தீர்மானிக்கப்படவேண்டும். ஒரு பக்ஷபாதமில்லாத நியாய சபையை ஏற்படுத்தி அதன்மூலம் இவ்விவாதம் முடிவு செய்யப்பட வேண்டுமென இராஜீய நிபுணரும், சிறந்த தேச பக்தருமான திரு. ரமேஷ் சந்திர தத்தர் அவர்களால் முதன் முதல் சொல்லப்பட்டது. தற்காலத்தில் நம் நாட்டு இராஜீயக் கக்ஷிகளில் முதன்மை பெற்று விளங்கும் காங்கிரஸ் மகா சபையும், இவ்வாறான அபிப்பிராயத்தையே கொண்டிருக்கின்றது.

இந்தியா கவர்ன்மெண்டுக்கும், மாகாண கவர்ன்மெண்டுக்கும் சம்பந்தம்:—1919-ம் வருஷத்திய மாண்டேகு செம்ஸ்போர்டு சீர்திருத்தப்படி கடல் சுங்கவரி, வருமான வரி, உப்பு வரி, அபினி வரி, இரயில் பாதைகளின் வருமானம், தபால் தந்தி இலாகாக்களின் வருமானமும், இந்தியா கவர்ன்மெண்டைச் சேர்ந்தனவென்றும், நிலவரி, ஸ்டாம்பு வரி, ரிஜிஸ்ட்ரேஷன், மதுபான வரி, காடுகளிலிருந்து வரக்கூடிய வருமானம், மாகாணங்களைச் சேர்ந்தனவென்றும் பிரிக்கப்பட்டது. இங்ஙனம் பிரித்ததில், இந்தியா கவர்ன்மெண்டாருக்கு ஒதுக்கப்பட்ட வரிகளில் கிடைக்கக்கூடியதைவிட அதிகமாக 983 லக்ஷம் ரூபாய்கள், இந்தியா கவர்ன்மெண்டார் செலவுகளுக்காக வேண்டியிருந்தது. இதற்காக மாகா

ணங்கள் ஒவ்வொன்றும் ஒரு குறிப்பிட்ட தொகை, தங்களுக்குக் கிடைக்கும் வரிப்பணத்திலிருந்து கொடுக்கவேண்டுமென மெஸ்டன் என்பவர் பஞ்சாயத்தால் முடிவு செய்யப்பட்டது. (Meston's award on Provincial Contributions).

இம்முடிவு மாகாணங்கள் ஒன்றுக்கும் சமாதானம் அளிக்கவில்லை. மாகாணங்கள் ஒவ்வொன்றுக்கும் தங்கள் செலவுக்குப் பணம் கண்டுபிடிப்பது கஷ்டமாக யிருக்க, இந்தியா கவர்ன்மெண்டாருக்குக் கொடுப்பதற்காக பணம் சேகரிப்பது இன்னும் கஷ்டமா யிருந்தது. தவிர மாகாணங்களின் செலவுக்காக ஒதுக்கப்பட்ட வரிகள் அதிகப்படுத்துவதற்கு ஏற்றனவாகவில்லை. நிலவரி முன்னமேயே அதிகமெனக் கருதப்பட்டு வந்தது. அம்மாதிரியே மற்ற வரிகளும். மாகாண வரிகள் அதிகப்படுத்த முடியானவா யிருக்க மாகாணச் செலவுகள் நாளுக்கு நாள் வளரத்தக்கனவா யிருந்தன. கல்வி, வைத்தியம், சுகாதாரம் முதலிய மக்களுக்கு நன்மை பயக்கும் இலாகாக்களுக்கு நாளுக்கு நாள் அதிகப் பணம் வேண்டியிருந்தது.

இந்தியா கவர்ன்மெண்டுக்காக ஒதுக்கி வைக்கப்பட்ட வரிகள் அதிகப்படுத்துவதற்கு ஏற்றனவாக யிருந்தன. கடல் சுங்க வரி, வருமான வரி முதலியவை உயர்த்தப்பட்டன. இவைகளிலிருந்து அதிக வருமானம் கிடைக்க ஆரம்பிக்கவே, மாகாணங்கள் இந்தியா கவர்ன்மெண்டுக்கு கொடுக்கவேண்டும் என்ற நிர்ணயிக்கப்பட்ட தொகைகளுக்கு அவசியம் ஏற்படவில்லை. ஆதலால் மாகாணங்கள் இந்தியா கவர்ன்மெண்டுக்குக் கொடுப்பது நிறுத்தப்பட்டது.

சமீபத்தில் வாவிருக்கும் சீர்திருத்தத்திலும் இப்பிரச்னை மிகவும் முக்கியமானது. சீர்திருத்தம் அனுபவத்தில் வெற்றியடைவதும் அல்லது வெற்றி யடையாததும், இப்பிரச்னைக்குக் கொடுக்கப்படும் விடையைப் பொறுத்ததாகும்.

மாகாண வரவு செலவுகள்:—மாகாணங்களின் வரவுகளையும், செலவுகளையும் மொத்தமாக முன் பக்கத்தில்

கொடுக்கப்பட்டது. 1929-30-ம் வருஷத்திய கணக்கு மாகாண வாரியாகக் கீழே கொடுக்கப்பட் டிருக்கின்றது.†

கோடி ரூபாய்களில்

| மாகாணங்கள் | நில வரி | மது பான வரி | ஸ்டாம்பு வரி | நீர்ப் பாய்ச் சல்கள் | காடுகள் | மற்றவை | மாகாண மொத்தம் |
|---|---|---|---|---|---|---|---|
| சென்னை | 6·21 | 5·44 | 2 56 | ·89 | ·59 | 1·77 | 17·56 |
| பம்பாய் | 5·12 | 3·89 | 1·77 | ·70 | ·73 | 3·51 | 15·72 |
| வங்காளம் | 3·24 | 2·25 | 4·22 | ·15 | ·33 | 1·66 | 11·85 |
| ஐக்கிய மாகாணங்கள் | 7·10 | 1·37 | 1·79 | 1·09 | ·59 | 1·15 | 13·09 |
| பஞ்சாப் | 2·82 | 1·30 | 1·21 | 4·50 | ·35 | 2 36 | 12·54 |
| பர்மா | 5·54 | 1·31 | ·71 | ·22 | 1·76 | 2·10 | 11·55 |
| பீகார் ஒரிஸ்ஸா | 1·76 | 1·91 | 1·12 | ·18 | ·11 | ·77 | 5·85 |
| மத்திய மாகாணங்கள் | 2·45 | 1·28 | ·75 | ·02 | ·58 | ·52 | 5·56 |
| அஸ்ஸாம் | 1·24 | ·59 | ·22 | | ·40 | ·39 | 2·84 |

மாகாணங்களின் செலவு கணக்குகளைக் கீழே காண்க. மாகாண கவர்ன்மெண்டில் 1919-ம் வருஷத்திய சீர்திருத்தப்படி சில இலாகாக்கள் மாகாண சட்டசபைக்கு ஜவாப்தாரியாக விருக்கும் மந்திரிகளால் நிர்வகிக்கப்பட வேண்டுமென்றும், அந்த இலாகாக்களின் பரிபாலனம் சட்டசபையின் அபிப்பிராயத்துக்கு உட்பட்டு நடத்தப்பட வேண்டுமென்றும், ஏற்படுத்தப்பட்டது. இவ் விலாகாக்கள் சட்டசபைக்கு ஜவாப்தாரியாக மாற்றப்பட்டதால், இவைகளுக்கு மாற்றப்பட்ட விஷயங்கள் (Transferred Subjects) என்ற பெயர் கொடுக்கப்பட்டது. மற்ற சில இலாகாக்கள் சட்டசபைக்கு ஜவாப்தாரியாக வில்லாமல் இருந்தன. இவைகளை மாற்றப்படாத விஷயங்கள் (Reserved

† Page 544. Jathar and Beri's Indian Economics Vol. II

Subjects) என்று சொல்லப்பட்டன. மாற்றப்படாத அதாவது ஜவாப்தாரியல்லாத விஷயங்களின் செலவைக் கட்டுப்படுத்த சட்டசபைகளுக்கு அதிகாரம் இல்லை. மாற்றப் பட்டு, சட்டசபைக்கு ஜவாப்தாரியாக விருக்கும் செலவு களைக் கட்டுப் படுத்த, சட்டசபைக்கு அதிகாரம் உண்டு. எனவே ஜவாப்தாரியாக விருக்கும் இலாகா செலவுகளை வேருகவும், ஜவாப்தாரியாக வில்லாத இலாகா செலவுகளை வேருகவும் கீழே காண்பித்திருக்கிறது. 1929-30 வருஷத் திய கணக்கு கீழே கொடுக்கப் பட்டிருக்கிறது.†

மாற்றப்படாத இலாக்காக்களின் செலவுகள்:—

கோடி ரூபாய்களில்

| மாகாணங்கள் | நிலவரி வசூல் செலவுகளும் பொதுப் பரிபாலனமும் | போலீஸ் | ஜெயில்களும் நீதிஸ்தலங்களும் | மற்ற செலவுகள் | ஜவாப்தாரியில்லாத இலாகாக்களின் மொத்தச் செலவு |
|---|---|---|---|---|---|
| சென்னை | 2·78 | 2·01 | 1·33 | 3·95 | 10·07 |
| பம்பாய் | 2·95 | 1·79 | 1·00 | 4·58 | 10·32 |
| வங்காளம் | 1·86 | 2·17 | 1·49 | 2·37 | 7·89 |
| ஐக்கிய மாகாணங்கள் | 2·37 | 1·71 | 1·14 | 3·29 | 8·51 |
| பஞ்சாப் | 1·57 | 1·22 | 1·07 | 2·20 | 6·06 |
| பர்மா | 1·68 | 1·61 | 1·05 | ·83 | 6·17 |
| பீகார் ஒரிஸ்ஸா | 1·02 | ·85 | ·62 | 1·15 | 3·64 |
| மத்திய மாகாணங்கள் | 1·03 | ·62 | ·44 | 1·06 | 3·15 |
| அஸ்ஸாம் | ·50 | ·30 | ·17 | 1·18 | 2·15 |
| மொத்தம் | 15·76 | 12·28 | 8·31 | 21·61 | 57·96 |

† Page **544** Jathar & Beri's Indian Economics Vol. 2.

மாற்றப்பட்ட இலாக்காகளின் செலவுகள்:—

கோடி ரூபாய்களில்

| மாகாணங்கள் | கல்வி | வைத்தியம் சுகாதாரம் | பொதுக் கட்டடங்கள் (Civil Works) | மற்ற ஜவாப்தாரி இலாக்கா செலவுகள் | ஜவாப்தாரி இலாக்காகளின் மொத்தச் செலவுகள் | ஜவாப்தாரியில்லாத இலாக்காகளின் மொத்தச் செலவுகள் | மாகாணத்தின் மொத்தச் செலவுகள் |
|---|---|---|---|---|---|---|---|
| சென்னை | 2·57 | 1·41 | 2·13 | 1·53 | 7·64 | 10·07 | 17·71 |
| பம்பாய் | 2·04 | ·91 | 1·30 | 1·43 | 5 68 | 10·32 | 16·00 |
| வங்காளம் | 1·38 | ·98 | ·84 | ·89 | 4 04 | 7·89 | 11·93 |
| ஐக்கிய மாகாணங்கள் | 1 91 | ·66 | ·49 | ·82 | 3·88 | 8·51 | 12·39 |
| பஞ்சாப் | 1·67 | ·81 | 1·66 | 1·29 | 5·43 | 6 06 | 11·49 |
| பர்மா | 1·27 | ·65 | 1·90 | 1·39 | 5·21 | 6·17 | 11·38 |
| பீகார் ஒரிஸ்ஸா | ·89 | ·52 | ·53 | ·54 | 2.48 | 3·64 | 6·12 |
| மத்திய மாகாணங்கள் | ·57 | ·22 | ·87 | ·46 | 2·12 | 3·15 | 5·27 |
| அஸ்ஸாம் | ·32 | ·22 | ·07 | ·22 | ·83 | 2·15 | 2·98 |

மாற்றப்படாத இலாக்காக்கள் மாகாண வரிகளில் பெரும் பாகத்தை எடுத்துக் கொள்ளுகின்றபடியால், தேசத்துக்கு நன்மை செய்யக்கூடிய இலாக்காகள் சட்ட சபைக்கு ஜவாப்தாரியாக விருந்தபோதிலும், அதிகம் விருத்தி செய்வதற்கு இடமில்லாமல் இருக்கின்றன.

ஸ்தல ஸ்தாபனங்கள் (Local Boards) :—மாகாண கவர்ன்மெண்டுகளுக்கு அடுத்த படியில் ஸ்தல ஸ்தாபனங்கள் மக்களுக்கு வேண்டிய சௌகரியங்களைச் செய்கின்றன. இவைகளில் இருவகை யுண்டு. அதிக ஜனத் தொகை ஒன்றுகச் சேர்ந்து வசிக்கு மிடங்களுக்கு நகரங்கள் என்று சொல்லப்படுகின்றன. இவைகளில் நிர்வாகம் செய்வதற்கு முனிசிபாலிடிகள் ஏற்படுத்தப்பட் டிருக்கின்றன. கிராமங்களில் இருப்பவர்களுடைய வசதிகளைக் கவனிப்பதற்கு ஜில்லா போர்டுகள் முதலிய பொது ஸ்தாபனங்கள் ஏற்படுத்தப்பட்டிருக்கின்றன. நம் மக்களில் பெரும்பான்மையோர் கிராமத்தில் வசிக்கின்றபடியால், ஜில்லா போர்டுகளும் தாலூக்கா போர்டுகளும் நம் நாட்டுக்கு அதிக முக்கியமானவை.

ஜில்லா போர்டுகள், தாலூக்கா போர்டுகள் :—இவைகள் முக்கியமாக கல்வி, சுகாதாரம், வைத்தியம் முதலிய துறைகளில் வேலை செய்கின்றன. இவைகளுடைய முக்கிய வருமானம் சில நில வரிகள் (Land rates or cesses) மூலம் கிடைக்கின்றது. இவ் வரிகள் மாகாண கவர்ன்மெண்டாரால் நிர்ணயிக்கப்படும் ஒரு அளவுக்கு உட்பட்டு, ஜில்லா போர்டுகள் முதலியவைகளின் யுக்தப்படி விதிக்க அதிகாரம் உண்டு. இவைகளுடைய சேவையும், வருமானமும் சென்ற சில வருஷங்களில் அதிகமாகிக் கொண்டு வந்திருக்கின்றன. இப் போர்டுகளின் அங்கத்

தினர்கள் பொது ஜனங்களால் தேர்ந்தெடுக்கப் படுகின்றனர்.

1927–28-ம் வருஷத்தில் இந்தியாவிலிருக்கும் ஜில்லா போர்டுகள், தாலூக்கா போர்டுகள் முதலியவைகளின் மொத்த வருமானமும், அவைகளின் விபரங்களும், மொத்தச் செலவும், செலவின் விபரங்களும் கீழே காண்பிக்கப்பட்டிருக்கின்றன. †

லக்ஷ ரூபாய்களில்

| வரவு விபரங்கள் | | செலவு விபரங்கள் | |
|---|---|---|---|
| வரிகள் | 4,84 | கல்வி | 5,72 |
| பொதுக்கட்டிடங்கள் | 2,58 | பொதுக்கட்டிடங்கள் | 5,04 |
| மற்ற வகைகள் | 8,14 | சுகாதாரம், ஆஸ்பத்திரி வகையரு | 1,94 |
| | | மற்ற வகைகள் | 3,26 |
| | 15,56 | | 15,96 |

முனிசிபாலிடிகள் :—1929–30-ல் பிரிட்டிஷ் இந்தியாவில் 777 முனிசிபாலிடிகள் இருக்கின்றன. அவைகளில் 67 தான் 50,000—க்கு அதிகமான ஜனத் தொகை பெற்றவைகள். மற்றவை 50,000—க்குக் குறைந்த ஜனத்தொகை பெற்றிருக்கின்றன. இவைகளும் கல்வி, சுகாதாரம், முதலிய மக்களுக்கு பயனளிக்கக் கூடிய பல நற்காரியங்களின் முன்னேற்றத்திற்காக உழைத்து வருகின்றன. இவைகள் பலவித வரிகளின் மூலம், தங்களுக்கு அவசியமான பணத்தைச் சேகரிக்கின்றன.

அவைகளுடைய வருமானங்களின் விபரங்களும், செலவு விபரங்களும், 1927-28-ம் வருஷத்தில் பிரிட்டிஷ்

† Page 546, Jather & Beri's Indian Economics Vol. II.

இந்தியாவில் முனிசிபாலிடிகளுக்குக் கிடைத்த வரவும், அவைகளின் செலவு கணக்குகளும் கீழே கொடுக்கப்பட்டிருக்கின்றன. ‡

லக்ஷ ரூபாய்களில்

| வரவு விபரங்கள் | | செலவு விபரங்கள் | |
|---|---|---|---|
| சாமான்கள் வரிகள் | 1,41 | வரிவசூல் செலவும் பொதுப் பரிபாலனமும் | 1,59 |
| வீட்டு வரி | 4,65 | விளக்குகள் | 92,4 |
| மிருகம், வண்டி வரிகள் | 42 | போலீஸ் | 9 |
| தொழில் வரி | 31 | நெருப்பிலிருந்து காப்பாற்றுவது | 17,7 |
| சுங்கங்கள் (Tolls in Roads) | 34 | பொதுச் சுகாதாரம் | 58,6 |
| தண்ணீர் வரி | 1,87 | ஆஸ்பத்திரிகள் அம்மை குத்தல் முதலியன | 92 |
| விளக்கு வரி | 18 | பிளேக் செலவுகள் வகையரா | 89 |
| கக்கூஸ் வரி | 1,10 | பொது வேலைகள் | 2,40 |
| மற்ற வரிகள் | 1,68 | கல்வி | 1,92 |
| சில சட்டங்களின் கீழ் வருமானம் | 17 | கடன்களுக்கு வட்டி | 1,68 |
| கவர்ன்மெண்டு உதவிகள் (Grants) | 98 | மற்ற செலவுகள் | 2,06 |
| பூமி வீடுகளிலிருந்து வாடகை | 45 | | |
| சம்பளங்கள் (Fees) | 79 | | |
| சந்தைகள், கசாப்புக் கடைகளிலிருந்து வரவு | 93 | | |
| மற்ற வகைகள் | 1,72 | | |
| மொத்த வரவுகள் | 17,00 | மொத்தச் செலவுகள் | 18,43 |

‡ Page 548, Jathar & Beri's Indian Economics Vol. II.

ஜில்லா போர்டுகளும், தாலூக்கா போர்டுகளும், முனிசி பாலிடிகளும் மக்களுக்கு மிகவும் பயன்தரத்தக்க பல காரி யங்களைச் செய்கின்றன. ஆனால் அவைகளின் வேலைகளின் விருத்திக்கேற்றபடி பணம் அவைகளுக்குக் கிடைப்பதில்லை. தண்ணீர் வசதி, மின்சார விளக்குகள் முதலிய செய்து கொடுப்பதற்காக இவைகள் கடன் வாங்கியும் வேலை யாரம்பித் திருக்கின்றன. இவைகளுக்கு அதிக ரொக்க வசதி இருக்குமானால், இன்னும் அதிக வேலை செய்வதற்கு ஏதுவாக இருக்கும் என்பதில் யாதொரு ஐயமும் இல்லை.



# இருபத்தி ஐந்தாவது அதிகாரம்

## தேசீயப் பொருளாதாரத்தின் அவசியம்

இதுவரை நம் தேசத்துப் பொருளாதார நிலைமையைப் பற்றிச் சுருக்கமாய்ச் சொல்லப் பட்டது. நம் பொருளா தார அமைப்புகளில் இருக்கும் முக்கியமான குறைகள் அங் கங்கு குறிப்பிடப்பட்டன. அவைகளைச் சீர்திருத்துவதற்கு உதவி செய்யக்கூடிய வழிகளும் ஆராயப்பட்டன. நம் நாட்டுப் பொருளாதார அமைப்பில், ஒவ்வொரு பக்கமும் சீர்திருத்தி அமைக்க வேண்டிய நிலையிலேயே இருக்கின் றது. அதிக சீர்திருத்தங்களும் உடனே செய்யவேண்டியன வாயிருக்கின்றன. தக்க நேரத்தில் தைத்தால் ஒரு தையலோடு தீருவது காலம் தப்பினால் ஏழுதாம் தைக்கவேண்டி யிருக்கும். அதாவது உரியகாலத்தில் பரிகாரம் செய்வதால், பின்வரும் பெரிய துன்பங்களிலிருந்து காப்பாற்றிக்கொள்ள லாம் என்ற ஆங்கிலப் பழமொழி ஒன்றுண்டு. இதற்கிணங்க

நம் பொருளாதார அமைப்பையும் அவசியத்திற்கு ஏற்ற வாறு திருத்தி யமைக்க வேண்டும்.

காலத்தில் திருத்தப்பட வேண்டுமெனச் சொன்னதால் நம் பொருளாதார விஷயங்களைத் திருத்தி அமைக்கும் காலமும் இப்பொழுது தான் வந்திருப்பதாக நினைக்கக் கூடாது. பலதுறைகளில் சீர்திருத்தம் செய்யவேண்டிய காலம் ஏற்பட்டு நெடுங்காலம் ஆகிவிட்டது. அத்துறைகளில் உடனே சீர்திருத்தம் செய்யப் படாவிடில் பெருங்கேடுகள் விளையக் கூடிய நிலைமையிலிருக்கிறோம். வயிற்றில் பெருங்கட்டி ஏற்பட்டு நிறைந்து கொண்டிருக்கும் சமயம், உடனே அக் கட்டியைக் கீறி, சீயை வெளி நீக்கினாலொழிய நோயாளி இறந்து படுவான். அம்மாதிரியே நம் பொருளாதாரத் துறைகள் பலவிற்கும் சீர்திருத்தமும், உதவியும் உடனே செய்யப்படவேண்டும். குடியானவர்களின் கடன் பாரம் நாளுக்கு நாள் அதிகமாகிக் கொண்டு வருகிறது. அது சீக்கிரம் குறைக்கப்படாவிடில், விவாசாயத்துக்கு இப்பொழுது நேர்ந்திருப்பதைவிட அதிகக் கெடுதிகள் நேரிடலாம். ஆதலால் அதையொழிப்பதற்குரிய மார்க்கங்களில் உடனே ஈடுபடவேண்டும். தவிர தற்காலம் இருக்கும் விலைகளைக் கவனிப்பின், பூமி வரி மிகவும் அதிகமாகயிருக்கிறது. இவ்விரண்டும் இம்மாதிரியே இன்னும் கொஞ்சநாட்கள் இருக்குமானால், பல ஆயிரக் கணக்கான ஏக்கர் பூமிகள் சாகுபடி செய்யப் படாமல் போக ஏதுவாகும்.

நம் கைத் தொழில்கள் பலவும் இந்நிலைமையிலேயே இருக்கின்றன. நம் பிரதானமான கைதொழில்களான பருத்தி நூற்றல் நெய்தல் கைத்தொழிலும், இரும்பு எஃகுக் கைத்தொழிலும் அவைகளுக்குக் கொடுக்கப் பட்ட உதவி போதாமல், கஷ்டப்பட்டுக் கொண்டிருக்கின்றன. இன்னும் பல மற்ற கைத்தொழில்களும் சரியான உதவியன்றி விருத்தி வரத் தகாத நிலைமையில் இருக்கின்றன. நமது கப்பல் தொழில் மிகவும் க்ஷீணித்த நிலைமையில் இருக்கிறது. இவை

கள் யாவையும் நாம் விருத்தி செய்ய வேண்டுமானால், நம் தேசத்தின் நன்மையைக் கருதி, நம் கைத்தொழில்களுக்கு தேசீய உணர்ச்சியுடன் உதவியளிக்கப் படவேண்டும்.

உலகமுழுதும் சுயேச்சைபெற்ற நாடுகள் எல்லாவற்றிலும், தேசீய உணர்ச்சியுடன் பொருளாதாரம் நிர்வகிக்கப் படுகிறது. தேசத்தின் நன்மையைக் கருதியும், தேச மக்களின் முன்னேற்றத்தைக் கருதியும் அந்நாட்டுக் கைத்தொழில்களுக்கும் விவசாயத்துக்கும், இன்னும் மற்ற துறைகளிலும், உதவி கொடுக்கப் படுகிறது. எல்லா நாடுகளும் இம்முறைகளைக் கைக்கொண்டே முன்னேறி யிருக்கின்றன. இங்கிலாந்து, ஜர்மனி, ஜப்பான் முதலிய தற்காலத்தில் முன்னணியிலிருக்கும் நாடுகள் அனைத்தும் இம்முறையைக் கொண்டே அவர்கள் தற்காலத்திலிருக்கும் நிலையை அடைந்திருக்கின்றன.

தற்காலத்தில் உலக முழுதும் எல்லா தேசத்தாராலும் தங்கள் பொருளாதார அமைப்பைச் சீர்திருத்தி அதிக லாபம் பெறத் தக்க முயற்சிகள் செய்யப்பட்டு வருகின்றன. அதிக ஊதியம் தரத்தக்க முறைகள் அனைத்தும் கையாளப் படுகின்றன. சக்தியையும் பொருளையும் வீண் செய்யும் முறைகள் நிராகரிக்கப் படுகின்றன. தங்கள் தேசத்திலிருக்கும் இயற்கை வசதிகள் அனைத்தும் மிகுந்த திறத்துடன் உபயோகப்படுத்தப் படுகின்றன. தவிர வருஷத்துக்கு வருஷம் திட்டம் போட்டுக்கொண்டு, சிரத்தையுடன் ஒவ்வொரு தேசமும், அத் திட்டத்தை நோக்கி உழைத்துக் கொண்டிருக்கின்றது. ருஷ்யா ஒரு ஐந்து வருஷத் திட்டத்தை மிகவும் வெற்றிகரமாகச் செய்து முடித்து, இன்னுமொரு ஐந்து வருஷத்துக்குத் திட்டம் போட்டுத் தீவிரமாய் உழைத்து வருகிறது. ஜர்மனி யுத்த காலத்தில் இழந்த செல்வத்தையும் செல்வாக்கையும் வெகு தீவிரமாக மறுபடியும் அடைந்து வருகிறது. ஜப்பானில் மற்ற நாடுகளை விட மிக அதிக மணி நேரம் மக்கள் வேலை செய்து, 100-க்கு 50 வரிப் போட்ட பின்பும், அவ்வரி கொடுத்து இன்னும்

நம் மில்கள் விற்கக் கூடியதை விடக் குறைத்து விற்க முன் வருகிறார்கள். யுனைடெட் ஸ்டேட்ஸ் ஆப் அமெரிக்காவும், இங்கிலாந்தும் தங்கள் முன்னேற்றத்திற்குரிய முறைகள் அனைத்தையும் அனுஷ்டிக்கின்றன.

இவைகளுக்கு மத்தியில் நம் தேசத்தின் நிலைமை மிகவும் பரிதாபகரமாக விருக்கிறது. நம் பொருளாதார நிலைமை நாளுக்கு நாள் க்ஷீணித்து வருகிறது. நம் கைத் தொழில்கள் உதவியற்ற குழந்தை போல் வலியிழந்து வருகின்றன. நம் செல்வம் குன்றி வருகிறது; நம் தரித்திரம் அதிகமாகிக் கொண்டிருக்கிறது. இதற்குக் காரணம் என்ன?

இதற்குக் காரணம் தேசியப் பொருளாதார முயற்சிகள் இல்லாமையே. நம் நாட்டின் அபிவிருத்தி அன்னிய நாட்டார் கையிலிருக்கின்றது. அவர்கள் தங்களுடைய நன்மையைக் கருதி நடப்பார்களே யொழிய நம்முடைய நன்மையைக் கருதி நடக்கமாட்டார்கள். நம் நாட்டுப் பொருளாதார முன்னேற்றத்திற்கு முக்கியமான அம்சங்கள் அனைத்தும் அன்னியர் வசமிருக்கின்றன. நம் பொருளாதார விருத்திக்கு முக்கியமானவை ரொக்க வசதிகள், போக்கு வரத்து சாதனங்கள், அன்னிய நாட்டு வியாபாரம், நாணய முறை, நாணய மாற்று முதலியன வென முன் கண்டோம். இவை யனைத்தும் அன்னிய நாட்டார் வசமிருப்பது மிகவும் வருந்தத் தக்கது. இவை அன்னிய நாட்டார் வசத்திலிருந்து நம் வசத்திற்கு வந்து, தேசத்தின் அபிவிருத்தியே இலக்ஷ்யமாகக் கொண்டு நடத்தப்பட்டாலொழிய, நம் நாடு பொருளாதாரத்துறையில் முன்னேறுவது அசாத்தியம்.

இவ்வெதிர்ப்புகளுக்குள்ளும் நமக்கு ஒரு உதவியிருந்தால் நாம் எளிதில் முன்னேறலாம். நம் அரசாங்கம் தேசிய உணர்ச்சியுடன், ஒரு பொருளாதாரத் திட்டத்தைப் பின் பற்றுவார்களானால், நாம் குறுகிய காலத்திலேயே உயர்ச்சி பெறமுடியும். ஸ்ரீராம கிருஷ்ண பரம ஹம்ச தேவர் ஒரு அழகான உபதேசத்தில் பின் வருமாறு சொல்லியிருக்கிறார்.

"மந்திரித்த கடுகைப் பேய் பிடித்தவன் மீது தூவினால் பேய் அகன்றுவிடும். ஆனால் பேய் கடுகுக்குள்ளேயே புகுந்து கொண்டால், பிறகு என் செய்வது?" அம்மாதிரியே நம் அரசாங்கமும் அன்னியர் வசத்திலிருக்கிறது. நம் அரசாங்கம் அன்னிய நாட்டார் வசமிருக்கும் வரை அது தேசியப் பொருளாதாரத் திட்டத்துக்கு உதவிசெய்யுமென எதிர்பார்க்க முடியாது. ஆதலால் நமது பொருளாதார நிலைமையை உயர்த்துவதற்காக அரசாங்கம் நம் கைக்கு வருவதற்கான உபாயங்களைச் செய்ய வேண்டும்.

அரசாங்கம் நம் கைக்குவரும் வரை நம் பொருளாதார நிலைமையை உயர்த்த நாம் ஒன்றும் செய்ய முடியாதென்று நினைக்கலாகாது. அரசாங்கம் என்பது மக்கள் சம்மதியின் பேரில், அவர்களை ஆளுவதற்கு ஏற்படுத்தப்பட்ட ஒரு ஸ்தாபனம். ஆதலால் இந்த ஸ்தாபனத்தின் உதவியிருந்தால், எல்லா மக்களுடைய உதவியையும் பெற்றதற்குச் சமமாகும் என்ற அளவில் தான் அரசாங்கத்தின் உதவி அவசியம் என்று சொல்லப்பட்டது. ஆதலால் அரசாங்கம் நம்பொருளாதாரத் திட்டங்களில் உதவி யளிக்காததால், நாம் யாதும் சாதிக்க முடியாது என்ற முடிவுக்கு வரக்கூடாது. அரசாங்கம் அசிரத்தையுடனிருந்தாலும், மக்கள் யாவரும் நம் தேசத்தின் முன்னேற்றத்தில் சிரத்தை யெடுத்துக் கொண்டார்களானால், நாம் வெகு விரைவிலே முன்னேற்ற மடைவோம் என்பதில் ஐயமில்லை. இங்ஙனம் ஒவ்வொரு இந்தியனும் நம் பொருளாதார நிலைமையை உயர்த்துவதில் சிரத்தை கொள்வானானால், அது அரசாங்கத்தின் உதவியை விட பன்மடங்கு அதிகப் பலனைத் தரும். அன்னிய நாட்டுச் சரக்குகளை வாங்காமலும், சுதேச சாமான்களை வாங்கி ஆதரித்தும், இன்னும் எல்லாக் காரியங்களிலும் நாம் தேசத்தின் நன்மையையும் அபிவிருத்தியையும் மனதில் வைத்து ஒழுகுவதுமே, ஒவ்வொருவரும் நம் நாட்டுப் பொருளாதார முன்னேற்றத்திற்காகச் செய்யத்தக்க பேருதவியாகும்.

முற்றிற்று.

Printed at The Guardian Press. Ltd., 158-B. Broadway, Madras.